245

உ

# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

எட்டாவது தொகுதி

ஆசிரியர்
ஜெகவீர பாண்டியனார்



மதுரை
மதராஸ் சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றது.

1949

# முகவுரை.

இது கம்பன் கலை நிலையுள் எட்டாவது தொகுதி. சுந்தர காண்டத்தில் நிகழ்ந்துள்ள சரித நிகழ்ச்சிகள் இதில் மருவியிருக்கின்றன. அநுமான் ஆகாய மார்க்கமாய்க் கடலைத் தாவிச் சென்றது; இலங்கையை அடைந்தது; அந்த அழகிய நகரை நோக்கி உளம் மிக வியந்து உவந்து நின்றது; இரவு வந்ததும் உள் புகுந்து சீதையைத் தேடியது; யாண்டும் காணமையால் உள்ளமுடைந்து வருந்தி இறுதியில் அசோகவனத்தில் அம்மையைக் கண்டது; உண்மை தெளிந்து உவகை கொண்டது; அவ்வமையம் அங்கே இராவணன் வந்தது; சிறையிடை மறுகியிருந்த பிராட்டியிடம் அவன் இச்சைகளை நச்சி மொழிந்து இழிந்து நின்றது; அக் குலமகள் எள்ளி இகழ்ந்தது; அவன் சீறி எழுந்து மாறிப் போனது; அதன்பின் சானகி சாகநேர்ந்தது; அநுமான் எதிர் தோன்றித் தடுத்து நிறுத்தி இராமனது நிலைமைகளை எடுத்துச் சொல்லிக் கணையாழியைக் கொடுத்தது; தன் நாயகனுடைய மோதிரத்தைக் கண்டதும் சீதை பேரானந்த முடையளாய் மாருதியை வாழ்த்தி மனம் மகிழ்ந்தது; வேறு சில அடையாளங்களை விளம்பித் தன் கணவன் ஒரு மாதத்துள் வந்து தன்னைச் சிறை மீட்டி அருள வேண்டும் என்று உறுதி கூறிச் சூளாமணியைக் கொடுத்து விடுத்தது; அந்த அணியை வாங்கிக் கொண்டு சீதையைத் தொழுது வணங்கி அநுமான் விடைபெற்று மீண்டது; மீண்டவன் இடையே ஆண்டகைமையுடன் அசோகவனத்தை அழித்தது; போருக்கு மூண்டு வந்த அரக்கர் படைகளையெல்லாம் அடியோடு கொன்று குவித்து வென்றி வீரனாய் விளங்கி நின்றது முதலிய சரிதக் காட்சிகளை முறையே இதில் கண்டு கொள்ளலாம்.

கரும நிகழ்ச்சிகளும் தரும உணர்ச்சிகளும் சீரிய சரிதங்களும் காவிய இரசனைகளோடு கலந்து கனிந்திருத்தலால் இந்நூல் அறிவின் அமுதமாய்ச் சுவை சுரந்துள்ளது. உலகம் சுவைத்து மகிழ இறைவனை வழுத்தி நிற்கிறேன்.

திருவள்ளுவர் நிலையம்,
மதுரை.

ஜெகவீரபாண்டியன்.

# சிறப்புப்பாயிரம்.



நிகராரு மில்லாச் செகவீர பாண்டிய!
புவிராச ரும்புகழ் கவிராச பண்டித!
அலைசூழ் உலகைக் கலைசூழ் உலகா
மாற்றத் துணிந்த ஊற்றத் துரவோய்!
கிழமை தழீஇப் பழமை வழாஅது
முப்பொருள் தொகுத்த மெய்ப்பெரும் புலவன்
குறளைப் பெருக்கி அறிவுட் புகுத்தி
ஈசன் தருகும ரேசன் களிக்க
வெண்பா யாத்த நண்பா! பண்பால்
சீலம் தழைத்த பாஞ் சாலங் குறிச்சியாம்
அறம்குடி கொண்ட மறம்கிளர் நாட்டில்
துரைமக்க ளென்ன உரைமிக் குயர்ந்தோர்,
தருகை நீண்ட அருமை மாண்பினர்,
அந்தண ரோம்பும் செந்திரு மனத்தர்,
தீச்செயல் கடியும் வீச்சரி வாளினர்,
திருந்தலர் போரெனில் விருந்தென விரைவோர்
முதுகிட் டறியா மதுகை வாழ்க்கையர்,
வீட்டரும் சொந்த நாட்டபி மானிகள்
ஈனம் போக்கி மானம் காக்க
வீரப் போர்புரி சூரப் புலிகளாம்
மன்குல மாகும் நின்குல முன்னோர்க்கு
எய்திய மாக்கதை செய்த தவத்தோய்!
நன்னூல் பேணிப், பன்னூல் ஆய்ந்து,
கலையில் திளைத்துக், குலையில் பழுத்து,
விற்பனம் கனிந்து, சொற்றிறம் தெளிந்து
நாத்தழும் பேறிப் பூத்தசெந் தமிழால்
புலவ ருலகம் தலைசிறந் தோங்க
ஏழு பாகங்கள் இன்புற அளித்தனை
எஞ்சிய பாகமும் இனிதுநீ அளிக்கச்
செஞ்சொல் வஞ்சியை அஞ்சலி செய்வாம்.

ஏ. ஆர். கணபதி ஐயர்.

வேண்டும்; உங்களிடம் விடைபெற்றுக் கொள்ளுகின்றேன்; ஆண்டவனைத் தொழுது துதித்ததாகச் சொல்லுங்கள்; நான் போய் வருகிறேன்" என்று இவ்வாறு கூறிவிட்டுச் சம்பாதி பறந்து போயினன். அப் பறவை வேந்து புரிந்து போன உதவியை ஓர்ந்து புகழ்ந்து அனைவரும் உவந்து நின்றனர்.

அவனுடைய உரைகளைக் கேட்டு உள்ளம் தேறிய வானர வீரர்கள் ஆனந்தமுடையராய்ச் சூழ்ந்து அமர்ந்து ஆழ்ந்து ஆலோசிக்க நேர்ந்தனர். சொல்லிய குறிப்புகளை எல்லாம் உள்ளி உணர்ந்து ஒருங்கே உசாவலாயினர்.

அவ் அரக்கன் சீற்றம் நெருப்புக்கு நெருப்பு.

இராவணனுடைய வீர பராக்கிரமத்தையும் கொடிய கோப நிலையையும் சம்பாதி இங்ஙனம் குறித்திருக்கிறான். நெருப்புக்கு நெருப்பு என்ற உரைக்குறிப்பு நிலைமைகளை நெடிது நினைந்து கடிது சிந்திக்கச் செய்கின்றது.

இராவணன் சீறினால் அக்கினி தேவனும் நடு நடுங்குவான் என்பதை இங்ஙனம் பக்குவமாக விளக்கியுள்ளான். உரையுள்ளும் சூடு தாக்கிப் பாடு நோக்க எழுந்தது. உண்மைகளை ஊன்றி நோக்கி உறுதி நிலைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

காலனும் நடுங்குவான்; காற்றும் கலங்கும்; நெருப்பும் நிலைகுலையும் என்றதனால் இலங்கை வேந்தன் எதிரே இயற்கைச் சத்திகளெல்லாம் இழிந்துநின்று ஏவல் செய்யும் என்பது துலங்கி நின்றது. பஞ்ச பூதங்களும் அவனுக்கு அஞ்சி நடக்கின்றன.

அத்தகைய கொடிய நெடிய பேராற்றலுடைய இராவண னுக்கு இராச தானியாய் அமைந்துள்ள இலங்கையில் எவரும் எளிதில் புகமுடியாது; உங்களுள் யாரேனும் செல்லவல்லவர் இருந்தால் சென்று பாருங்கள்; இன்றேல் கிட்கிந்தைக்கு மீண்டு போய் ஈண்டு நான் சொன்ன விவரங்களை அண்ணலிடம் சொல்லி ஆவதைச் செய்யுங்கள் என்று சொல்லிவிட்டுச் சம்பாதி போன பின் வானர வீரர்கள் யாவரும் ஒருங்கே கூடி ஆலோசனைகள் செய்தனர். கருமச் சூழ்ச்சிகள் கதி காண நேர்ந்தன.

சூழ்ந்து துணிந்தது.

கடலைத்தாவி இலங்கைக்குப் போகத்தக்கவர் யார்? என

வானரத்தலைவர் நெடிது நேரம் கலந்து பேசினர். அந்தக் கூட்டத்திற்குச் சாம்பவன் தலைமை வகித்தான். இரண்டு வெள்ளம் வானரங்களுள் தாவிச் செல்லும் வல்லமையில் சதுரரான வீரர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தம்முடைய ஆற்றலின் அளவினை ஒவ்வொருவரும் செவ்வையாகத் தெரிய உரைத்தார்

பத்து யோசனை தூரம்தான் கடலினை என்னால் தாண்ட முடியும் என்று கசன் முதலில் கூறினான். அவன் கூறி முடித்த பின் அடுத்தவர் தத்தம் இயல்பினை விளக்கிப் பேசினர்.

பனசன் இருபது யோசனை தாண்டுவேன் என்றான்.

சதவலி முப்பது யோசனை தாவுவேன் என்றான்.

தாரன் நாற்பது யோசனை பாய்வேன் என்றான்.

நளன் ஐம்பது யோசனை செல்வேன் என்றான்.

நீலன் அறுபது யோசனை போவேன் என்றான்

குமுதன் அறுபத்தைந்து யோசனை கடப்பேன் என்றான்.

ததிமுகன் எழுபது யோசனை எய்துவேன் என்றான்.

துமிரன் எழுபத்தைந்து யோசனை தோய்வேன் என்றான்.

சரபன் எண்பது யோசனை ஏறுவேன் என்றான்.

அதற்குமேல் முடியும் என்று யாரும் சொல்லவில்லை. முடிவில் சாம்பவன் பேசினான். நான் கடல் கடந்துவிடுவேன்; ஆனால் உடல் முதிர்ந்த வயதினன்; கடலைத்தாவிப் போகமுடியுமே தவிர மீளமுடியாது என்றான். இறுதியில் அங்கதன் போவதாக இசைந்தான். அதனைச் சாம்பவன் மறுத்தான். அரசகுமாரனை உன்னைக் கொடிய பகைவர் இருக்கும் இடத்திற்குத் தனியே அனுப்புவது தவறு. அங்கே போய்வர உரியவன் அனுமான் ஒருவனே; பிறர் எவராலும் இசையாது. அந்த மதிமான் தன்னுடைய அதிசய ஆற்றலை அறியாமல் இருக்கிறான். ''உன் வலிமையை நீ தெரியாமல் இருப்பாயாக'' என முனிவர் இட்ட சாபம் ஒன்று முன்னாள் நேர்ந்துள்ளமையால் அன்னான் ஈண்டு யாதொரு வலியும் இல்லாதவன் போல் அயர்ந்து ஒதுங்கி யிருக்கிறான். அவனால் ஆகாத காரியம் யாதும் இல்லை; எல்லாம் வல்ல இறைவன் போலவே எண்ணிய எதையும் எளிதே முடிக்க வல்லவன்.

திண்ணிய வீரமும் புண்ணிய குணசீலங்களும் அவனிடம் உவந்து குடிகொண்டிருக்கின்றன. மடி கொண்டவன் போல் எல்லாவற்றையும் மறந்திருக்கிறான். இந்த மான வீரனே நம்முடைய மானத்தைக் காப்பாற்றி வானமும் வையமும் உய்ய வழி செய்ய வந்தவன்'' என இவ்வாறு கூறிமுடித்துப் பின்பு அநுமானை நோக்கி ஆர்வவுரை யாடினான்.

## சாம்பவன் அநுமானை வேண்டியது.

''அதிமேதையான அதிசய வீரா! உனது மகிமை அளவிடலரியது; நீ என்றும் சிரஞ்சீவி; யாண்டும் தோல்வி கண்டறியாத மேலான வீர வெற்றியுடையவன்; காலனையும் நீ வெல்ல வல்லவன்; ஆலமுண்ட நீலகண்டனும், ஞாலமுண்டவனும் உன்னுடைய வீர தீரங்களையும் சீல நீர்மைகளையும் வியந்து புகழ்ந்திருக்கின்றனர். பஞ்ச பூதங்களும் உன் ஆற்றலைக் கண்டு அஞ்சியுள்ளன. அரிய பல யோக சித்திகளையுடையவன்; மறைய விரும்பின் அணுவினும் நுணுகுவாய்; பெருக வேண்டின் மேரு மலையும் நாண நீ மேல் ஓங்கி நிற்பாய். பலகலைகளும் உன்பால் நிலையாய்த் தலைமை எய்தியுள்ளன. நீ கல்லாத கலை எங்கும் இல்லையே; உலக ஒளியாய் நிலவியுள்ள சூரியனிடம் நீ கலைகள் கற்றிருப்பினும் அவனும் உன்னை அரியவொரு ஞானசூரியன் ஆகவே மதித்து மகிழ்ந்துள்ளான். கல்வியறிவு, கருமசூழ்ச்சி, தருமசீலம், வெல்போர் வீரம் முதலிய எல்லா நிலைகளிலும் உனக்கு நிகரானவர் எவரும் இலர். காலம் கண்டு இடம் நோக்கி வலி அறிந்து எதிரி நிலை தெரிந்து யாதும் வழுவாமல் யாண்டும் வெற்றியாய் வினை புரிந்து வருகின்ற உனது கரும வீரத்தை வியந்து அரசகுலங்களும் அமரர் திரள்களும் அதிசயித்து நிற்கின்றன. துதிமொழிகள் யாதும் இங்கே நான் முகமனாகச் சொல்லவில்லை. உண்மை நிலைகளையே உரிமையாக உரைத்தேன். கடல் கடந்து சென்று நீயே காரியத்தை முடித்து வரத்தக்கவன். விரைந்து செய்தருள்'' என அநுமானை நோக்கிச் சாம்பவன் இங்ஙனம் வேண்டவே அந்த ஆண்டகை உவந்து எழுந்தான்.

## அநுமான் வினைமேல் மூண்டது.

முதிய வயதினனும் பெரிய மதிமானுமான சாம்பவன்

தன்னைக் குறித்துப் புகழ்ந்துபேசிய மொழிகளை எல்லாம் உள்ளம் நாணி ஒடுங்கிக கேட்டுக் கொண்டிருந்த அனுமான் விரைந்து எழுந்து வானரர்களை உவந்து நோக்கிப் பணிவும் பண்பு கனிய இனிது பேசினான். அவனுடைய வாயுரைகள் அதிசய அமைதிகளோடு வெளிவந்துள்ளன. அயலே வருகின்றன.

4733 நீயிரே நினைவின் முன்னே நெடுந்திரைப் பரவை ஏழும்
தாயுல கனைத்தும் வென்று தையலைத் தருதற்கு ஒத்தீர்
போயிது புரிதி என்று புலமைதீர் புன்மை காண்டற்கு
ஏயினிர். என்னின் என்னிற் பிறந்தவர் யாவர் இன்னும்? (1)

4731 இலங்கையை இடந்து வேரோடு இவ்வயின் தருகென்றாலும்
விலங்கினர் தம்மை எல்லாம் வேரோடும் விளிய நூறிப்
பொலங்குழை மயிலைக் கொண்டு போதெனப் புகன்றிட்டாலும்
கலங்கலீர் உரைத்த மாற்றம் முடிக்குவல் கடிது காண்டிர்! (2)

4732 யோசனை ஒன்று நூறும் உள்ளடி யுள்ள தாக
ஈசன்மண் அளந்தது ஏய்ப்ப இருங்கடல் இனிது தாவி
வாசவன் முதலோர் வந்து மலையினும் இலங்கை வாழும்
நீசரை எல்லாம் நூறி நினைத்தது முடிப்பல் பின்னும்; (3)

4734 முற்றுநீர் உலக முற்றும் விழுங்குவான் முழங்கி முந்நீர்
உற்றதே எனினும் அண்டம் உடைந்துபோய் உயர்ந்ததேனும்
இற்றைநும் அருளும் எங்கோன் ஏவலும் இரண்டு பாலும்
கற்றைவார் சிறைகளாகக் கலுழனின் கடப்பல் காண்டிர். (4)

4735 ஈண்டினி துறையின் யானே எறிகடல் இலங்கை எய்தி
மீண்டிவண் வருதல் காறும் விடைதம்மின் விரைவின் என்னா
ஆண்டவர் உவந்து வாழ்த்த அலர்மழை அமரர் தூவச்
சேண்தொடர் சிமயத் தெய்வ மகேந்திரத் தும்பர்சென்றான் (5)

4736 பொருவரு வேலை தாவும் புந்தியான் புவனம் தாய
பெருவடி வுயர்ந்த மாயோன் மேக்குறப் பெயர்ந்த தாள்போல்
உருவறி வடிவின் உம்பர் ஓங்கினன் உவமை யாலும்
திருவடி என்னும் தன்மை யாவர்க்கும் தெரிய நின்றான். (6)

4737 பார்நிழல் பரப்பும் பொற்றேர் வெயிற்கதிர்ப் பரிதி மைந்தன்
போர்நிழல் பரப்பு மேலோர் புகழ்என உலகம் புக்குத்
தார்நிழல் பரப்பும் தோளான் தடங்கடல் தாவா முன்னம்
நீர்நிழல் உவரி தாவி இலங்கைமேற் செல்ல நின்றான். (7)

பகுவாய மடங்கல் வைகும் படர்வரை முழுதும் மூழ்க
உதவாய விடங்கொள் நாகத்து ஒத்தவால் சுற்றி யூழின் 4738
நெகுவாய சிகரகோடி நெரிவன தெரிய நின்றான்
மகவாமை முதுகில் தோன்றும் மந்தரம் எனலும் ஆனான். (8)

மின்னெடுங் கொண்டல் தாளின் வீக்கிய கழலின் ஆர்ப்பத்
தன்னெடுந் தோற்றம் வானோர் கட்புலத்து எல்லை தாவ 473
வன்னெடுஞ் சிகர கோடி மகேந்திரம் அண்டம தாங்கும்
பொன்னெடும் தூணின் பாதச் சிலையெனப் பொலிந்து நின்றான்.

[மகேந்திரப் படலம், 21-29]

அனுமானுடைய பணிவுடைமைகளையும் மதிமாண்புகளையும் அதிசய நிலைகளையும் இங்கே வியந்து நோக்கி உவந்து நிற்கின்றோம். பேச்சும் செயலும் யாண்டும் எவர்க்கும் ஆச்சரியங்களை விளைத்து வருகின்றன. அரிய நீர்மைகள் யாவும் உரைகள் தோறும் பெருகி ஒளி வீசி மிளிர்கின்றன.

"இங்கு உள்ளவர்களுள் யாரும் எளிது முடித்துவர வுரிய ஒரு கருமத்தை அடியேனுக்கு உரிமையுடன் அருளியிருக்கிறீர்கள். எனது சிறுமையான நிலைமையைச் சோதித்து அறியும் பொருட்டுத் தலைமையாளர்கள் என்பால் அன்பால் இட்ட அருமைப் பணி யிது. இவ்வளவு பேர்களும் இருக்க எனக்கு இந்தப் பெருமையைத் தந்தமையால் நான் பிறந்த பயனை அடைந்து கொண்டேன். இராம தூதனாய் ஊழியம் செய்வதை விட எனக்குப் பேரானந்தம் தருவது வேறு யாதும் இல்லை. எம்பெருமான் அருளும் உங்கள் ஏவலும் இரண்டு சிறகுகளாக் கொண்டு ஆகாயமார்க்கமாய்க் கருடனைப் போல் விரைந்து பாய்ந்து இந்தக் கடலை எளிதே கடந்து விடுவேன். "இலங்காபுரியை வேரோடு அகழ்ந்து கொணர்க; சீதையம்மையை மீட்டி வருக; அரக்கரை யெல்லாம் அடியோடு அழித்து விடுக" என்றாலும் அவ்வாறே செய்து வருகிறேன். வானவர் தானவர் யாவர் வந்து எதிர்த்தாலும், இடையே எவ்வளவு தடைகள் நேர்ந்தாலும் அவ்வளவையும் வென்று கடந்து கருதிய கருமத்தை முடித்து உறுதியாக மீண்டு வருவேன்; பெரியோர்களே! விடை தாருங்கள்" என்று சாம்பவன் அங்கதன் முதலானவர்களை உவந்து வணங்கி உடனே மகேந்திரமலைச் சிகரங்களில் அனுமான்

விரைந்து ஏறினன். சிங்க ஏறுபோல் அந்த மலையின் உச்சியில் தாவிச்சென்று தென் திசையை நோக்கி வீர கம்பீரமாய் விறைந்து நின்றான்.

அந்த நிலை அதிசய அற்புதமான ஓர் வீரக் காட்சியாய யாவரும் துதி செய்ய நின்றது. தேவ குலங்களும் ஆவலோடு உவந்து நோக்கின. தாவ ஆக்கினவன் மேலே ஏக நோக்கினன்.

## மகேந்திரகிரி உச்சியில் நின்ற நிலை.

கடல் தாவும் குறிக்கோளோடு மலை முடிமேல் மேவி நின்ற அனுமான் மகிமா என்னும் யோக சித்தியால் நெடிது நீண்டு பேருருவம் கொண்டான். அந்த விசுவரூப நிலையைக் கண்டு யாவரும் அச்சமும் திகிலும் மருவி மேலே நிகழ்வதை வியந்து நோக்கி விழி யூன்றி நின்றார்.

சிறிய திருவடி என்பது அனுமானுக்கு ஒரு அரிய பெயராய் அமைந்திருந்தது. இராமபிரான்பால் பேரன்பு பூண்டு திருவடித் தொண்டனாய் யாண்டும் உரிமையிருந்து நிறைமையால் அந்தப் பெயர் பெருமையாக வந்தது

## திருவடி என்னும் தன்மை யாவர்க்கும் தெரிய நின்றான்

இராமனது திருவடிகளைச் சிந்தித்து எப்பொழுதும் உள்ளம் உருகிய பத்திப் பரவசத்தினால் வாய்ந்த இப்பெயர் ஈங்குத் திருமால் தொடர்பாய் வேறொரு வகையில் மேதாய்ந்து நின்றது. வாமன வடிவம் கொண்டு மாயன் மாவலியிடம் வந்து மூவடி மண் கேட்டு மூவுலகங்களையும் தனது ஓரடியால் அளந்தபோது மேலே நெடிது நீண்டு அந்த அடி நிலவி நின்றது போல் அனுமான் ஈண்டு வானுற ஓங்கி வளர்ந்து நின்றான் ஆதலால் உவமையாலும் திருவடி என்னும் தன்மை தெரிய நின்றான் என்றார்.

உண்மை அன்பால் நேர்ந்த நாமம் உவமையாலும் சேர்ந்தது என்றது கதி வேகங்களைக் கருதியுணர வந்தது. அந்த மாயம் செய்த மாபலேவல்லமையை நினைவுறுத்தி இந்தத் தூயன் செய்ய நேர்ந்துள்ள வேலையைத் துலக்கியருளினார்.

"ஒண்மிதியில் புனலுருவி ஒருகால் நிற்ப
ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து

எண்மதியும் கடந்து அண்டமீது போகி
இருவிசும்பின் ஊடுபோய் எழுந்து மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித்
தாரகையின் புறம் தடவி அப்பால் மிக்கு
மண் முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கினேனே."

[பெரிய திருமொழி]

மாயோன் மேக்குறப்பெயர்ந்ததாளை இது காட்டியுள்ளது.

திருமாலின் இந்தத் திருவடி போலவே அனுமானும் இங்கு நெடிது ஓங்கி நின்றமையால் திருவடி என முன்பு ஒரு படியாய் வந்த பெயர் இன்று பெரு வடிவிலும் மருவி மறுபடியும் வந்தது.

அந்த அடி அகிலமும் கவர்ந்து கொண்டது போலவே இந்த வீரனும் வென்று மீளுவன் என்பது நன்று காண நின்றது. முன்பு உலகம் தாவி அளந்தமையால் இன்று கடல் தாவ நேர்ந்தவனுக்கு அது உவமையாய் நேர்ந்தது.

காரிய சித்தி கைகூடி வீரிய வெற்றியோடு விரைந்து வருவன் என்பது கூறிய குறிப்பால் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தது. பின்னே விளைந்து வருவது முன்னே தெளிந்து வருகிறது.

வாரிதியைக் கடக்க மூண்டு மாருதி பேருருவம் கொண்டு மகேந்திரகிரி மேல் நின்ற போது அவனது உருவ நிழல் கடல் நீர் முழுவதும் ஊடுருவி இலங்கைமேல் பாய்ந்தது. உடல் மேலெழு முன்னமே உருவச்சாயை காலெழுந்து சென்றது என்றது காரிய வேகத்தின் காட்சி தெரிய வந்தது.

அண்டத்தைத் தாங்க நிறுத்திய ஒரு நெடிய தங்கத்தூண் போல் அனுமான் ஓங்கி ஒளிசெய்து நின்றான். தூணின் அடியில் உள்ள சிறிய தாங்கு கல்லைப்போல் அம்மலை தாழ்ந்து நின்றது.

இந்த நிலையில் கிட்கிந்தா காண்டம் முடிகின்றது.

---

அருந்திறல் அனுமனை அணுகி வாலியைப்
பொருந்தொழில் புரிந்தடல் போக்கித் தம்பியைத்
திருந்தெழில் அரசனாச் செய்த சேவகப்
பெருந்தகை யிணையடி பேணி வாழுவாம்.

---

# ஐந்தாவது சுந்தர காண்டம்.

சரிதையில் ஒரு பெரும்பகுதி முடிந்து அடுத்த பகுதி தொடங்கும் பொழுது கவி கடவுள் வணக்கம் சொல்வது வழக்கமாயுள்ளது. அவ்வாறு வந்துள்ள தெய்வத் துதிகளுள் இரண்டு கவிகள் அயலே வருகின்றன. உயர் ஞான நோக்கில் ஒளி செய்து மிளிர்கின்றன.

வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பு எங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறனும் உளன் என்ப
கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்த கழல் வேந்தே.

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவெனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவது எவரைக் கண்டால் அவர் என்பர் கைவில் ஏந்தி
இலங்கையில் பொருதார் அன்றே மறைகளுக்கு இறுதி யாவார். (2)

இந்த இரண்டு பாசுரங்களும் காவியத்தின் காப்புகளாய் வந்துள்ளன. முன்னது அயோத்தியா காண்டத்தின் முதலில் உள்ளது. பின்னது சுந்தர காண்டத்தின் காப்பாய் வந்திருக்கின்றது. கடவுள் நிலையையும் அரிய பல பொருள்களையும் இவை காட்டி நிற்கின்றன. தத்துவக் காட்சிகள் உய்த்துணரத் தக்கன.

இராமனை முழுமுதல் கடவுள் எனக் கவி உழுவலன்போடு உவந்து துதித்திருக்கிறார். சொல்லியிருக்கும் முறை சுவை சுரந்து திகழ்கின்றது. பாடலைப் பாடும் போதே செவியுணர்வும் கவி நயமும் எவர்க்கும் இனிது புலனாய் இன்பம் புரிந்து வருதலை அனுபவத்தில் அறிந்து கொள்ளலாம். செவி நுகர் கனிகளாய்க் கவிகள் யாண்டும் கனிந்து இனிமை மிகுந்து வருகின்றன.

அகில அண்ட கோடிகளிலும் சகல சீவகோடிகளிலும் உள்ளும் புறமும் மருவி என்றும் நிலையாயுள்ளவனை சிலை ஏந்தி ஈண்டு மனித உருவில் வந்திருக்கிறான் என மனம் களித்து வழுத்தியிருக்கிறார். வழிபாடு கழிபேரன்போடு கனிந்துளது.

கூனியும் சிறிய தாயும் செய்த கொடுமையால் மணிமுடி இழந்து அரசு துறந்து கானும் கடலும் கடந்துபோய் அமரர் துயர் தீர்த்தருளிய அந்த வீரவேந்தே உலகம் எங்கும் ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறனும் உளன்; இவ்வுண்மையைத் தெளிவாக வேதங்கள் ஓதியுள்ளன; ஞானிகள் ஏகமாய் நாடியுள்ளனர் என்று ஓகை மீதூர்ந்து பாடியுள்ளார்.

ஒரு கிழவி சூழ்ச்சியால் அரசிழந்து போனவன் வானும வையமும் காத்தருளினான் என்பது அதி விசித்திரமான காட்சிகளைக் கருதி நோக்கி உறுதி காண வந்தது.

அயோத்தியா காண்டத்தில் நிகழ நேர்ந்துள்ள இராம சரிதத்தைக் காப்புக் கவியுள் குறிப்பாகச் சுட்டிக் காட்டிப் பரம நீர்மைகளைக் கூர்மையோடு ஓர்ந்துணரும்படி சீர்மையாக வெளிப்படுத்தியிருக்கிறார் வெளியீடுகள் ஒளியோடு உலாவுகின்றன.

அமரர் துயர் தீர்க்க ஓர் அரச குமாரனாய் ஈண்டு வந்தவன் ஆதிமூலப்பொருள் என்பதை அறிவுறுத்தியருளினார். தான் கருதி வந்த காரியம் இடையே தடையுறாதபடி கூனி செய்த கோள் உதவி புரிந்தது ஆதலால் அவளது கொடுமை இராமனது அதிசய வெற்றி விளைவுகளுக்கு உற்ற உரமாய் உரிமை பூண்டு நின்றது. அந் நிலைமையை நினைந்து தலைமையை உணர்ந்து கொள்ளவே கலகக் காட்சிகள் கண் எதிர் வந்தன.

கான் கடந்து கடல் கடந்து சென்று இமையோர் இடுக்கண் தீர்த்தவன் வான் கடந்து வந்து மண்ணில் விளையாடிய ஒரு புண்ணிய முதல் என்பதை இங்கே எண்ணி மகிழ்கின்றோம்.

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு.

என்றது சீவ கோடிகள் உலகில் மயங்கி யுழலும் நிலைதெரிய வந்தது. அலங்கல் = மாலை. தான் சூடியிருந்த பூமாலையை ஒரு அரச குமாரி ஒருநாள் வெளியே எறிந்திருந்தாள்; அது வீதியில் விழுந்து கிடந்தது; இரவில் அவ்வழியே வந்த ஒருவன் அதனைக் கண்டான்; நீண்டு நெளிந்து கிடந்தமையால் பாம்பு என்று பயந்து துள்ளி ஒதுங்கினான். கடுங்கி நின்ற அவன் மீண்டும் அதனைக் கூர்ந்து நோக்கினான்; இருட்டு ஆதலால் அயல் வீட்டிலிருந்து ஒரு விளக்கைக் கொண்டு வந்து பார்த்தான்; மாலை புனைந்த கயிறு என்றுகண்டான்; மனம் தெளிந்தான். முனனம் மாறுபாடாக நினைந்து பயந்ததை எண்ணி நெஞ்சம் நாணினான். பின்பு அஞ்சாமல் போயினான். மெய் தெளிந்தபின் பொய் மயல் ஒழிந்தது.

பழுதையைப் பாம்பு என்று கருதிப் பயந்த அந்த மனிதனைப் போலவே உலக நிலையின் உண்மையை உணராமல் சீவ கோடிகள் மயங்கி மறுகிக் கலங்கி உழலுகின்றன.

நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களின் கலவைகளால் ஆய இவ்வுலகில் உயிரினங்கள் பலவகையான உருவங்களில் மருவி அளவிடலரிய நிலைகளில் யாண்டும் உலாவி வருகின்றன. தோன்றல் வளர்தல் அழிதல் ஆகிய இத்தொழில்கள் என்றும் நிகழ்ந்து நிற்கின்றன. இங்ஙனம் வேறுபாடாக விரிந்துள்ள இந்த உலகத் தோற்றத்தில் குலம் குடி மதம் தொழில் நாடு மொழி முதலாகப் பல அபிமானங்களைப் பற்றிக் கொண்டு சீவர்கள் ஆவலோடு பாவ வழிகளில் பரந்து களித்து விரிந்து திரிகின்றன. பூத பரம்பரைகள் போத வரம்புகளாய்ப் பொலிந்து திகழ்கின்றன.

உலகமும் உயிர்களும் பரமனிடமிருந்தே பிறந்திருக்கின்றன என்னும் உண்மையுணர்வு குன்றிப் புன்மை நெறிகளில் பொங்கி நிற்றலால் இந்நிலை அஞ்ஞானம் என நேர்ந்தது. இந்த இருள் நிலையில் மருளும் துயரங்களும் மருவியுள்ளன. இது ஒருவிய பொழுது அது தெருள் நிலையமாய்த் திவ்விய இன்பங்களை அருளுகின்றது. உறுதி தெளிவது உயர் பரமாகின்றது.

உலகம் மாயத் தோற்றம் என்று தெளிந்த பொழுது அது தூய தத்துவ தரிசனமாய்த் தெய்வத் தெளிவில் ஒளி செய்து மிளிர்கின்றது. துன்பம் நீங்கி இன்பம் ஓங்குகின்ற அந்த ஞான ஒளியில் பேரின்பப் பிழம்பாய் விளங்குகின்ற பரப்பொருளே இராமன் என மனித உருவம் தாங்கி ஈங்கு வந்துள்ளான் எனக் கவி சுவையாகத் துதித்திருக்கிறார்

கையில் ஏந்தி இலங்கையில் போருத அந்தத் தரும மூர்த்தியை மெய்யறிவால் அறிந்தபோதுதான் பொய் மயக்கமாகிய மாய பந்தம் ஒழிந்து தூய பேரானந்தம் பொங்கி எழும் என்பதை இங்கே தெளிந்து கொள்கின்றோம்

காவிய நாயகன்பால் கவி கொண்டுள்ள பேரன்பு ஈண்டுத் தெளிவாக வெளியாயுள்ளது. கடவுள் என்று ஒன்று இருக்குமானால் அது இராமன் என்னும் பெயரோடுதான் இருக்க வேண்டும் என்று அவர் கருதி உருகியிருக்கிறார். அந்த மூர்த்தியினுடைய குணகணங்களில் பல காலமும் பல வழிகளிலும் ஈடுபட்டுள்ளமையால் இவ்வாறு ஆராக் காதலோடு ஆர்வம் மீதூர்ந்து கூறி

வருகிறார். உரிமையன்பு மீதூரவே உறுதிமொழிகள் தலைமை யோடு நிலை மீறி வருகின்றன.

புலையற மாகி நின்ற புத்தொடு சமணம் எல்லாம்
கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதாம்?
தலையறுப் புண்டும் சாகேன் சத்தியம காண்மின் ஐயா
சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவன் ஆவான்.

(திருமாலை,7)

இராமனே பரதேவதை என்று தொண்டரடிப் பொடியாழ்வார் இப்படிச் சத்தியம் செய்திருக்கிறார். பத்திப் பரவசத்தால் வார்த்தைகள் உச்ச நிலையில் ஒளி வீசி வெளி வருகின்றன. சிலையினால் இலங்கை செற்ற தேவன் என்னும் வாசகம் கைவில் ஏந்தி இலங்கையில் பொருதார் என்ற நம் பாசுரத்தோடு நேசம்கொண்டு நிற்கும் நிலை நினைந்து சிந்திக்கத் தக்கது.

பாச பந்தங்களை ஒருவி ஈசனை மருவி மகிழ மேலோருடைய வாசகங்கள் சாலவும் உதவி புரிந்து வருகின்றன.

உலகத் தோற்றத்தில் மயங்கி மருளாதே; இறைவன் ஒருவன் உளன்; அவன் பாலுள் நெய் போல் எங்கும் பரந்திருக்கிறான்; அந்தப் பரம்பொருளின் உண்மை நிலையை உணர்ந்து உயிரினங்கள் உயர் கதியை அடைய வேண்டும் எனக் கவி ஈண்டு உணர்த்தி யுள்ளார்.

அலங்கலை அரவு என நினைந்து கலங்கினவன் உண்மை தெளிந்த பின் அச்சம் நீங்கி உவந்து சென்றது போல் மெய்யறிவால் சீவன் உச்ச நிலையை அடைந்து உபசாந்தி பெறுகின்றான். பழுதையில் பாம்பு என இந்த உவமானத்தை வேதாந்த நூல்கள் பலபடியாக விரித்திருக்கின்றன. விசார சாகரம் முதலிய பெரு நூல்களில் விரிவாகக் கூறியிருக்கும் கருத்துக்களையெல்லாம் சுருக்கி இந்த ஒரு கவியில் அழகாக விளக்கியிருக்கிறார்.

அனுமான் கடல் கடந்து மீண்டவுடன் இராமன் இலங்கை மேல் போர் செய்ய மூண்டுள்ளமையைக் காப்புக் கவியுள் கருதி யுணர வைத்தார். சரிதக் காட்சிகள் உரிமையோடு இனிது தொடர்ந்து உணர்வின் சுவைகளை உதவி வருகின்றன.

அலைகடலைத் தாவி அனுமான் இலங்கை
நிலைமுழுதும நேரே தெளிந்து—தலைமகளாம்
சீதை தனைததேற்றிச் சிராமன் பால்வந்து
ஓத வுவந்த துலகு.

ஐந்தாவது பகுதியாகிய சுந்தர காண்டத்தில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளும் நிலைகளும் இதனால் உணர்ந்து கொள்ளலாம்.

## அனுமான் கடல் தாவியது.

நூறு யோசனை நீளமுள்ள நெடிய கடலை ஒரே பாய்ச்சலில் தாவிச் செல்ல மூண்டு மகேந்திர மலைச் சிகரத்தின் மேல் நீண்டு நின்ற அனுமான் இலங்கைத் திசையை முதிர் வேகத்துடன் கூர்ந்து எதிர் நோக்கினான். அவனது அதிசய ஆற்றலையும் மதி நலத்தையும் வியந்து இமையவரும் புகழ்ந்து போற்றினர்.

தாவிச் செல்லும் காட்சியைக் காண விழைந்து தேவ கணங்கள் யாவரும் ஆவலுற்று நின்றனர். இராம சிந்தனையோடு அனுமான் மேலே தாவ நேர்ந்தபோது அஃது ஓர் வித்தகமான வீரக் காட்சியாய் விளங்கி நின்றது. வாலை விசைத்துக் காலை மடக்கி மார்பை ஒடுக்கித் தோளை நிமிர்த்தி அவ் வீரன் வான வெளியில் எழுந்த சீர்மையை வானவிழிகள் யாவும் ஞான ஒளிகள் போல் கூர்மையாய் நோக்கிக் குதுகலித்து நின்றன.

வால்விசைத்து எடுத்து, வன் தாள் மடக்கி, மார்புஒடுக்கி, மானத்
தோள்விசைத் துணைகள் பொங்கக் கழுத்தினைச் சுருக்கித் தூண்டும்
கால்விசைத் தடக்கை நீட்டிக் கட்புலம் கதுவா வண்ணம்
மேல்விசைத்து எழுந்தான் உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச வீட

விண்ணவர் ஏத்த வேத முனிவரர் வியந்து வாழ்த்த
மண்ணவர் இறைஞ்சச் செல்லு மாருதி மறமுட் கூர
அண்ணல்வாள் அரக்கன் தன்னை அமுக்குவாம இன்னமென்னைக்
கண்ணுதல் ஒழியச் செல்லும் கைலையங்கிரியும் ஒத்தான். (2

மழைகிழித்து உதிர மீன்கள் மறிகடல் பாய வானம்
குழைவுறத் திசைகள் கீற மேருவும் குலுங்கக் கோட்டின்
முழையுடைக் கிரிகள் முற்ற முடுக்குவான் முடிவு காலத்து
அழிவுறக் கடுக்கும் வேகத் தாதையும் அனையன் ஆனான். (3

தடக்கை நாலைந்து பத்துத் தலைகளும் உடையான் தானே
அடக்கி ஐம்புலன்கள் வென்ற தவப்பயன் அறுதலோடும்

கெடக் குறியாக மாகம் கிழக்கெழு வழக்கு நீங்கி
வடக்கெழுந்து இலங்கை செல்லும் பரிதி வானவனும் ஒத்தான்.

விளித்துப்பின் வேலை தாவும் வீரன் வால் வேதம் மெய்க்கும்
அளித்துப்பின் அனுமன் என்னும் அறம் துணை பெற்ற தாயும்
களித்துப் புன்தொழில்மேல் நின்ற அரக்கர் கண்ணுறுவர்ஆமென்று
ஒளித்துப்பின் செல்லும் கால பாசத்தை ஒத்தது அன்றே. (5)

பொருவரும் உருவத்து அன்னான் போகின்ற பொழுது வேகம்
தருவன தடக்கை தள்ளா நிமிர்ச்சிய தம்முள் ஒப்ப
ஒருவரும் குணத்து வள்ளல் ஒருயிர்த் தம்பியோடும்
இருவரும் முன்னர்ச் சென்றால் ஒத்தனவ் இரண்டு பாலும். (6)

அனுமான் ஆகாய மார்க்கமாய் ஆழியைத் தாவிப் போகும் நிலையைக் கவி பலவாறாக வருணித்திருக்கிறார். சில குறிப்புகள் இங்கே வந்துள்ளன. வாலை முறுக்கி நிமிர்த்திக் கால்களை மடக்கிப் பதுங்கி எழுந்து தோள்களை நீட்டி மேலே பாய்ந்து போயிருக்கும் காட்சியைக் காவிய ஓவியமா நேரே தீட்டிக் காட்டியிருக்கிறார். மொழிகள் செவிகள் வழியே சுவையாக ஒலித்தாலும் நேர்ந்துள்ள நிகழ்ச்சிகள் விழிகள் எதிரே தெளிவாய் ஒளி வீசி எழிலும் இன்பமும் எளிது புரிகின்றன

உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச வீரன் விசைத்து எழுந்தான்

அனுமான் வானில் சென்ற உயரமும் வேகமும் இதனால் அறிந்து இறும்பூது உறுகின்றோம். விரிஞ்சன் = பிரமன். மேக மண்டலத்துக்கு மேலே போனான் ஆதலால் பிரமாண்டம் தடவச் சென்றான் என்றார். நெடிய தூரம் போதற்கு உரிய உயரத்தில் முதலில் தாவி மேவினான். வான வீதியில் ஓம் மான வீரன் தாவிப் போனது நமக்கு அதிசயமும் ஆச்சரியமும் விளைத்து நிற்கின்றன. எல்லாம் புதுமைக் காட்சிகளாய்ப் பொங்கி எங்கும் பெருமித நிலைகளை மருவி மிளிர்கின்றன.

## நேர்ந்த நிலைகள்.

மகேந்திர மலை உச்சியில் நின்று இவ்வுச்ச வீரன் எழுந்த பொழுது அங்கிருந்த மரங்கள் மிருகங்கள் முதலிய யாவும் தேக வேகத்தால் பறியுண்டு பின் தொடர்ந்து வந்து இடையிடையே கடலில் உதிர்ந்தன. அலைகள் நிலை மீறி மோதின. திமிங்கலம்

முதலிய பெரிய சலசரங்களும் நிலை குலைந்தன. இந்தச் சுந்தரன் அந்தரத்தில் செல்லுகின்ற விந்தையை நோக்கி இந்திரன் முதலிய இமையவரும் சிந்தை திகைத்துத் தென் திசையை வியந்து பார்த்துத் தியங்கி நின்றனர். ஒரு அழகிய புட்பக விமானம் ஆகாயத்தே பறந்து போவது போல் இவனது தோற்றம் சிறந்து தோன்றியது. தன்னை முன்னம் அசைத்து எடுத்த இராவணனை இன்னமும் அமுக்கி வருவோம் என்று கருதிக் கைலயங்கிரி தனியே இலங்கைமேல் செல்வது போல் விளங்கி நின்றது. யுகம் முடிவில் உலகங்களையெல்லாம் அழிக்கின்ற ஊழிக் காற்றைப்போல் ஒரு முகமாய் வேகித்துப் போனமையால் தனது தந்தையாகிய வாயு பகவான் என்னவே இப் மேதை மேவிச் சென்றான். இலங்கை வேந்தனை இராவணன் புரிந்திருந்த தவப்பயன் முடிந்து போயது; இனிமேல் தன் குலத்தோடு அவன் அழிந்து போவான் என்பதற்கு அறிகுறியாக வடக்கேயிருந்து உதயமான ஒரு சூரியன் தெற்கே சென்றது போல் ஆரியன் காரியமாய் இவ் வீரியன் மேலே போயினன். பாவமே பயிலும் இராக்கதர் குலம் நாசம் அடையும்படி மனு நீதியான ஒரு தரும சக்கரம் வான வீதியில் வாவிப் போனது எனத் தாவிப் போனான். உலகம் அழிகின்ற ஊழி நாளில் உத்தரதிசையில் எழுகின்ற பூரண சந்திரன் போல் காரணம் கருதிச் சென்றான். அவுணர் குடல் எல்லாம் நடுங்க உடல் எல்லாம் பதறக் கடல் எல்லாம் கலங்கத் தாவிக் கருடன் எனக் ககன வீதியில் கதி வேகமாயினன். திருமால் முன்னம் காலினால் அளந்த வான முகட்டை இவன் வாலினால் அளந்து ஏகினன். அரக்கர் குலத்தின் மேல் செல்லாமல் இது வரையும் அஞ்சி ஒதுங்கி நின்ற காலபாசம் இது பொழுது அனுமானைப் பின் தொடர்ந்து விரைந்து போவது போல் இவனுடைய வால் சிறந்து சென்றது. வான வெளியில் வேகமாய்ச் செல்லுகின்ற பொழுது அந்த வேகத்தால் தேவ விமானங்களும் ஒன்றோடு ஒன்று மோதி உடைந்தன. மலைகள் என அலைகள் கொந்தளித்துத் தலை தடுமாறினமையால் மீன்கள் எல்லாம் சிதைந்து மேலே பிதந்தன. தன்னுடைய இரண்டு கைகளையும் முன்னே நீட்டி அதிவேகமாய் இம் மதிமான் போனான். கதி வேகங்களை விளைத்துப் போன அந்தக் கைகள் இராம லட்சுமணர்களைப் போல அதிசய நிலைகளில் துதி செய்ய நின்றன.

ஒருவரும் குணத்து வள்ளல் ஒருயிர்த் தம்பியோடும்
இருவரும் முன்னர்ச் சென்றால ஒத்தஅவ் இரண்டு பாலும்.

வான வெளியில் வாவிப் போகின்ற அனுமானுடைய கைகள் இரண்டையும் இங்ஙனம் காட்டியிருக்கின்றார். இந்தக் காட்சியைக் கண்ணூன்றிக் காணுகின்றோம்; கருதியுணர்ந்து நேரே உறுதி நிலைகளை ஓர்ந்து மகிழ்கின்றோம். மாருதியினுடைய உருவம் தலை முகம் மார்பு கை கால் வால் முதலிய அவயவங்கள் யாவும் இங்கே தெய்வீக மணம் கமழச் சுவையாகத் துதி செய்யப் பெற்றுள்ளன.

ஒருவன் உபகாரியாய் நேரும்பொழுது அவன் தருமவான் ஆகின்றான். ஆகவே அவனுடைய செயல் இயல்கள் யாவும் புண்ணிய உருவங்களாய்க் கண்ணியம் பெறுகின்றன.

கண்ணுதல் கடவுள் எழுந்தருளியிருக்கின்ற கைலையங்கிரி, கனகமால்வரை, தரும சக்கரம், புட்பக விமானம், சூரியன், சந்திரன், வாயு, கருடன், திருமால், ஆதிசேடன், காலபாசம் என இன்னவாறு அனுமானை வருணித்து வந்த கவி இறுதியில் இப் புனித வீரனுடைய கைகள் இரண்டும் இராமனையும் இலக்குவனையும் ஒத்திருந்தன என உய்த்துணர வுரைத்தார்.

வலக்கையும் இடக்கையும் போல் அந்தக் குலக் குமரர்கள் குலாவியிருக்கும் உண்மை ஈண்டு உலாவி ஒளி வீசி வந்தன.

உலகம் பல வகையிலும் உயர்ந்து தருமம் தலை எடுத்து நிலவ அரிய செயல்கள் செய்ய வந்த இனிய உருவங்கள் ஆதலால் உரிய கைகள் என்று பெரிய மெய்கள் தெரிய நேர்ந்தன.

வையமும் வானமும் உய்ய வந்தமையின் செய்ய கைகள் எனச் சீர்மை எய்தி நீர்மை காண நின்றார். கையில்லாத முடமாய் வையம் வெய்ய துயருழந்திருந்தது; அது உய்தி பெற இந்தக் குமரர் இருவரும் ஈண்டு உதயமாகியுள்ளனர். கை பெற்ற மனிதன் போல் இச் சேயரைப் பெற்றபின் ஞாலம் சீர் பல பெற்றுச் சிறப்பெய்தியுள்ளது.

பிறர்க்கு உதவி செய்கின்ற தரும சீலர்களுக்குத் தெய்வம் அருமைக் கைகளாய் மருவியுள்ள மருமம் இங்கே உரிமையாக உணர வந்தது. அரிய உண்மைகள் பல தெரிய வந்தன.

"நின் செங்கைத் தனு" என அனுமனை முன்னம் இராமனுக்கு வாலி உரிமை செய்தருளினன். தன் கைக் கோதண்டம் எனக் குலாவியிருந்தவனுக்குத் தானும் தம்பியும் இங்கே கைகளாய் நேர்ந்துள்ளமை கூர்ந்து ஓர்ந்து கொள்ள வுரியது.

மனிதன் இனியனாய்த் தொழில் செய்ய நேர்ந்தால் அவனுக்குத் தெய்வம் முன் நின்று உதவும் என்னும் உண்மையும் நுண்மையாக கண்டு உணர்ந்து கொள்ள வந்தது.

இராமனும் இலக்குவனும் சேர்ந்து செய்கின்ற வேலைகளை அனுமானுடைய கைகள் செய்தருளும் என்பதை இந்த ஒப்புமை நுட்பமாகக் காட்டியருளியது. வினைமேல் மூண்டு போகின்ற ஆண்டகைக்கு நீண்ட கைகளாய் நின்று வேண்டிய உதவிகளைத் தெய்வம் செய்யும் என்பதைத் தெளிவாகக் கண்டு கொள்ளுகின்றோம். இராம நாமத்தைத் தன் உள்ளத்தில் சிந்தித்துப் போகின்ற மாருதிக்கு அந்த வீர மூர்த்தி துணையாய் முந்திப் போகின்றான். தான் துணை புரிவதோடு அமையாமல் தன்னுடைய துணைவனையும் துணை செய்ய இணை சேர்த்துச் செல்கின்றான்.

எமனும் எட்டிப் பார்க்க அஞ்சுகின்ற இலங்கைமேல் அஞ்சாமல் செல்லுகின்றவன் தெய்வத் திருவருள் பெற்ற திவ்விய வீரன்; யாரும் செய்ய முடியாத அரிய பெரிய காரியங்களை எளிதே செய்து மீளுவன் என்பது விழி தெளிய வெளியாய் நின்றது.

## மைநாகம் வந்தது

அனுமான் இவ்வாறு ஆகாய வழியாய் இலங்கை நோக்கி வேகமாய்த் தாவிப் போகும் பொழுது கடலின் நடுவே ஒரு பெரிய மலை வெளியே விரைந்து கிளம்பி எதிரே தோன்றியது. அரிய பல வளங்கள் மருவி நெடிய சிகரங்களோடு நேரே இடை மறுத்து நின்ற அதனைக் கண்டதும் அனுமான் மிகவும் மேலே எழுந்து அயலே ஒதுங்கிப் போனன். போகவே அம் மலையின் அதி தேவதை ஒரு மானுட வடிவம் கொண்டு நேரே வந்து தொழுது தனது வரலாற்றை உழுவலன்போடு உரைத்து நின்றது. "ஓ உத்தம வீர! நான் மாயவஞ்சம் புரிகின்ற பகைவன் அல்லன்; தூய அன்புடைய நண்பன்; மலைகளின் இனத்தைச் சேர்ந்தவன்;

மைநாகம் என்பது என் பெயர். முன்னம் இந்திரன் கிரிகளைப் பங்கம் செய்த பொழுது உன் தந்தையாகிய வாயுபகவான் என்னை இங்கே கொண்டு வந்து இனிது சேர்த்தான். அந்த நன்றிக்காக இன்று உனக்கு ஓர் விருந்து செய்ய விரும்பினேன். அதுவுமன்றிக் கடலரசனான வருண பகவான் உனது வரவை எனக்கு அறிவித்து உன்னை நன்கு உபசரித்து அனுப்பும்படி உத்தரவு செய்துள்ளான். என் சிகரத்தின் மீது சிறிது பொழுது தங்கி நறிய கனி காய்களை உண்டு இளைப்பாறிப் போக வேண்டும்'' என்று ஓகையோடு வேண்டினான். அந்த உரைகளைக் கேட்டதும் மாருதி உள்ளம் உவந்தான். உரிமையோடு நோக்கினான்: ''மலை அரசே! அலைகடலிடையே வந்து ஆர்வத்துடன் என்னை உவந்து உபசரித்த உன்னுடைய அன்புடைமையை நினைந்து இன்புறுகின்றேன். உரிமையோடு உபகாரம் புரிகின்ற அருமைப் பண்பே தரும நிலையமாம். அந்தப் புண்ணிய நீர்மையை யாண்டும் கண்ணியமாக யான் எண்ணிப் போற்றுகின்றவன்; யாதோர் உதவியும் இல்லாத இந்த ஆழியிடையே நீ அன்புரிமையுடன் வந்தருளியது எனக்குப் பேரின்பம் தருகின்றது; என்னுடைய ஆண்டவன் காரியமாய் மூண்டு நான் இன்று விரைந்து போகின்றேன்; இப்பொழுது யாதும் தங்க முடியாது; கருமம் முடிந்து மீண்டு வருங்கால் ஈண்டு உன்னிடம் அமர்ந்து உண்டு செல்வேன்; இவ்வமையம் தடை செய்யலாகாது; விடை தருக'' என்று சொல்லிக் கொண்டே மேலே விரைந்து போனான்.

ஈண்டு யான் கடிதேகி இலங்கை விலங்கல் எய்தி
ஆண்டான் அடிமைத் தொழில் ஆற்றலின் ஆற்றலுண்டேல்
மீண்டுயான் நுகர்வென் நல்விருந்து என வேண்டி மெய்ம்மை
பூண்டான் அவன் கட்புலம் பிற்பட முந்து போனான்.

வாயு வேகமாய் அனுமான் இங்ஙனம் போயிருக்கிறான். தான் கருதிய கருமம் முடியும் வரையும் வேறு எதையும் கருதாத உறுதியுடையனாய்ப் பெரிய விரதம் பூண்டுள்ளமையை ஈண்டு உண்ண மறுத்ததே தெளிவான சான்றாய் வெளியாயுள்ளது. மெய் வருத்தம் பாராமல், பசி நோக்காமல், கண் துஞ்சாமல், கருமமே கண்ணாய் இவ்வீரன் மருவிச் சென்றுள்ளான்.

உள்ளம் தூய்மையான நல்லவர்கள் கொடிய காட்டில் புகுந்தாலும், நெடிய கடலில் சென்றாலும் அங்கேயும் ஆறுதலான

அனுகூலங்கள் தெய்வாதீனமாக நேரும் என்பதை இங்கே நேர்ந்த நிகழ்ச்சியால் ஓர்ந்துகொள்கின்றோம். பிறர்க்கு இதமாகச் செய்திருக்கும் உபகாரங்கள் எவ்வழியும் இன்ப நலங்களாய் மீண்டு வரும் என்பதும் ஈண்டு அறிய வந்தது.

ஆண்டான் அடிமைத் தொழில் எனத் தான் மேற்கொண்டுள்ள கருமத்தை அவன் காட்டியிருப்பது உரிமையன்பை ஊட்டியுள்ளது. குடியடிமையாகத் தன்னை இராமன் ஆட்கொண்டிருக்கின்றான் என ஆர்வம் மீதூர்ந்து அனுமான் இங்கே பேசியிருக்கிறான். அந்த ஆண்டவனுடைய கருமம் முடிந்து மீண்டபோது தான் உண்மையான அடியவன் ஆவேன்; அன்றுதான் உன்னைவுரியேன் என்று உரைத்துப் போயிருப்பது பலவும் எண்ண வந்தது. தன்னுடைய அடிமைத் தொழில் ஆண்டவனுடைய தலைமைத் தொழிலுக்கு வழியாயுள்ளமை வெளியாய் நின்றது.

மெய்ம்மை பூண்டான் என அனுமானை ஈண்டு உரைத்தது அவனது சத்திய சீலமும் உத்தம நீர்மையும் கருதி. சொல்லிய படி எல்லாம் செய்தருளுவான் என்பது உள்ளியுணர வந்தது.

சுரசை எதிர்ந்தது.

மைநாக கிரியிடம் உறுதி கூறிவிட்டுக் காரியவீரியமாய் இவ்வாறு அவன் விரைந்து மேலே போனான். அங்கிருந்து நான்கு காத தூரம் கடந்தபோது இடையே ஒரு பெரிய இராட்சசி எதிரே தோன்றினாள். சுரசை என்னும் நாக மாது தேவர் ஏவலால் அனுமானது ஆற்றலைச் சோதிக்க வந்தாள். இலங்கை சென்று கலங்காமல் மீளவல்ல ஆண்மை அனுமானுக்கு உண்டா? என்பதை நன்கு தெரிந்து கொள்ளவே விரைந்து வந்த அவள் கொடிய அரக்கியாய் நெடிதோங்கி நேரே நின்று "அடே! எங்கே போகின்றாய்! நில்; என் பசி தீர உன்னை இங்கே உண்டு கொள்வேன்; என் வாய்வழியன்றி வேறே எங்கும் நீ போக முடியாது" என வேகமாய் வீறிட்டு ஆரவாரத்தோடு ஆங்காரமாய் ஆர்த்து நெருங்கினாள். அவளைப் பார்த்து மாருதி யாதும் அஞ்சாமல் சாதுரியமாய்ப் பதில்மொழிந்தான். "அம்மா! நீ ஒரு பெண்பால்; பசித்து வந்துள்ளாய்; என்னைப் புசித்துக் கொள்ள விரைந்தாய்; உன் கொடிய பசிக்கு நான் இனிய இரை ஆவேன்; ஆனால் என் ஆண்டவன் காரியத்தை முடித்து நான் மீண்டு வரும் போது

ஈண்டு அதனைச் செய்து கொள்; இப்பொழுது என்னை விட்டு விடு" என இப்படி அதி விநயமாகச் சிரித்துச் சொன்னான்.

### தின்ன நேர்ந்தது.

அவள் கொதித்து நோக்கி "இக் கணமே உன்னைத் தின்று விடுவேன்; கிடைத்த இரையைக் கைகடக்க விட்டு மடத்தனமாய் மறுகில்லேன்" என்று இவ்வாறு சொல்லிக் கொண்டே தன் வெவ்வாயைத் திறந்து விரைந்தாள். உடனே அனுமான் அணு வடிவமாய் அவளது வாயுட் புகுந்து செவி வழியே வெளியேறி மேலே தாவிப் போனான். அமரர் அனைவரும் அதிசயம் மீதூர்ந்து தொழுது துதித்தார். அவளும் உரிமையுடன் வியந்து போற்றி "இந்த ஆண்டகையால் ஆகாத காரியம் யாதும் இல்லை" என்று மாருதியைப் புகழ்ந்து போனாள்.

### [illegible] தாரை அடர்ந்தது.

மாருதியைக் கடலது வான வீதியில் ஞான சோதி போல் போயினன் ஆடவர் வீரன் அதி வேகமாய்க் கதி கண்டு சென்றான். கடல் முக்கால் பாகம் கடந்து போயது. என்பதாவது போகையில் வழியிலே செல்லும் பொழுது தன் உடல் கீழே இழுக்கப்பட்டது. மேலே வேகமாய்ப் போகின்ற தன் தேகம் கீழ் நோக்கி அலமருதலை உணர்ந்து அனுமான் சிறிது விஞ்சை மந்திரத்தை நினைந்து வட்டமிட்டு நின்றான். நிற்கவே, கொடிய மாய இராட்சசி நெடிதோங்கி நேரே வழிமறித்து அழிவுறுத்துவதாக ஆர்த்து வந்தாள்.

இலங்கை மேல் எதிரிகள் யாரும் வாராதபடி கடலில் பாதுகாப்பு ஆக ஒரு மாய தேவதை மருவியிருந்தது. அவளுக்கு அங்கார தாரை என்று பெயர். கடல் மேலே பறந்து செல்லுகின்ற எவரையும் எந்த உருவையும் அவருடைய அந்த நிழல் வழியே கீழே இழுத்துக்கொள்ள வல்லவள் ஆதலால் சாயாக்கிரகி எனவும் அம் மாய வல்லவி பேர்பெற்று நின்றாள்.

அதிசய ஆற்றலுடைய அந்தத் தீய அரக்கி இந்தத் தூயவன் எதிரே செயிர்த்து வந்து சீறி நேரவே "நீ யார்? நிலைமை தெரியாமல் மூண்டால் மாண்டு போவாய்; ஈண்டு புலையாய் நீண்டு கலகம் செய்யாதே; விலகிப் போ!" என்று இவ் வீரன் கூறினான்.

அவள் மாறிச் சீறினாள்: "பெண்பால் என்று என்னைப் பிழையாய் எண்ணி எளிதாகப் பேசுகின்றாய்; விண்பால் உள்ளவரேனும் என் கண்பால் எதிர்ந்தால் பின்பு அவரை எவரும் காண மாட்டார்; காலனும் என் பேரைக் கேட்டால் கைகால் நடுங்குவான்; மூலம் தெரியாமல் முனைந்து பேசுகின்றாய்! என் பசித் தீக்கு இரையாய் இன்று நீ இறந்து போனாய்!" என்று விரைந்து பேசித் தன் பெரு வாயைத் திறந்தாள். திறக்கவே, அந்த நெடிய வாயுள் சிறிய வடிவாய்க் கடிது பாய்ந்து வயிற்றுள் புகுந்து பிளந்து கிழித்து மேலே விரைந்து தாவிப் பறந்து போனான். வயிற்றைப் பீறி வெளியேறும் போது குடல்களைக் கையில் வாரிக் கொண்டு போனமையால் ஆகாயத்தே தாவிப் போகின்ற மாருதியிடமிருந்து அவை நெடிய கயிறுகள் போல் கீழே நீண்டு தொங்கின.

வாரி விழுங்க விரைந்து அரக்கி வாயைத் திறந்ததும், அதனுள்ளே புகுந்து இவ் வீரன் வெளியேறிப் போனதும் விசித்திரக் காட்சியாய் வியப்பை விளைத்து நின்றது. அந் நிலையில் ஓர் உவப்பும் நகைப்பும் உடன் பிறந்து தோன்றின.

திறந்தாள் எயிற்றை அவள் அண்ணல் இடைசென்றான்
அறந்தான் அரற்றியது; அயர்த்து அமரர் எய்த்தார்;
இறந்தான் எனக் கொடுஓர் இமைப்பதனின் முன்னம்
பிறந்தான் எனப் பெரிய கோளரி பெயர்ந்தான். (1)

கள்வாய் அரக்கி கதறக் குடர் கணத்தில்
கொள்வார் தடக்கையின் விசும்பை மிசை கொண்டான்
முள்வாழ் பொருப்பின் முழை எய்தி மிக நொய்தின்
உள்வாள் அராக்கொடெழு திண்கலுழன் ஒத்தான். (2)

சாகா வரத்தலைவரில் திலகம் அன்னான்
ஏகா அரக்கிகுடர் கொண்டுடன் எழுந்தான்
மாகால் அசைப்ப வடம் மண்ணிலுற வாலோடு
ஆகாயம் உற்ற கதலிக்கு உவமை ஆனான். (3)

ஆர்த்தனர்கள் வானவர்கள்; தானவர் அழுங்கா
வேர்த்தனர்; விரிஞ்சனும் வியந்து மலர் வெள்ளம்
தூர்த்தனன்; அகன் கைலையின் தொலைவிலோனும்
பார்த்தனன்; முனித்தலைவர் ஆசிகள் பகர்ந்தார். (4)

கடல்தாவு படலம் (83-86)

அனுமானுடைய அற்புத ஆற்றல்களும் அருந்திறலமைதிகளும் இடையிடையே தெளிவாய் வெளியாகி வருகின்றன. தருமதேவதை எவ்வழியும் அவனுக்கு உரிமையாய் உதவி வருவதை உரைகள் தோறும் உணர்ந்து வருகிறோம்.

அறம்தான் அரற்றியது; அமரர் எய்த்தார.

இராம காரியமாய் அனுமான் இலங்கைக்குப் போவது தருமங்களை நிலைநிறுத்தவும், அமரர்களை வாழ்விக்கவுமே ஆதலால் அவனுக்கு இடையூறு நேர்ந்தபோது அறமும் அமரரும் மறுகி அலமந்து பரிவு கூர்ந்தனர். ஆகவே அவனது நிலையும் நீர்மையும் உலகம் அறிய நேர்ந்தன.

சாகா வரத்தலைவரில திலகம அன்னான்.

இறவாத சிரஞ்சீவிகளுள் அனுமான் பெரிதும் தலைசிறந்தவன் என்பது திலகம் என்றதனால் தெளிவாய் நின்றது. [என்றும் நிலையாயுள்ள நித்திய முத்தர்கள் போல இவ்வுத்தம வீரன் ஒளி சிறந்துள்ளமை உணர வந்தது.] சிரஞ்சீவி என அனுமானை ஈண்டு வரைந்து குறித்தது உயிர்க்கேடுகள் நேர்ந்தும் யாதொரு தீதுமின்றி வென்றி வீரனாய் வீறுகொண்டு மேலே போதல் கருதி

காற்றாடிப் பட்டம்.

தன் உடலுயிரை அழிக்க வந்தவளது குடலைப் பிடுங்கிக் கொண்டு ககன மார்க்கமாய்ப் போகின்ற இம்மான வீரனுக்கு ஈண்டு ஓர் உவமானம் நவமாக வந்துள்ளது.

ஆகாயம் உற்ற கதலிக்கு உவமை ஆனான்

அரக்கி குடலோடு செல்கின்ற அனுமான் வானில் பறக்கின்ற காற்றாடிப் பட்டம்போல் தோன்றினான் என அத் தோற்றத்தின் ஏற்றத்தைத் துலக்கியருளினர். கதலி = பட்டம், காற்றாடி.

சிறு பிள்ளைகள் விளையாடும் விளையாட்டுகளுள் காற்றாடிப் பட்டம் என்பதும் ஒன்று. நான்கு புறமும் சட்டம் அமைத்துக் காகிதத்தால் செய்த பட்டத்தை நீண்ட கயிறு இணைத்துக் காற்று அடிக்கும்போது வானில பறக்க விட்டு இளைஞர் உல்லாசமாய்ப் பார்த்துக் களிப்பர்.

அனுமான் பட்டத்துக்கும், அவனுடைய வால் பட்டத்தின் வாலுக்கும் குடல் நெடிய கயிற்றுக்கும், கீழே கிடக்கும் அரக்கி உடல் கயிற்றின் உருண்டைக்கும் ஒப்பாம்.

பட்டத்தை வானில் பறக்கவிட்டுக் கயிற்றைச் சிறிது சிறிதாக மேலே உருவவிட்டு விளையாடுகின்ற பாலப்பருவ விளையாடல்களை இக் காலத்தும் பார்த்து வருகின்றோம். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரும் இந்த ஆடல் இந்நாட்டில் சிறந்த நிலையில் இருந்து வந்துள்ளதை இங்கே தெரிந்து கொள்கின்றோம்.

சதுரமாய்ப் படம்போல் அமைந்திருத்தலால் பட்டம் என வந்தது. காற்றில் ஆடுவதால் காற்றாடி என நேர்ந்தது. ஒரு நிலையில் மிதந்து மெல்லமெல்ல அசைந்து மேலே செல்லுதலால் கதலி என நின்றது. கதலுதல் = அசைதல், இயங்குதல்

கயிறு அறுந்த பட்டம் போல் அற்ற கூடலோடு அனுமான் வானில் பறந்து போயிருக்கும் காட்சியை இங்கே கவி நேரே காட்டியிருக்கிறார். நாம் கண்டு நிற்கின்றோம்.

பாசத் தொடர்பற்ற பட்டம்போல் தம்முள்ளே
பாசத் தொடர்பற்ற பண்பாளர்—நீசப்
பிறப்பற்று மேலேறிப் பேரின்பம் எய்தி
இறப்பற்று நின்றார் இவண்.

கட்டு அவிழ்ந்த பட்டம்போல் பற்று அற்றவர் பிறவி நீங்கிப் பேரின்பம் பெறுகின்றார் என்னும் இது இங்கே அறிய வுரியது.

உற்ற இடையூறுகளை எல்லாம் உதறித் தள்ளி வெற்றி வீரனாய் அனுமான் வானில் வேகமாய்ப் போனான். சீறி எதிர்கின்ற இடர்கள் யாவும் இராம நாமத்தால் மாறி விடும் என்று தேறி அந்தரத்தில் விரைந்து போன அவ் வீரன் கரிய பெரிய கடல் நெடிய தூரமுடையது எனக் கதி வேகத்தை மிகவும் கடுமையாக்கி முடிவு காண அவாவி மூண்டு முடுகினான். முடிவில் கருங்கடலின் தென் எல்லையை மருங்கே கண்டான். மகிழ்ச்சி மீக்கொண்டான்.

ஆழியின் தென் கரையைக் காணவே சோதிமயமான இலங்கையும் அலங்காரமாய்த் துலங்கியது. மேலே வாவி வந்தவன் வேகத்தைச் சுருக்கிக் கீழே தாழ வந்து அயலே நின்ற ஒரு மலைமேல் லகுவாய்ந்து இறங்கினான்.

## பவள மலையில் தங்கியது.

இலங்கையின் வடபால் கடல் அருகே மருவியிருந்த பெரிய மலைச் சாரலில் தாவி இறங்கிய அனுமான் அங்கே மேவி நின்றான்.

அந்த மலைக்கு இலம்பம் என்று பெயர். உயர்ந்த குளிர் மரங்களுடையது; சிறந்த வளங்கள் நிறைந்து பவளம் முதலிய பல வகை மணிகளும் மலிந்து சிவந்த சாரல்கள் அமைந்திருந்தமை பால் பவள மால் வரை என அதனை யாவரும் வழங்கி வந்தனர். தேவரும் அணுக அஞ்சுகின்ற அம் மலையில் அஞ்சனைச் சிங்கம் அஞ்சாது புகுந்து ஆவதை ஆராய்ந்து நின்றது.

தனது தேவியைக் கவர்ந்து போன இராவணனுடைய ஆவியைக் கவர்ந்து மீளும்படி இராமன் ஏவிய ஒரு எமதூதனாய் மாருதி ஆண்டு மருமமாய் மருவியிருந்தான். கொடிய பகைவன் எல்லையில் கடிது புகுந்து கருமம் கருதி அவ்வீரன் இருந்தது வித்தக விளையாண்மையாய் விறு கொண்டு நின்றது.

அலைக்காகம் மலைச்சாரல் பலாச்சுளையைக்
கவ்வி எழுந்து அரக்கர் கோமான்
சிலைத்தாசரதிமனையைக் கொண்டகன்றால்
என வங்கம் சேரும்; அந்நாள்
நிலைப்பான மதில் இலங்கை மிசைத்தாவும்
அனுமனைப்போல் நீள்வால் மந்தி
மலைப்பால்நின்று அலைத்தோணி பாய்ந்துழக்கி
மீண்டெய்தும் வாழ்வும் அங்கண். (காஞ்சிப் புராணம்)

கடலில் வாழும் காகம் அயலே மலைச் சாரலிலுள்ள பலாச் சுளையைக் கவ்விப் போனது, சீதையை இராவணன் கவர்ந்து போனது போல் விளங்கி நின்றது. மலையில் இருந்த மந்தி கடலில் பாய்ந்து தோணியை உழக்கி மீண்ட நிலை, மகேந்திரகிரியிலிருந்து அனுமான் இலங்கைமேல் தாவி மீண்டது போல் மேவியிருந்தது; [illegible] இது ஈண்டு ஓதியுணர வந்தது.

காவியக் கவிகளுடைய கற்பனைக் காட்சிகளில் இராம சரித இயல்புகள் இவ்வாறு எங்கணும் சுவையாய் இயங்கி வருகின்றன. அரிய நிலைமைகள் என்றும் புதிய தலைமைகளாய் மருவி யாண்டும் இன்பம் சுரந்தருளுகின்றன.

## இலங்கையை நோக்கியது.

பவள மலையில் வந்து அனுமான் தாவி இறங்கிய பொழுது அந்தி அணுகி நின்றது. பிற்பகல் பன்னிரண்டு நாழிகை கழிந்திருந்தது. இக் காலக் கணித முறைப்படி மாலை ஐந்து மணியா

யது. பொழுது அடைய இன்னும் சிறிது நாழிகை யிருந்தமை யால் இரவை எதிர் நோக்கி அனுமான் கரவாயிருந்தான் இருந் தவன் நெடிய சிகரம் ஒன்றில் ஏறி அமர்ந்து இலங்கை மா நகரை இனிது நோக்கினான். அளவிடலரிய அதன் அழகுகளையும் அரு மைகளையும் பெருமைகளையும் அதிசய நிலைகளையும் கண்டு உளம் மிக வியந்தான். "ஆ என்ன எழில்! என்ன வளம்! என்ன ஒளி! என்ன பெருமை! என்ன அருமை; என்ன மகிமை! என்ன போகம்! என்ன யோகம்!" என இன்னவாறு உன்னி உன்னி அதிசய பரவசனாய் மதி மகிழ்ந்து நின்றான்

பொன்னுலகம் ஆகிய அரசி தன்னுடைய அழகு முழுவ தையும் ஒருங்கே கண்டு மகிழும்படி கீழே வைத்துள்ள தெளி வான ஒரு பெரிய நிலைக் கண்ணாடி போல் நிலவியிருந்த இலங்கா புரியை அனுமான் நேரே கண்டபோது அவன் உள்ளத்தில் கொண்ட உவகை நிலைகள் உரைகள் வழியே உலகம் அறிய வெளி வந்துள்ளன. சிறந்த கலை ஞானி ஆதலால் தான் கண்ட காட்சி களை அழகாகவும் தெளிவாகவும் வெளியிட்டிருக்கிறான். உரைகள் தோறும் சுவைகள் ததும்பி உணர் வொளிகள் பொங்கி மிளிர் கின்றன.

நாகர் பொன்னகர் இதனை ஒக்கும் என்பது புல்லிது.

அனுமான் இலங்கையைப் பார்த்த போது முதலில் வந்த வார்த்தை இது. தேவ உலகங்களிலுள்ள எந்த நகரும் இதற்கு இணை ஆகாது என்று எண்ணியுள்ளான்.

இந்திரன் நகரம் ஆகிய அமராவதியும், குபேரன் பட்டண ஆகிய அளகாபுரியும் இலங்காபுரியின் எதிரே எழில் இழந்து இழிந்து போம் என மொழிந்திருக்கிறான். அமரர் கோனும் அ கையாளியும் இராவணன் எதிரே படுகின்ற பாட்டை அவர்க நகரமும் அவன் நகர்முன் பட்டு நிற்கின்றன.

தேவர் முதல் யாவரும் ஏவல் செய்ய மூவுலகங்களையு ஒருங்கே ஆளுகின்ற இராவணன் தனக்கு உரிய இராசதானியா உவந்துகொண்டிருத்தல் ஒன்றே இலங்கை அதிசய மகிமை யுடையது; அமரரும் துதி செய்ய உரியது என்பதைத் தெ வாகத் துலக்கி நின்றது. அண்டங்கள் எங்கணும் ஆணை

செலுத்துகின்ற சக்கரவர்த்தியின் தானம் ஆதலால் வான உலகங்கள் யாவும் அதனை வணங்கி வருகின்றன. எண்ணிய இன்ப நலங்கள் எல்லாம் எங்கணும் நிறைந்துள்ளமையால் இலங்கை ஒரு புதிய புண்ணிய உலகமே என்று போற்றி நின்றான்.

ஈண்டரும் போக இன்பம் யாண்டுக் கண்டாம்
ஆண்டு அது துறக்கம்.

சுவர்க்க பூமிக்கு இது இலக்கணம் குறித்துள்ளது. ஐம்புலன்களுக்கும் உரிய அரிய போகங்கள் எங்கே நிறைந்திருக்கின்றனவோ அந்த இடமே துறக்கம் ஆம் எனத் துணிந்து உரைத்திருக்கிறான். எல்லா இன்ப நலங்களும் நிறைந்து யாண்டும் எழில் ஈரந்து என்றும் ஒளி மிகுந்த ஓர் அதிசய போக பூமியாய் இலங்காபுரி இலங்கி யுள்ளமை துலங்கி நின்றது.

அளவிடலரிய கண்காட்சிகளாய் அது நிலவியுள்ளமையை நினைந்து நின்றான். எழுநூறு யோசனை சதுர அளவுடையது என இந் நகரை முன்னோர் கூறி வந்துள்ளனர்; அந்த அளவினும் நீள அகலங்கள் விஞ்சியுள்ளன என நெஞ்சுள் வியந்து நெடிது புகழ்ந்தான். தேவ காந்தருவர்களும் கண்டு மயங்கிக் கருதித் துதிக்கும் படியான அதிசய எழில்களையும் அரிய பல வளங்களையும் உடையது என்று உறுதி செய்து பெரிதும் மகிழ்ந்தான்.

## நகரின் நிலைமை.

பொது நோக்காக ஊரை நோக்கினவன் பின்பு மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும் நெடிய வீதிகளையும் பெரிய சாலைகளையும் அரிய சோலைகளையும் கருதிப் பார்த்தான்.

வெண்மையான சுண்ணச் சாந்துகளால் அமைந்த மாளிகைகள் யாண்டும் எண்மையாயிருந்தன. பொன்னும் மணியும் பொதிந்து புரிந்த மாடங்களே எங்கும் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து விண்ணையும் மண்ணையும் இகழ்ந்து பண்ணை பண்ணைகளாய் நிமிர்ந்து எண்ணரிய எழில் ஒளிகளோடு எங்கணும் பொலிந்து யாவரும் வியந்து மகிழ யாண்டும் உயர்ந்து நின்றன.

மேல் மாடங்கள் மேக மண்டலம் அளாவி விளங்கின. ஆகாய கங்கையிலிருந்து நீரை அள்ளித் தெளிக்கும்படி அரமியத் தலங்களும் உப்பரிகைகளும் உயர்ந்து ஓங்கி ஒளி செய்து துலங்

கின. பேரெழிலுடைய தருண மங்கையர் நிலா முற்றங்கள் எங் கணும் நிலவித் தூசி துடைத்தல், மகரந்தங்களை வாரி ஒதுக்கல், நறுநீர் தெளித்தல் முதலிய தொழில்களை மாலை நேரம் வந்ததும் மேலே செய்து திரிந்தனர். குழலும் வீணையும் யாழும் குழைய மழலை மொழிகளைப் பேசி மகளிர் யாண்டும் உல்லாசமாய் உலாவி வந்தனர். இரதங்கள் யானைகள் குதிரைகள் சிவிகைகள் வீதிகள் தோறும் அணிகள் அணிகளாய் போய்க் கொண்டிருந்தன. ஒவ்வொரு வீடும் தேவராசனுக்கு ஆவலோடு செய்த திவ்விய மாளிகையினும் சிறந்து எவ்வழியும் யாவும் தேசு வீசித் திகழ்ந்தன. அந்தர வாசிகள் ஏவல் புரிய இந்திர பவனமும் நாண எம்மருங்கும் மாடங்கள் செம்மையாகச் செழித்து விளங்கின. போகபூமியிலும் காணமுடியாத தேக போகங்கள் ஏக போகங்களாய் யாண்டும் மலிந்து எவரும் இன்புற ஆவலுடன் அருளி நின்றன.

மரம் அடங்கலும் கற்பகம்; மனையெலாம் கனகம்;
அரமடந்தையர் சிலதியர் அரக்கியர்க்கு; அமரர்
உரமடங்கிவந்து உழையராய் உழல்பவர் ஒருவர்
தரமடங்குவ தன்று இது தவம் செய்த தவமால். (1)

தேவர் என்பவர் யாரும் இத் திருநகர்க்கு இறைவற்கு
ஏவல் செய்கிலார் எவரே? எண்வகை உருவின்
மூவர் தம்மினும் அதிகன் என்றால் அவன் முயலும்
தாவில் மாதவம் அல்லது பிறிதொன்று தருமோ? (2)

மரகதத்தினும் மற்றுள மணியினும் வனைந்த
குரகதத் தடந் தேரினம்; அவை பயில் கொட்டில்
இரவி வெள்க நின்று இமைக்கின்ற இயற்கைய என்றால்
நரகம் ஒக்குமால் நன்னெடும் துறக்கம் இந்நகர்க்கு. (3)

தெய்வத் தச்சனைப் புகழ்துமோ? செங்கண்வாள் அரக்கன
மெய்யொத்துஆற்றிய தவத்தையே வியத்துமோ? விரிஞ்சன்
ஐயப் பாடிலா வரத்தையே மதித்துமோ? அறியாத்
தொய்யற் சிந்தையாம் யாவரை யாதென்று துதிப்பாம்.? (4)

இழையும் மாலையும் ஆடையும் சாந்தமும் ஏந்தி
உழையர் என்ன நின்று உதவுவ நிதியங்கள் ஒருவர்
விழையும் போகமே இங்கிது வாய் கொடு விளம்பின்
குழையும் நெஞ்சினால் நினையினும் மாசென்று கொள்ளும்.

பளிக்கு மாளிகைத் தலந்தொறும் இடந்தொறும் பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண்ணறுஞ் சோலைகள் தோறும்
அளிக்கும் தேறலுண்டு ஆடுநர் பாடுந ராகிக்
களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்

கறங்கு கால்புகா; கதிரவன் ஒளிபுகா; மறலி
மறம்புகாது இனி வானவர் புகார் என்கை வம்பே;
திறம்பு காலத்துள் யாவையும் சிதையினும் சிதையா
அறம்புகாது இந்த அணிமதில் கிடக்கை நின்று அகத்தின்.

இலங்கையைக் கண்டபோது அனுமான் கருதி மொழிந்துள்ள உரைகள் இங்ஙனம் பெருகி வந்துள்ளன. பெரிய பண்டிதனுடைய வாய்மொழிகள் அரிய பண்பாடுகளோடு இனிமை சுரந்து புதுமை நிறைந்து பொலிந்து திகழ்கின்றன. நேரே பார்த்தவன் நெஞ்சம் வியந்து தன்னுள்ளே பேசினான்; அவ் வார்த்தைகள் எங்கும் பரவி என்றும் ஒலித்துச் சொலிக்க நிற்கின்றன

மரங்கள் எல்லாம் கற்பகங்கள்; மனைகள் எல்லாம் கனகங்கள்; அழகிய அரம்பையர்கள் தோழிகளாய் அமைந்து அரக்கிகளுக்கு ஊழியங்கள் புரிகின்றனர்; தேவர்கள் யாவரும் அரக்கர்களுக்கு ஏவல்கள் புரிகின்றனர்; அம்மா! என்ன அதிசயம்? என்று எண்ணி வியந்தவன் முடிவில் ஒரு முடிவு செய்துள்ளான்.

இது தவம் செய்த தவம்.

இலங்கை வாசிகளுடைய இன்ப வாழ்வுகளுக்கு மூல காரணம் இதுதான் என இறுதியில் அனுமான் உறுதி செய்திருக்கும் உண்மை கருதி உணரவுரியது. அரிய தவம் செய்திருந்தால் அன்றி இவ்வளவு பெரிய திவ்விய போகங்கள் எளிதே எய்தியிரா என்று செவ்வையாகத் தெளிந்திருக்கிறான்.

முன்னம் பண்ணியுள்ள புண்ணியங்களினாலேயே எண்ணரிய இன்ப நலங்கள் இவ்வண்ணம் நண்ணியுள்ளன என்று எண்ணி வியந்து கண் இமையாது நின்றது காரண காரிய நிலைகளை உலகம் கூர்மையாக ஓர்ந்து நீர்மை தேர்ந்து கொள்ள வந்தது.

நன்னெடும் துறக்கம் இந்நகர்க்கு நரகம் ஒக்கும்.

இது எவ்வளவு வேகமான வார்த்தை! இவ்வளவு உச்ச நிலையில் இலங்கையைப் புகழ்ந்து பேசியது அதனுடைய வளங்களை

நேரே வியந்து நோக்கியதனால் விளைந்து வந்தது. அதிசய பரவசனாய்த் துதி செய்திருக்கிறான். உள்ளத்தின் வியப்பு எல்லை மீறிய பொழுது உரைகள் அளவு மீறி வெளி வருகின்றன.

குதிரை கட்டும் லாயங்கள், தேர் நிறுத்தும் சாலைகள், முதலிய சாதாரண நிலையங்களும் சந்திர சூரியர்களைப்போல் ஒளிவீசி இந்திர மாளிகையினும் எழில் மிகுந்திருந்தமையால் இவ்வாறு சிந்தை வியந்து பேச நேர்ந்தான்.

இன்ப நிலையமான துறக்கமும் இலங்கை வளங்களோடு எதிர் நோக்கின் இழிந்து வெறுக்கப்படும் என்பான். துறக்கம் நரகம் ஒக்கும் என்றான். இந்த விளக்கம் துளக்கமுடையது.

யாரும் விழைந்து போற்றுகின்ற உயர்ந்த சுவர்க்கத்தை இங்கே இளிவாகப் பழித்து நிந்தித்ததுபோல் வெளியே கவித்துத் தோன்றுகின்றது. கண்ட காட்சியின் சிறப்பை உறுதியாக உணர்த்த நேர்ந்தமையால் அயலே உயர்வான ஒன்றை இயல்பாக இழிக்க நேர்ந்தான்

உரைக் குறிப்புகளைக் கூர்ந்து நோக்கின் உண்மை நிலைகளை ஓர்ந்து கொள்ளலாம். துறக்க வாசிகள் எல்லாரும் இலங்கை வாசிகள் எதிரே நரக துன்பங்களை அதுபொழுது அனுபவித்துக் கொண்டு வருகின்றனர். அவ் வரவு நிலை உறவாய் வந்தது.

பொன்னுலகில் வாழுகின்ற ஆணும் பெண்ணும் மானம் மரியாதைகளை இழந்து இலங்கையில் வந்து அரக்கர்க்கு ஊழியம் புரிந்து இன்னலுழந்து திரிகின்றனர். துறக்கத்திற்குரிய இன்ப வாழ்வெல்லாம் தொலைந்து துன்ப வாழ்வுகளையே தோய்ந்து உழலுகின்றனர். துயர இழிவுகள் தோன்றி நின்றன.

இலங்கை இருக்கும் வரையும் துறக்கம் நரகமேயாம் என்னும் குறிப்பு ஈண்டு நுணுகியுணர வந்தது. தருமங்கள் பாவங்கள் ஆகின்றன; தவங்கள் அவங்களாகின்றன; அவ்வாறே நல்லவை எல்லாம் அல்லவைகளாய் மாற அரக்கர் வாழ்வு மீறி வருகின்றது; அவரது ஊரும் துறக்கம் நரகம் என உரைக்க நின்றது.

அந்த அரிய பெரிய அதிசய நிலைகள் எல்லாம் அடியோடு விரைவில் ஒழிய நேர்ந்துள்ளமை உரை ஒலியால் தெளிய வந்தது.

இனிய துறக்கத்தை இன்னா நரகம் என்று சொல்லும்படி வாழுயர்ந்து நிற்கின்ற இலங்கையை நரகம் ஆக்க அனுமான் புகுந்திருக்கிறான். அந்தத் தருமவீரனுடைய கருமக் காட்சிகளில் பெருமை மாட்சிகள் பெருகி வருகின்றன.

இலங்கையின் அதிசய வளங்களை நோக்கிப் பலபடியாக வியந்து நின்றான். அந் நகரை அழகுற அமைத்த தெய்வத் தச்சனைப் புகழ்ந்தான்; இராவணனது தவத்தை வியந்தான். அந்த அரக்கர் பதிக்குப் பிரமன் அருளியுள்ள வரபலத்தை நினைந்து போற்றினான். பொன் ஆடைகளும் மணியணிகளும் அமுதங்களும் ஐம்புல இன்பங்களும் எங்கணும் கற்பகத் தருக்கள் ஏந்தி அருளுகின்றன என்று ஓர்ந்து மகிழ்ந்தான். இன்ப நலங்களைத் தவிர யாண்டும் யாதொரு துன்ப வாசனையும் வீசவில்லையே; இது என்னே ஈசன் அருள்! என்று இலங்கை வாசிகளுடைய பேரின்ப நிலைகளை நினைந்து நினைந்து நெஞ்சம் வியந்து நெடிது நோக்கினான்.

களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்.

இலங்காபுரியை நேரே கண்ட அனுமான் அங்கு வாழ்கின்றவர்களுடைய நிலைகளைக் குறித்து இங்ஙனம் கூறியிருக்கிறான். அங்கே எவருடைய முகத்திலும் கவலைக் குறியைச் சிறிதும் காணோம்; எல்லாரும் மகிழ்ச்சி மீதூர்ந்து உல்லாச வாழ்வில் உலாவி வருகின்றனர். அவருடைய வாழ்வும் சூழ்வும் எவ்வழியும் இன்ப நிலையங்களாகவே இனிது திகழ்கின்றன. நாளும் நாளும் புதிய புதிய இனிய போகங்களை அனுபவித்துக் கொண்டு யாண்டும் ஆடலும் பாடலும் கூடலும் குலாவலுமாகவே நீண்டு நிலாவலால் யாவரும் பேரானந்த நிலையராய் பெருகியுள்ளனர்.

பூவுலகத்தில் வேறு எந்த இடத்திலும் இத்தகைய வாழ்வைப் பார்த்தது இல்லை; தேவ வுலகத்திலும் கண்டதில்லை ஆதலால் இலங்கையர் வாழ்க்கை ஓர் அதிசய நிலையமாய் அனுமானுக்குத் துலங்கி நின்றது. அந் நிலைகளை நினைந்து உளம் மிக வியந்தான்.

உலக வாழ்வு பலவகையான கவலைகளையுடையது; மனிதர் எவரும் மனவேதனைகளையே மருவியுழலுகின்றனர்; உள்ளக் கவலைகளும் அல்லல்களும் தொல்லைகளுமே எங்கும் தொடர்ந்து படர்ந்து அடர்ந்திருக்கின்றன

இன்பம் அணுவே; இடர் மலையே! என்றபடி மனித வாழ்வில் யாண்டும் துன்ப நிலைகளையே கண்டு வந்துள்ள அனுமான் இன்று இலங்கை வாசிகளுடைய இன்ப வாழ்வைக் கண்டதும் அதிசயம் மீதூர்ந்து பேசினன். கவலை எவரிடமும் காணேம்; களிப்புகளே எல்லாரிடமும் ஒளி வீசியுலாவுகின்றன என்ற இது எவ்வளவு வியப்பை நமக்கு விளைத்து நிற்கின்றது! வாழ்ந்தால் இவ்வாறு வாழ வேண்டும் என்ற ஆவலை எழுப்பி யாவரும் வியந்து புகழ ஈண்டு இது துலங்கியுள்ளது.

இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய தேசங்களுக்குப் போய் வந்த நண்பர் ஒருவரைச் சமீபத்தில் சந்திக்க நேர்ந்தது. அந்த நாடுகளின் வளங்களையும், மக்களுடைய பழக்க வழக்கங்களையும் வாழ்க்கைத் திட்டங்களையும் அவர் மிகவும் வியந்து புகழ்ந்து பேசினர். "லண்டன் மாநகரிலும், நியூயார்க்கிலும் உள்ளவர்கள் யாதொரு கவலையும் இல்லாதவர்களாய் எப்பொழுதும் சிரிப்பும் களிப்புமாகவே வாழ்ந்து வருகின்றார்கள்; மகிழ்ச்சியும் மலர்ச்சியும் உல்லாச விநோதமுமே எந்த முகத்திலும் தாண்டவம் ஆடுகின்றன. ஆண் பெண் இருபாலாரிடமும் நான் கண்ட காட்சிகள் வான் கண்ட மாட்சிகளாய் இன்றும் தோன்றுகின்றன. அந்த வாழ்வையும் நம்முடைய நாட்டு வாழ்வையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நமது நிலைமையை வெளியே சொல்ல உள்ளம் நாணுகின்றது; மேலான இன்ப வாழ்வுக்கு வெள்ளையரே வரம் வாங்கி வந்துள்ளவர் போல் விளங்கியுள்ளது" என இவ்வாறு விளம்பினர். அப்பொழுது அந்த நண்பரை நான் அன்புடன் நோக்கி, "இப்பொழுது நீங்கள் சொல்லியது போலவே இலங்கையைப் பார்த்த அனுமானும் முன்னம் உவந்து பேசியுள்ளான் என்றேன். "அது எப்படி?" என்று அவர் வியந்து கேட்டார்.

அளிக்கும் தேறல் உண்டு ஆடுநர் பாடுநராகிக்
களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்.

என்று தான் நேரே கண்டதை அனுமார் இப்படிக் கூறியிருக்கிறார் என்றேன். கூறிய சாரத்தைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து புகழ்ந்து அன்று முதல் கம்பராமாயணத்தை முறையே படித்து வருவதாக உறுதி மொழி புகன்று அவர் அகன்று போனர்.

தாம் முன்பு செய்த நல்வினைப் பயனால் பல வகையான அரிய போகங்களையும் எளிதே பெற்று எல்லாரும் இன்புற்று வருகின்றார் என இலங்கை வாசிகளுடைய பழம் புண்ணிய நிலைகளை இடையிடையே அனுமானமாக எண்ணி வியந்த அனுமான் முடிவாக நண்ணியுள்ளதையும் நயந்து நினைந்தான்.

இராசதானியாய் வாய்ந்துள்ள நகரின் அமைதிகள் எவ்வழியும் வியப்பையும் விம்மிதங்களையும் விளைத்துத் திகைப்புகளையுண்டாக்கின. அரணும் ஆற்றலும் இயற்கை வலிகளையும் மீறிச் செயற்கை நிலைகளில் உயர்ந்து முரண் ஆற்றி நின்றன.

கறங்கு கால் புகா; கதிரவன் ஒளி புகா;
மறலி மறம் புகாது.

இலங்கையின் அதிகார ஆணைகளையும் பாதுகாப்பின் நிலைகளையும் இது காட்டியுள்ளது. காற்றும் வெயிலும் இயல்பாக எங்கும் புக வல்லன; அவையும் அங்கே அஞ்சி ஒதுங்கும் என ஆற்றலின் ஏற்றம் இனிது தெளிய உரைத்தார். கால் = காற்று. புகா என்று பலவின்பால் வினையால் குறித்தது காற்றின் நிலையையும் வகைகளையும் நேரே தெரிய வந்தது.

தெற்கு வடக்கு கிழக்கு மேற்கு என்னும் நான்கு திசைகளிலிருந்தும் வீசும் காற்றுக்கு முறையே தென்றல் வாடை கொண்டல் கோடை என்று பேர். இந்தப் பருவக்காற்றுகள் எதுவும் இலங்கையுள் எல்லை மீறி ஏறிச் செல்லா என்பார் புகா என்றார்.

உணவு நீர் காற்று என்னும் இம் மூன்றும் உயிர் வாழ்வுக்குரிய இனிய ஆதாரங்கள். உடல்களோடு உயிர்கள் மருவி நெடிது வாழ்ந்து வருதற்கு மூல காரணங்களாய் அமைந்திருத்தலால் இவை சீவ ஆதாரங்கள் என வந்தன. இவற்றுள் ஒன்றைவிட ஒன்று இன்றியமையாத உயிர் நிலையாய் ஓங்கியுள்ளது. உணவு இன்றி இருபகல் இருக்கலாம்; நீர் இன்றி ஒரு நாள் வாழலாம்; காற்று இல்லை ஆனால் ஒரு கணமும் இருக்கமுடியாது. உயிர்ப்பே உயிராயிருப்பதை அனுபவத்தில் ஓர்ந்து வருகின்றோம்.

இத்தகைய உயிர் நிலையமான காற்று இலங்கையுள் புகாது என்றால் அங்கே உள்ளவர்கள் எப்படி உயிர் வாழமுடியும்? என்று இப்படி ஒரு கேள்வி நுட்பமாய் எழும் ஆதலால் அதனை எதிர் நோக்கிக் கறங்குகால் என்றார். கறங்குதல் = சுழலுதல், சுற்றுதல்.

சுழல் கால்களும், சூறைக் காற்றுகளும் இலங்கையின் பேரைக் கேட்டாலே அஞ்சி அடங்கும்; அதன் அருகேயும் யாதும் புகாது.

தான் கருதியபடியே தன் மூப்பாக அதிகார ஆற்றல்களோடு மற்ற இடங்களில் புகுதல்போல் இலங்கையுள் புக முடியாது; அங்குள்ள அரக்கர்களுக்கு வேண்டிய அளவு யாண்டும் எவ்வழியும் இதமாகவே காற்று வீசி வர வேண்டும்; வேறு வகையாய் மீறி வரலாகாது.

கோடைக் காலத்தில் கண்ணில் மண்ணை வாரி அடிக்கின்றது; மேல் வேட்டியைப் பறித்துக் கீழே எறிந்து விடுகின்றது; கூரைகளைப் பிறித்துக் கொண்டு போகின்றது; மரங்களை முறித்து வீழ்த்துகின்றது; இவ்வாறு இங்கே செய்வது போல் கறங்குகால் இலங்கையில் யாதும் செய்யாது என்க.

காற்றும் வெயிலும் யாண்டும் மூண்டு முனைந்து செல்ல வல்லன; யாரும் அவற்றை இடையே தடை செய்ய முடியாது; இவ்வாறு இயற்கை வீறுடைய அவை அரக்கர் ஊரில் அடங்கி ஒடுங்கி இதமாய் எங்கும் இயங்கி வரும் என்பதாம். வெயில் என்றது கதிரவன் ஒளி என்றது, வெளியே தனக்கு உள்ள மரியாதையும் கீர்த்தியும் இலங்கையுள் இல்லை என்பது தெளிய வந்தது. ஒளியாளன் ஒளியிழந்து இளிவாய் உழல்கின்றான்.

வேனல் வெப்பம் சிறிதும் இல்லாமல் என்றும் குளிர் நிழலாய்க் கதிரவன் அங்கே இதஞ்செய்து வரவேண்டும் என்க.

சூரியன் இராவணனுக்கு அஞ்சி இலங்கை நகரின் மேலே செல்லாமல் தெற்கும் வடக்குமாய் ஒதுங்கியே போகின்றான்; அதனாலேதான் தட்சிணாயனம் உத்தராயணம் என அயனங்கள் உளவாயின என்று ஒரு முறை சிலர் கூறிய பொழுது வேறு சிலர் அதற்கு மாறு கூறினர். இலங்காபுரியின் மாளிகை மதில்களின் ஒளிகளால் விழி ஒளி கூசியே ஆதவன் விலகிப் போகிறான் என விளம்பி நின்றனர்.

''முன்னம் யாவரும் இராவணன் முனியும் என்று எண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான் கதிர் எனப் புகல்வார்
கன்னி ஆரையின் ஒளியினில் கண்வழுக்கு உறுதல்
உன்னி நாள்தொறும் விலங்கினன் போதலை உணரார்.

இன்னவாறு எவ்வழியும் இலங்கை இசை பெற்றுள்ளது.

அதிசய நிலைகளே யாண்டும் குடிகொண்டு திகழ்கின்றன.

எமனுடைய அதிகார ஆற்றல்களும் ஆண்டுச் செல்லாது என்பார் மறலி மறம் புகாது என்ருர். செத்த சவத்தை எடுத்துச் செல்லும் தோட்டி போல அரக்கர் இறந்த பொழுது தன் கடமையைச் செய்ய உடனே மறலி வந்து போக வேண்டுமேயன்றி வேறு மாருக ஒன்றும் அவன் அங்கே செய்ய முடியாது.

பிள்ளையை இழந்து பெற்றதாய் கதறுதல், கணவனை இழந்து மனைவி அழுதல் முதலிய பரிதாபமான கொடிய சாவுகள் இலங்கையில் யாதும் இல்லை என்பதை இங்ஙனம் சொல்லியருளினர்.

காற்றும், கதிரவனும், கூற்றும் யாண்டும் ஏற்றமான ஆற்றலுடையவர்கள்; யாரிடமும் எவ்வழியும் யாதொரு தடையுமின்றிச் செல்ல வல்லவர்கள்; அத்தகைய ஆற்றலாளரும் இலங்கையில் ஏற்றம் இழந்து இனிய ஊழியர்களாய் அடங்கி ஒடுங்கி நடந்து வந்தனர். இதனல் அந்த நகரின் அரண் வலியும் அதிசய நிலையும் இனிது புலனய் நின்றன. அரிய பெரிய வலிய உறுதி நலங்களை இவ்வாறு கருதி வந்தவன் முடிவில் முடிவு செய்தது நெடிது சிந்திக்க நேர்ந்தது.

அறம்புகாது இந்த அணிமதிட் கிடக்கை நின்று அகத்தின்.

மூன்று உறுதி நிலைகளை முன்னம் உன்னி வியந்து உளைந்தவன் இறுதியில் இன்னவண்ணம் எண்ணி இரங்கியுள்ளான்.

இவ்வளவு அதிகார நலங்களையும் அதிசய வளங்களையும் அற்புத நிலைகளையும் உடையதாயினும் இந் நகரில் தருமம் இல்லையே! என்று மறுகி இரங்கியது அனுமானுடைய புண்ணிய நீர்மையை எண்ணியுணரச் செய்கின்றது. கருமவீரன் கருதியுள்ள தருமக் காட்சி மரும மாட்சிகளை மருவி ஓர் உரிமையை விளக்கியுள்ளது.

யுக முடிவில் எல்லாம் அழியினும் தான் யாதும் அழியாது நின்று தனது விழுமிய பயனை எவ்வழியும் வழுவாமல் நல்கியருளும் எனத் தருமத்தின் நித்திய நிலைமை இங்கே உய்த்துணர வந்துளது. நில்லா வுலகில் எல்லா நிலையிலும் நிற்பதை உணர்த்தினன்.

திறம்பு காலத்துள் யாவையும் சிதையினும் சிதையா அறம். என்றதனல் தருமம் யாண்டும் என்றும் அழியாத கடவுள் உருவம் என்பதைக் காட்டியருளினன். திறம்பல் = நிலை திரிதல்.

இத்தகைய நல்ல புண்ணியம் இல்லாமையினால் இந்த இலங்காபுரி விரைந்து அழிந்து பாழாம் என்பது முடிந்த முடிபாய்த் தெளிந்து கொள்ள வந்தது. காற்றும் கதிரும் கூற்றும் புகாத ஆற்றல் வாய்ந்து ஏற்றம் மீதூர்ந்துள்ள இந்த வீரநகருள் யாரும் யாதும் மாறாக ஆற்ற முடியாதே! என்று அலமந்த போது அறம் வந்து உதவியுள்ளது. அறம் புகாமையால் இதனை எளிதே வென்று விடலாம் என்று வரம்பு கண்டு உரம் புகுந்து ஊக்கி நின்றான்.

யாண்டும் தீமைகளே செய்யும் பாவகாரிகள் ஆகிய அரக்கர்கள் நிறைந்திருத்தலால் ஆண்டு அறம் புக வில்லை என்றான்.

எவ்வளவு பலங்களையுடையதாயினும் அந்த இடத்தில் தருமம் இல்லையானால் அது இழிந்து அழிந்து ஒழிந்து போம் என்னும் உறுதியுண்மை ஈண்டு நுணுகியுணர வந்தது.

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கு இல்லை கேடு. (குறள் 32)

மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலும் உடைமையைத் திங்கள் செப்புமால்
வாய்புகப் பெய்யினும் வழுக்கி நல்லறம்
காய்வது கலதிமைப் பால தாகுமே. (சிந்தாமணி)

அன்புறும் அறத்தினால் அடுக்கும் இன்பமே
இன்பெனத் தக்கதால்; ஏனை இன்பெலாம்
துன்பமும் பழியையும் தோற்றும் ஆதலால்
வன்புறும் அறத்தினை மறப்பிற் கேடுறும். (விநாயகபுராணம்)

அறமே மறங்கள் முழுதழிக்கும்; அறமே கடவுள் உலகேற்றும்;
அறமே சிவனுக்கு ஒரு வடிவம் ஆகும்;சிவனை வழிபடுவோர்க்கு
அறமே எல்லாப் பெரும்பயனும் அளிக்கும்;யார்க்கும்எவ்விடத்தும்
அறமே அச்சம் தவிர்ப்பதெனெ அறைந்தான் சாதா தப முனிவன்.
(காஞ்சி புராணம்)

அரிய பாக்கியங்கள் யாவும் அறத்தால் வரும்; எல்லா இன்ப நலங்களையும் அது இனிது தரும்; கடவுள் வடிவமாய் நின்று கதியருளும்; அதனைக் கைவிடின் கொடிய கேடாம் என இங்ஙனம் அறத்தின் மகிமையைக் குறித்து நூல்கள் பல விரித்து உரைத்துள்ளன. தருமம் வளைய இருமையும் விளைகின்றன.

எல்லா வெற்றிகளுக்கும் மூலகாரணமாயுள்ள அறம் இல்லா

மையால் இந்த இலங்கை நகரம் இனி விளங்காது; எளிது அழிந்து போம் என உளம் துணிந்து கொண்ட அனுமான் மீண்டும் ஆண்டுள்ள சீர்மை நீர்மைகள் யாவும் கூர்மையாக நோக்கினான்.

அரக்கர்களுடைய உருவ நிலைகளையும், திருவின் போகங்களையும், அறிவாண்மைகளையும், போர்த்திறங்களையும், வீரப்பாடுகளையும், சேனைத்திரள்களையும், செயல் இயல்களையும் பார்த்துப் பெருவியப்படைந்து மேல் உறுவன யாவும் கருதி நின்றான்.

காயத்தால் பெரியர்; வீரம் கணக்கிலர்; உலகம் எல்லாம்
ஆயத்தார்; வரத்தின் தன்மை அளவற்றார்; அறிதல் தேற்றா
மாயத்தார் நகர்க்கு எங்கேனும் வரம்பும் உண்டாமே? மற்றோர்
தேயத்தார் தேயம் சேறல் தெருவில் ஓர் தெருவின் சேறல். (1)

கழல இலாக் காலும் கால அயில் இலாக் கையும் காந்தும்
அழல இலாக் கண்ணும் இல்லா ஆடவர் இல்லை; அன்னார்
குழலுலாம் களிவண்டு ஆர்க்கும் குஞ்சியால் பஞ்சி குன்றா
மழலையாழ்ப் பாதலைச் செவ்வாய் மாதரும் இல்லை மாதோ! (2)

விற்றொழில் பயிற்றதன் கோயான் வேற்படை மிகுத்தென் கோயான்
மற்றொழில் பயிற்றதன் கோயான் வாட்படை வலித்தென் கோயான்
கற்றவை தொகுத்து பின்னும் பலமென்று இளைய காந்தும்
கற்றவை உடைத்தென் கோயான் நாயகற்கு உரைக்கும் நாளில்.

என்றனன் இலங்கை நோக்கி இனையன பலவும் எண்ணி
நின்றனன் அரக்கர் வந்து நேரினும் நேர்வர் என்னாத்
தன்தகை யனைய மேனி சுருக்கி அச் சரளச் சாரல்
குன்றிடை யிருந்தான் வெய்யோன் குரைகடல் குளிப்பதானான்.

பலவகைகளை நினைந்து நிலைமைகளை உணர்ந்து விளையாண்மையோடு அனுமான் அங்கே அமர்ந்திருந்த நிலை அருந்திறலமை தெரியத் திகழ்ந்து மிளிர்கின்றது. அரக்கர்களுடைய அதிசய ஆற்றல்களையும் இலங்கையின் பெருமிதத் தோற்றங்களையும் பலபடியாகக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்தித்திருக்கிறான். அந்தச் சிந்தனைகள் யாவும் அரண் வலிகளையும் எதிரிகளுடைய மறங்களையும் கடுநிலைமையோடு எடை தூக்கி நேரே ஆய்ந்திருக்கின்றன.

ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்குப் போவது ஒரு தேசத்திலிருந்து வேறு ஒரு தேசத்துக்குப் போவது போல் அவ்வளவு நீளமுடையதாய் வீதிகள் விரிந்து நிற்கின்றன என்ற

தனால் இலங்கை நகரின் விரிவும் பரப்பும் அருமையும் பெருமையும் தலைமையும் நிலைமையும் ஒருவாறு யூகமாய் உணர்ந்து கொள்ளலாம். ஒரு நாடு என அவ்வூர் பெருகிப் பீடு பெற்றுளது.

அரிய பல வளங்களும் அதிசய எழில்களும் எங்கணும் புதுமைகளாய்ப் பொலிந்து திகழ்கின்ற அந்தப் பெரு நகரில் போர் வீரர்களே யாண்டும் தீர பராக்கிரமங்களோடு மேன்மையாய் விளங்கியிருந்தனர். பொருகின்ற திறல்களையே இரவும் பகலும் எப்பொழுதும் கருதிக் களிக்கின்றவர் ஆதலால் அரக்கர்களுடைய உடல் நிலைகளையும் அடலாண்மைகளையும் படை வலிகளையும் பார்த்து வியந்தான்.

வீரம் கணக்கிலர்; வரத்தின் தன்மை அளவு அற்றார்.

பகைவருடைய போர் நீர்மைகளை இவ்வாறு கூர்மையாக ஓர்ந்திருக்கிறான். இயற்கை வலியும் அஞ்சா நெஞ்சமும் படைக் கலப் பயிற்சிகளும் வர பலங்களும் எல்லையில்லாதபடி எய்தியுள்ளனர் என இவ் வீரன் எண்ணி வியந்துள்ளமை நம் கண் எதிரே காண வந்துள்ளன. அரிய தீரன் உரிய திறல்களை ஆய்ந்துளான்.

கழல்இலாக் காலும், கால அயில் இலாக் கையும், காந்தும்
அழல் இலாக் கண்ணும் இல்லா ஆடவர் இல்லை.

இலங்கையில் ஆடவர் திரள்களை நோக்கிய போது மாருதி நேரே கண்டதை இவ்வாறு காட்டியிருக்கிறார். இந்த ஆண்மைக் காட்சி நமக்கு ஓர் புதிய உவப்பையும் அதிக வியப்பையும் விளைத்திருக்கிறது. போர் வீரங்கள் பொங்கி நிற்கின்றன.

அரக்கர்களுடைய கால்கள் கைகள் கண்கள் இங்கே காட்சிக்கு வந்துள்ளன. கழல் அயில் அழல் என்னும் இவை அவர்க்கு உரிமையான அரிய சின்னங்களாய் அமைந்திருக்கின்றன.

வீரத்திற்கு அறிகுறியாகச் சிறந்த ஆண்மையாளர் தமது காலில் அணிகின்ற அணிக்குக் கழல் என்று பேர். உயர்ந்த கொடையாளரும் இதனை அணிவது உண்டு.

"ஆடவர் கொடையால் வீரத்தால் அணி
பாதத்து அணியே கழலணி என்ப" (பிங்கலந்தை)

ஆடவர் கொடை வீரத்தால் அணிவது கழல் என்றுமே.
(நிகண்டு)

கழல் என்னும் காலணியின் நிலையும் நீர்மையும் இவற்றால் அறியலாகும். இந்த அருமைச் சின்னத்தைப் பெரும்பாலும் வீரர்களே அணிய உரியவர் ஆதலால் வீரக்கழல் என இதனை வழங்கி வருவர். பொதுமக்கள் அணிகின்ற தண்டை காப்பு முதலியன இதனோடு சேரா. அருந்திறலின் அறிகுறியாய் இது இருந்துள்ளது.

சிறந்த வீரத்தின் அடையாளமான கழல் இல்லாத காலே இல்லை என்றதனால் எல்லாருடைய கால்களிலும் அந்த அணி அலங்காரமாய் அமைந்திருந்தது என்பது துலங்கி நின்றது. ஆகவே அவ்வூரிலுள்ளவர் யாவரும் வீரர் என்னும் உண்மை வெளியே தெளிவாயது.

தாம் பெரிய போர் வீரர் என்பது தெரியக் காலில் கழல் அணிந்திருந்தது சரி; கையில் அயில் ஏந்தி வந்தது ஏன்? போரில் பேராசையுடையவர் ஆதலால் அந்த ஆசை மிகுதியால் அயில் மேல் நேசம் பூண்டு கொண்டார் என்க. நேரலர் எப்பொழுது நேர்வரோ என்னும் ஆவலுடைமையும் அயிலுடைமையால் அறிய வந்தது. அயில் = வேல். கால அயில் என்றது அதன் கொலை நிலை தெரிய. யார்மேல் வீசினும் அவரை நாசம் செய்து விடும் என அயிலின் இயலுணர வந்தது.

எப்பொழுதும் கோபத்தால் சிவந்த கண்ணராய் இருந்தமையால் அழல் உடைமை கண்ணுக்கு உரிமையாய் அமைந்தது. அழல் = தீ. தீக் கண்ணர் என்னும்படி விழிகள் சிவந்திருந்தன என்றதனால் அவருடைய உள்ளத்தின் வெகுளி நிலை தெள்ளத் தெளிய நேர்ந்தது. காலில் கழலும், கையில் அயிலும், கண்ணில் அழலும் காட்டினமையால் வீர வெறியராய் யாண்டும் அவர் ஈண்டியிருந்தமை விளங்கி நின்றது.

"கையது வேலே; காலன புனைகழல்;
மெய்யது வியரே; மிடற்றது பசும்புண்;
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும மாறாது சினனே; அன்னோ
உய்ந்தனர் அல்லர் இவன் உடற்றியோரே;
செறுவர் நோக்கிய கண் தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனாவே" (புறம், 100)

அதியமான் என்னும் குறுநில மன்னனைக் குறித்து ஔவையார் இவ்வாறு பாடியிருக்கிறார். தன்மேல் பகைத்து வந்த பகைவரை எதிர்த்து அவன் பொருது வென்றான்; அந்த வெற்றி வீறுடன் வீட்டுக்கு வந்தான்; அதுபொழுது தனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்துள்ளது என்று அந்தப்புரத்திலிருந்து சேடியர் சிலர் ஓடி வந்து சொன்னார்; அவன் ஆவலோடு சென்று பார்த்தான். புலியைக் கொன்று சென்ற மதயானை போலப் பகைவரை வென்று மீண்ட அவன் கையில் வேலும், காலில் கழலும், மெய்யில் வியர்வையும், கழுத்தில் காயங்களும், கண்ணில் சிவப்பும் ஆனபோர்க் கோலத்தோடு போய்த் தன் பிள்ளையைப் பார்த்து மகிழ்ந்த நிலையை இங்ஙனம் புகழ்ந்து கூறியுள்ளார்.

உள்ளத்தில் கோபம் கொண்டபொழுது கண்ணில் சிவப்பு ஏறும் என்பதும் அது ஒரு வீரநீர்மை என்பதும் இதனால் அறியலாகும். அரிய மெய்ப்பாடு பெரிய மேம்பாடாய்த் தெரிய வந்தது.

காலில் கழல், கையில் அயில், கண்ணில் அழல் என வீரர் நிலையைக் குறித்து வந்துள்ள நம் பாடல் இந்தச் சங்கச் செய்யுளோடு நேர் ஒத்துள்ளமை ஈண்டு உய்த்துணரத்தக்கது.

கழல் இலாக் கால் இல்லா ஆடவர் இல்லை என்றது கழலுடைய கால் உள்ள ஆடவரே யாண்டும் உள்ளனர் என்றவாறு. இன்மைச் சொற்களைக் கொண்டு எதிர்மறையில் உரைத்தது அதிசய வியப்பைக் குறித்தது. இது வரையிலும் எங்கும் காணாத வீரப் பாடுகளை அன்று அங்குக் காண நேர்ந்தமையால் உரைகள் புதுமையோடு புனைந்து அருமை தெரிய வந்தன.

பகைவகையினருடைய போர் வீரங்களை ஓரளவு நேரே காணவே அவற்றைக் கூர்ந்து கவனித்தான். அடுதிறலாளர்களோடு பல வகையான படைவலிகளும் எல்லை கடந்துள்ளமையை நோக்கி உள்ளம் உளைந்து சிந்தித்தான். வானவர் தானவர் முதலாக யாவரும் அஞ்சி மருளும்படி சேனை பலங்கள் இலங்கையில் செறிந்திருத்தலைத் தெரிந்து கவன்றான்.

மீண்டுபோய் ஆண்டவனை நான் கண்டபொழுது எதிரியின் வலிநிலை எப்படி? என்று கேட்டால் என்ன சொல்வது? என உன்னி அயர்ந்தான் மல் வீரர்கள், வில் வீரர்கள், வாள் வீரர்கள்,

வேல் வீரர்கள், பல்வகை ஆயுதங்களிலும் வல்ல போர் வீரர்களுடைய சேனைத் திரள்கள் தொகுதி தொகுதிகளாய் எங்கும் மிகுதியாயுள்ளன. எதை அதிகம் என்று சொல்லுவேன்? எல்லாம் எல்லையில்லாதனவாய் நிறைந்திருக்கின்றனவே! என்று படைகளின் நிலைகளை எண்ணி நெஞ்சம் கவன்று நெடிது ஓர்ந்து கடிது சூழ்ந்து முடிவு தேர்ந்து நின்றான்.

இவ்வாறு பலவும் கருதி நின்றவன் பொழுதடைந்தபின் நகருள் புக வேண்டும் என்று உறுதி செய்து கொண்டு அறுதி கண்டு அம் மலையில் மறைந்திருந்தான்.

தன்தகை அனையமேனி சுருக்கி அச்சரளச் சாரற்
குன்றிடை இருந்தான் வெய்யோன் குரைகடல் குளிப்பதானான்.

அனுமான் மலையில் ஒளித்திருந்தபொழுது சூரியன் கடலில் குளித்து மறைந்தான் எனக் கவி இவ்வாறு சுவையாகக் காட்டியிருக்கிறார். பகல் கழிந்தது; இரவு அடைந்தது என்பதில் காவிய மரபாய்ப் பல அறிவுக் காட்சிகள் மேவி வருகின்றன.

யாரும் அறியாதபடி பகைப் புலம் புகுந்து எல்லா நிலைகளையும் நேரே ஒற்றியறிய மாருதி வந்திருத்தலால் இரவை உரிமையாக எண்ணினான். காரியம் கருதியது வீரியம் மருவியது.

உடனே புகமுடியாதபடி சூரியன் இடையே தடையாய் நின்றமையால் ஈண்டு அவன் வெய்யோன் என நேர்ந்தான்

காவியக் கவி இவ்வாறு கருதிக் கூறியிருப்பினும் தாவி வந்துள்ள கவி வேறு ஒரு கருத்தில் அருத்தியோடிருந்தான்.

கதிரவன் ஒளிபுகா என இலங்கை என்றும் அதிசய நிலையில் புகழ் மிகுந்துள்ளது. அத்தகைய வீரமா நகருள் அனுமான் இன்று புக வந்திருக்கிறான் ஆதலால் ஆதவன் மறைவதை அவன் ஆதரித்து நின்றான்.

சூரியன் அனுமானுக்கு ஆசிரியன்; அவன் இது வரையும் புக அஞ்சியுள்ள நகரில் இது பொழுது இவன் புகநேர்ந்துள்ளான் தான் எளிதே புகுவதைக் கண்டால் தனது குருநாதனுக்கு நாணம் நேரும் என்று கருதி அவனுடைய கண் காண உள்ளே புகாமல் இரவின் வரவை உறவாய் இவன் எதிர்நோக்கி நின்றான்.

## இரவு எய்தியது.

அந்திப் பொழுது நீங்கி இரவடைந்தது; எங்கும் இருள் கவிந்தது. ஒளி மறைய வெளி மறைகிறது. இயல்பான அந்த மயல் இருட்டைக் கவி சுவையாக வருணித்திருக்கிறார். வருணனை காவிய வரம்போடு சீவிய நீர்மைகளையும் உணர்த்தியுள்ளது. தீவினைகளை ஒருவி யாவரும் செவ்வியராய் மேவி வர வேண்டும் என்றே காவியம் யாண்டும் கூவி வருகின்றது.

## இருள் நிலை.

ஏய்வினை இறுதியில் செல்வம் எய்தினன்
ஆய்வினை மனத்திலான், அறிஞர் சொற்கொளான்
வீவினை நினைக்கிலான், ஒருவன் மெய்யிலான்
தீவினை என இருள் செறிந்தது எங்குமே. (1)

கரித்த மூன்று எயிலுடைக் கணிச்சி வானவன்
எரித்தலை அந்தணர் இழைத்த யானையை
உரித்தபேர் உரிவையால் உலகுக்கு ஓர் உறை
புரித்தன னெனப் பொலியும் பொற்பதே. (2)

வண்மை நீங்கா நெடு மரபில் வந்தவன்
பெண்மை நீங்காத கற்புடைய பேதையைத்
திண்மை நீங்காதவன் சிறை வைத்தான் எனும்
வெண்மை நீங்கிய புகழ் விரிந்தது என்னவே. (3)

அவ்வழி அவ்விருள் பரந்த வாயிடை
எவ்வழி மருங்கினும் அரக்கர் ஏகினர்
செவ்வழி மந்திரத் திசையர் ஆயினும்
வெவ்வழி இருள்தர மிதித்து மீச்செல்வார் (4)

இந்திரன் வளநகர்க்கு ஏகுவார்; இகல்
சந்திரன் உலகினைச் சார்குவார்; கலித்து
அந்தகன் உறையுளை அணுகுவார்; இயல்
வெந்தொழில் அரக்கனது ஏவல் மேயினர். (5)

இரவின் நிலையும் நிகழ்வும் இவ்வாறு கலை மணம் கமழ்ந்து வந்துள்ளன. மடமை கொடுமை வஞ்சம் பொய் முதலிய இழி நிலைகளை மருவி எவ்வழியும் களி மிகுத்துத் திரிகின்ற தீவினையாளனுடைய பாவம் போல அன்று இருள் பெருகியது; தாருகா வனத்து முனிவர்கள் ஏவிய மதயானையை நேரே உரித்து மேலே

போர்த்துக் கொண்ட அந்தப் போர்வையைச் சிவபெருமான் இந்த உலகிற்கு ஓர் உறையாக உதவியதுபோல் இருள் பரவியது; வண்மையும் திண்மையும் உண்மையும் மருவிய உயர்ந்த குல மரபில் வந்த இராமனது தரும பத்தினியைக் கவர்ந்து கொண்டு போய் நெடிய சிறையில் வைத்துள்ள கொடிய பாதகனுடைய பழி போல் அந்த இரவில் இருள் எங்கும் விரிந்து நின்றது. இவ்வாறு யாண்டும் கரிய இருள் பரவிய அவ்விரவில் அரக்க வீரர்கள் ஆயுத பாணிகளாய்த் திசைகள்தோறும் சென்று தம் அதிகாரங்களைச் செய்தனர்.

இராவணனுடைய கட்டளையைச் சிரமேல் கொண்டு தேவர் கந்தருவர் முதலிய அந்தர வாசிகளுடைய ஊர்களில் சென்று ஆணைகள் புரிந்து ஆண்மைகள் ஆற்றினர்.

இந்திரன் வளநகர்க்கு ஏகுவார்;
சந்திரன் உலகினைச் சார்குவார்;
அந்தகன் உறைபுலி அணுகுவார்.

என்றதனால் இலங்கை வேந்தனுடைய அதிகார வலிகளும், ஆணையின் நிலைகளும், ஆற்றலின் திறங்களும் அறியலாகும். இராவணனது ஏவலைப் பெற்ற காவலாளிகள் தேவர் உலகங்கள் எங்கணும் சென்று யாவரையும் அச்சுறுத்திக் காவல்காத்துக் களித்துத் திரிந்தனர். இலங்காபுரியிலிருந்து வீரர்கள் இவ்வாறு வெளியேறி யாண்டும் போய் ஆணைகள் செலுத்தினர். ஆண்டு உள்ளவர் ஈண்டு ஊழியம் புரிய வேண்டியடைந்தனர்.

தேவ மங்கையரும் கந்தருவ மகளிரும் விஞ்சையர் மடந்தையரும் நாக கன்னியரும் இலங்கை வாசிகளுக்கு ஏவல் செய்ய ஆவலோடு விரைந்து வந்தனர்.

பொன்னகர் மடந்தையர் விஞ்சைப் பூவையர்
பன்னக வனிதையர் இயக்கர் பாவையர்
முன்னின பணிமுறை மாற முந்துவார்
மின்னினம் மிடைந்தென விசும்பின் மீச் செல்வார். (1)

தேவரும் அவுணரும் செங்கண் நாகரும்
மேவரும் இயக்கரும் விஞ்சை வேந்தரும்
யாவரும் விசும்பிருள் இரிய ஈண்டினார்
தாவரும் பணிமுறை தழுவும் தன்மையார். (2)

சித்திரப் பத்தியில் தேவர் சென்றனர்
இத்துணை தாழ்ந்தனம் முனியும் என்றுதம்
முத்தின் ஆரங்களும் முடியின் மாலையும்
உத்தரீ யங்களும் இரிய ஓடுவார் (3)

(ஊர்தேடு படலம் 49-51)

இந்தக் காட்சிகளைக் கருதி நோக்கி இராவணனது மாட்சிகளை வியந்து நிற்கின்றோம். இரவு வந்ததும் தேவலோக வாசிகள் ஆணும் பெண்ணும் இலங்கை வாசிகளுக்கு ஏவல் புரிய மேவி வருகின்றனர். அரிய அதிசய பாக்கியங்களும் பெரிய யோக போகங்களும் எவ்வழியும் திவ்விய நிலைகளில் திகழுகின்றன.

பகலில் செய்த பணிவிடையாளர்க்குப் பதிலாக இரவில் ஊழியம் புரிய வேண்டியவர் உரிமையோடு சேருகின்றனர். சிறந்த எழிலுடைய அரம்பையரும், உயர்ந்த நிலையிலுள்ள தேவ சாதியரும் இலங்கையர்க்கு ஊழியம் புரிய விரைந்து வருவது இராவணனுடைய அதிகார ஆட்சிகளை விளக்கி வருகின்றது.

சித்திரப் பத்தியில் தேவர் சென்றனர்.

இலங்கையில் வேலை செய்யும் பொருட்டுத் தொகுதி தொகுதியாய் வானவர் வருகின்ற நிலையை இது காட்டியுள்ளது. தேசு மிகுந்த சிறந்த அழகர்கள் ஆதலால் ஓவிய உருவங்கள் என அவர் உரைக்க நேர்ந்தார் உள்ளத்தில் பத்தியின்றிப் பயத்தால் திரண்டு வருகின்றார்கள் ஆதலால் சித்திரப்பத்தி என்றார். யாண்டும் இனிய சுக போகிகளாய் உச்சநிலையில் வாழ்ந்து வந்தவர் அச்சமும் திகிலும் கொண்டு அயலான் ஊரில் ஏவல் செய்ய வருவது பாவ வரவாயுள்ளது. புண்ணியம் புரிந்து புத்தேளிர் ஆயினும் அங்கே பண்ணிய வினைகள் பற்றிக் கொள்கின்றன. கொள்ளவே பகையும் துயரும் தொகையாய் நிகழ்கின்றன.

“அரக்கரும் அசுரரும் அடர்பகை ஆகி
இரக்கம் இன்றி இடர்பல புரிதலால்
வானவர் ஆகி வளமுடன் வாழினும்
துன்பமும் கவலையும் தோய்ந்து துவள்வர்;
என்றும் அழியா இன்பம் வேண்டின்
இருவினை ஒருவி ஒருவனை மருவி
உருவினை அடையா ஒருபெரு வெளியில்
பெருகி வருவது பருகி வரவே.”

உருவுடைய எவரும் துயரடைய நேர்கின்றனர். தேவராயி னும் தீய பகைவரால் நோயுழந்து படுதலால் யாவர் வாழ்விலும் அவலக் கவலைகள் மேவியுள்ளமை வெளியாய் நின்றது.

இரவு எய்தியவுடனே இலங்கையில் முறையே வேலை செய்ய வரிசை வரிசையாய் அமரர் வந்து கொண்டிருந்தனர். பிந்தி வந்த வர் சிலர் நேரமாகி விட்டதே! என்று சிந்தை கலங்கி ஓடினர்.

இத்துணை தாழ்ந்தனம்; முனியும் என்று தம்
முத்தின் ஆரங்களும் முடியின் மாலையும்
உத்தரீயங்களும் இரிய ஓடுவார்.

இராவணனுக்குப் பயந்து தேவர்கள் பட்டிருக்கும் பாட்டை இங்கே பார்த்து நிற்கின்றோம். குறித்த காலத்தில் வந்து சேரா மல் சிறிது தாமதம் ஆனாலும் கொடிய தண்டனை யுண்டாம் ஆத லால் அவர் இங்ஙனம் நெடிது பயந்துள்ளனர். கீழே விழுந்த மேல் வேட்டியைக் கூட எடுக்காமல் ஓடினர் என்றது அவரது நெஞ்சத் திகிலின் நிலை தெரிய நின்றது முத்து ஆரம் முடி மாலை உத்தரீயம் என்னும் இந்த ஆடை ஆபரணங்களால் அங்கே வேலை செய்ய வந்தவர்களுடைய மேன்மை நிலைகளை உணர்ந்து கொள்ள லாம உயர்ந்த நிலையினர் தாழ்ந்து பணிந்துள்ளனர்.

இவ்வாறு தேவர்கள் எவ்வழியும் கும்பல் கும்பலாய் இலங் காபுரியுள் வந்து சேர்ந்தனர். தமக்கு நியமித்திருந்த கருமங்களை யும் காரியங்களையும் ஒவ்வொருவரும் பயமும் திகிலும் பணிவும் உடையராய் உரிமையோடு ஓர்ந்து செய்ய நேர்ந்தனர்.

## சந்திரன் உதித்தது.

இரவு இரண்டு நாழிகை கழிந்ததும் சந்திரன் கிழக்கே உதயம் ஆயினன். அன்று உதயமான அந்தக் கலை மதியைக் குறித்துக் கவி ஈண்டு வருணித்திருப்பது கலா விநோதமாய்ச் சுவை சுரந்து பல உணர்வு நலங்களை விளக்கியுள்ளது.

தீண்டரும் தீவினை தீர்க்கத் தீந்துபோய்
மாண்டற உலர்ந்தது மாருதிப் பெயர்
ஆண்டகை மாரிவந்து அளிக்க ஆயிடை
ஈண்டறம் முளைத்தென முளைத்தது இந்துவே. (1)

வந்தனன் இராகவன் தூதன் வாழ்ந்தனன்
எந்தையே இந்திரன் ஆமென்று ஏமுறூஉ
அந்தமில் கீட்டிசை அளக வாணுதல்
சுந்தரி முகம் எனப் பொலிந்து தோன்றிற்றே. (2)

இகழ்வரும் பெருங்குணத்து இராமன் எய்ததோர்
பகழியின் செலவென அனுமன் பற்றினல்
அகம்புகுந்து அரண புகுந்து இலங்கை யன்னவன்
புகழ்புகுந்து உலாயதோர் பொலிவும் போன்றதே. (3)

இருளில் ஒளி வீசி எழுந்துள்ள சந்திரனையும் நிலவையும் துலக்கி வந்துள்ள இந்தப் பாடல்கள் பல சிந்தனைகளை விளக்கித் தரும மணம் வீசி உரிமை நீதிகளோடு உலாவி நிலாவுகின்றன.

அரக்கர்கள் செய்த தீவினைகளினல் எங்கும் பாவம் படர்ந்து நின்றது. சுடுகின்ற கோடை வெயிலால் நல்ல இளம் பயிர் கருகி உலர்ந்தது போல் பாவத் தீமையால் தரும முளை தீய்ந்து கருகி யிருந்தது; அனுமானகிய பருவ மழையைக் கண்டதும் அது தழைத்து எழுந்தது போல் சந்திரன் கிளைத்து எழுந்தான். எம் பெருமானகிய இராமனுடைய தூதுவன் இலங்கை புகுந்தான்; இனிமேல் அரக்கர் குலம் அழிந்து போம்; எனது தலைவனகிய இந்திரனே தனி அரசாய் இனிது திகழ்வன் என்று உள்ளம் களித்து உவந்து நின்ற கீழ்த்திசை மங்கையின் திருமுகம் போல் சந்திரன் எழில் மிகுந்து பொலிந்து தோன்றினன்.

ஈண்டு அறம் முளைத்து என இந்து முளைத்தது.

தரும தேவதையின் திருமுகமாகச் சந்திரனை இங்கே உருவகம் செய்திருக்கிருர். இந்து = சந்திரன். அனுமான் இராம தூதனய் இலங்கைக்கு வந்திருக்கிருன்; இனி விரைந்து இராவணன் அழிந்து படுவான்; அரக்கர்குலம் ஒழிந்து போம்; போகவே பாவம் நீங்கும்; புண்ணியம் ஓங்கும் என்னும் உண்மை இவ்வண்ணம் நுண்மையாய் உணர வந்துள்ளது.

இராமன் கானகம் வர நேர்ந்த அன்று இரவு வானகம் தோன்றிய சந்திரனையும் கவி இவ்வாறே குறித்திருக்கிருர். "* தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது தனி வெண் திங்கள்" என்று எங்கும் இங்ஙனம் தருமத்தையே நினைவுறுத்தி வருவது

* இந் நூல் பக்கம் 1505, வரி 9 பார்க்க.

வந்துள்ள வீரர்களின் காரியநீர்மைகளைக் கருதி உணர்ந்து உறுதி தெளிந்து உலகம் உய்தி பெறவேயாம்.

அறத்தை நிலைநிறுத்த வந்த தருமமூர்த்தி என்றே இராமனை யாண்டும் துதித்து வருகின்றார். இந்த வீர வள்ளலுடைய தருமத்தை மேற்கொண்டு வந்துள்ளமையால் அனுமானும் தருமதூதனாய் நின்றான். அரிய வினையாளன் உரிய பெயர் மருவினான்.

## நிலவின் நிலை.

சந்திரன் உதயமாய போது இயல்பாய் எங்கும் ஒளி பரந்து திகழும். அந்தச் சந்திரிகையையும் சுந்தரமாக வருணிக்க நேர்ந்தார். இராமனது அம்பு போல் மாருதி இலங்கையுள் யாதொரு தடையுமின்றி யாண்டும் புகுந்து திரிய வந்துள்ளான்; இந்தத் தூதனை ஏவிய இராமனது புகழ்போல் நிலா எங்கணும் ஒளி வீசி உலாவி நின்றது. புண்ணிய ஒளியாகிய கீர்த்தியை வெண்மையாகச் சொல்வது கவி மரபு ஆதலால் அது வெண்ணிலாவோடு உவமையாய் எண்ணி மகிழ வந்தது.

இராமசந்திரனிடமிருந்து விரிந்து எழுந்த புகழ் உலகம் எங்கும் ஒளி வீசியுள்ளது; அவ்வாறே இரவில் சந்திரனிடமிருந்து பரந்துள்ள நிலா யாண்டும் விரிந்து படர்ந்து நின்றது. அன்று வெளி வீசிய நிலவு இராமன் புகழ் ஒளி போல் பொலிந்திருந்தது என்றமையால் அந்த வெற்றி வீரன் பகையிருள் கடிந்து விரைவில் உவகையுறுவான் என்பது வெளியாய் நின்றது.

கால நிகழ்ச்சிகளில் கருமவிளைவுகளைச் சுவையாக உணர்த்தி வருகிறார். மதிநலங்கள் மானச ஒளிகளாய் மருவி மிளிர்கின்றன.

பொது மக்கள் வழக்கமாய்க் கண்டு யாதும் எண்ணாமல் எளிதா இகந்து போகின்ற இயற்கைத் தோற்றங்களைக் கவிகள் புனைந்து காட்டும் போது எவரும் வியந்து மகிழ்கின்றனர். கவியின் காட்சிகள் கற்பனைகளோடு கலந்து வருதலால் அவை அற்புதங்களாய் விளைந்து யாண்டும் இன்பம் கனிந்து வருகின்றன.

சந்திரனையும் நிலவையும் குறித்து இங்கே நம் கவிஞர்பிரான் ஒன்பது கவிகள் உரைத்திருக்கிறார். சரித்திர நிகழ்வுகளோடு பொருந்தப் பலவாறு விரித்து விளக்கியுள்ளார். மொழிகள் தோறும் கலையின ஒளிகள் வீசி இனிய சுவைகள் சுரந்துள்ளன.

காவியக் கவிகளுடைய உணர்வின் ஓவியங்கள் யாண்டும் இளமையும் எழிலும் பொலிந்து என்றும் இன்பம் பயந்து மிளிர்கின்றன.

பிரம சிருட்டியிலுள்ள இயற்கையான சந்திரனை எல்லாரும் கண்டிருக்கிறோம்; அவன் கவி சிருட்டியில் வரும்பொழுது அதிசய ஒளிகளை வீசிப் புதிய பல சுவைகளோடு மதிநலம் பொலிந்து கதி நிலையாய் உயர்ந்து விளங்குகின்றான்.

"The moon, like a flower
In heaven's high bower,
With silent delight
Sits and smiles on the night." (William Blake)

"சுவர்க்கமாகிய உயர்ந்த பூங்காவனத்தில் மலர்ந்த ஒரு மலர் போல் சந்திரன் அலர்ந்து துலங்கினான்; நிலவாகிய இனிய முறுவல் பூத்து இரவில் அமைதியாய் இன்பச்சோதி வீசி அவன் விளங்கியிருந்தான்" என வில்லியம்பிளாக்கி என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

கவிஞர்கள் எந்த நாட்டில் பிறந்திருந்தாலும் மானச வுலகில் ஒருமையாய் மருவியுள்ளனர். அவருடைய கலைஞானமும் காட்சிகளும் நிலையான மாட்சிகளாய் நிலவி நிற்கின்றன.

## ஊர் புக எழுந்தது.

தருமதேவதையின் திருமுக மண்டலம்போல் சந்திரன் பொலிந்து விளங்கினான். நிலவொளி எங்கணும் பரந்து நின்றது. அதுபொழுது பவளமலையிலிருந்த அனுமான் மெல்ல எழுந்து வெளியேறினான். அதிக கவனமாய் வடதிசை மதிலை அடைந்தான். அம் மதிலின் நீள அகலங்களையும் நெடிய நிலைகளையும் அரிய பெரிய அரண்களையும் கருதி நோக்கிப் பெரிதும் வியந்தான். யாண்டும் கொத்தளங்கள் அமைந்து, போர்க்கருவிகள் தோய்ந்து, வானம் அளாவ நீண்டு, மேகங்களும் படிந்து தவழும்படி மேலுயர்ந்து நிற்கும் எயிலின் இயலை எண்ணி ஆய்ந்து உள்ளே போக வேண்டிய வழியை நுண்ணிதாக ஓர்ந்தான். வடக்குக் கோட்டை வாசலை அணுகினான். அதன் அதிசய நிலையைப் பார்த்து ஆச்சரியம் மீதூர்ந்து நின்றான். பெரிய மலைகளை நிலைகளாக நிறுத்தி அரிய பல வேலைப்பாடுகளுடன் அமைத்த நெடிய வழியே என

நெஞ்சம் திகைத்தான். "மேருவை நிறுத்திவெளி செய்ததோ? விண்ணோர் ஊர்புக அமைத்த படியோ? உலகம் ஏழும் ஒருங்கே சேர விட்ட வழியோ?" என இன்னவாறு பெருவியப்புடன் அவ் வாயிலை நோக்கி நின்றவன் அதன் பாதுகாப்பின் நிலையை விழி யூன்றித் தெளிவாகப் பார்த்தான். பல்லாயிரம் படை வீரர்கள் நெடிய வல்லயங்களையும், கொடிய வாள்களையும், கூரிய வேல்களை யும், சக்கரம் தண்டு பிண்டிபாலம் முதலிய ஆயுதங்களையும் கை களில் ஏந்தி அணி அணியாய் அமர்ந்து அதிக எச்சரிக்கையோடு காத்து நின்றார். அக் காப்பு கடுந்திறலுடையது.

## காவல் நிலை.

இலங்கையில் ஏவல் செய்ய வருகின்ற தேவர் யாவரும் குறித்த நேரத்தில் வந்து சேர்ந்து விடுவர். அதன்பின் வாயில் வழியே உள்ளே யாரும் வரமுடியாது. இரவு முழுவதும் யாதும் உறங்காமல் கொலைக்கருவிகளோடு நிலைத்த காவலாளிகள் நிறை நிறையாய் நின்று யாண்டும் நெடிது காத்து வருவர். அஞ்சாத காலனும் அவர்பால் அணுக அஞ்சுவான்.

கடுமையான அந்தக் காப்பு நிலையை அனுமான் நெடிது நோக்கினான். நெஞ்சுள் வியந்தான். "கருங்கடல் கடந்து வந்தது பெரிது அன்று; எளிது; இந்தக் காவற் பெருங்கடல் கடப்பது அரிது" என்று கருதி இங்ஙனம் சிறிது போது மறுகி நின்றான். பிறகு உள்ளே புகுந்து போக வேண்டும் என்று துணிந்தான். துணிந்தவன் பலவும் ஆலோசித்தான்; நேரே போக நேர்ந்தால் காவலாளிகள் இடையே கடுத்துத் தடுப்பர்; தடுத்தால் போர் மூண்டு விடும்; மூண்டால் ஊர் அறிந்து கொள்ளும்; அறிந்தால் கருதி வந்த காரியம் வறிதே சிதைந்து படும்; ஆகவே அவ்வாறு செல்லலாகாது என்று தீர்மானித்து ஒல்லையில் வேறு ஒரு வகையை நாடினான்.

## தாவ நினைந்தது.

நாள் தோறும் வழக்கமாய் யாவரும் போய் வருகின்ற வாயில் வழியே இன்று காவலரை மீறிப் போனாலும் அது அவ் வளவு சிறந்த ஆண்மையாகாது; உயர்ந்த அரணாக எதிரி கருதி வைத்துள்ள நெடிய மதிலைக் கடிது தாண்டியே உள்ளே போக வேண்

டும் என்று உள்ளம் ஊக்கி அனுமான் அயலே நோக்கிப்போனான். எந்த இடத்தில் நின்று பாயலாம் என்று ஆராய்ந்து கொண்டு மதிலின் அயலே மேல்புறமாகச் சிறிது தூரம் நடந்து சென்றான். மடங்கலேறு போல் இந்த மான வீரன் இடங்கண்டு பாய எண்ணிப்போனது அரிய கருமச்சூழ்ச்சியாய் உறுதி சூழ்ந்து நின்றது. பலத்த பாதுகாப்போடு நிலைத்து நிற்கின்ற நெடிய அரணைக் கடிது தாவ முடிவு செய்து முடுகிச் செல்லுங்கால் இடையே ஒரு பேரொலி கொடிதாய் எழுந்தது.

## இலங்காதேவி எதிர்ந்தது.

காப்பு நீங்கி வாய்ப்பான இடம் கண்டு அனுமான் மதிலைத் தாவ நேர்ந்த பொழுது "அடே! யார் அடா நீ! நில்! நில்! என்று கூவிக்கொண்டே சூலம் ஏந்திய கையோடு கோர வடிவமாய் ஒரு பெண் ஓடி வந்தாள். வீர மாகாளி போல் ஆரவாரம் செய்து அருகே நெருங்கினாள். அவளது வடிவும் படையும் செயலும் இயலும் உரையும் கொதிப்பும் நெடிய திகைப்பை விளைத்தன.

எட்டுத் தோளாள்; நாலு முகத்தாள்; உலகேழும்
தொட்டுப் பேரும் சோதி நிறத்தாள்; சுடர்கண்ணாள்;
முட்டிப் பேரின் மூவுலகத்தை முதலோடும்
கட்டிச் சீறும் காவல் வலத்தாள்; கமையில்லாள். (1)

வேல்வாள் சூலம் வெங்கதை பாசம் விளிசங்கம்
கோல்வாள் குந்தம் கொண்ட கரத்தாள்; வடகுன்றம்
போல்வாள்; திங்கள் போழின் எயிற்றாள்; புகைவாயில்
கால்வாள்; காணின் காலனும் உட்கும் கதமிக்காள். (2)

இத்தகைய கோலமுடைய அவள் கொதித்து வந்தாள். காலனும் உட்கும் கதம் மிக்காள் என்றதனால் அவளது அடலும் ஆற்றலும் உடலும் ஊற்றமும் அறியலாகும்.

இலங்கையைத் தேவ சிற்பி அழகாகச் சிருட்டித்து முடித்தவுடன் பிரம தேவன் அந்த அதிசய நகருக்கு ஒரு உக்கிர வீர சத்தியை அதி தேவதையாக நியமித்தான். அது இலங்கா தேவி என விளங்கி நின்றது. இலங்கை மாகாளி எனவும் அதனை வழங்கி வந்தனர். இலங்கணி என்றும் துலங்கி நின்றாள்.

பகை பிணி முதலிய வகைகளால் யாதொரு இடரும் நேரா தபடி இலங்காபுரியை அவள் இனிது பேணி வந்தாள். கண்ணை இமை காப்பது போல் அவ் வண்ண நகரைக் காத்து வந்தமையால் காப்புத் தெய்வம் என யாவரும் வழிபட்டுப் போற்றி வந்தனர்.

அந்த அதி தேவதை பத்திரகாளி போல் உக்கிர வீரமாய் உருத்து வந்து அனுமானை அதட்டி வெருட்டினாள்: "எமனும் எட்டிப் பார்க்க அஞ்சுகின்ற இலங்காபுரியில் ஒட்டிப் பதுங்கிக் கள்ளமாக உள்ளே போக உள்ளம் துணிந்து ஊக்கி வந்துள்ளாய்! அடா! போக்கிரிக் குரங்கே! ஓடிப் போய்விடு; நின்றால் உயிர் போய் விடும்; பொன்றி மாளாதே போ!" என்று கன்றி மொழிந் தாள். முதலில் "அடே நில்!" என்று ஆர்த்தவுடனே அனுமான் அயலே திரும்பிப் பார்த்தான்; விரைந்து வீறிட்டு நெருங்கவே தேறி நின்றான்; பின்பு ஆரவாரமாய்ச் சீறி உரைத்த அவளது உரையைக் கேட்டதும் இவ் வீரன் யாதும் அஞ்சாமல் எதிர் மொழிந்தான்: "அழகான இந்த இலங்காபுரியைப் பார்க்க வேண் டும் என்று எனக்கு நெடு நாளாக மிகவும் ஆசை; எளிய குரங் கான நான் உள்ளே புகுந்தால் உனக்கு என்ன இழவு வந்து விட் டது? ஏன் இப்படிப் பேய்போல் இடையே வந்து தடையாய்க் கத்துகின்றாய்?" என இவ்வாறு புன்னகையோடுநேரேசொன்னான்.

இங்ஙனம் சொல்லவே அவள் திகைத்து நின்றாள். "திரிபுரம் எரித்த பரமசிவனும் என்னோடு எதிர்பேச மாட்டான்; நீ ஒரு சின்னக் குரங்கு; என்ன பேச்சுப் பேசினாய்! உன்னைச் சின்னா பின்னமாச் சிதைத்து இதோ தின்னுகின்றேன் பார்!" என்று சீறிச் சினந்து, தன் கையிலிருந்த கூரிய சூலாயுதத்தை நேரே வீசி எறிந்தாள். மின்னல் ஒளிபோல் மேலே வேகமாய் வந்த அதனை விரைந்து பிடித்து இரண்டு துண்டுகளாய் ஒடித்து அயலே வீசிவிட்டு அனுமான் இயல்பாக எதிரே சிரித்து நின்றான். அவள் அதிசயித்து அயர்ந்து வியந்தாள்: 'இவன் வானரன் அல்லன்; இது வஞ்ச வேடம்; நஞ்சம் உண்ட கண்ணுதல் கடவுளே இப்படி ஒரு வடிவம் கொண்டு உல்லாசமாய் ஈண்டு வந்திருக்கிறான்" என மறுகி நினைந்து மீண்டும் திருகி வெகுண்டு வேல் வாள் முதலிய எல்லாப் படைகளையும் ஒல்லையில் உருத்து வீசினாள். நேரே கடுத்து வீசிய அனைத்தையும் வேறு வேறாஒழித்து நாசமாக்கி விட்டு மாருதி யாதொரு மாறுதலுமின்றி மாறாய் நின்றான்

அவள் ஆறாச் சினத்தோடு வீறிட்டு மேலே பாய்ந்து அனுமானை ஓங்கி அடித்தாள். அடிக்க ஓங்கிய அந்தக் கைகளை அடியோடு மடக்கிப் பிடித்துக் கொண்டு இவ் வீரன் அவளைக் கடுத்து ஓர் அடி கொடுத்தான். அடிபடவே இடியேறுண்ட நாகம் போல் அவள் நிலை குலைந்து கீழ் புரண்டு விழுந்தாள். வாய் வழியே குருதி சோர உறுதி குன்றி உயிர் துடித்து வீழ்ந்தவள் உருவம் மாறிப் பருவ மங்கையாய் நேரே தோன்றி அன்புரிமையோடு அனுமானைத் தொழுதாள். அதிசய மகிழ்வுடன் இவ் வீரனை நோக்கி அவள் உரைத்த மொழிகள் அரிய பல மருமங்களை வெளிப்படுத்தியுள்ளன.

ஐயகேள் வையம் நல்கும் அயன் அருள் அமைதியாக
எய்திஇம் மூதூர் காப்பென் இலங்கைமா தேவிஎன்பேர்
செய்தொழில் இழுக்கி யுள்ளம் திகைத்திந்தச்சிறுமைசெய்தேன்
உய்தியென்று அளித்தியாயின் உணர்த்துவல் உண்மைஎன்றாள்.

எத்தனை காலம் காப்பல் யானிந்த மூதூர் என்று
முத்தனை வினவி னேற்கு முரண்வலிக் குரங்கு ஒன்றுன்னைக்
கைத்தலமதனால் தீண்டிக் காய்ந்தவன்று என்னைக் காண்டி
சித்திர நகரம் பின்னைச் சிதைவது திண்ணம் என்றான். (2)

அன்னதே முடிந்தது ஐய! அறம்வெல்லும் பாவம் தோற்கும்
என்னமீ தியம்ப வேண்டும் தகையதோர்? இனிமற்றுன்னால்
உன்னிய எல்லாம் முற்றும் உனக்கு முற்றாதது உண்டோ?
பொன்னகர் புகுதிஎன்னாப் புகழ்ந்தவள் இறைஞ்சிப் போனாள்.

வீரனும் விரும்பி நோக்கி மெய்ம்மையே விளையும் அஃதென்று
ஆரியன் கமல பாதம் அகத்துற வணங்கி யாண்டைப்
பூரியர் இலங்கை மூதூர்ப் பொன்மதில் தாவிப் புக்கான்
சீரிய பாவின் வேலை சிறுபிரை தெறித்தது அன்னான் (4)

(கம்பன்) (ஊர்தேடு படலம் 93-96)

இங்கே நிகழ்ந்துள்ள காரிய நிலைகளைக் கருதி நோக்கி உறுதி யுண்மைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்கின்றோம். நிகழ்ச்சிகள் வியப்பையும் உவப்பையும் விளைத்து வருகின்றன. விளைவுகள் பழமைகளோடு கிழமைகள் கொண்டு வளமைகள்கொழித்து நிற்கின்றன.

இலங்காபுரியை இது வரையும் காத்துவந்த காப்புத்தெய்வம் இன்று தனது காவலை ஒழிந்து அனுமான் எதிரே நின்று ஆவ

லோடு பேசியுள்ளது. பேச்சில் உரிமையுண்மைகள் மருவியுள்ளன.

“ஐயனே! அயன் இட்ட கட்டளைப்படி இந்த நகரை நான் காத்து வந்துள்ளேன்; அதனால் இலங்கை மாதேவி என எனக்குப் பெயர் அமைந்தது. என் காவலை மீறி எவரும் இதனுள் புகுந்ததில்லை. இங்ஙனம் காவல் புரியும்படி பிரமதேவன் என்னை ஏவியபொழுது, “எவ்வளவு காலம் வரையும் நான் காத்து வர வேண்டும்? அதற்கு ஓர் எல்லையைச் சொல்லியருள வேண்டும்?” என்று தொழுது கேட்டேன். அதற்கு வேத முதல்வன் ஓதியது விநோதமாயிருந்தது: ‘அரிய ஆற்றலுடைய குரங்கு ஒன்று என்று வந்து உன்னைத் தீண்டுகின்றதோ, அன்று நீ என்னை வந்து காண்பாய்! அப்பொழுதுதான் நீ சத்தியலோகததிற்கு வர முடியும்; அதுவரையும் பூலோகத்தில் இலங்கையைக் காத்து நில்” என்று சொல்லியருளினான். அவ்வாறே என் காவல் பணியைக் கருத்தோடு செய்து வந்தேன்; இன்று எனக்கு விடுதலை கிடைத்தது; விதி விதித்தபடியே எல்லாம் நடந்து வருகின்றன; இனி இந்தப் பதி அடியோடு அழிந்து போம்; நீ உள்ளே துணிந்து போகலாம்; தருமமுடையார் தழைத்து வாழுவர்; பாவிகள் பாழாய் அழிவர்; என்னும் விழுமிய நியதி என்றும் தெளிவாய் உள்ளது. அதிசய வீரனே உன்னால் ஆகாத காரியம் யாதும் இல்லை; எண்ணிய எதையும் எளிதே முடித்தருளும் திண்ணிய தீரனே உன்னை விண்ணும் மண்ணும் வியந்து நோக்கியுள்ளது; மேலே ஆக வேண்டியதைச் செய்! நான் போய் வருகிறேன்” என்று சொல்லிக் கொண்டு கைகுவித்துத் தொழுது மேலெழுந்து அவள் வான்வழியே விரைந்து மறைந்து போனாள்.

அவள் கூறிய வாக்குகளையும், வான வெளியில் ஏறிப் போன போக்கையும் நோக்கி அனுமான் பெரிதும் வியந்து நின்றான்.

முரண்வலிக் குரங்கு ஒன்று இலங்கைக்கு வரும்; அதன்பின் அவ்வூர் அழிந்துபடும் என்று முன்னதாகவே நான்முகக் கடவுள் சொலலியுளளதை உன்னி உன்னி உள்ளம் உவந்தான். தனது பிறப்பும் இருப்பும் அரிய பெரிய காரிய முடிவுகளுக்காகவே அமைந்துளளன என அதிசயித்து வியந்தான். சிருட்டி கருத்தாவால் சுட்டப்பட்டுள்ள குறிப்பில் விருப்பம் மீதூர்ந்து நின்றது.

இலங்காதேவி தன் நேரே கூறிப் போன மருமங்கள் எல்லாம் அனுமானுடைய கருமங்களுக்கு உறுதியும் ஊக்கமும் உதவி நின்றன. அறுதியாக இறுதியைக் குறித்த உறுதி மொழியைப் பெரிதும் கருதி விளைவுகளை விழைந்து நாடினன்.

சித்திர நகரம் பின்னைச் சிதைவது திண்ணம்.

என இத்திறம் வேதா இயம்பியிருத்தலை உய்த்துணர்ந்தான்.

அதிசய எழில்களையுடைய இராவணனது இராசதானி அதிவிரைவில் நாசம் அடையும் என்னும் இவ்வுரை பெரிய வியப்பையும் அரிய உவப்பையும் ஒருங்கே விளைத்தது. சித்திர நகரம் என்றது அதன் விசித்திர நிலைகளை வியந்து வந்தது. அழகு திரு ஆற்றல் ஆணை மாட்சி முதலிய உயர் நலங்கள் எல்லாம் நிறைந்து அதிசய மகிமையுடன் யாவரும் துதி செய்து தொழ நிற்கும் பதி விரைந்து சிதைந்து பாழாம் என்பதை உணர்ந்து ஊழ் முறையை வியந்து உளம் தெளிந்து நின்றான்.

அறம் வெல்லும்; பாவம் தோற்கும்.

என்னும் இந்த அருமை வாசகம் இங்கே ஒரு பழமொழி போல் வந்துள்ளது. இலங்காபுரியின் காப்புத்தெய்வம் இறுதியில் தனது அதிகாரத்தை இழந்து போகும் பொழுது இங்ஙனம் மொழிந்திருக்கிறது. மொழி விழுமிய நிலையை விளக்கியுளது.

தருமநெறியே ஒழுகி வருகின்ற இராமன் வெற்றியும் புகழும் பெற்று மேலான இன்பத்தோடு வாழுவன்; பாவ வழியில் படிந்துள்ள இராவணன் பழி யிழிவுற்றுக் குலத்தோடு அழிந்து படுவான்; அவன் இருந்து வந்த நகரமும் பாழாய் ஒழிந்து போம் என்பாள் அறம் வெல்லும்; பாவம் தோற்கும் என்றாள்.

இங்ஙனம் குறிப்பாகச் சுட்டியுரைத்தது, அதுபொழுது சிறப்பாய் விளங்கியிருக்கும் இலங்கையும், அரக்கர் குலமும் ஒரு மாதத்துள் அதோகதியாய் அழிந்து போம் என்பதை உறுதியாய்த் தெளிந்து உரிமையைக் கருதிக் கொள்ள வந்தது.

தரும நீதி தவறினால் அந்த அரசு எவ்வளவு உன்னத நிலையில் ஒளி மிகுந்து இருந்தாலும் இன்னல் மீதூர்ந்து இளிவடைந்து விளியும் என விழி தெளிய ஈண்டு விளக்கியருளினாள்

மூன்னம் செய்த புண்ணியத்தின் பயனாய் எண்ணரிய மகிமைகளோடு மன்னர் மன்னவனாய் இன்னவண்ணம் இராவணன் மன்னி வந்துள்ளான்; இனி இந் நிலை பின்னமாய் மாண்டு மடிந்து போம். சீதையை எடுத்து வந்ததிலிருந்து அவனுக்கு நாச காலம் அடுத்து வந்துள்ளது.

நல்லவன் தோற்பதே! நரகன் வெல்வதே!
வெல்வதும் பாவமோ? அறம் இல்லையோ?

என்று * முன்னர் அங்கே அப்பதிவிரதை கதறியுள்ளது இங்கே கருதியுணர வுரியது. தன்னை மீட்ட வந்த சடாயு இராவணனால் அடிபட்டு வீழ்ந்த பொழுது சீதாதேவி பரிதபித்துப் புலம்பிய அவ்வுரைகளின் எதிர் ஒலிகளாய் இலங்காதேவி வாயிலிருந்து உறுதி மொழிகள் ஈண்டு வெளி வந்துள்ளன.

அறம் இல்லையோ? பாவமோ வெல்வது? அன அக் கற்பரசி பரிதாபமாய் ஆண்டு உள்ளம் கலங்கித் துடித்த அந்தக் கலக்கம் தெளிய ஈண்டு இலக்கம் எழுந்தது. "பாவம் ஒரு போதும் வெல்லாது; அறமே எப்பொழுதும் நிலையாய் வெல்லும்" என்னும் நித்திய தத்துவம் இங்ஙனம் சத்தியமாய் உய்த்துணர வந்தது.

தருமமே சயம் என அதனை உரிமையாக மருவி ஒழுகுவோரே இருமையும் இன்புறுவர் என்னும் உண்மையைக் காவியம் யாண்டும் உறுதியாக உணர்த்தி வருகின்றது.

சொல்லுகின்ற குறிப்பிலேயே உள்ளங்கள் உணர வருகின்றன.

நல்லவன் என்று சடாயுவையும், நரகன்என இராவணனையும் குறித்துள்ளது கூர்த்த சிந்தனைகளையுடையது. சீதையை இலங்கையில் கொண்டு வந்து சிறை வைத்திருப்பது இராவணனது கொடிய பாவங்களின் முடிவாய் மூண்டுள்ளது. அதனால் அவன் குடியும் குலமும் அழிந்து பதியும் சிதைந்து பாழாகும் காலம் நெருங்கியுள்ளமையால் காப்புத் தெய்வம் கால் வாங்கி போயது. காவல் ஒழிந்து போகவே யாவும் அழிந்து போக நேர்ந்தன.

## அனுமான் இலங்கையுள் புகுந்தது.

இலங்காதேவி முதலில் மூண்டு அடர்ந்ததும், பின்பு பணிந்து

* இந் நூல் பக்கம் 2046, வரி 5 பார்க்க.

தொழுது உரிமையோடு சில உறுதியுண்மைகளை மொழிந்து போனதும் ஈண்டு விதியின் விளைவுகளாய் விளங்கி நிற்கின்றன. நீண்ட காலமாக் காவல் செய்து நின்றவள் இந்த ஆண்டகையைக் கண்டதும் முடிவு நேர்ந்தது என்று முடிவு செய்து விடிவுகாண நீ வேண்டியதைச் செய் என்று உறுதி கூறிப் போயினள்.

அவள் கூறிய குறிப்புகளைக் கூர்ந்து உணர்ந்த அனுமான் காரிய நிலைகளைக் கருதி விரைந்தான். இராமபிரானை நினைந்து தொழுது அந்த நெடிய மதிலைக் கடிது தாவினன்.

அரிய பல அரண்கள் அமைந்து வானுற வளர்ந்து ஓங்கி நின்ற எயிலை எளிதே தாவி அனுமான் உள்ளே பாய்ந்தான். பின் னதாகச் சிறிது கால்வாங்கி நின்று முன்னோடி மேலே பாய்ந்தது வியத்தகு காட்சியாய் வீறு கொண்டு விளங்கியது.

இந்த வீரன் அந்த ஊரில் புகுந்த நிலையைக் கவி ஓர் உவமை யால் விளக்கியிருக்கிறார். உவமானங்களும் உவமேயமும் நவமான காட்சிகளுடையன. கூரிய நீர்மைகள் தோய்ந்து காரிய பாகங்கள் கனிந்து சீரிய நிலைகள் தெளிந்து வீரியங்களாய் விளங்கியுள்ளன.

பூரியர் இலங்கை மூதூர்ப் பொன்மதில் தாவிப் புக்கான்
சீரிய பாலின் வேலை சிறுபிரை தெறித்தது அன்னான்.

இதில் கூறியுள்ள உவமானத்தைக் கூர்ந்து பார்க்கின்றோம். ஓர்ந்து சிந்திக்கின்றோம். வேலை இலங்கைக்கும்; பிரை அனுமா னுக்கும் ஒப்பாம். வேலை = கடல். பிரை = மோர்த்துளி. பாலை நிலை திரித்துப் பிரிவு செய்யும் இயல்பினது ஆதலால் பிரை என வந்தது. கட்டியாக உறையச் செய்து தயிர் ஆக்கி வருதலால் உறைமோர் என நேர்ந்தது.

எல்லையில்லாத செல்வ வளங்களும் இன்ப நலங்களும் எங் கும் நிறைந்துள்ளமையால் இனிய பாற்கடல் என இலங்காபுரி இலங்கி நின்றது. சீரிய பாலின் வேலை என்றதனால் அதன் நீர்மை சீர்மை நிலைமை தலைமை முதலிய பலவும் அறியலாகும்.

அளவிடலரிய நிலையில் இங்ஙனம் உயர் நலமடைந்துள்ள நகரம் எளிதே அழிந்துபடும் என்பதை உவமையால் உணர்ந்து கொள்ளலாம். கருதியுணர உரைகள் இனிது மருவியுள்ளன.

எவ்வளவு பால் இருந்தாலும் ஒருதுளி மோர் அதில் விழுந்தால் அவ்வளவும் நிலை குலைந்து போம். இனிய பாலைப் புளித்த தயிராக மாற்றிப் பிரை பேதித்து விடுகின்றது.

இந்த உவமைக் குறிப்பால் பொருள் நிலையைத் தெளிவாகத் தெரிந்து கொள்கின்றோம். பிரை ஓர் இடத்தில் விழுந்தாலும் அந்தப் பால் முழுதும் உறைந்து போம். பாற்கடல்போல் பரந்து விரிந்துள்ள இலங்கை அனுமான் புகவே பிரை தோய்ந்த பால் போல் நிலைகுலைந்து போயது என்பது நேரே தெரிய வந்தது.

"ஒரு குரங்கு வந்து புகுந்தஅன்று இலங்கை சிதைந்து படும்" என்று ஆதியில் வேதா விதித்திருந்த விதி இன்று விளைவுக்கு வந்துள்ளது. திவ்விய மகிமை வாய்ந்துள்ள இவ்வளவு பெரிய இலங்கை ஒரு குரங்கால் எவ்வாறு சிதையும்? என யாரும் ஐயுற நேரும் ஆதலால் அந்த ஐயத்தை இந்த உவமை நன்கு தெளிவாக்கி அழிவு நிலையை விழிகாண விளக்கியது.

பிரை தோய்ந்த பால் தானாகவே நிலை திரிதல் போல் அனுமான் பாய்ந்த இலங்கை எளிதாகவே அழிவெய்தும் என்பதாம். பகைப் புலத்தை விரைவில் பாழாக்கி அரிய வெற்றியை எளிதே பெற்றுக் கொள்வன் என்பதை இது தெரிய விளக்கியது.

பாலைக் கடைந்து வெண்ணெய் எடுக்க வேண்டின் அதில் முன்னதாகப் பிரையை விட்டு வைப்பர்; பாலாழிபோல் பரந்துள்ள இலங்கையைக் கடைந்து சீதையை எடுக்க வேண்டிய இராமன் முதலில் அனுமானாகிய பிரையை உள்ளே விட்டு வைத்துள்ளான். அந்த ஆண்டகையின் வீர வேலைக்கு வேண்டிய வேலைகள் மூண்டு முடிந்து வருகின்றன. காரிய முடிவுகள் சீரிய விடிவுகளாய்ச் சேர்ந்து நிகழ்கின்றன

இங்கே குறித்த பிரை உவமை காவியத்தில் முன்னும் பின்னும் வந்துள்ளது.

'காலுறு கண்வழி புகுந்த காதல் நோய்
பாலுறு பிரை எனப் பரந்தது எங்குமே" (மிதிலைக்காட்சி 41)

'பிரையுண்ட பாலின் உள்ளம் பிறிதுற" (நாகபாசம் 168)

பிரை புகுந்தால் பால் முழுவதும் நிலை திரிந்து படும் என்பதை இவை முறையே உணர்த்தி நிற்கின்றன.

சரித்திர நிகழ்ச்சிகளைச் சொல்லிச் செல்லும் பொழுதே அரிய பல விசித்திர உணர்ச்சிகளை விளைத்தருளுகின்றார். நடந்த வரலாறுகள் நவரசங்களோடு தொடர்ந்து வருகின்றன. சீவிய நலங்களை எவ்வழியும் அழகாகத் தெளிவுறுத்தி வருதலால் காவியம் யாவருக்கும் திவ்விய போகமாய்ச் சுவைசுரந்து திகழ்கின்றது.

"Poetry does not merely reproduce what actually happens. It is Creative" (Poetry)

"உண்மையாய் நடந்ததை மாத்திரம் நேரே சொல்லிப் போவது காவியம் ஆகாது; அது புதிய ஒரு அதிசய சிருட்டி" என்னும் இது ஈண்டு உன்னியுணர வுரியது.

சரித்திரத்தைக் குறித்துச் செல்வதோடு அமையாமல் அரிய உணர்வு நலங்களையும் இனிய குணநீர்மைகளையும் நன்கு உணர்த்தி வருதலால் காவியம் என்றும் இன்ப நிலையமாய் இனிது மிளிர்கின்றது. அதில் பண்புகள் பல படிந்து வருகின்றன.

ஓசையும் உணர்ச்சியும் உள்ளங்களை உயர்த்தி உவகை புரிகின்றன; ஆகவே கவிகள் சுவையின் கனிகளாய்த் துலங்கியுள்ளன. அதிசயமான அறிவின்பம் அதில் மருவியிருத்தலால் கவி புனித போகமாய்ப் பொலிந்து யாண்டும் இனிது திகழ்கின்றது.

"Poetry is primarily intended to delight."

"இன்பம் புரிவதே கவியின் இனிய குறிக்கோள்" என இது உணர்த்தியுளது. மனிதர் மனம் தெளிந்து மகிழ அறிவின் கலைகள் விளைந்து வருகின்றன.

உயர்ந்த கோட்டை மதிலைத் தாவி அனுமான் இலங்கையுள் புகுந்தான் என்னும் ஒரு சரித நிகழ்ச்சியில் அரிய பல உணர்ச்சிகள் பெருகி வந்துள்ளன. அவ் வரவு உறுதி நலங்களாய் ஒளிர்கின்றன.

இனிய உணர்வின் சுவைகள் மனித சமுதாயத்தை மாண்புறுத்தி உயர்த்துகின்றன. அறிவு பண்படைந்து மருவி வர வாழ்வு இன்படைந்து பெருகி வருகின்றது.

ஊர் எங்கும் தேடியது.

மதிலைத் தாவி உள்ளே பாய்ந்த அனுமான் இலங்கையின் எழில் நிலைகளை விழிகளிப்ப நோக்கி வியந்து நின்றான். வீதிகளின்

ஒழுங்குகளும், மாட மாளிகைகளின் அமைதிகளும், மருவியுள்ள அலங்காரங்களும் பேரதிசயங்களாய்ப் பெருகி நின்றன. பளிங்குக் கற்களாலும், நவ மணிகளாலும், வியனுன சுண்ணச் சாந்துகளாலும் அழகுறப் புனைந்த வீடுகள் அணி அணியாய் ஆகாயம் அளாவி நெடிது திகழ்ந்தன. அயல் எங்கும் ஒளிகளை வீசி நிலாவோடு நிலவி நின்றமையால் இரவு என்ற நிலைமையே யாதும் தெரியாமல் இருந்தது. எங்கும் பகல்போல் பொலிந்து விளங்கிய அந் நகரில் இரவு ஏழு நாழிகையளவில் வீதிகள் அருகே ஒதுங்கி வேதிகை வழியே அனுமான் விநயமாய்ச் சென்றான். தனது இயல்பான உருவை மாற்றி அயலான ஒரு சிறிய பூனைபோல் தோற்றம் காட்டி யாவும் கருதிக் கண்ணோக்கி இவ்வீரன் அங்கே மருமமாய் நாடிச் சென்றது அதிசய விஞ்சையாய் நீடி நின்றது. சிறந்த மதியும் உயர்ந்த ஆண்மையும் எவரும் வியந்து புகழும்படி வியனுக வாய்ந்துள்ள தீரன் மேவலர் ஊரில் மேவிப் போனான்.

> தேவருக்கு அமுதம் ஈந்த குன்று என
> அயோத்தி வேந்தன் புகழ் எனக் குவவுத் தோளான்.

இலங்கை நகருள் இரவில் உளவு ஓர்ந்து சென்ற அனுமானைக் கவி இங்ஙனம் அளவு தேர்ந்து கூறியிருக்கிறார். இடங்கள் தோறும் நிலைமைகளை எண்ணி அறிந்துகொள்ள இனிய நாமங்கள் எழுந்து வருகின்றன. முன்னம் பாற்கடலைக் கலக்கித் தேவருக்கு அமுதம் ஈந்த மந்தர மலையை மாருதி தோள்களுக்கு இங்கே உவமை கூறியது உரிமை தெரிய வந்தது.

சீரிய பாலின் வேலை என்றபடி சிறந்து விரிந்துள்ள இலங்கையைக் கலக்கிச் சீதாதேவியாகிய அமுதத்தை இராமனுக்கு ஈந்தருள நேர்ந்துள்ள ஏந்தல் ஆதலால் அமுதம் ஈன்ற குன்று உரிய உவமையாய் நேரே அமைய வாய்ந்தது.

குன்று அனைய தோளான் ஒருவரும் அறியாவகை குறுகிய வுருவில் மருவிப் போயினும் அவனது மகிமை வானும் மண்ணும் தெரிய வீர ஒளி வீசி விளங்கி நிற்கின்றது.

வலிமை திண்மை உதவிகளில் மந்தர மலையும், என்றும் நிலையான மகிமை மாண்புகளால் புகழும் உவமையாயது.

'தசரதன் கீர்த்தியும், இராமன் சீர்த்தியும் திரண்டு உருண்டு

அனுமானுக்கு இரண்டு தோள்களாய் அமைந்திருக்கின்றன என்பார் அயோத்தி வேந்தன் புகழ் என அதிசயமாக் குறித்தார் அந்தத் தேச அதிபதியான தாசரதி புகழ் தாசனது வாகு வலியால் வாகை பெற்றுள்ளமையை ஓகையோடு உணர்ந்து கொள்கின்றோம்.

மனைவியை இழந்து பழியடைந்து நின்ற இராமன் அந்தக் குலமகளை மீண்டும் அடைந்து புகழ் மிகுந்து வாழ அனுமான் தோள்கள் ஈண்டுத் தொழில் புரிகின்றன ஆதலால் அவற்றின் எழிலும் இசையும் விழி தெரிய வந்தன. அரிய வினையில் மூண்ட போது எவரும் பெரிய புகழில் நீண்டு திகழ்கின்றனர்.

இலங்கை வேந்தன் புகழை அழித்து அயோத்தி வேந்தன் புகழை வளர்க்கப் புகுந்துள்ள வீரன் சூலத்தோள்களைக் கவி ஆர்வம் மீதூர்ந்து துதித்திருக்கிறார்.

தரும நலம் கருதிய கரும வீரன் மருமமாய் நகருட் புகுந்து எல்லாவற்றையும் கண்ணூன்றி நோக்கி எண்ணூன்றிச் சென்றான். மலர்கள் தோறும் அவாவிச் செல்லுகின்ற வண்டு போலப் பலவும் கண்டு போனான். சானகியை நாடிப் போதலால் தேனை நாடித்திரியும் வண்டு உவமையாய் வந்தது.

பூத்தொறும் அவாவிச் செல்லும் பொறிவரி வண்டிற் போனான்.

உரிய பொருளை அவாவிக் கருமமே கருத்தாய் நிலைகள் பலவும் நெடிது துருவிக் கடிது போனகாட்சியை இது காட்டியுள்ளது. குன்று அனைய தோளான் வண்டு என ஆய்ந்து போனான் என்றது அடலாண்மையும் ஆய்வும் தெரிய. பண்டைய உருவம் ஒருவி இன்றைய கருமம் மருவி எங்கும் தடையின்றி எளிது செல்லும் நிலை இனிது காண வந்தது.

அகன்ற வீதி வழியே ஓர்ந்து போகும் பொழுது மாருதி மேனி பல வகை நிறங்களாய்ப் பிறங்கித் தோன்றியது. பளிங்குகளால் அமைந்த மாளிகைகளின் அயலே செல்லும்போது வெண்மையாய் விளங்கினான்; சிவந்த மாணிக்க மணிகளால் மருவிய மாடங்கள் நேருங்கால் செம்மையாய்த் துலங்கினான்; மரகதங்கள் நீலங்கள் குயின்ற அரண்மனைகள் அயலே ஏகும் போது பசுமையாய்க் கருமையாய் இலங்கி இயங்கினான்.

பெரியநாள் ஒளிகொள் நாறு விதமணிப் பித்திப்பத்தி
சொரியுமா நிழல்கள் ஆங்குச் சுற்றலால் காலின் தோன்றல்
கரியனாய் வெளியனாகிச் செய்யனாய்க் காட்டும் காண்டற்கு
அரியனாய் எளியனாய்த்தன் அகத்துறை அழகனேபோல்.

இந்த விளக்கத்தை விழைந்து பார்க்கின்றோம்.

பலவகையான மணிகளால் அமைந்த மாட மாளிகைகளின் அயலே அனுமான் செல்லும் பொழுது பலவகை நிறங்களை மருவிச் சென்றான். அந்த விசித்திர நிலையை இங்ஙனம் விளக்கி யிருக்கிறார். உருவக் காட்சிகள் ஒளி புரிந்துள்ளன.

தன் அகத்து உறை அழகன் என்றது இராமனை. அனுமானு டைய உள்ளத்தில் உறைந்துள்ள பொருளைக் கவி இங்கே திறந்து காட்டியிருக்கிறார். எப்பொழுதும் இராமனையே கருதியிருத்த லால் அனுமானுடைய இருதய கமலத்தில் அந்தஅழகன் உவந்து ஒளி வீசி அமர்ந்துள்ளான் என்க. குரங்கின் உள்ளமே கோயிலாக் கொண்டுள்ள அரங்கன் என வரங் கொண்டிருக்கிறான்

அரியன் எளியன் என்றது அவனது சீர்மையும் நீர்மையும் தெரிய வந்தது. யாரும் அறிய முடியாதபடி அரிய பரத்துவ நிலை யிலுள்ள அவன் அன்பர் கருதிய வண்ணமாய் எளிதே மருவி அருளுகின்றான் ஆதலால் அந்த அருமையும் எளிமையும் இங்கே உரிமையோடு உவந்து பாராட்ட வந்தன

"யாரும் ஓர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்
யாரும் ஓர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான்"
(திருவாய்மொழி)

அரியன் எளியன் என்னும் பொருளை விளக்கி நம்மாழ்வார் இவ்வாறு அருளியிருக்கிறார். அன்பால் உருகியுள்ளவர்களுக்குப் பரம நீர்மைகள் தெளிவாய் இன்பம் சுரந்து வருகின்றன.

கரியன், வெளியன், செய்யன் என்றது இராமன் இங்கே மருவி வந்திருக்கும் மருமம் தெரிய. தானும் பரதனும் பசுமை நிறம், சத்துருக்கன் வெண்மை, இலக்குவன் செம்மை என்னும் உருவத் தன்மைகள் உரிமையாய் உணர வந்தன.

ஒரு பரமனை நான்கு வடிவமாய் மூன்று நிறத்தில் தோன்றி உலகம் காண வந்துள்ளமையால் கரியனாய், வெளியனாகிச், செய்

யனைக் காட்டும் என்றார். அவதார மருமமான அரிய காட்சிகளை ஈண்டு இனிது காட்டியருளினர்.

சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்களுக்கும் ஏற்ப அரி அயன் அரன் என மருவி நின்று திருமால் மூன்று உருவமாய் அருளி வரும் அமைதியும் அறிய நின்றது.

கிரேதா, திரேதா, துவாபரம், கலி என்னும் நான்கு யுகங்களிலும் முறையே வெண்மை, செம்மை, பசுமை, கருமை என இறைவன் மருவி விளங்குவன் என்னும் கால நீர்மைகளும் இங்கே காணலாகும்.

"பாலின் நீர்மை செம்பொன் நீர்மை பாசியின் பசும்புறம்
போலும் நீர்மை பொற்புடைத் தடத்துவண்டு விண்டுலாம்
நீல நீர்மை என்றிவை நிறைந்த காலம நான்குமாய்
மாலின் நீர்மை வையகம் மறைத்தது என்ன நீர்மையே.''
(திருச்சந்தவிருத்தம், 44)

இன்ன யுகத்தில் இன்ன நிறத்தனாய் மால் மருவியுள்ளான் எனத் திருமழிசையாழ்வார் இவ்வாறு அருளியுள்ளார்.

திருமால் பல நிறமாய்த் தோன்றி விளங்குதல்போல் அனுமானும் ஈங்கு அமைந்து நின்றான். குறித்த குறிப்பினால் அவனது சிறப்பும் சீர்மையும் திவ்விய நீர்மையும் தெரியலாகும்.

இராமனாகவும் திருமாலாகவும் அனுமானை இங்கே இனிமையாகக் காட்டியிருக்கிறார். இந்தக் காட்சியில் ஓர் தத்துவ நிலையும் உய்த்துணர வுள்ளது

மனிதன் எண்ணிய வண்ணமே எய்துகின்றான்; எதைப் பாவிக்கின்றானோ அதன் மயமாகின்றான் இராமனையே சிந்தனை செய்துகொண்டிருத்தலால் அனுமான் அந்த மூர்த்தி போலத் தோற்றம் ஆயினான். தன் அகத்துறை அழகனே போல் புறத்தும் பொலிந்து விளங்கினான் என்னும் இது அனுமானது அன்பும் பண்பும் அதிசய நிலையும் மதி தெளிய வந்தது.

இராம பாவனையால் அனுமான் இராமனாகி யுள்ளான். என்னும் ஒருமையாய் மருவியிருத்தலால் அவனிடமிருந்து யாதொரு உதவியும் யாண்டும் இவன் கருதவே இல்லை.

"As soon as the man is at one with God, he will not beg."
(Self-Reliance)

மனிதன் கடவுளோடு ஒன்றியபொழுது பின்பு அவனிடம் யாதும் கேளான்'' என்னும் இது இங்கே அறிய வுரியது. ஈசனை மருவினவன் எல்லா ஐசுவரியங்களையுமுடையவனாய் இன்பம் மீதூர்ந்து நிற்கின்றான்.

தெய்வ சிந்தனை செய்து மனிதன் திவ்விய மகிமையை அடைய வேண்டும் என்னும் உய்தி நிலை ஈண்டு மருமமாய் உணர வந்துள்ளது. முத்தி என்பது உயிர் உயர் பரமாவஸ்தையாம்.

பித்தி = சுவர்கள். பத்தி = வரிசைகள்.

சிறந்த மாளிகைகளின் வரிசைகள் பலவகையான ஒளிகளை வீச அவ் வழியே அனுமான் யாவும் ஆய்ந்து போயினான்

கண்ட இடங்கள் எங்கும் இன்பக் காட்சிகளே இனிது விளங்கின. பசிய பூப்பந்தர்கள், இனிய கொடி மாடங்கள், குளிர் மரக்காவுகள், நறுமலர்ச் சோலைகள், வாவிகள் முதலிய எல்லா நிலையங்களிலும் தேவ மாதர்கள் ஏவல் செய்ய அரக்க மங்கையர் அதிசய அரசிகளாய்த் துதிகொண்டு துலங்கினர். அந்நிலைகளை நோக்கிய அனுமான் தவத்தின் மகிமையை நினைந்து வியந்தான்.

ஈட்டுவார் தவமலால் மற்று ஈட்டினால் இயைவ தின்மை
காட்டினார் விதியார்; அஃது காண்கிற்பார் காண்மின் அம்மா!
பூட்டுவார் முலைபொருத பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவார் அமரர் மாதர் ஆடுவார் அரக்கர் மாதர்.

(ஊர்தேடு படலம், 104)

தவத்தின் பெருமையைக் காட்டி வந்துள்ள இந்தப் பாட்டை உவந்து படிக்கின்றோம். பொருளை ஊன்றி யுணர்கின்றோம். இலங்கை வாசிகளுடைய இன்ப போகங்களை எண்ணி வியக்கின்றோம். புண்ணிய விளைவுகளைப் போற்றுகின்றோம்.

பேரழகிகளாகிய அரம்பையர்கள் பணிப் பெண்களாய் ஓடி ஊழியம் புரிய அரக்கியர் அதிகார இராணிகளாய் அமர்ந்து சிறந்து விளங்குதலை நோக்கிய மாருதி இது தவத்தின் பயனாய் விளைந்த தனி மாண்புகள் என்று வியப்பு மீதூர்ந்து விளம்பி நின்றான்

ஒரு இராவணன் செய்த தவம் அவன் மரபில் பிறந்தவர் எல்லாரும் பேரின்ப போகங்களை நுகரும்படி செய்துள்ளதே!

என்று அதிசயித்து அதனை விதி செய்து காட்டிய வித்தகமாகத் துதி செய்ய நேர்ந்தான்.

"ஓ உலக மக்களே! நீங்கள் இன்பங்களை அனுபவிக்க விரும்புகிறீர்கள்; அந்தப் போக போக்கியங்கள் பெருகி வருதற்கு மூல காரணம் தவமேயாம; இந்த உண்மையை வேதங்கள் ஓதியுள்ளன; அந்தச் சுருதி மொழிகளை நீவிர் கருதியறியாது போயினும், இதோ கண் எதிரே நிகழுகின்ற காட்சிகளையாவது கண்டு தெளியுங்கள்; உயர்ந்த தேவ குல மங்கையர் விரைந்து வந்து இழிந்த அரக்கியர்க்கு ஏவல் செய்கின்றனர்; அவர் பெருமையுடன் அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து பேரரசிகளாய் விளங்கியுள்ளனர்; இது தவத்தினால் வந்த பாக்கியம்; இதனை நன்கு உணர்ந்து இனிமேலாவது நல்ல தவத்தை நீங்கள் ஒல்லையில் செய்து கொள்ளுங்கள்" என்று பிரமதேவன் நேரே சொல்லிக் காட்டியதுபோல் அந்த நீர் ஆட்டங்கள் நிலவி நின்றன

ஈட்டினால் தவத்தை ஈட்டிக் கொள்ளுங்கள்; வேறு சம்பாத்தியங்களால் யாதும் பயன் இல்லை என விதியார் காட்டினார் என்று அனுமார் இங்கே காட்டியுள்ளார். விதியையும் மாருதியையும் முன்னிலையாக வைத்துத் தவத்தின் மாட்சியை நம் கவி இங்கே காட்டியிருக்கும் காட்சியைக் கருதி மகிழ்ந்து உறுதி நலங்களை ஓர்ந்து உண்மைகளை உணர்ந்து கொள்கின்றோம்.

பொய் இடை நைய என்றது ஐயோ! என்று இரங்கச் செய்கின்றது. மிருது மேனியரான அவர் பரிவாய்ப் பணிபுரிய அரக்கியர் பெரிதாய்ப் புண்ணியம் செய்துள்ளனர்.

இங்ஙனம் பலவகையான நிலைகளையும் நெடிது நோக்கிக் கடிது போனான். வீதிகள் வழியே செல்லுங்கால் அங்கங்கே நிகழுகின்ற களியாட்டங்களையெல்லாம் கவனித்தான். கந்தருவ உலகம் போல் யாண்டும் காம போகங்கள் கனிந்து விளங்கின. உருவ எழில் மிகுந்த சிறந்த மைந்தர்களும் பருவ நலம் சுரந்த தருண மங்கையரும் கலவியின்பங்களில் பரவசராய் உலகை மறந்திருந்தனர். நிலவொளி வீசுகின்ற அந்த இரவு அவர்க்கு இனிய ஆனந்த நிலையமாய் இதம்புரிந்திருந்தது. எவ்வழியும் தேக போகங்களை ஏக போகங்களாய் நுகர்ந்து யாண்டும் மோக ஆடல்கள் புரிந்து யாவரும் உல்லாச விநோதங்களில் களித்துச் செழித்துச் சல்லாப சரசங்களில் திளைத்து மகிழ்ந்தனர்.

உத்தமமான உயர்ந்த பிரமச்சாரி ஆதலால் அந்தக் களி ஆட்டங்களில் விழி நாட்டாமல் வேகமாய் ஏகினன். வீதிகள் பலவும் கடந்து பெரிய பிரபுக்கள் வாழும் பகுதியை அடைந்தான். அங்கேயுள்ள மாளிகைகள் யாவும் அதிசய நிலைகளில் எழில் மிகுந்திருந்தன. எல்லாம் இந்திரபவனங்கள் போல் சுந்தரசோதி வீசித் துலங்கி நின்றன. எங்கும் துருவித் தேடி அதனையும் கடந்து அப்பால் சென்றான்

## அக நகர் புகுந்தது.

இது வரையும் வெளி வீதிகளிலும் புறநகரிலும் புகுந்து தேடினன். அவை யாவும் கடந்து இப்பொழுது அக நகருள் வந்தான். சக்கரவர்த்தியின் நெருங்கிய உறவினர் மாத்திரம் இங்கே வாழ்ந்து வரவுரியவர் ஆதலால் அரிய மாண்புகள் அமைந்திருந்தன. சிறந்த அலங்காரங்களும் உயர்ந்த எழில் நலங்களும் யாண்டும் விரிந்து விளங்கி எவ்வழியும் திவ்விய ஒளிகள் வீசிச் செவ்வி சுரந்து நின்றன. யானைகளும் குதிரைகளும் இரதங்களும் பவனி போதற்குரிய விரிவான பெரிய வீதிகள் நெடிதோடி நிலவின.

இராச வீதிகள் பலவும் நாடி நிலைகளை ஓர்ந்து மாருதி உள்ளே ஏறி வந்தான். அவ்வமையம் இரவு பன்னிரண்டு நாழிகை கழிந்திருந்தது. ஊழ் முறையே ஓர்ந்து புகுந்தான்.

## கும்பகருணனைக் கண்டது.

இன்ப வளங்கள் எங்கும் நிறைந்து எழில் ஒளிகள் தவழ்ந்திருந்த இராச மாளிகைகள் பல கடந்து ஒரு வெளியிடத்தை அடைந்தான். தனியே மேக மண்டலம் அளாவிய பெரிய அரண்மனை அரிய அழகோடு புதிய ஒளி வீசி நின்றது. அருகே அனுமான் மருமமாய் நெருங்கினன். கால தூதர்கள் போல் காவலாளிகள் நான்கு திசைகளிலும் சூல பாணிகளாய்த் தொடர்ந்து திரண்டு அடர்ந்து காத்து அடலோடு நின்றனர். அவர் யாரும் அறியாவகை மாருதி உள்ளே நுழைந்து மேல வாசலை மெல்ல அணுகினன். அணுகவே ஒரு பெரிய மூச்சுக் காற்று வெளியே தள்ளியது; தள்ளுண்ட அனுமனை உடனே உயிர்ப்பு உள்வாங்கி இழுத்தது; நாசித் துளை வரையும் வந்தவன் ஏதோ அபாயம் என்று கூசித் துள்ளி அயலே விலகிக் குதித்தான்.

மூசிய உயிர்ப்பு எனும் முடுகு வாதமும்
வாசலின் புறத்திடை நிறுவி, வன்மையான்
நாசியின் அளவையின் நடத்தக் கண்டவன்
கூசினன் குதித்தனன் விதிர்த்த கையினான்.

கும்பகருணன் அயர்ந்து உறங்குகின்ற நெடிய மணிமண்டபத்தின் மேற்கு வாயிலை அனுமான் நெருங்கிய பொழுது நேர்ந்த நிலைமையை இது காட்டியுள்ளது. அவனது மூக்கிலிருந்து எழுந்த மூச்சுக் காற்றால் அனுமான் பட்டிருக்கும் பாட்டை இப்பாட்டில் பார்த்துப் பயந்து வியந்து பரிந்து நிற்கின்றோம்.

வெளியே நிறுத்திப் பின் உள்ளே இழுத்துப் பெரிய மலை முழையுள் புகுத்துவது போல் நாசித் துளையுள் முடுகி ஈர்க்கவே மாருதி கடிது திகைத்து அயலே விரைந்து குதித்து ஒதுங்கி நின்று துயில்கின்றவனை நுணுகி நோக்கினான்.

## மறுகி வெருண்டது.

அரிய அடலாண்மைகளோடு இராச கம்பீரமாய் அமளியில் படுத்திருக்கின்ற அவனைக் கண்டதும் 'இவன் இராவணனோ?'' என்று எண்ணினான். எண்ணவே கோபம் மூண்டது; கொதித்து மூண்ட கோபத்தை உடனே அடக்கிக் கொண்டு கருத்துடன் அவன் மதித்துப் போனது அரிய கருமவீரமாய்க் கதித்து நின்றது.

ஆவதாகிய தன்மைய அரக்கனை அரக்கர்
கோஎனநின்ற குணமிலி இவன் எனக் கொண்டான்
காவல் நாட்டங்கள் பொறியுகக் கனல் எனக் கனன்றான்
ஏவனோ இவன் மூவரின் ஒருவனும் ஈட்டான். (1)

குறுகி நோக்கி மற்று அவன்தலை ஒருபதும் குறித்த
இறுகு திண்புயம இருபது இங்கிவனிலன் என்னா
மறுகி ஏறிய முனிவெனும் வடவைவெங் கனலை
அறிவெனும் பெரும் பரவையம் புனலினால் அவித்தான். (2)

அவித்து நின்று எவனாயினும் ஆகவென்று அங்கை
கவித்து நீங்கிடச் சிலபகல் என்பது கருதாச்
செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன் அனையவன் உறையுளைக் கடந்தான். (3)

மாட கூடங்கள் மாளிகை ஒளிகை மகளிர்
ஆடரங்குகள் அம்பலம் தேவ ராலயங்கள்

பாடல் வேதிகை பட்டிமண் டபமுதல் பலவும்
நாடி ஏகினன் இராகவன் புகழ் எனும் நலத்தான். (4)

மணிகொள் வாயிலுள் சாளரத் தாள்களில் மலரில்
கணிகொள் நாளத்தில் காலினும் புகையினும் கலக்கும்
நுணுகும் வீங்கும் மற்றவன் நிலை யாவரே நுவல்வார்?
அணுவின் மேருவின் ஆழியான் எனச் செலும் அனுமன்

(ஊர்தேடு படலம் 130-134)

ஓங்கிய உயர்ந்த அழகிய பெரிய மணி மாளிகையுள் தூங்குகின்ற கும்பகருணனைக் கண்டதும் அதிசயித்து நின்ற அனுமான் ஐயம் மீக்கொண்டான். அரச ஆடம்பரங்களோடு மருவியுள்ள அவனை இராவணன் என்றே கருதிக் கொதித்தான். பின்பு அருகே அணுகி ஆய்ந்து நோக்கினான்; இவன் ஒரு முகன் ஆயிருத்தலால் தசமுகன் அல்லன் என்று உள்ளம் தேறினான். ஏறிய கோபம் இறங்கி அமர்ந்தது.

மறுகி ஏறிய முனிவு எனும் வடவைவெங் கனலை
அறிவு எனும் பெரும் பரவையம் புனலினால் அவித்தான்.

அனுமானது அதிசய நிலைமையை மானச நோக்கால் இங்கே விழைந்து பார்க்கின்றோம்; வியந்து சிந்திக்கின்றோம். இராவணன் என எண்ணியவுடனே நெஞ்சம் கனன்று நெடுஞ் சினம் மூண்டுள்ளது. தன் ஆண்டவனுடைய தருமபத்தினியைக் கவர்ந்து போன கள்ளன் என்று காணவே உள்ளம் கொதிக்க நேர்ந்தது. அந்தக் கோபத்தைக் கவி வரைந்து காட்டியிருக்கும் காட்சி அதி பயங்கரமானது. வடவை வெங்கனல் என்றது அதன் அடல் நிலை தெரிய வந்தது.

யுக முடிவில் உலகம் முழுவதையும் ஒருங்கே எரித்து அழிக்கும் ஊழித் தீக்கு வடவை என்று பெயர்.

'வடவை தீத்திரள் மடங்கல் ஊழித்தீ
கடையனல் உத்தரம் வடவாக்கினிப்பெயர்.'' (பிங்கலந்தை)

யுகாந்த காலத்தில் யாவும் எரிக்கும் ஊழித்தீ என்று குறித்ததனால் அனுமானது முனிவு எவ்வளவு அழிவுகளைச் செய்ய வல்லது, எத்தனை உக்கிர வீரமுடையது! என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

சருவ சங்கார காலத்தில் உருத்திர மூர்த்தி செய்வதை இவன் முனிவு செய்யும் என்பது ஈண்டு நுணுகி யுணர வந்தது. அந்த மூர்த்தியின் அமிசமாய் அனுமான் வந்துள்ளமையை இந்த முனிவு நினைவு கூரச் செய்துள்ளது. உண்மையான சன்ம சுபாவங்கள் உலகம் அறிய வெளி வருகின்றன. உருமாறி வந்தாலும் உயிரின் இயல்புகள் ஒருவாது யாண்டும் மருவி மிளிர்கின்றன.

இவ்வாறு மறுகி எறிய முனிவு மாறி ஆறியது. அதனை ஆற்றியது எது? அறிவு. அந்த அறிவு எப்படிப் பட்டது? எவ்வளவு நிலையது? யாரும் அளவு காண முடியாதது; எல்லையில்லாதபடி பரந்து விரிந்துள்ளது என்பார் பரவையம் புனல் என உருவகமாய் உரைத்தார். பரவை = கடல். பெரும் பரவை என்றது உலகம் முழுவதும் சூழ்ந்துள்ள பெரும் புறக் கடலை. கனல், புனல் என்னும் இருவகை நிலைகளையும் ஒரு முகமாய் எதிர் நோக்குகின்றோம். உறவுரிமைகளைக் கருதி யுணர்கின்றோம்.

வடவாக்கினி என்றதற்கு ஏற்ப அதனை அவிக்கத்தக்க நீர்ப் பெருக்கை நேர் எடுத்து காட்டினார். ஊழித் தீயும் ஊழிக்கடலும் ஆளை அளந்து காட்டியுள்ளன. அதிசயமான தெய்வீக நிலைகளை விதி முறையே ஓர்ந்து வியந்து கொள்கின்றோம்.

அனுபமானது முனிவும் அறிவும் காட்சிக்கு வந்து அந்த ஆண்டகையின் அற்புத மாட்சிகளை ஈண்டு நன்கு விளக்கி நிற்கின்றன

வெகுளி, சினம், கதம், கோபம் என வேறு ஏதேனும் ஒரு பெயரால் குறியாமல் முனிவு என்றது அதன் தனி நிலை தெரிய. அரிய பெரியோர்கள்பால் ஓரோவழி முறுகி எழும் சினம் முனிவு என வந்தது. பொல்லாத தீமைகளைக் கண்டபோது நல்லோர் உள்ளம் கொதிப்பதையே முனிவு என்று சொல்வது வழக்கமாயுள்ளது. முனிந்தவன் நிலைமையை நினைந்து கொள்ள வந்தது.]

முன்'யாதானை முனிவித்தீர்! என்று சுக்கிரீவன் தவறு செய்ததை நினைந்து இராமன் முனிவுகொள்ள நேர்ந்ததை அனுமானிடம் இலக்குவன் இவ்வாறு இலக்கோடு கூறியுள்ளான்.

"முறையறிந்து அவாவை நீக்கி முனிவுழி முனிந்து" (நாட்டு, 19)

"முன்பு இறந்தனர் அருந்தவன் முனிவின்" (அகலிகை, 49)

"முக்கண் எண்தோளவன் முனிவு மாறினன்" (கார்முக, 13)

"முனிவரின் முனிகிலர்" (வனம்புகு, 41)

இவற்றுள் வந்துள்ள முனிவின் நிலைமையை நுணுகியுணர்க.

பத்தினிக்கு இடர் செய்த பாதகன் என்று எண்ணவே சித்தம் கொதித்துச் சீறியுள்ளது. தன்னையறியாமலே மூண்டு எழுந்தது ஆதலால் மறுகி ஏறிய என முனிவின் தொழிலாகவே கூறியருளினர். இவ்வாறு தானாகவே மண்டி விரைந்த கோபத்தை இவ் வீரன் அறிவால் அடக்கியிருக்கிறான்.

முனிவு எனும் கனலை அறிவு எனும் புனலினால் அவித்தான் என்றதனால் கொதித்தெழுந்த சினத்தைத் தணித்திருக்கும் நிலை நுனித்துணர வந்தது. சீறி மீறிய முனிவை மேலே ஏறவிடாமல் மாறி அடக்கி இவ் வீரன் தேறி நின்றது காரிய நீர்மையைக் காட்டியுள்ளது. கரும நலனையே யாண்டும் கருதி வருகிறான்.

அறிவிலும் ஆடலாண்மைகளிலும் எவரும் தனக்கு நிகரில்லாத அநுமான் கும்பகருணனைக் கூர்ந்து நோக்கினான்; அந்த உடலமைதியில் ஓர் உண்மையை ஓர்ந்தான்; "இன்னும் சில நாளில் இவன் மாண்டு படுவான்" என்று தேர்ந்து கொண்டு அயலே பாய்ந்து போனான். பின்னே நிகழ்வதை முன்னே குறிப்பாக ஓர்ந்து போயிருப்பது உயர்ந்த ஞானக் காட்சியாய் ஒளி வீசி மிளிர்கின்றது. யூகம் புரிந்து வேகமாய்ப் போயினான்.

அங்ஙனம் போனவன் யார்? என்பதைக் கவி இங்கே காட்டியிருக்கும் காட்சி உணர்வும் உவகையும் ஒருங்கே யூட்டியுள்ளது.

செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன் என அநுமானுக்கு இவ்வாறு ஒரு பெரிய திருநாமம் நம கவி நாயகன் இங்கே நவமாகச் சூட்டியிருக்கிறார். இந்தப் பெயர் எவ்வளவு மகிமையுடையது! எத்துணைத் தகுதி வாய்ந்தது! உய்த்துணர வேண்டும். அரிய பல உரிமைகளையும் அதிசய ஆற்றல்களையும் கருதியுணரும்படி இது மருவி மிளிர்கின்றது

## புகழ் திருத்திய புண்ணியன்.

வாய்க்குத் தேன் எவ்வளவு சுவையாய் இன்பம் தருகின்றதோ அவ்வளவு இனிமையாய் மானிடர் செவிக்கு இராகவன் புகழ் இன்பம் புரிந்து வருகின்றது. இங்ஙனம் என்றும் குன்றாத

இன்ப நிலையமாய் அது பெருகி வரும்படி அனுமான் அருளி யிருக்கிறான். அரிய புகழ் இனிய தேன் என அமைந்தது.

இவன் ஊக்கி முயன்று ஆக்கியருளவில்லையானால் அவன் புகழ் சுவை இழந்து நவை உழந்திருக்கும். அங்ஙனம் நேராமல் எங்ஙனம் செய்தான்? தனது அருமை நாயகனைப்பிரிந்து சிறையில் பரிதபித்திருந்த சீதை இறுதியில் உறுதி குலைந்து உயிர்விட நேர்ந்தாள்.

மாதவிப் பொதும்பருள் மருவி மன்னனைக்
காதலோ டுருகியுட் கருதி மற்றினி
ஏதமில் பிறவியில் எய்துவேன் எனாச்
சீதைதன் உயிர்விடச் சேர்ந்த போதினில்

அனுமான் இடையே பாய்ந்து இராம நாமத்தைச் சொல்லி அப் பதிவிரதையின் உயிரைக் காப்பாற்றினான். அங்ஙனம் காக்க வில்லையானால் சீதை இறந்து போயிருப்பள்; இராமன் புகழும் சிதைந்து போயிருக்கும்; அவ்வாறு சிதைந்து போகாதபடி உற்ற சமயத்தில் புகுந்து உதவியருளினான்

இந்திரசித்து ஏவிய திவ்விய பாணங்களால் இலக்குவன் அடி பட்டுக் கீழே சாய்ந்தான். வானர வீரர்கள் யாவரும் மாய்ந்து போயினர். தம்பியை வந்து கண்ட இராமன் உள்ளம் துடித்து உயிர் பதைத்து மேலே விழுந்து மூர்ச்சை ஆயினான். எதிரிகள் அனைவரும் இறந்து போயினர் என்று இலங்கையில் வெற்றி விழாக் கொண்டாட நேர்ந்தனர். போர்க் களத்தில் அம்புகளால் துளை பட்டு மயங்கிக் கிடந்த அனுமான் தெளிந்து எழுந்தான். நேர்ந்துள்ள நிலைகளை நினைந்து நெஞ்சம் கலங்கினான். பின்பு விரைந்து போய்ச் சஞ்சீவி மலையைக் கொண்டு வந்தான்; இறந்து கிடந்த எல்லாரும் எழுந்து திரண்டனர். அப்பொழுது இராமன் அனுமானை விழைந்து தழுவிக் கண்ணீர் சொரிந்து புகழ்ந்து கூறினான். உழுவலன்பு கனிந்த அந்த அருமை மொழிகள் இருவருடைய நிலைமைகளையும் இனிது விளக்கி இன்பம் சுரந்து நின்றன.

"அனும! நானும் என் தம்பியும் தசரதன் பிள்ளைகளாய் முன்பு பிறந்திருந்தோம்; இன்று எதிரி கையால் இறந்து போனோம்; இப்பொழுது உன் பிள்ளைகளாய்ப் பிறந்திருக்கிறோம்; நாங்கள் உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகின்றோம்?

என் அப்பனே!'' என்று இராமர் இப்படி உள்ளம் உருகிப் பேசியிருக்கிறார். இந்தப் பேச்சு எவ்வளவு மகிமை யுடையது!

இலங்கையைச் சிதைத்துச் சீதையை மீட்டிக் கொண்டு அயோத்திக்கு மீண்டு வரும்போது இடையே பரத்துவாசரது ஆச்சிரமத்தில் இராமன் சிறிது தங்க நேர்ந்தான். தன்னிடம் முன்னம் சொன்னபடி அண்ணன் வரவில்லையே! என்று ஏங்கியிருந்த பரதன் முடிவில் தீயுள் பாய்ந்து மாய்ந்து போக மூண்டான். அச் சமயம் விரைந்து புகுந்து அவனைத் தடுத்து நிறுத்தி இராமன் வரவை உரைத்து அனுமான் காத்தருளினான்.

அவ்வாறு காவாதிருந்தால் பரதன் இறந்து போயிருப்பன்; இராமன் முதலிய அனைவரும் பரிதாபமாய் மாண்டிருப்பர் அங்ஙனம் முடிந்து நின்றால் யாவும் அவமாய்ச் சிதைந்து இராம சரிதம் மடிந்திருக்கும்: அவன புகழ் இனித்திராது.

மேலே குறித்த மூன்று இடங்களிலும் நேர்ந்த அபாயங்களை நீக்கி இராம சரிதத்தை அனுமான் நன்கு பாதுகாத்திருத்தலால் அக் கோமகன் புகழ் எங்கும் செழித்துத் தழைத்து என்றும் எவர்க்கும் இன்ப மயமாய் இனித்து வருகிறது.

இடையே புகுந்த கோணல்களைத் திருத்திச் செம்மையாக மாண்புறுத்தி யுள்ளமையால் இராகவன் புகழினைத் தேன் எனத் திருத்தும் கவி நாயகன் எனச் சுவையாகச் சுட்டி யுரைத்தார். அந்தக் கவி நாயகன் இராமன் புகழினைத் தேன் எனத் திருத்தினான்; இந்தக் கவி நாயகன் அவன் கதையினை அமுதம் எனச் சுவை செய்தருளினான். காவிய சீவியம் காண வந்தது.

இராம காவியத்தைத் தான் சுவையாகப் பாடுதற்கு அவன் உதவி புரிந்துள்ளமையால் அந்த உதவி நிலையை உவந்து புகழ்ந்தான். நன்றியறிந்து போற்றுவது உயர்ந்த பண்பாடாய் என்றும் ஒளி புரிந்து யாண்டும் இனிமை சுரந்து வருகின்றது.

## விபீடணனைக் கண்டது.

கும்பகருணனுடைய மாளிகையைக் கடந்து அயலே போயினான். அதிசய நிலைகளில் ஒளி மிகுந்து விளங்குகின்ற மாடங்கள் கூடங்கள் மணிமன்றங்கள் மந்திரசபைகள நடனசாலைகள் நாடக மேடைகள் ஆடல் பாடல்கள் பயில்கின்ற இசை அரங்குகள்,

அம்பலங்கள் பாடல் வேதிகைகள் பட்டி மண்டபங்கள் தேவாலயங்கள் முதலிய யாவும் தேடி மாருதி ஏகினன்.

இராகவன் புகழ் எனும் நலத்தான் என்றது சீராமன் கீர்த்தியே ஓர் உருவமாய் மருவி உலகம் காண வந்துள்ள நிலையினன் என்றவாறு. அவனுடைய புகழினைத் திருத்தித் தேன் என இனிக்கச் செய்தவன் என்று முன்னம் குறித்தார். அந்தப்புகழே இந்த வடிவமாய் அமைந்திருக்கிறது என இங்கே உரைத்தார். அனுமானுடைய சீர்மை நீர்மைகளை ஆராமை மீதூர்ந்து பாராட்டி வருகிறார். அரிய செயல்கள் பெரிய பெயர்கள் பெறுகின்றன

இராச வீதிகளில் ஆயிரக் கணக்காக வரிசை வரிசையாய் எழில் மிகுந்துள்ள மாட மாளிகைகளை அதிவிரைவில் அனுமான் ஆராய்ந்து போனான். சானகி தேவியை எங்கேயாவது காண முடியாதா? என்னும் ஆவலோடு காவல்கள் பலவும் கடந்து யாவரும் காணாதபடி யாண்டும் தாவித் தேடினான்.

காலினும் புகையினும் கலக்கும்

என்றதனால் மாருதி மருவிப் போயிருக்கும் மருமங்களை அறிந்துகொள்ளலாம். காற்றும் புகையும் போல் எங்கும் எளிதே புகுந்து யாண்டும் தெளிவாக ஆய்ந்து நாடிப் பாய்ந்து போயுள்ளான்

அணுவின் மேருவின் ஆழியான் எனச் செலும் அனுமன்.
பலவகை உருவிலும் மருவிப் போயுள்ளமை தெரிய வந்தது.

அணிமா மகிமா லகிமா முதலிய யோக சித்திகளில் வல்லவன் ஆதலால் சிறுத்தும் பெருத்தும் சென்றிருக்கிறான். அதிசயமான மாய உருவங்களில் மருவி அரிய பல இடங்களையும் கருதிப் போயிருத்தலால் மாயன் என நேர்ந்தான்.

ஆழியான் என்றது திருமாலை. ஆழி = சக்கரம்.

இவ்வாறு எவ்வழியும் செவ்வையாய்த் துருவி ஆராய்ந்து ஏகினன். வீடணன் மாளிகையை அணுகினான். உள்ளே புகுந்து அவனை உற்று நோக்கி உண்மையை ஓர்ந்து உள்ளம் வியந்தான்.

ஏந்தல் இவ்வகை எவ்வழி மருங்கினும் எய்திக்
காந்தள் மெல்விரல் மடந்தையர் யாரையும் காண்பான்
வேந்தர் வேதியர் மேலுளோர் கீழுளோர் விரும்பப்
போந்த புண்ணியன் கண்ணகன் கோயிலுட் புக்கான். (1)

பளிக்கு வேதிகைப் பவளத்தின் கூடத்தில் பசுந்தேன்
துளிக்கும் கற்பகப் பந்தரில் கருநிறத் தோரை
வெளித்து வைகுவ தரிதென அவருரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமம் அனனான் றனை யுற்றான். (2)

உற்றுநின் றவன் உணர்வைத் தன உணர்வினால் உணர்ந்தான்
குற்றமில்லதோர் குணமுளன் இவன் எனக் கொண்டான்
செற்றம் நீங்கிய மனத்தினன் ஒரு சிறை சென்றான்
பொற்றை மாடங்கள் கோடியோர் நொடியிடைப்போனான்.

விபீடணனுடைய அரண்மனையுள் புகுந்து அவனை அணுகி நோக்கி அனுமான் கருதி நேரயிருக்கும் காட்சியை இங்கே கண்டு நிற்கின்றோம். அவன் உறங்கியிருந்த மாளிகையின் அழகுகளும் அமைதிகளும் விழுமிய நிலைகளில விளங்கி நம் எண்ணங்களைக் கவர்ந்து இன்பம் மிகச் செய்கின்றன

பரிமளம் கமழ்கின்ற மலர்கள் நிறைந்த திவ்வியமான பூஞ்சோலை புடை சூழ்ந்துள்ளது; இடையே பளிங்கு மேடைகள் அமைந்த சிறந்த பவள மயமான உயர்ந்த மாளிகையில் அழகிய இனிய விதானத்தின் கீழ் அவன் உறங்கியுள்ளான் கரிய உருவமுடையவன்; பெரிய தரும குண சீலன். அந்தப் புனித நீரனைக் கவி இனிது வரைந்து காட்டியிருக்கும் காட்சி தனி மகிமையாய் இன்பம் சுரந்து எழில் மிகுந்துள்ளது.

பாவ காரிகளான கொடிய அரக்கர்கள் நிறைந்த அந்த ஊரில் இந்தப் புண்ணியவான் ஒருவன் அதிசயமாய் வாழ்வது துதி செய்ய வந்தது. நல்லவன் இருப்பது நவமாயுள்ளது.

தருமம் வெண்மை நிறமுடையது; அது கரிய இராக்கதர் வாழ்கின்ற இலங்கையில் தனது இயல்பான வெள்ளை நிறத்தோடு வாழ முடியாது என்று தெரிந்து அவர் போலவே கரு நிறமாய் உருவம் அமைந்து அங்கே மருமமாய்த் தருமம் மருவியுள்ளது என வீடணன் அருமையாய் வாழ்ந்திருக்கின்றான்.

வெளித்து வைகுவது அரிது என அவர் உருமேவி
ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்னான்.

இந்த விளக்கம் எவ்வளவு துலக்கமுடையது! எத்தனை வியப்பை விளைத்து நிற்கின்றது! கவியின் மானச நோக்கும் ஞான வாக்கும் அரிய ஒளியும் இனிய சுவையும் பெருகி, யாண்டும் ஆனந்தம் சுரந்து அருள்புரிந்து பொருள் பொதிந்து வருகின்றன.

தீயவர் குழாத்துள் ஒரு தூயவன் தனியே வேறுபட்டு வசிப்பது கடினம்; அவர் போலவே வேடம் கொண்டிருந்தால் நம் இனத்தான் என்று தழுவி யாதொரு இடரும் செய்யாமல் அணைத்துக் கொள்வர். பகை வகையினருள் நகைவகையாய் வாழ வேண்டிய அந்த வாழ்க்கைச் சாதுரியம் இங்கே காட்சிக்கு வந்துள்ளது. உள்ளம் ஒட்டாமல் உடல் ஒட்டியுளது.

அரக்கர் கூட்டத்தின் தீய செயல் இயல்களை யாண்டும் வெறுத்து வந்தாலும் யாவும் பொறுத்து நீதி நெறியுடன் வீடணன் தனியே வாழ்ந்திருத்தலை ஈண்டு இனிது தேர்ந்து கொள்கின்றோம். இயல் ஒவ்வாத வாழ்வு அயலாகின்றது.

உற்ற குலத்தவருடன் உள்ளமும் உணர்வும் யாதும் ஒன்றுமல் என்றும் சத்திய சீலமும் தருமமும் பேணி நல்லவனாகவே விபீடணன் எங்கும் நிலைத்திருத்தலால் அவனுடைய நிலையை எல்லாரும் வியந்து போற்றி உவந்து கொண்டாடியுள்ளனர்.

"நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லால்
சாதியால் வந்தசிறு நெறி அறியான் என்தம்பி."

கும்பகருணன் இரண களத்தில் இறந்துபட நேர்ந்தபோது இறுதியில் தன் தம்பியைக் குறித்து இவ்வாறு கூறி அவனை ஆதரித்தருளும்படி இராமனிடம் உளம் உருகி உரிமையோடு வேண்டியிருக்கிறான். பிறவிப்பாசம் எவரிடமும் பெருநுக்கமாய்ப் பெருகி வருகின்றது. எதிரியோடு சேர்ந்து கொண்டான் என்று இகழ்ந்திருந்தாலும் உயிர் போகும் சமையத்தில் அண்ணன் வாயால் நீதிமான் தருமவான் என வீடணன் புகழ்ந்து போற்றப் பெற்றுள்ளமையால் அவனது புனித நிலையின் ஏற்றம் மனித சமுதாயத்துக்கு நன்கு புலனாய் நின்றது.

பிறப்பில் அரக்கன் ஆயினும் இரக்கம் நீதி அடக்கம் கருணை சத்தியம் முதலிய உத்தம நீர்மைகள் எல்லாம் அவனிடம் ஒருங்கே குடி கொண்டிருக்கின்றன. அதனால் தரும குண சீலன் என யாவரும் அவனை உரிமையுடன் பாராட்டி வரலாயினர்.

"விபீடணஸ்து தர்மாத்மா" என வால்மீகி முனிவர் பல் இடங்களிலும் வீடணனை இவ்வாறு கூறியுள்ளார்.

உருவம் கருமை நிறம்; உள்ளமும் உணர்வும் தரும நீர்மை மண்டியுள்ளன. இத்தகைய புண்ணியவான் பாவிகள் இருக்கும் ஊரில் எப்படி இருந்தான்? வேண்டா விருப்பனாய் வேண்டும் உருக்கொண்டு ஆண்டு மேவி இருந்தான் என்க

தருமம் ஒளித்து வாழ்கின்றது என்றது அவ்வாழ்வின் மருமம் தெரிய வந்தது. உரிய காலம் வரின் தரும வீரனான வீடணன் தனியே வெளிப்பட்டுத் தரும மூர்த்தியாகிய இராமனோடு கூடிக் கொள்வான் என்னும் குறிப்பு இங்கே கூடமாயுள்ளது.

பின்னே நிகழவுரிய உண்மைகளை முன்னே நுண்மையாக உணர்த்தி வருகிறார். காவிய பாத்திரங்களை யாண்டும் சிறிய ஓவியங்களாச் சித்திரித்து உரிய முத்திரைகளோடு அருமையாக அங்கங்கே வைத்துச் செல்கின்றார்.

மேலுளோர் கீழுளோர் விரும்பப் போந்த புண்ணியன்.

என்றது விண்ணவரும் மண்ணவரும் வீடணனை எண்ணி மகிழும் இயல்பு தெரிய வந்தது. யாவரும் உவந்து போற்றும் புண்ணியன் என்றதனால் அவனுடைய குண நீர்மைகளை எண்ணி அறியலாகும். எல்லார்க்கும் இனியனா யிசைந்திருக்கிறான்.

இத்தகைய உத்தமன் பசுந்தேன் துளிக்கும் கற்பகப் பந்தரிடையே அற்புத அமளியில் படுத்திருந்தான். அமைதியாய் உறங்குகின்ற அவனை அனுமான் போய் அணுகி நோக்கினான். உருவச் சாயலைக் கூர்ந்து பார்த்து இவன் ஓர் உத்தமமான குண சீலன் என்று உள்ளம் தேர்ந்து கொண்டான்.

அவன் உணர்வைத் தன் உணர்வினால் உணர்ந்தான்.

அயர்ந்து துயில்கின்ற வீடணனது முகத்தை நோக்கி அவனது அகத்தின் இயல்புகளை அனுமான் நுனித்து உணர்ந்திருக்கும் நிலையை இது உணர்த்தியுள்ளது முகக் குறிப்புக்களையும் உறுப்புகளையும் கொண்டு ஒருவனுடைய உள்ளப் பான்மையைத் தெளிவாக அறிந்து கொள்வதில் இம் மதிமான் சிறந்த தேர்ச்சியை அடைந்திருந்தான் ஆதலால் ஒரு பார்வையிலேயே எவரிடத்தும் பல வுண்மைகளை விரைவாக ஓர்ந்து கொள்கின்றான்.

உற்று நோக்கியவுடனே "யாதொரு குற்றமும் இல்லாதவன் எல்லாக் குணங்களும் நிறைந்துள்ளவன்" என்று வீடணனை உணர்ந்து மகிழ்ந்து அயலே விரைந்து போனான்.

## இந்திரசித்தைப் பார்த்தது.

வீடணன் மாளிகையைக் கடந்து கருமமே கருத்தாய்ப் பல தெருக்களையும் துருவிச் சென்றான். எண்பதாவது வீதியின் இடையே ஒன்பது மேடைகளுடைய பெரிய மாளிகை ஒன்று அரிய அலங்காரங்கள் அமைந்து மேலே நீலக் கொடி உலாவ நிலாவி நின்றது. அதன் அயலே போய் மாருதி அண்ணாந்து பார்த்தான். இது இந்திரன் சிறை இருந்த மந்திரம் என்று கரிய கல்லில் பெரிய எழுத்தில் சீனிய மொழியிலும் தேவநாகரியிலும் மேலே எழுதியிருந்தது. முன்னம் அமராவதியை வென்று அமரர் கோனைப் பிணித்துக் கொண்டு வந்து சிறைப்படுத்தியிருந்த இடத்தை அவ்வளவு சிறப்பாகப் புதுக்கி வெற்றியின் ஞாபகச் சின்னமாக விளக்கி வைத்துள்ளனர். அதனைக் கண்டதும் அனுமான் வருந்தினான். தேவராசனும் பாவகாரிகள் கையில் படாத பாடு பட்டிருக்கிறான்! என்று எண்ணி இரங்கி அயலே நண்ணினான். இலங்கை வாசிகளுடைய அதிசய வாழ்வுகளையும் விதி விளைவுகளையும் வியந்து கொண்டு வீதியிடையே நடந்து சென்றான்.

அழகிய மாடமாளிகைகள் புடைசூழக் கூட கோபுரங்களோடு விழுமிய நிலையில் விளங்கியிருந்த பெரிய அரண்மனை ஒன்று எதிரே தோன்றியது. அதன் ஆசார வாசலை அணுகினான். ஆயிரம் போர் வீரர்கள் கூரிய வேல்களோடு முன் வெளியில் காவல் காத்து நின்றனர். அந்தக் காவலாளிகள் யாவருக்கும் தெரியாமல் உள்ளே புகுந்து பல் வாயில்களையும் கடந்து புதிய எழில்களோடு ஒளி மிகுந்திருந்த அரண்மனைக்குள் நுழைந்தான்

இராவணனுடைய தலைமைப் புதல்வனான இந்திரசித்தினுடைய அந்த மாளிகையுள் புகுந்ததும் அனுமான் அதிசயித்து நின்றான். உரிமைக் காதலிகளான மேழகிகள் பலர் அயலே உயர்ந்த மஞ்சங்களில் அயர்ந்து உறங்க இடையே சிறந்த பஞ்சணையில் இந்திரசித்து படுத்திருந்தான்.

அதிசய எழிலோடு வீர கம்பீரமாய் விழி துயின்றிருக்கின்ற அவனை அணுகி அனுமான் நுணுகி நோக்கினான். அந்தக் கோமகனைக் கண்ட போது உள்ளம் வியந்து இவ் வீரன் கருதியுள்ள சிந்தனைகள் வியனிலையில் விளங்கி நிற்கின்றன.

மூக்கண் நோக்கினன் முதல்மகன் அறுவகை முகனும்
திக்கு நோக்கிய புயங்களும் சிலகரந் தனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானைப்
புக்கு நோக்கினன் புகைபுகா வாயிலும் புகுவான். (1)

வளையும் வாள்எயிற்று அரக்கனோ கணிச்சியான் மகனோ.
அளையில் வாளரி அனையவன் யாவனோ அறியேன்
இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்
உளைய வுள்ளபோர் இவனொடும் உளதென வுணர்ந்தான்.

இவனை இன்துணை யுடையபோர் இராவணன் என்னே
புவனம் மூன்றையும் வென்றதோர் பொருளெனப் புகறல்
சிவனை நான்முகத் தொருவனைத் திருநெடு மாலாம்
அவனை அல்லவர் நிகர்ப்பவர் என்பதும் அறிவோ? (3)

என்று கைம் மறித்து இடைநின்று காலத்தை இகப்ப
தன்றுபோவதென்று ஆயிரம் ஆயிரத் தடங்காத்
துன்று மாளிகை ஒளிகள் துரிசறத் துருவிச்
சென்று தேடினன் இந்திர சித்தினைத் தீர்ந்தான். (4)

அக்கன் மாளிகை கடந்து போய் மேலதி காயன்
தொக்க கோயிலும் பொருநர்கள் இல்லமும் துருவித
தக்க மந்திரத் தலைவர்கள் மனைகளும் தாவிப்
புக்கு நீங்கினன் இராகவன் கழலெனப் புகழோன். (5)

(ஊர்தேடு படலம், 140-144)

இந்திரசித்தின் நிலைமையும், அவனைக் கண்டு வியந்து அனுமான் கருதியிருக்கும் யூகங்களும் மதிநலம் சுரந்து அதிசய விவேகங்களாய் ஒளி மிகுந்து திகழ்கின்றன.

உருவ அமைதியும் பருவ நிறைவும் அழகும் வீரமும் உன்னத நிலையில் மன்னியிருந்தமையால் முன்னவன் குமாரனோடு நேர் எண்ண நேர்ந்தான். ஆறு திருமுகங்களையுடைய முருகக் கடவுள் ஐந்து முகங்களையும் பத்துக் கைகளையும் ஒருவி ஒரு முகமும் இரண்டு தோள்களுமே மருவி இலங்கையுள் வந்து உறைந்திருப்பது போல் இந்திரசித்து விளங்கியிருந்தான். இதனால் அவனது எழிலும் இயலும் தேசும் திறலும் தெரியலாகும். இலங்காதிபதி பெற்றபிள்ளை கைலாசபதி பிள்ளையை ஒத்திருந்தது.

முதல் மகன் என்றது சிறந்த மைந்தன் என்றவாறு.

முக்கண் முதல்வனது புதல்வன் எனவும் அமையும்.

பரமனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய ஆறு நெருப்புப் பொறிகளே அறுமுகக் கடவுளாய் அமைந்தது ஆதலால் அந்தக் கண் உரிமையோடு எண்ண வந்தது.

மீதலம் பூதலம் பாதலம் என்னும் மூன்று உலகங்களையும் ஒருங்கே கண்நோக்கி ஆளும் இராவணனும் முக்கண் நோக்கினனாய் ஓரளவில் ஈண்டு ஒக்க நோக்க நேர்ந்தான்

அறுவகை முகன் என்றது வேறு வேறு வகையில் விதிமுறை புரிந்து அதிசய நிலைகளில் துதிபெற்றிருக்கும் அத் திருமுகங்களின் சீரும் சிறப்பும் தெரிய.

"மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே; ஒரு முகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி யோர்க்கும்மே; ஒரு முகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக்கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே; ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே;
ஆங்கு அம் மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்".

(திருமுருகாற்றுப்படை)

அறு வகை முகங்களின் நிலைகளை இதனால் அறியலாகும்.

"வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைத் தடிந்து
தெவ்வர்உயிர் சிந்தும் திருமுகமும்—எவ்வுயிர்க்கும்
ஊழ் வினையை மாற்றி யுலவாத பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகமும்—சூழ்வோர்
வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும்—விடுத்தகலாப்
பாச இருள் துரந்து பல்கதிரிற் சோதிவிடும்

வாச மலர் வதன மண்டலமும்—நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும்—தாகமுடன்
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும்—கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும்" (கலி வெண்பா)

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
 ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
 குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
 வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகம் ஆனபொருள் நீயருளல் வேண்டும்
 ஆதியரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே. (திருப்புகழ்)

அறுமுகத்து ஆறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே! (பரிபாடல்)

செந்நிறத்திரு மேனியும் திருமுகம் ஆறும்
அன்ன தற்கிரு தொகையுடைத் தோள்களு மாக
முன்னவர்க்குமுன் னாகிய பராபர முதல்வன்
தன்னுதற்கணால் ஒருதனிக் குமரனைத் தந்தான்.
(கந்தபுராணம்)

முக்கண் மூர்த்தியிடமிருந்து அறுமுகப் பரமன் உதயமா யுள்ளதும், அந்த முகங்களின் சீர்மை நீர்மைகளும் அருள் அமைதிகளும் நூல்களில் இவ்வாறு கூறப்பட்டுள்ளன.

முருகனை என்னும்படி உருவ எழில் வாய்ந்து பருவ மங்கையர் குழாத்திடையே விழுமிய அமளியில் விழி துயின்றிருக்கின்ற இந்திரசித்தை மந்திர சித்தியோடு அனுமான் பார்த்தான். யாரும் புக முடியாத அரிய இன்ப மாளிகையுள் இவ் வீரன் புகுந்து விழியூன்றி நோக்கினான். கண்ணயர்ந்துள்ளவர் எவ் வழியும் எழாமல் எளிது இயங்கி எதையும் நுணுகி ஆய்ந்தான்.

புகை புகா வாயிலும் புகுவான் என அனுமானை இங்ஙனம் காட்டியது அவன் புகுந்து பார்க்கும் தலத்தின் அருமையையும் ஆற்றலையும் கருதியுணர்ந்து உறுதி நிலையை ஓர்ந்து கொள்ள

காற்றும் கூற்றும் புக அஞ்சுகின்ற அந்தப் புரத்தில் எளிதே புகுந்து இனிது நோக்கி நிற்றலால் புகை என வகை தெரிய நேர்ந்தது. புகையினும் புகுவது புதுமை யாயது. நேக நுழைவும் யூக விழைவும் யோக விளைவுகளாய் ஒளி மிகுந்துள்ளன.

துயிலுகின்றவனுடைய உருவப் பொலிவைக் கண்டதும் அனுமானுக்குப் பெரு வியப்புண்டாயது. இவன் முருகனே? என்று முதலில் மறுகி வியந்தான். பிறகு கருதி யுளைந்தான்.

வீர கம்பீரமான அவனது பெருமித நிலைமை விழியூன்றி நோக்கினன். பிறப்பில் அரக்கனய் வெளியே தெரியினும் தெய்வ ஒளியோடு திகழ்ந்தமையால் யாதும் தெளிவாக அறிய முடியாமல் திகைத்து நின்றான்.

## யூகித்து உணர்ந்தது.

மலை முழையுள் வாழுகின்ற சிங்க ஏறுபோல் அந்த மாளிகையுள் உறங்குகின்ற அவனை நெடிது நோக்கி முடிவாக அனுமான் முடிவு செய்தான். அம் முடிவு அதிசய யூகமுடையது.

இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும் உளது என உணர்ந்தான்

இந்த மதி யூகத்தை அதி யூகமாய் வியந்து நோக்கி நாம் உவந்து நிற்கின்றோம். திவ்விய மேதையின் யோசனைகள் செவ்விய போதனைகளாய்த் தேசு வீசியுள்ளன.

“இவனை இன்னான்? என்று இதுபொழுது எனக்கு நன்கு தெரியவில்லை; ஆயினும் இவனிடம் ஒரு அதிசய வீரம் குடி கொண்டுள்ளது; இளைய பெருமானும் இராமபிரானும் இருவரும் கூடி நெடுநாளாகப் போராடி வருந்தும்படியான அரிய போராண்மையாளன்; பெரிய போர் வீரன்” என்று இந்திரசித்தைக் குறித்து மாருதி இங்கே உறுதி செய்திருக்கிறான்.

குறிப்பாய்க் கூர்ந்து ஓர்ந்து ஈண்டு ஊகித்துள்ள உண்மையைப் பின்னே காணப் போகின்றோம். போர்க்களத்தில் அண்ணனும் தம்பியும் இவனால் படவேண்டிய பாடுகளை இங்கே எண்ணி யுணரச் செய்துள்ளான். இராமனைப் பின்னே நிறுத்தி இளைய வீரன் என இலட்சுமணனை முன்னே குறித்தது, அந்த வில் வீரனே இந்த வல வீரனேடு எதிரியாய் நேர்ந்து நெடிது போராடும் நிலைமை தெரிய. உரிய சோதிகள் ஒரு முகமாய் உணர வந்தன.

இத் தகைய வீரனை உரிமைத் துணையாகப் பெற்றிருக்கின்ற இராவணன் மூன்று புவனங்களையும் வென்று கொண்டது ஒரு வியப்பு அன்று; எல்லா அண்டங்களையும் எளிதே கைக் கொள்ள லாம்; இவனை உடையவன் எதனை அடையான்? அதிசய பராக்கி ரமசாலியான இவனைப் பெற்றவனே பெரிய பாக்கியசாலி. இவனைக் கொண்டே அண்ட கோடிகள் யாவும் ஆளலாகும்.

சிவனை நான்முகத்து ஒருவனைத் திருநெடு மாலாம்
அவனை அல்லவர் நிகர்ப்பவர் என்பதும் அறிவோ?

இந்திரசித்துக்கு நிகரானவரை நேர் எடுத்து நிறுத்தித் தனக்குள்ளேயே இவ்வாறு மேம்படுத்துப் பேசியிருக்கிறான். பேச்சில் அதிசய பரவசம் பெருகியுளது.

சிவன் திருமால் பிரமன் என்னும் இந்த மூவரையன்றி வேறு எவரும் இந்திரசித்திற்கு நிகராக மாட்டார் என்றது அவனது நிலைமை தலைமைகளை நினைந்து வந்தது.

தேவராசன் ஆன இந்திரனைக் கட்டிக் கொண்டு வந்து சிறையில் இட்டு வைத்தான்; அதனால் இந்திரசித்து என்று வெற்றித் திரு நாமத்துடன் விளங்கி நிற்கின்றான். மேகநாதன் என்பது பெற்றோர் இட்ட பெயர். பிள்ளைப் பேர் மறைந்து பெரிய பேரோடு சிறந்து நிற்கின்ற இந்த அரிய போர் வீரனை நினைந்தால் அமரரும் அமரர் கோனும் நெஞ்சம் கலங்கி அஞ்சி நடுங்குகின்றனர். தேவர் யாவரும் இவனுக்கு ஏவலாளராயுள்ளமையால் அவருள் எவரையும் நிகர் என்று சொல்லலாகாது. ஒப்புச் சொன்னால் அது பெரிய தப்பாம்.

நிகர்ப்பவர் என்பதும் அறிவோ? என்று வினவி விட்டது நிலைமைகளை நினைவு கூர்ந்து ஓர்ந்து கொள்ள. தனக்கு ஏவலாய்த் தாழ்ந்துள்ள தேவருள் யாரையாவது அவனுக்கு நிகர் சொல்ல நேர்ந்தால் அது தகுதியை நன்குணராத மடமையாம் என்பதாம். அறிவோ? என்னும் வினா செறிவு மிகவுடையது.

முருகனோ? என முதலில் நினைந்தது அழகும் வீரமும் விழுமிய நிலையில் மருவியுள்ளமையால் நேர்ந்தது. சிவன் நான்முகன் திருமால் எனப் பெருமிதமாக எண்ணியது அடலாண்மையும், அதிசய நீர்மையும், அற்புத ஆற்றலும் கருதி வந்தது.

அறுமுகப் பரமன் ஒரு முகனுய் உருவம் கார்ந்து உறைந் துள்ளது போல் அவன் உறங்கியிருந்தான் எனக் கவி முதலில் குறித்ததைக் கவிக்கு நாயகன் வாயிலாக மீண்டும் வலியுறுத்தி அழகு படுத்தியிருப்பது கலையின் சுவையாய்க் கனிந்து திகழ்கின் றது. தான் குறிப்பாக ஓரிடத்தில் காட்டியதை எங்கும் சிறப் பாக நீட்டி வரும் நீர்மை நெடிய சீர்மையாய் நிலவியுளது.

இராவணனுடைய மூத்த குமாரன்; நேரே பட்டத்துக்கு உரிய இளவரசன்; அதிசய பராக்கிரமமுடையவன்; சிறந்த வில் லாளி; உயர்ந்த போர் வீரன்; அந்தக் குல மகனுடைய பல வகை மேன்மைகளும் இங்கே காட்சிக்கு வந்துள்ளன.

பின்பு நேரவிருக்கும் போராட்டத்தில் அவன் புரிய வுள்ள வீர ஆடலை ஈண்டு நினைவூட்டியது வித்தக ஆண்மையாய் விளங்கி நிற்கின்றது. உணர்வுகள் யாவும் உய்த்துணர்வுகள் சுரக்கின்றன

வாய்மொழி, முகம் கண், பார்வை என்னும் இவை ஒருவ னுடைய உண்மை நிலைகளை ஓர்ந்து கொள்ளும் கருவிகளாய் வாய்ந்துள்ளன. குறிப்பறிதலில் எவ்வளவு சிறந்த மேதை ஆயி னும் ஒருவன் விழித்திருக்கும் பொழுது அவனது இயல்புகளை ஓரளவு யூகமாய் உணரலாமே யன்றி உறங்கும் போது தெரிவது அரிதாம். உடல் இயங்குங்கால் உரிமைகள் வயங்குகின்றன.

இந்திரசித்து இங்கே அயர்ந்து உறங்கியிருக்கிறான்; அவனது முகச்சாயலைக் கொண்டு அகத்தின் திறங்களைத் தெளிவாக அநு மான் அனுமானமாய் உணர்ந்திருக்கிறான். இது அவனுடைய தெய்வீக நிலைமையை உணர்த்தி நிற்கின்றது.

ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல். (குறள் 702)

பிறருடைய உள்ளத்தில் உள்ளதைத் தெளிவாக உணர்ந்து கொள்ள வல்லவனைத் தெய்வமாக எண்ண வேண்டும் என்று தேவர் இவ்வாறு கூறியுள்ளார். இந்தப் பொய்யா மொழிக்கு மெய்யான பொருளாய் அனுமான் ஈண்டு அமைந்திருப்பதை இனிதுணர்ந்து இன்புறுகின்றோம்.

அரிய கலைகள் பலவும் தெளிந்து அற்புத மேதையாய் விளங்கியிருத்தலால் இக்கவி நாயகனை யாவரும் தெய்வமாக் கருதி யாண்டும் கொண்டாடி வருகின்றனர்.

புனித சீலம் நிறைந்த பொழுது மனிதன் தெய்வமாய்ச் சிறந்து விளங்குகின்றான். சிறந்த பிரமச்சாரியாய்ச் சிந்தையை அடக்கி இந்திரிய நிக்கிரகம் செய்திருத்தலால் இந்திராதி தேவர்களும் இச் சுந்தரனை வியந்து புகழ்ந்துள்ளனர். தன் உள்ளத்தில் இச்சையை அடக்கினவன் உலகத்தில் உச்ச நிலையில் ஒளி வீசி நிற்கின்றான். அதிசய ஆற்றல்கள் யாவும் அவனிடம் ஒருங்கே குடி கொண்டு நிற்கின்றன

"The chaste brain has tremendous energy and gigantic will power"

"நெறியுடைய புனித அறிவில் அதிசய ஆற்றலும் அற்புத சத்தியும் மருவியிருக்கின்றன" என்று விவேகானந்தர் இவ்வாறு அமெரிக்காவில் கூடிய பெரிய சபையில் பேசி யிருக்கிறார்.

காமத் தீமை கதுவாமல் உள்ளம் தூய்மையடைந்துள்ளமையால் எல்லையில்லாத வலிமைகளும் மகிமைகளும் அனுமானிடம் வெள்ளமாய்ப் பெருகி யுள்ளன. பிறர் அறிய முடியாத அரிய இரகசியங்கள் எல்லாம் இவனுக்கு எளிதே தெளிவாகின்றன

"A more secret, sweet, and overpowering beauty appears to man when his heart and mind open to the sentiment of virtue." (Divinity)

"தன் இருதயம் தரும சீலம் மருவிய பொழுது அரிய இனிய அற்புத உண்மைகள் அந்த மனிதனுக்கு நேரே தெரிகின்றன" என்னும் இது இங்கே உரிமையாக அறியத்தக்கது.

## அப்பால் சென்றது.

இந்திரசித்தைக் கண்டு அந்தரங்க நிலைமைகளைத் தெரிந்து அயலே விரைந்து போனான். அக்கன் அதிகாயன் என்பவர் இராவணனுடைய இளைய புதல்வர்கள். இந்திரசித்தின் தம்பியரான அந்த இரண்டு பேர்களுடைய அரண்மனைகளுள்ளும் போய் ஆராய்ந்தான். அங்கிருந்து புறப்பட்டு எங்கும் துருவி நாடி விரைவில் ஏகினான்: சேனாதிபதிகள், இராச தந்திரிகள், மந்திரிகள் முதலிய தலைமையாளர்கள் மாளிகைகள் யாவும்நோக்கி அப்பால் போனான்.

## அகழியைக் கண்டது.

பல்லாயிரம் மாளிகைகளையும் துருவி ஒருவி எல்லா வீதி

களையும் கடந்து வந்தபோது நடுவே ஒரு பெரிய அகழி எதிர்ந்தது. வெள்ளம் பெருகி விரிந்து சூழ்ந்துள்ள அதனைக் கண்டதும் உள்ளம் திகைத்தான். உறுதிகளை ஓர்ந்தான்.

இராவணனது கோட்டை மதிலைத் தழுவி அரிய நீரரணாய் நெடிது வளைந்திருந்த அந்த அகழியின் அதிசய நிலைகளை ஆராய்ந்து நோக்கி இம் மதிமான் பெரிதும் வியந்து நின்றான்.

தனிக்கடக் களிறெனை ஒரு துணையிலான் தாய
பனிக்கடற் பெருங்கடவுள் தன் பரிபவம் துடைப்பான்
இனிக் கடப்பது அன்று ஏழ்கடல் கிடந்ததென் றிசைத்தான்
கனிக்கடற் கதிர் தொடர்ந்தவன் அகழியைக் கண்டான். (1)

பாழி நன்னெடுங் கிடங்கெனப் பகர்வரேல் பல்லோர்
ஊழி காலம் நின்று உலகெலாம் கல்லினும் உலவா
ஆழி வெஞ்சினத்து அரக்கனை அஞ்சி ஆழ்கடல்கள்
ஏழும் இந்நகர் சுலாயது கொலாம் என இசைத்தான். (2)

ஆய தாகிய அகன்புனல் அகழியை அடைந்தான்
தாய வேலையின் இருமடி விசைகொடு தாவிப்
போய காலத்தும் போக்கரிது என்பது புகன்றான்
நாயகன் புகழ் நடந்த பேருலகெலாம் நடந்தான். (3)

அகழியை நோக்கி அனுமான் கருதி நின்ற நிலையை இங்கே நாம் கண்டு நிற்கின்றோம். அதிசய வீரன் இவ்வாறு அதிசயித்துள்ளான். ஆழ்ந்து அகன்று நீண்டு நிலை காண முடியாத நீர்ப் பெருக்கோடு நெடிது வளைந்து முழுதும் சூழ்ந்துள்ள நீர் அரண் பெரிய திகைப்பை விளைத்துள்ளது. பல்லாயிரம் பேர் பல காலமும் மூண்டு தோண்டி அகழ்ந்து செய்த செயற்கை அரண் இது! என்று வியப்பை அடைந்தான். இலங்கை வேந்தனுக்கு அஞ்சி ஏழு கடல்களுமே ஒருங்கே வந்து சூழ வளைந்துள்ளது என ஆழ நீளங்களை நோக்கிச் சிறிது போது வியந்து நின்றவன் பின்பு அதனைக் கடந்து போக நேர்ந்தான்.

## கடந்து புகுந்தது.

அரிய பெரிய கடலைத் தாவி வந்த வீரன் அந்த அகழியைப் பார்த்து அதிசயித்து நின்றுள்ளமையால் அதன் ஆழமும் நீளமும் அகலமும் அமைதியும் காப்பும் கடுமையும் காண வந்தன. நெடிய நீர் அரணான அதனைக் கடிது தாவி உள்ளே போனான்.

கனிக்கு அடற்கதிர் தொடர்ந்தவன் என அனுமானை இங்கே சுட்டியது, பிறவியிலே அவனுக்கு அமைந்துள்ள அற்புத ஆற்றலை உய்த்துணர. கனிந்த பழம் என்று நினைந்து சூரியன்மீது பிள்ளைப் பருவத்திலேயே பாய்ந்த வீரன் ஆரியன் காரியமாய் எதிரியின் ஊருள் புகுந்து உல்லாசமாய் உலாவிப் போயுள்ளமையைச் சல்லாபமாக ஓர்ந்து கொள்ள இப்பேர் ஈண்டு நேர்ந்துள்ளது.

அகநகர் அகழியைக் கடந்து உள்ளே புகுந்தவன் ஒளி மய மான மாளிகைகளை விழி பரப்பி நோக்கி வியந்து சென்றான். வீதிகள் பலவும் விரைந்து கடந்தான். அதுபொழுது இரவு பதினைந்து நாழிகை கழிந்திருந்தது. அரவங்கள் அடங்கியிருந்தன.

நடு நிசி நடந்தது.

கூற்றுவனும் குலை நடுங்குகின்ற ஆற்றல் மிகுந்த மாற்றலன் நகரில் நடுச் சாமத்தில் தன்னந்தனியே இவ் வீரன் புகுந்து எங்கும் சிங்க ஏறுபோல் நடந்து போனான். கொடியவர் குடியிருப்பு; கடிய பாதுகாப்பு; நெடிய பல சோதனைகள் இடங்கள் தோறும் நிறைந்துள்ளன; இருந்தும் எல்லாவற்றையும் எளிதே கடந்து கடிது போனது அரிய ஆண்மையாய்ச் சிறந்து பெரிய அதிசயமாய்ப் பெருகி நின்றது.

"கரிய நாழிகை பாதியில் காலனும்
வெருவி ஓடும் அரக்கர்தம் வெம்பதி
ஒருவனே ஒரு பன்னிரு யோசனைத்
தெருவும் மும்மை நூறாயிரம் தேடினான்."

இத் தீரன் தேடிச் சென்ற நிலைகளை இதில் நாடிக் காண்கின்றோம். ஊரின் நிலையும், நேரமும், ஊடுருவிப் போன தீரமும் நேரே தோன்றி நெடு வியப்புகளை யூட்டுகின்றன. ஊக்கமும் பரிவும் பெருகி உள்ளத்தை உருக்கி உறுதிகளை நீட்டுகின்றன. எவ்வளவு வீதிகள்! எவ்வளவு மாளிகைகள்! எவ்வளவு நீளங்கள்! எவ்வளவு காவல்கள்! எவ்வளவு காட்சிகள்! எவ்வளவு மாட்சிகள்! எவ்வளவு ஆட்சிகள்! இவ்வளவும் தெவ்வளவை ஓரளவு நிலைகாணச் செய்து போராளவின் போரளவைப் புலனாக்கி யுள்ளன.

காலனும் வெருவி ஓடும் வெம்பதி என்றதனால் இலங்காபுரியின் ஆணை ஆக்கினைகளையும் வீர பராக்கிரமங்களையும் உணர்ந்து

கொள்ளலாம். எமனும் அயல் வர அஞ்சுகின்ற இராசதானியுள் அனுமான் யாதும் அஞ்சாமல் நடுநிசியில் தனியே ஆய்ந்து போனன். அப் போக்கில் ஊக்கமும் வீரமும் ஒளி புரிந்தன.

காலனும் வெருவி ஓடும் பதியில் இக் காலன் வெருவாமல் துருவிப் போனது அதிசயம் ஆதலால் அது துதி செய்ய வந்தது.

இரவு நெடு நேரம் ஆனமையால் ஊர் அடங்கியது; கடல் முழக்கங்கள் போல் எங்கும் ஆரவாரங்களாய்க் கலித்து நின்ற ஓசைகள் யாவும் ஒடுங்கி நின்றன. சன சஞ்சாரங்கள் யாண்டும் குறைந்தன. எங்கும் அமைதியாயது. இடையாமம் அடையவே காவலாளிகளும் கண் அயர்ந்தனர்.

வேரியும் அடங்கின; நெடுங்கடல் விளம்பும்
பாரியும் அடங்கினது; அடங்கியது பாடல்;
காரியம் அடங்கினர்கள் கம்மியர்கள்; மும்மைத்
தூரியம் அடங்கின; தொடங்கியது உறக்கம். (1)

வாம நறையின் துறை மயங்கினர் மறந்தார்;
காம நறையின் திறம் நுகர்ந்தனர் களித்தார்;
பூமனறை வண்டறை அலங்கமளி புக்கார்;
தூம நறையின் துறை பயின்றிலர் துயின்றார். (2)

இளக்கரிமு தெஞ்சவிழும் எண்ணரு விளக்கைத்
துளக்கியது தென்றல் பகை சோர உயர்வோரின்
அளக்கரொடு அளக்கரிய ஆசையுற வீசா
விளக்கினம் விளக்குமணி மெய்யுறு விளக்கம். (3)

நித்த நியமத் தொழிலராய் நிறையு ஞானத்து
உத்தமர் உறங்கினர்கள்; யோகியர் துயின்றார்;
மத்தமத வெங்களிறு உறங்கின; மயங்கும்
பித்தரும் உறங்கினர்; இனிப் பிறரி தென்னும்? (4)

பாதி ராத்திரி வேளையில் அன்று அங்கே நிகழ்ந்த நிலைகள் பலவினுள் சில இங்கே காண்கின்றோம். விழிப்பு நிலையில் சீவ ஓட்டங்கள் களிப்பு மீதூர்ந்து கலித்து நிற்கின்றன; உறக்கத்தில் யாவும் ஒடுங்கிக் கிடக்கின்றன. என்றும் எங்கும் இயற்கையாய் இயங்கி வருகின்ற இயல்புகளைக் கவிகள் வரைந்து காட்டும் பொழுது அந்தக் காட்சிகளை உவகை மீதூர்ந்து நோக்கி உணர்வின் சுவைகளை நுகர்ந்து உள்ளம் களிக்கின்றோம்.

அந்திப் பொழுதில் ஏற்றிய நெய்விளக்குகள் எங்கும் சொலித்து விளங்கின; இரவில் நெடுநேரம் ஆகவே நெய்குறைந்து திரிகளில் மறுகி எரிந்தன: அதுபொழுது தென்றல் காற்று மெல்ல வீசியது; அதனால் சில விளக்குகள் அவிந்து போயின. மெலிந்த சமையம் பார்த்துப் பகைவர் புகுந்து எதிரியை வென்று உயர்ந்து கொள்ளுவது போல் அது விளங்கி நின்றது.

பகை சோர உயர்வோரின் தென்றல் விளக்கைத் துளக்கியது.

இந்த விளக்கத்தை ஈண்டு வியந்து பார்க்கின்றோம். விளங்கியுள்ள கலையுணர்வுகளை உவந்து ஓர்கின்றோம். உணர்ந்து தேர்கின்றோம். உலக நிலைகள் பல வகைகளில் வெளி வருகின்றன.

தென் திசையிலிருந்து மெல்ல வந்து சோர்வு பார்த்து இராமனது குல விளக்கும், பெண்ணின் சோதியும் ஆன சீதையைக் கவர்ந்து கொண்டு வந்து உயர்ந்து நிற்கின்ற இராவணனை இது ஊன்றி யுணரச் செய்துள்ளது. குறிப்பு மொழிகள் கூரிய சீரிய கருத்துக்களை வெளிப் படுத்துகின்றன.

வாழ்க்கைப் போராட்டங்களும், கலகக் கலிப்புகளுமே யாண்டும் உலக ஓட்டங்களாயுள்ளன. இங்கே குறித்த தென்றலும் விளக்கும் காற்றையும் தீயையும் காட்டி நின்றன. பஞ்ச பூதங்களும் ஒன்றை ஒன்று அடக்கி உயர்ந்து நிற்கின்றன.

நிலத்தை நீர் அடக்குகின்றது; நீரை நெருப்பு அடக்குகின்றது; நெருப்பைக் காற்று ஒடுக்குகின்றது; காற்றை ஆகாயம் கவர்ந்து கொள்கின்றது; பூதங்கள் இவ்வாறு உள்ளமையால் அவற்றின் பேதங்களான சீவ கோடிகளும் ஒன்றை ஒன்று ஒடுக்கித் தாம் உயர்ந்து செல்வதிலேயே கருத்தும் கவனமும் செலுத்தி வருகின்றன.

இந்த மாயப் போராட்டம் எல்லாம் தூயநாட்டம் தோய்ந்த போது தொலைந்து போகின்றன. வானமும் கடந்து வரமான பரமபத நிலையை ஆன்மா மருவி மகிழ்வதே முடிவான நித்திய இன்பமாய் நிலை பெற்றுள்ளது.

நெய் வற்றிய போது திரியில் சோர்ந்து எரியும் விளக்கின் நிலையைச் சொல்லியுள்ளதில் பல விளக்கங்கள் வெளி வந்து ஒளி புரிந்து நிற்கின்றன. துளக்கம் = அசைந்து அலமந்து விழுவது.

"The expiring taper rises and sinks in the socket,
the watchman forgets the hour in slumber,
the laborious and the happy are at rest,
and nothing wakes but meditation, guilt, revelry,
and despair.'' [A City Night]

"எண்ணெய் வற்றிய திரியில் தீபச்சுடர் எழுவதும் விழுவதுமாயிருந்தது; காவலாளி உறக்கத்தில் காலத்தைக் குறிப்பதை மறந்து போனான்; தொழிலாளிகளும் சுக போகிகளும் அயர்ந்து தூங்கினர்; தியானம் புரியும் யோகி, குற்றவாளி, குடி வெறியன், படுதுயரன் ஆகிய இவரையன்றி வேறு எவரும் அங்கே விழித்திருக்கவில்லை'' என்னும் இது இங்கே அறியவுரியது.

நடுநிசியில் ஒரு பெரிய நகரம் இருந்த நிலையைக் குறித்து கோல்டுஸ்மித் என்னும் ஆங்கில ஆசிரியர் இவ்வாறு கூறியிருக்கிறார். இடம் காலங்களால் எவ்வாறு வேறுபட்டிருப்பினும் புலவர்களுடைய காட்சி யாண்டும் நிலையொத்து நிலவுகின்றது.

இயல்பான நிகழ்ச்சிகள் கவிகளுடைய வாக்கில் உயர்வான சுவைகள் தோய்ந்து வருகின்றன. அவ் வுணர்வு நலங்களை உலகம் உவந்து நுகர்ந்து வருகின்றது.

நித்த நியமத் தொழிலராய் நிறையும் ஞானத்து
உத்தமர் உறங்கினார்கள்; யோகியர் துயின்றார்-

இரவு நெடு நேரம் வரையும் தியானம் புரிந்திருந்து அந்தத் தெய்வ சிந்தனையோடு இடையாமத்தில் கண்ணுறங்கிய புண்ணிய சீலர்களை இது காட்டியுள்ளது. தீய தொழிலாளருடைய மாய அரக்கர்களிடையே சில தூயவர்களும் இருந்துள்ளனர் என்பதை இதனால் உணர்ந்து கொள்கின்றோம்.

உத்தம ஞானிகளும், தத்துவ சீலர்களும், சித்த யோகிகளும் உறைந்திருந்தனர் என்றமையால் இலங்கையின் சிறந்த சீர்மைகளும் தெரிந்து கொள்ள வந்தன.

பித்தரும் உறங்கினர் என இறுதியில் குறித்தது அன்று இரவு கழிந்துள்ள காலத்தை உய்த்துணர வந்தது. சித்தம் சிதைந்துள்ளமையால் பைத்தியக்காரருக்கு எளிதில் உறக்கம் வராது. நடுச் சாமத்தில் சிறிது கண் அயர்வர் ஆதலால் அவரும் உறங்கி

னர் என்றார். உறங்காதவரும் உறங்கினர் என்பதை ஓர்ந்து கொள்ள உம்மை நேர்ந்தது

இவ்வாறு எல்லாரும் அயர்ந்து தூங்கிய அந்த நள்ளிரவிலே அஞ்சனைச் சிங்கம் தனியே சென்று எங்கும் அஞ்சாது புகுந்து நோக்கி மூவாயிரம் வீதிகளையும் கடந்து முடிவில் இராவணன் அரண்மனையை அணுகினன். பொன் மயமான நெடிய மதிலும் பெரிய அகழியும் அரிய பாதுகாவலோடு அங்கே சூழ்ந்து நின்றன. கடிய காப்புகளாய்க் கதித்து நின்ற அந்த வலிய அரண்களை ஒரு நொடியில் தாவி உள்ளே புகுந்தான்.

## அந்தப்புரம் அடைந்தது.

சந்திர மண்டலத்தைச் சூழ்ந்துள்ள நட்சத்திரங்கள் போல் இராவணனுடைய அரண்மனையைச் சூழ்ந்து அதிசய அழகுகளோடு ஒளிசெய்து விளங்கிய மாளிகைகளை வியந்து நோக்கினன்.

அம் மன்னனுக்கு இன்னுயிர்க் காதலிகளாய் உரிமை எய்தியுள்ள பருவ மங்கையர் மருவி வாழ்கின்ற மணி மாடங்கள் ஆதலால் அவை யாவும் புதுமையான பேரெழில்களோடு பொலிந்து துலங்கின. அரச ஆடம்பரங்களும் வரிசைகளும் வயங்கின.

தேவர், கந்தருவர், சித்தர், வித்தியாதரர், இயக்கர், நாகர், அசுரர் முதலிய பல சாதிகளினும் அழகிய மங்கையரைத் தெரிந்தெடுத்துத் தனக்கு இனிய காதலிகளாக இலங்கை வேந்தன் உரிமை செய்து வைத்திருந்தான். காமக் கிழத்திகளாய்ச் சேம மெய்தியிருந்த அந்த அழகிகளுக்குத் தகுந்தபடி அதிசய விசித்திரங்களுடன் மாடங்கள் அமைக்கப் பட்டிருந்தன.

பல வகை நிலைகளில் ஒளி மிகுந்து விளங்கிய அம் மாளிகைகளை மிகவும் கவனமாக விழி பரப்பி நோக்கி அனுமான் விரைந்து போனன். ஆடவர் எவரும் போகாத இடங்களில் எல்லாம் புகுந்து பார்த்து மாய மோகினிகளாய் மருவியுள்ள போக மங்கையர் வீதிகள் யாவும் வேகமாய்க் கடந்து இவ் வீரன் ஏகினன்.

## மண்டோதரியைக் கண்டது.

இன்பக் காதலிகளுடைய எல்லா வீதிகளையும் ஒல்லையில் துருவிப் போனவன் இறுதியில் எழில் மிகுந்த ஒரு மணிமாளிகை

யை எதிரே கண்டான். அற்புத நிலையில் அமைந்துள்ள அதன் அமைதியை நோக்கி அதிசயித்து நின்றான். அயலே நிலவியுள்ள சூழல்களையெல்லாம் சூழ்ந்து ஆய்ந்தான். தேவ மங்கையர் பலர் ஊழியம் புரிவதை ஆவலோடு கவனித்தான். ஐயம் உண்டாயது. அப்பொழுது அனுமான் கருதி நின்றதும், உள்ளே பகுந்ததும், மறுகி மயங்கியதும், இறுதியில் உறுதியாய் உள்ளம் தேறியதும், அரிய மானச மருமங்களாய் மருவியுள்ளன. அயலே வருகின்ற கவிப் படங்களை உரிமையோடு கருதிக் காண வேண்டும்.

கண்டு கண்ணொடு கருத்தொடு
கடாவினன் காரணம் கடை நின்றது
உண்டு வேறொரு சிறப்பு எங்கள்
நாயகற்கு உயிரினும் உரியாளைக்
கொண்டு போந்தவன் வைத்ததோர்
உறையுள்கொல்? குல மணி மனைகளெல்லாம்
விண்டு வின் தட மார்பினின்
மணி ஒத்தது இது என வியப்புற்றான். (1)

அரமபை மேனகை திலோத்தமை
உருப்பசி ஆதியர் மலர்க்காமன்
சரம்பெய் தூணிபோல் தளிரடி
தாம தொடச் சாமரை பணி மாறக்
கரும்பையும் சுவை கைப்பித்த
சொல்லியர் காமரம் கனி யாழின்
நரம்பின் இன்னிசை செவிபுக
நாசியில் கற்பக விரை நாற. (2)

விழைவு நீங்கிய மேன்மையோர்
ஆயினும கீழ்மையோர் வெகுளுற்றால்
பிழைகொல் நன்மைகொல் பெறுவதென்று
ஐயுறு பீழையால் பெருந் தென்றல்
உழையர் கூவப்புக்கு ஏதெனப்
பெயர்வதோர் ஊசலின் உள்தாகும்
பழையம் யாமெனப் பண்பில
செய்வரோ பருணிதர் பயன் ஓர்வார். (3)

இன்ன தன்மையின் எரிமணி விளக்கங்கள்
எழில் கெடப் பொலிகின்ற

தன்ன தின்னொளி தழைப்புறத்
துயிலுறு தையலைத் தகைவில்லான்
அன்ன ளாகிய சானகி இவள்என
அயிர்த்து அகத்து எழு வெந்தீ
துன்னும் ஆருயிர் உடலொடு சுடுவதோர்
துயருழந்து இவை சொன்னான். (4)

எற்பு வான் தொடர் யாக்கையால்
பெறும் பயன் இகந்தனென் இது நிற்க
அற்பு வான் தனை இற்பிறப்பதனொடும்
இகழ்ந்து தன் அருந்தெய்வக்
கற்பு நீங்கிய கனங்குழை இவள்எனின்
காகுத்தன் புகழோடும்
பொற்பும் யானும் இவ் இலங்கையும்
அரக்கரும் பொன்றுதும் இன்று என்றான். (5)

மானுயர்த் திரு வடிவினள் அவள்;
இவள் மாறு கொண்டனள்; கூறின்
தானியக்கியோ தானவர் தையலோ
ஐயுறுந் தகை யானாள்
கானுயர்த்ததார் இராமன்மேல் நோக்கிய
காதல் காரிகை யார்க்கு
மீனுயர்த்தவன் மருங்குதான் மீளுமோ
நினைந்தது பிழை என்றான். (6)

இலக்கணங்களும் சிலவுள என்னினும்
எல்லை சென்றிறுக்கில்லா
அலக்கண் எய்துவது அணியதுண்டு
என்றெடுத்து அறைகுவ திவள்யாக்கை
மலர்க்கருங்குழல் சோர்ந்து வாய்
வெரீஇச் சில மாற்றங்கள் பறைகின்றாள்
உலக்கும் இங்கிவள் கணவனும் அழிவும்
இவ் வியனகர்க்கு உளதென்றான். (7)

என்றுணர்ந்து நின்று ஏமுறும் இங்கிலை
நிற்க இத்திறன் என்னாப்
பின்று சிந்தையன் பெயர்ந்தனன்
நெடுமனை பிற்படப் பெருமேருக்

குன்று குன்றிய தகையுற ஓங்கிய
　　கொற்ற மாளிகை தன்னில்
சென்று புக்கனன் இராவணற்கு
　　எடுப்பரும் கிரிஎனத் திரள் தோளான். (8)

(ஊர்தேடு படலம் 196-203)

இந்தப் பகுதியில் பாய்ந்துள்ள மன மறுக்கங்களும் உறுதி நிலைகளும் உணர்வு நிலைகளை யூக்கி ஒளி செய்து நிற்கின்றன. உள்ளத் துடிப்புகள் உரைகளில துடித்து உணர்ச்சிகளைப் பிடிக்கின்றன. கவிகளைக் கருதிப் படிக்கின்ற எவரும் சுவைகளைத் துருவி நுகர்ந்து உணர் வுறுதிகளை ஓர்ந்து கொள்வர்.

இராவணனுக்கு உரிமையான அழகிய மங்கையர் பலரையும் கருதி நோக்கி வந்த அனுமான் இறுதியில் விழுமிய ஒரு பெரிய மணி மாளிகையைக் கண்டான்; நிலைமைகளை வியந்தான்; உள்ளே மெள்ளப் புகுந்தான். தேவ மகளிர் ஏவல் புரிவதையும் அரியபல மகிமைகளையும் ஆவலோடு ஆய்ந்தான். மேலும் நுழைந்தான்; அரம்பை மேனகை திலோத்தமை முதலிய தெய்வ ரம்பைகள் அடி வருட அழகிய இனிய பனி மலரமளியில் ஒளி மிகுந்த சிவந்த மேனியளான திவ்விய சவுந்தரவதி அயர்ந்து உறங்குவதைப் பார்த்தான்; "இவள சானகியே!" என்று நினைந்தான். உள்ளம் கொதித்துத் துடித்தது; உயிர் பதைத்தது; தன் பிறப்பு பாழாயது என்று பெருமூச் செறிந்தான்: "இவள் உண்மையாகவே பிழைபாடுடைய சீதையாயிருந்தால், இராமன் புகழோடு நானும், இந்த இலங்கையும் அரக்கரும் அடியோடு இன்று அழிந்தே போனேம்" என்று தன்னுள்ளேயே மொழிந்து முனைந்து அணு உருவாய் அருகே அணுகி நுணுகி நோக்கினன். ஐயம் நீங்கியது. கலங்கிக் கொதித்த நெஞ்சம் சிறிது சாந்தியாய்த் தெளிவு மீக் கொண்டது. உருவ நிலைமைகளை ஓர்ந்து உள்ளம் ஊன்றி புணர்ந்தது. "சானகி மானிட வுருவினள்; இவள் மாறுயுள்ளாள்; பிருது மேனியளாய் எழில் சுரந்து அந்தத் தேவியைப்போலவே ஓரளவு தேசு நிறைந்திருப்பினும் பல பேரிழவுகள் இதுபொழுது இவளைச் சூழ்ந்து நிற்கின்றன; எல்லையில்லாத அல்லல்கள் எந்தம் ஒல்லையில் நேர்கின்றன; இவளுடைய தாலி விரைந்து அறுந்து விழும்; கணவன் இறந்து படுவான்; இருந்த ஊரும் அடி

யோடு அழிந்து போம்'' என அவளது உருவச் சாயலை நோக்கி அனுமான் யூகித்து உணர்ந்து கொண்டான். கூரிய யூக வுணர்வு சீரிய யோகக் காட்சியாய் ஈண்டு ஒளி மிகுந்துள்ளது.

தூங்குகின்றவளுடைய அங்க அமைதியையும் பாங்கினையும் முகக் குறியையும் கூர்ந்து பார்த்து உள்ளம் தேறிய அனுமான் உவகை மீக் கூர்ந்தான். மனம் தடுமாறி முன்னதாக எண்ணியது பெரும் பிழை என்று தன்னை மிகவும் நொந்து கொண்டான். பேரழகனான இராமனைக் கண்டு களித்த கண்கள் மன்மதனையும் இளிவாக எண்ணி ஒதுக்குமே! அந்தப் பெருமானோடு பல காலமும் மருவி மகிழ்ந்த அரிய பதிவிரதை நிலை திரியும் என நினைய நேர்ந்தது நெடிய பாதகம் என்று நெஞ்சம் கவன்றான். அப் பாவம் கழிய இராம சிந்தனை செய்து சிறிது போது உருகி நின்றான்.

## மண்டோதரி மாண்பு.

இங்கே இராவணனுடைய அருமை மனைவியாகிய மண்டோதரியின் பெரு மகிமைகள் வெளியாயுள்ளன. இவள் மயனுடைய மகள். அயன் போலவே வியனான சிருட்டிகளைச் செய்ய வல்ல அந்தத் தபதியின் அருந்தவத்தால் பிறந்தவள். பேரழகினள்; சிறந்த குணவதி. பெருந்தன்மைகள் யாவும் ஒருங்கே நிறைந்தவள். பருவ நலங்கனிந்து உருவ எழில் ஒளி வீசி நின்றபொழுது இவளுக்குத் தகுதியானமணமகன்எங்கும்இல்லையேஎன்றுதந்தை சிந்தை கவன்றிருந்தான். அவ்வமையம் மூவுலகஆட்சியும் பெற்று வெற்றிக் குரிசிலாய்த் திக்கு விசயம் செய்து வந்த இராவணன் இவளைக் கண்டான்; விழைந்து மணந்து கொண்டான். அந்தச் சக்கரவர்த்திக்குத் தக்க சக்கரவர்த்தினியாய் அரியணையில் ஒக்க அமர்ந்து முடி சூடும் உரிமையுடன் இவள் பெருமை பெற்றிருந்தாள். இந்தப் பட்டத்து அரசியின் அரிய மாட்சிகளே இங்கே உரிமையாய்க் காட்சிக்கு வந்திருக்கின்றன.

அதிசயமான அழகிய மாளிகையுள் புதுமலர் பரப்பிய பஞ்சணைமேல் படுத்திருக்கிறாள்; எம் மருங்கும் பருவ மங்கையர் ஊழியம் புரிகின்றனர். கரும்பினும் இனிய மொழியினரான கின்னர மகளிர் யாழ் இசைத்துக் கானம் செய்கின்றனர்; மணி விளக்குகள் அணி அணியாய் ஒளி வீசியுள்ளன; நறிய வாசனைத்

தூபங்கள் எங்கும் புகைந்து கமழ்கின்றன; உருப்பசி திலோத்தமை முதலிய தெய்வ மங்கையர் கால் வருட அரசி கண் அயர்ந்து உறங்குகின்றாள். எவ்வளவு திவ்விய மகிமையான காட்சி இது! பல்லாயிரம் யாண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த நிலைகளை உள்ளக் கண்ணால் நோக்கி இன்னும் உலகம் உவகை கூர்ந்து வருகின்றது.

தென்றல் உழையர் கூவ ஊசலின் உளதாகும்.

மந்த மாருதம் அங்கே வந்து பணி புரியும் வகையை இந்த வாசகம் இங்ஙனம் விளக்கியுள்ளது. இனிய மெல்லிய காற்று ஆகிய தென்றல் மண்டோதரியின் திருமேனியில் மிகவும் சுகமாக வீசி வர வேண்டும் என்று ஏவல் மகளிர் ஏவி வருகின்றனர்; அவ்வாறே அது மேவி வருகின்றது. உழையர் என்றது இங்கே பணிப் பெண்களை. உழை = பக்கம். அருகே நின்று ஊழியம் புரிகின்ற வேலைக்காரிகள் சொல்லியபடியே தென்றல் வேலை செய்து வந்தது. வேண்டிய பொழுது வேண்டிய அளவு மெல்ல வந்து வீசும்படி தென்றலை அழைப்பர்; அது வந்து வீசும்; போதும் போ! என்பர்; போய் விடும்; உடனே வா! என்று கூவுவர்; மீண்டும் மேவி மிருதுவாய் வீசும்; சரி போதும் என்பர்; அது அயலே ஒதுங்கிப் போம்; இவ்வாறு வருவதும் போவதுமாயிருந்தமையால் ஊசலின் உளதாகும் என அது தொழில் புரிந்த நிலையை விழி தெரிய விளக்கினார்.

ஈர மாருதம் படுகின்ற பாட்டை வீர மாருதி கண்டு விம்மிதம் அடைந்தான்; வியந்து இரங்கினான். இந்த வாழ்வுக்கும் ஒரு முடிவு காலம் உண்டு என்று முடிவு செய்து கொண்டான்.

பருணிதர் பயன் ஓர்வார் என்றது காலம் கருதி மேலோர் அடங்கி ஒழுகுவார் என்றவாறு. அதிசய ஆற்றலையுடைய வாயு பகவான் பெண்கள் ஏவியபடி எல்லாம் ஒடுங்கி வந்து ஊழியம் புரிந்ததற்கு உரிய காரணத்தை ஓர்ந்து கொள்ளும்படி இந்நீதி மொழி இங்கே சார்ந்து நின்றது. பருணிதர் = அறிவு நலம் வாய்ந்த பெரியோர். பொறுமையின் அருமை தெரிய வந்தது.

தேவர் யாவரும் அடங்கி ஏவல் செய்யும்படி இராவணனுடைய அதிகார ஆக்கினைகள் குதி கொண்டு நிற்கின்றன. அரக்கர் எவர்க்கும் எங்கும் தனி மதிப்பு உளளது. அந்த இலங்கை வேந்தன் அருமைத் திரு மனைவியின் குறிப்பு அறிந்து இதுபொழுது

ஊழியம் புரிய வேண்டும் என்று கால நிலையுணர்ந்து வாயுதேவன் பொறுமையாய் அங்கே மகளிர் ஏவியபடி எல்லாம் இசைந்து ஒழுகினன். செல்காலம் வெல்காலமாயுள்ளமை விளங்கி நின்றது.

இவ்வாறு அதிசய மகிமைகளோடு அமளியில் துயில்கின்ற மண்டோதரியைக் கண்டதும் அனுமான் ஐயம் கொண்டான். சீதை என்று மாறாய் எண்ணினன். இராமன் தேவியா இப்படி ஆயினள் என எண்ணவே ஆவி துடித்தது.

ஆருயிர் உடலொடு சுடுவது ஓர் துயர்.

மாருதி அதுபொழுது மறுகிக் கொதித்துள்ள உயிர் வேதனையை இது உணர்த்தியுள்ளது. மகா பதிவிரதை; இராவணனுடைய அரச திருவையும் அதிகார நிலையையும் கருதி மயங்கினள் போலும்! இல்லையானல் அந்தப்புரத்தில் இவ்வளவு சுக போகங்களோடு யாதொரு கவலையும் இன்றி உறங்குவாளா? என்று யூகித்து வேகித்தான். பல பல எண்ணங்கள் பரிந்து வந்தன.

யாக்கையால் பெறும் பயன் இகந்தனென்.

என்றது தன் பிறவி பாழாயது என்று அவன் துடித்துள்ளமையை வெளிப் படுத்தியது. சீதை புனித நிலையில் இருப்பள்; எப்படியும் மீட்டி இராமபிரானிடம் சேர்த்து விடலாம்; அதுவே பிறவிப் பேறும் என்று உறுதி செய்திருந்தான்; அது பிழையாய் ஒழிந்தது என உளைந்து நொந்தான். உத்தம சத்திரிய குலத்தில் பிறந்த உயர்ந்த குலமகள் இப்படிச் சித்தம் திரிந்திருப்பாளா? என்று திகைத்தான்.

அவள் கற்பு நீங்கியிருந்தால் பல இழவுகள் இன்று விளைந்தன என்று உள்ளம் கன்றி உயிர் பதைத்து விரைந்தான்.

காகுத்தன் புகழோடும் பொறப்பும் யானும் இவ் இலங்கையும் அரக்கரும் பொன்றுதும் இன்று என்று துடித்திருத்தலால் அவன் நெஞ்சம் கொதித்து நின்ற நிலையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளலாம். ஏதாவது தவறு நேர்ந்திருந்தால் இலங்கையையும் அரக்கரையும் அடியோடு அழித்து விட்டுத் தானும் செத்துப் போக வேண்டும் என்று துணிந்துள்ளதை இவ்வுரைகள் உணர்ந்து கொள்ளச் செய்கின்றன, மான வீரம் மருகியுள்ளது

சானகி நிலை குலைந்தால் இராமனுடைய மானம் அழிந்தது; மரியாதை தொலைந்தது; மதிப்பு ஒழிந்தது என முதலில் கொதிப்பு மூண்டது. இராமனை இங்கே காகுத்தன் என்று குறித்தது பண்டு தொட்டே வீர பராக்கிரமங்களிலும் நீதி நெறிகளிலும் மேன்மை எய்தியுள்ள மேலான அரச குலத் தோன்றல் என்னும் வரிசை தெரிய வந்தது.

ஒரு மனிதனுக்கு மதிப்பு அவனுடைய குண சீலங்களால் அமைகின்றது. ஆயினும் அவன் மனைவியும் அதில் உரிமையாயுள்ளாள். தனது இனிய வாழ்க்கைத் துணைவியாய் அமைந்திருத்தலால் மனைவி தவறுடையளாயின் அந்த மனிதனுடைய பெருமித நிலை குறையும். உலகில் அவன் தலை நிமிர்ந்து நடக்க முடியாது.

* புகழ்புரிந் தில்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. (குறள், 59)

இந்த அருமைத் திருமொழி இங்கே கருதியுணர வுரியது. கொண்ட மனைவி கற்புடையள் ஆயின் அவளை மருவியுள்ளவன் பெரும் பாக்கியவானாய் யாண்டும் பெருமதிப்பு அடைகின்றான்; அந்த அற்புத நெறி அவள்பால் இல்லை ஆனால் அவன் இகழ்வாய் இழிந்து நிற்கின்றான். இல்லாள் நிலையில் எல்லாம் உள்ளன.

சாதாரணமான உலக மக்கள் நிலையே இவ்வாறு ஆயின் அரச குல திலகமான தலைமை அதிபதி நிலை எவ்வாறாம்? தெய்வக் கற்புடையாள் என வையம் துதித்து வந்த வைதேகியிடம் இவ்வண்ணம் ஐயம் அடைந்து அலமந்து பதைத்த அனுமான் பைய நெருங்கி மெய்யைக் கூர்ந்து பார்த்தான். சந்தேகம் நீங்கியது; சந்தோடம் ஓங்கியது.

"உருவப் பொலிவுடன் நல்ல அழகு அமைந்திருந்தாலும் இவள் சானகி அல்லள்; சனக மன்னனுடைய அருமைத் திரு

* புகழை விரும்பிய நல்ல இல்லாளை இல்லாதவர்க்குத் தம் எதிரிகள் எதிரே சிங்க ஏறு போல் கம்பீரமாய் நடந்து செல்லும் நடை உண்டாகாது என்பதாம். இல் இல்லோர்க்கு இல்லை என்னும் சொல்லில் உள்ள சுவையை உணர்க. ஒருவன் எவ்வளவு பெரியவனாயினும் அவன் மனைவி கற்பு நெறி வழுவிப் பழியுடையளாயின் அவனை எவரும் இழிவாக எண்ணுவர்; ஆகவே அவனது வாழ்வு தாழ்வாம் என்க.

மகளின் எழிலமைதிகளை எம்பெருமான் சொல்லக் கேட்டிருக்கிறேன்; அந்தப் பெண்ணரசியோடு இவள் மாறுபட்டுள்ளாள்; நான் எண்ணியது பிழை" என்று தன்னுள்ளேயே உளைந்து சொல்லி உள்ளம் துணிந்து உவந்து கொண்டான்.

இராமனை நோக்கிய கண் காமனையும் நோக்காது என முடிவு செய்து மேலும் நிலைமைகளைக் கடிது ஆராய்ந்தான்.

இவள் கணவனும் உலக்கும்; இந் நகர்க்கு அழிவும் உளது.

மலரணையில் அயர்ந்து உறங்குகின்றவளது உடலின் குறிப்பிலிருந்து இவ்வாறு கூர்ந்து ஓர்ந்து சொல்லியிருக்கிறான்.

இவள் விரைந்து தாலியை இழந்து விதவையாய் இறந்துபடுவாள் என மண்டோதரியைக் கண்டு கணித்தது நமக்கு அதிசய வியப்பாய் மண்டியுள்ளது. சாமுத்திரிகம் என்னும் அங்க நூல்களை நன்கு தெளிந்தவன் ஆதலால் இங்ஙனம் தெளிவாகத் தேர்ந்து மொழிந்தான்.

வாய்வெரீஇச் சில மாற்றங்கள் பறைகின்றாள் என்றதனால் அனுமான் போய்ப் பார்க்கும் பொழுது மண்டோதரி தூக்க மயக்கத்தில் ஏதோ வாய் குழறிப் புலம்பியிருக்கிறாள் என்று தெரிகின்றது. அவல விளைவுகள் அறிய நேர்ந்தன.

தேக நிலை, முகக்குறி, வாய்ப்புலப்பம், கூந்தல் குலைந்துள்ள வகை முதலியன கெடு குறிகளாய்த் தோன்றியுள்ளன. பின் நிகழ்வதைத் தீர்க்க தரிசனமாய் முன்னறிந்து சொல்வது அதிசய மேதையாய்த் துதி செய்யப்படுகின்றது.

இவ்வளவு திவ்விய ஞானமுடையவன் மண்டோதரியைச் சானகி என்று மாறாக எண்ணியது அவளது செவ்வியும் சீர்மையும் ஓரளவு தெரிய வந்தது. சீதையை நேரே பாராதவன் ஆதலால் இவ்வாறு மாறாய் மறுக நேர்ந்தான்; எனினும் வேறோர் உண்மையும் உரிமையும் இதில் நுண்மையாய் விளங்கியுள்ளன.

## காவிய அமைதி.

கதா நாயகனான இராமனுக்குச் சரியான எதிரி இராவணன். அவனுடைய வீர பராக்கிரமங்களும் திருவின் போகங்களும் கீர்த்திப் பிரதாபங்களும் காவியத்தில் விரித்து விளக்கப் பட்டுள்

ளன. அந்த வீர வேந்தனுக்கு உரிமையாய் அமைந்துள்ள அருமை மனைவியின் பெருமை இங்கே சிறிது கருதியுணர வந்தது.

கதா நாயகியான சீதைக்கு ஓரளவு நேர் என்று எண்ணும் படி மண்டோதரி மருவியுள்ளமையை அதிவிநயமாகக் கவி கண்டு அருளியுள்ளார்

> ஏர்தரும் ஏழுலகு ஏத்த எவ்வுருவும் தன்னுருவாய்
> ஆர்கலி சூழ்தென் இலங்கை அழகமர் வணடோதரிக்குப்
> பேரருள் இன்பம அளித்தத பெருந்துறை மேய பிரானைச்
> சீரிய வாயால் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய்.
>
> (திருவாசகம்)

மண்டோதரியைக் குறித்து மாணிக்கவாசக சுவாமிகள் இவ்வாறு பாடியிருக்கிறார். அழகு அமர் என்றதனால் எழில் குடி கொண்டுள்ள அவளது விழுமிய உருவ நிலை விழி தெரிய வந்தது. சிவ பெருமானுடைய திருவருளைப் பெற்றவள்; அரிய பல வரிசைகளை அடைந்து பெரிய அரசியாய் இனிய சுக போகங்களை எய்தியுள்ளவள் என்பதை இதனால் அறிந்து கொள்கின்றோம். திருவாதவூரர் திருவாயால் இங்ஙனம் புகழ்ந்திருத்தலால் அவளுடைய பெரு மாண்புகள் ஒரு வாதமும் இல்லாமல் தெளிவாய் நின்றன. இத்தகைய உத்தம அரசி சானகி எதிரே ஒத்தவளாய் கண்டு உய்த்துணர வந்துள்ளாள்.

காவிய பாத்திரங்களின் தகுதிகளை மதி தெளிய வைத்துச் சீவிய ஒளிகள் பொலிய விளக்கிச் செல்லும் வித்தகம் வியந்து நோக்கத் தக்கது. சித்தம் நிறை சிதையாமல் எவ்வழியும் உத்தம நிலைகளைக் கவி உணர்த்தி வருகிறார். யாரை எந்த இடத்தில் எவ்வாறு காட்ட வேண்டுமோ அவரை அங்கே ஓவிய உருவமாக் காட்டியருள்கின்றார். அக் காட்சிகள் மாட்சிகளாய்க் கவின் செய்து நிற்கின்றன. உலகம் என்றும் கண்டு வருகின்றது

## மன்னன் மனையுள் புகுந்தது,

அரசியைக் கண்டு அந்தப்புரத்தில் இங்ஙனம் கருதி நின்றவன் அருகே தொடர்ந்து மருவி நின்ற பெரிய அரண்மனையுள் நுழைந்தான். இலங்கை வேந்தன் எழுந்தருளியிருக்கும் அலங்கார மாளிகை அது. அதிசய வனப்புகள் விதி முறைகளில் விளைந்தது. அமரரும் துதி செய்து நிற்கும் தோற்றம் மிகப் பெற்றது.

பெருமேருக் குன்று குன்றிய தகையுற
ஓங்கிய கொற்ற மாளிகை.

இராவணனுடைய அரண்மனை யிருந்த நிலையை இதனல் அறிந்து கொள்கின்றோம். மேருமலையினும் மேலாய் விரிந்து பரந்து உயர்ந்து விளங்கியது என அதன் மேன்மையும் பான்மையும் இங்ஙனம் விளக்கப் பட்டுள்ளன.

குன்றமும் குன்றி நாண அவ் வென்றி மாளிகை வீறு கொண்டு நின்றது என்றது வியந்து காண வந்தது. வானுலகையும் மண்ணுலகையும் வளைந்து ஆளுகின்ற மன்னன் வாழ்ந்து வரும் மகிமையுடையது ஆதலால் அந்த அரண்மனை யாவரும் புகழ்ந்து போற்றப் பொலிந்து நின்றது. கொற்ற மாளிகை என்றது தன்னை ஒத்தது வேறு எங்கும் இல்லை என வெற்றி வீறுடன் அது விளங்கி நிற்றல் கருதி. மூவுலகையும் வென்ற கொற்றவன் குடியிருப்பது என்னும் குறிப்பை வெளிப் படுத்திச் சிறப்புற்று நிலவியது.

அற்புத நிலைகளையுடைய அந்த அரண்மனையுள் அனுமான் புகுந்தான். அங்ஙனம் புகுந்தவன் யார்? எப்படிப் பட்டவன்?

இராவணற்கு எடுப்பரும் கிரி எனத் திரள் தோளான்.

இந்தக் குறிப்பைக் கூர்ந்து பார்க்கிறோம். வீர மாருதியின் வீரத் தோள்களை வியந்து நோக்கி உவந்து நிற்கின்றோம்;

இலங்காபுரியுள் புக எமனும் அஞ்சுவான்; அந்த ஊரில் இரவு தனியே புகுந்து எங்கும் திரிந்து உலாவி இறுதியில் வேந்தன் அரண்மனையுள்ளும் வீறோடு சென்றுள்ளான் ஆதலால் அவ் வெற்றி நிலையை விளக்கி உறு பெயர் ஈண்டுக் கொற்றமுடன் வந்தது. ஆற்றலும் வினைவும் ஏற்ற பெயரால் எதிர் தெரிந்தன.

கைலாச கிரியைப் பெயர்த்து எடுத்தவன் என இராவணன் பெருங் கீர்த்தி பெற்றுள்ளான். அங்ஙனம் மலை எடுத்த அவனை நிலை குலைத்துத் தலையெடுக்க வந்திருக்கின்றான் ஆதலால் அனுமான் நிலையை இங்ஙனம் எடுத்துக் கூறினர். வெள்ளி மலையை வேரோடு எடுத்தவனை வேரோடு எடுக்க நேரே சீரோடு வந்துள்ளான் என்பது பேரோடு உள்ளியுணர வந்தது.

திரண்டு உருண்டு திண்மை வாய்ந்துள்ள நிலைகளை யுடையது ஆதலால் மலைகளை உயர்ந்த வீரர் தோள்களுக்கு உவமை கூறுவது

கவி மரபாய் அமைந்தது. அந்த மரபு முறையில் வந்ததாயினும் இதில் வேறு உறவுரிமைகள் மருவியுள்ளன.

மேரு மலையினும் வீறுடைய தோளான் என்று கூறியிருக்கலாம்; அங்ஙனம் கூறுமல் இராவணன் எடுப்பரிய கிரி என்றது இருவர் நிலைகளும் ஒரு முகமாய்க் கருதியுணர.

பின்னுல் யுத்த களத்தில் நிகழ்வதை முன்னுல் உய்த்துணர வைத்தார். குன்று எடுத்தவன் குன்றி அழிய நின்றான். உரைகள் தோறும் உணர்வு நலம் சுரந்து சுவைகள் கனிந்து வருகின்றன.

## நிகழ்ந்த நிலை.

இராவணனுடைய அரண்மனையுள்ளே அனுமான் புகுந்த பொழுது அங்கே பல கெடு குறிகள் நிகழ்ந்தன. விளக்குகள் ஒளி மழுங்கின; பல அவிந்தன; எங்கணும் நடுங்கின. யாவும் துடித்தன.

நிலம் துடித்தன; நெடுவரை பொடித்தன;
நிருதர் தம் குலமாதர்
பொலந்துடிக்கமை மருங்குல் போல்
கண்களும் புருவமும் பொற்றேளும்
வலம் துடித்தன; மாதிரம் துடித்தன;
தடித்தின்றி மதிவானம்
கலந்திடித்தன; வெடித்தன
பூரண மங்கல கலசங்கள் (1)

புக்கு நின்றுதன் புலன்கொடு நோக்கினன்
பொருவரும் திருவுள்ளம்
நெக்கு நின்றனன் நீங்கும் அந்தோ இந்த
நெடுநகர்த் திரு என்னு
எக்குலங்களின் யாவரே ஆயினும்
இருவினை எல்லோர்க்கும்
ஒக்கும் ஊழ்முறை அல்லது வலியது ஒன்று
இல்லென உணர்வுற்றான். (2)

நூற்பெருங்கடல் நுணங்கிய கேள்வியன்
நோக்கினன் இயமேனென்றாள்
வேற்பெருங்கடல் புடைபரந் தீண்டிய
வெள்ளிடை வியன் கோயில்

பாற்பெருங்கடற் பன்மணிப் பஃறிரைப்
பரப்புடைப் படர்வேலை
மாற்பெருங்கடல் வதிந்ததே அனையதோர்
வனப்பினன் துயில்வானை. (3)

குழவி ஞாயிறு குன்றிவர்ந் தனையன
குருமணி நெடுமோலி
இழைகள் ஒடுநின் றிளவெயில் எறித்திட
இரவெனும் பொருள் வீய
முழைகொள் மேருவின் பொகுட்டிடைக் கனகனை
முருக்கிய முரட்சீயம்
தழைகொள் தோளொடு தலைபல பரப்பிமுன்
துயில் வதோர் தகையானை. (4)

ஆய பொற்றலத்து ஆய்வளை அரம்பையர்
ஆயிரர் அணி நின்று
தூய பொற்கவரித் திரள் இயக்கிடச்
சுழிபடு பசுங்காற்றின்
வீய கற்பகத் தேன்துளி விராயன
வீழ்தொறும் நெடு மேனி
தீய நற்றொடிச் சீதையை நினைதொறும்
உயிர்த்துயிர் தேய்வானை. (5)

குழந்தை வெண்மதிக் குடுமியன்
நெடுவரை குலுக்கிய குலத்தோளைக்
கழிந்துபுக் கிடை கரந்தன
அநங்கன் வெங் கடுங்கணை பல பாய
உழந்த வெஞ்சமத் துயர் திசை
யானையின் ஒளிமருப் புற்றிற்ற
பழந்தழும்பினுக்கு இடையிடையே சில
பசும்புண்கள் அசும் பூற. (6)

சாந்தளாவிய கலவைமேல் தவழ்வுறு
தண்டமிழ்ப் பசுந் தென்றல்
ஏந்து காம வெங்கனலினுக் குமிழதள்
துருத்தியின் உயிர்ப்பேறக்

காந்தள் மென்விரற் சனகிமேல் மனமுதற்
 கரணங்கள் கடி தோடப்
பாந்தள் நீங்கிய முழை எனக் குழைவுறு
 நெஞ்சு பாழ் பட்டானை. (7)

வெள்ளி வெண் சேக்கை வெந்து
 பொறிஎழ வெதும்பு மேனி
புள்ளி வெண் மொக்குள் என்னப் பொடித்து
 வேர் கொதித்துப் பொங்கக்
கள்ளவிழ் மாலைத்தும்பி
 வண்டொடும் கரிந்து சாம்ப
ஒள்ளிணர் மாலை தீய
 உயிர்க்கின்ற உயிர்ப்பினானை (8)

தேவியல் நேமி யானின்
 சிந்தைமெய்த் திருவின் ஏகப்
பூவியல் அமளி மேலாப்
 பொய்யுறக்கு உறங்குவானைக்
காவியங் கண்ணி தன்பால்
 கண்ணிய காதல் நீரின்
ஆவியை உயிர்ப் பென்று ஓதும்
 அம்மியிட்டு அரைக்கின்றானை. (9)

மிகுந்தகை நினைப்பு முற்ற
 உருவெளிப் பட்ட வேலை
நகுந்தகை முகத்தன் காதல்
 நடுக்குறு மெய்யன் வார்தேன்
உகுந்தகை மொழியாள் முன்னம்
 ஒருவகை உறையுளுள்ளே
புகுந்தனள் அன்றோ வென்று
 மயிர் புறம் பொடிக்கின்றானை. (10)

இந்தப் பாடல்களைக் கூர்ந்து படிக்கின்றோம். இராவணனுடைய நிலைமைகளையெல்லாம் நேரே தெரிகின்றோம். உரைகள் ஓவியங்களாய்ச் சீவியங்களைத் துலக்கிக் காவியரசனைகளை யூட்டி வருகின்றன. உள்ளங்களைத் தட்டி எழுப்பி உணர்ச்சிகளை விழிப்பித்துச் சரித்திர நிகழ்ச்சிகளைக் காட்டித் தரும நீதிகளைத் துலக்

கிக் கரும விளைவுகளை விளக்கிக் கவிகள் விளைத்து வரும் காட்சிகள் அதிசய விசித்திரங்களாய் ஆட்சி புரிந்து மிளிர்கின்றன

ஒரு காலத்தில் மறைவாய் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை உலக விழிகள் என்றும் தெளிவாய்க் கண்டு வரும்படி மொழிகள் ஒளி செய்தருளும் திறம் உவகை வியப்பாய் ஓங்கியுள்ளது. அரிய மருமங்கள் எளிய கருமங்களாய் வெளி வருதலால் அவற்றுள் யூக விவேகங்கள் மருவி உவகை நலங்கள் ஒளிர்கின்றன

மாருதி மாளிகையுள் நுழைந்த பொழுது தீய உற்பாதங்கள் பல தோன்றி யிருக்கின்றன. பூமி நடுங்கியது; மலைகள் குலுங்கின; இடிகள் முழங்கின; திசைகள் அசைந்தன; அரக்கர் குல மங்கையர் வலக் கண்களும் வலத் தோள்களும் புருவங்களும் துடித்தன; பூரண கும்பங்களாய்ப் பொலிந்திருந்த மங்கல கலசங்கள் எல்லாம் வெடித்து உருண்டன; இத் தகைய கெடு குறிகளோடு அனுமான் நெஞ்சமும் கடிது துடித்தது; உள்ளே புகுந்து ஊன்றி நோக்கினன்; அற்புத நிலையில் அமைந்திருக்கின்ற அந்த அரண்மனையையும் போக போக்கியங்களையும் கண்டு ஏகமாய் இரங்கினன். "ஐயோ! இவ்வளவு திவ்விய சம்பத்துக்களும் அநியாயமாய் அழியப் போகின்றனவே! என்னே நாச காலம் இது!'' என்று எண்ணி மறுகினன். ஊழ்வினை வலியினை நினைந்து சிறிது உள்ளம் தேறினன். ''தாம் செய்த நல்வினையின் அளவே எவரும் இன்ப நலங்களை நுகர்ந்து இசை பெற்றுள்ளனர்; அந்த வினைப் பயன் தீர்ந்தால் எல்லாம் ஒழிந்து போகின்றன; எவரும் அழிந்து படுகின்றனர். விதி வலியை வெல்ல வல்லார் யார்? அதன் வழியே யாவும் நடந்து வருகின்றன'' என இங்ஙனம் உணர்ந்து தெளிந்தான்.

அந்தோ! இந்த நெடுநகர்த் திரு நீங்கும்.

என நெஞ்சுருகி யுள்ளமையால் அனுமானுடைய கருணைப் பண்பும் தரும சிந்தனையும் இங்கே தெரிய வந்தன.

இலங்காபுரியின் பேரழகும் பெருமிதநிலையும் செல்வ வளங்களும் ஒருங்கே பாழாய் ஒழிய நேர்ந்தனவே! என்று அளியோடு கருதியிருத்தலால் அந்த நகரின் மீது இந்த வீரன் கொண்டிருக்கும் மதிப்பும் வியப்பும் வெளிப்பட்டு நின்றன.

ஊர் அழியும் என்றதனுல் அங்குள்ள உயிர்கள் அழிந்து

படும் பேரிழவுகள் நேரிய வந்தன. நீச காரியங்களைப் புரியும் பாவகாரிகள் பெருகவே நகரம் நாசமாக நேர்ந்தது.

நிருதர் தம் குல மாதர் கண்கள் வலம் துடித்தன என்றது அந்தக் குல மங்கையர் எல்லாரும் தாலியறுக்க நேர்ந்தனர் என்பதைச் சொல்லாமல் சொல்லிய படியாம். நிருதர் = அரக்கர்.

கொடிய தீவினையாளர் என அரக்கரைக் கடிது இகழ்ந்திருந்தாலும் அவர் மடமையாய் அழிந்து படுவதை நினைந்து அனுமான் இரங்கியிருக்கிறான். அந்தப் புனித வுள்ளத்தின் தனியான இனிய இயல்பு மனித வுள்ளங்களுக்கு மாண்பு புரிந்துள்ளது.

சிறந்த போர் வீரமும், நிறைந்த கருணையும், பரந்த நோக்கமும், விரிந்த நெஞ்சமும் இப் பெருந்தகைபால் சுரந்திருக்கின்றன. நல்ல நீர்மைகள் தோய்ந்திருத்தலினாலேதான் எல்லா நிலைகளிலும் மேலாய்ச் சிறந்து இசை மிகுந்து நிற்கின்றான்.

இவ்வாறு எண்ணி நின்றவன் மேலும் மெல்லச் சென்றான். ஓர் வெளியிடம் தோன்றியது. பல்லாயிரம் போர் வீரர்கள் வேல்களோடு காவல் புரிந்து வீறுடன் நிற்கின்ற அவ் வெள்ளிடை வெளியையும் கடந்து உள்ளே புகுந்தான்.

## இராவணனைக் கண்டது.

பல வகையான எழில் ஒளிகள் எவ்வழியும் நிலவி மிளிர்கின்ற திவ்விய மணி மாளிகையுள் அற்புதமான ஓர் பஞ்சணை மேல் இராவணன் அதிசய கம்பீரமாய்ப் படுத்திருந்தான். இவ் வீரன் அடுத்து நெருங்கினான். அயல் அணுகாமலே இயல் நிலைகளை எண்ணி வியந்தான். உயர் நலங்கள் உவகை புரிந்தன.

பத்து இளஞ் சூரியர்களைப் போல் இரத்தின கிரீடங்கள் ஒளி வீசுகின்றன: மெய்யில் அணிந்துள்ள மணியணிகள் விரிந்த சோதிகளை வீசி இரவு நிலை தெரியாமல் எழில் புரிந்து திகழ்கின்றன. ஆலவட்டங்களை ஏந்தி அரம்பையர்கள் நாலு பக்கங்களிலும் நின்று ஊழியம் புரிகின்றனர். நடு நிசி கடந்தபின் ஏவல் செய்யு முறையில் மேவியிருந்தமையால் தேவமங்கையர் யாவரும் யாதும் அயராமல் அணி அணியாய் நின்று பணிவிடைகள் புரிந்து மணி விளக்குகள் போல் மருவி நின்றனர். இனிய வாசனை வகைகள் எங்கும் வீசி விரிந்து நாசிகளுக்கு நலம் பல செய்தன.

எவ்வழியும் சுக மயமாய் இவ்வளவு இன்ப நிலையில் உறங்கி ருந்தாலும் அவன் உள்ளத்துள்ளே ஒழியாத துனபம் ஒன்று ழியாமல் நின்றது. சீதையையே நினைந்து நோதலுழந்துள்ள மயால் அவனால் அமைதியாய் உறங்க முடியவில்லை. காமதாபம் ம வாதனையாய் இடர்புரிந்திருந்தது.

உள்ளத் துயரோடு கள்ளத் தனமாக் கண் மூடிக் கிடந்தான்.

தேவியல் நேமியானின் சிந்தை மெய்த் திருவின் ஏகப்
பூவியல் அமளி மேலாப் பொய் உறக்கு உறங்குவான்.

தூங்குகின்ற இராவணனுடைய பாங்குகளை ஈங்குப் பல வாறு பார்த்து வருகிறோம். கூர்த்து உணர்ந்து கொள்கிறோம்.

சீதை மேல் மனத்தைப் போக்கிப் படுத்திருக்கின்ற அவனை இதில் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. சரித்திர நிகழ்ச்சிகளோடு கருத்துக்களை விளக்குவதில் கவியின் கதி வேகம் சில இடங்களில் விதி முறை கடந்து அதிசய நிலைகளில் போய் விடுகின்றது. மதியூகம் மருமமாய் மிளிர்கின்றது.

இராவணன் இராமன் போல் இருந்தான் எனக் கவி இங்கே காட்டியிருக்கிறார். அந்த ஒப்புக்கு உரிய செயல் இயல்களை நுட்பமாக உரைத்துள்ளார். உரைகள் நிறை செய்து நிலவுகின்றன.

தனது அருமைத் தேவியைப் பிரிந்து ஆவி அலமந்து கண் உறக்கம் கொள்ளாமல் உள்ளம் புண்ணாய் இரவெல்லாம் இராமன் ஏங்கியிருக்கிறான். தூங்காமல் தூங்கித் துயருழந்துள்ளான்.

அவ்வாறே சீதையை நினைந்து நெஞ்சம் தவித்து நிலை குலைந்து உயிர் மறுகி உறக்கமின்றிப் பரிதாபமாய் இராவணன் பதைத்துக் கிடக்கின்றான் ஆதலால் அந்தக் கிடையை எடுத்துக் நேமியானின் உறங்குவான் என இந்த நடையில் காட்ட நேர்ந்தார். சாமியோடு காமியும் சாமியம் ஆயினான்.

தன்னுடைய உரிமையான இனிய மனைவியை உழுவலன் போடு அக் குலமகன் கருதி யுருகுகின்றான்; பழியான காம இச்சையோடு இக் கொடியவன் அப் பதி விரதையை விழைந்து உழலுகின்றான். பழி விழைவு ஒளி எதிரே பார்வைக்கு வந்தது.

அது தூய காதல்; இது தீய காமம்; அது கடமை கலந்தது; இது மடமை மலிந்தது; அது புகழ் பொலிந்தது; இது பழி படிர்

கது; அது ஒளி; இது இருள். அது அமுதம்; இது நஞ்சு; புண்ணியமும் பாவமும் போல் தம்முள் மாறாய் எதிர்ந்து வேறுபாடு மருவியிருந்தும் நேர் கூறியது ஓரளவு சீர் தெரிய.

அரச திரு முதலாகப் பலவகையான செல்வ நலங்களை எய்தி இராவணேசுவரன் எனப் பெரு மகிமை பெற்று எத்தேவரும் போற்ற இசை மிகுந்து வாழுகின்ற இவன் சீதைமேல் ஏதமாய் மண்டிய பாழான நசையால் அடியோடு அழிய நேர்ந்துள்ளான்; இவனை அழித்து ஒழித்தற்கு வில்லும் கையுமாய் இராமபிரான் விரைந்து வந்து கொண்டிருக்கின்றான்; அந்த வீர மூர்த்தியோடு போர் முகத்தில் நேரே எதிர்வருமுன் இவனை இங்கே வேறே ஒரு வகையில் நேருற நிறுத்தினார்.

அவன் சிந்தை விரும்பிய திருவை இவன் நிந்தையாக விரும்பியதால் இவனுடைய முடிவு கடிது நெருங்கியுள்ளமை கருத வந்தது. அரிய பொருளை அவாவி அநியாயமாயழிகிறான்.

அவனும் உறக்கமின்றித் தவிக்கின்றான்; இவனும் உறங்காமல் உழலுகின்றான். அவன் இழந்த திருவை எய்தி இன்பம் அடைய வருகின்றான்; இவன் எடுத்து வந்த திருவோடு எல்லாவற்றையும் இழந்துவிட்டு அல்லலோடு இறந்துபடப் போகின்றான்.

இராமனுடைய வெற்றி வீரத்தை முற்றவும் துலக்கி அவன் கீர்த்தியை உலகமெல்லாம் தெரியச் செய்வதில் இராவணன் உற்ற துணையாய் வாய்ந்திருத்தலால் அவனுக்கு இவன் ஒத்த இணையாயினன். இராமன் சீரோடு இராவணன் பேரும் உளது.

எவ்வழியும் யாண்டும் இராமன் புகழைப் பேசி மகிழ்வதில் கவிக்கு மிகவும் ஆசை ஆதலால் ஈண்டு இவ்வழியில் கூறி நின்றார்.

தேவியல் நேமியான் என்றது சக்கரதரனை திருமாலே இராமனாய் அவதரித்துள்ளமை கருதி. இன் உருபு ஒப்புப் பொருளது. இருவர் சிந்தனைகளும் ஒரு முகமாய் வந்தன.

இலட்சுமியைக் கருதிக் கொண்டு திருமால் யோக நித்திரை செய்வது போல் சீதையை நினைந்து கொண்டு இராவணன் மோக நித்திரை செய்தான் என்று பொருள் கூறலாம் ஆயினும் அவ்வளவு பொருத்தமாகாது. காவிய உரிமை கருதத் தக்கது.

பூவியல் அமளி என்றது மல்லிகை பிச்சி முதலிய மெல்லிய நறுமலர்களால் அந்தப் பஞ்சணை பொலிந்திருந்தமை தெரிய வந்தது. இன்ப மயமான இனிய அமளியில் துன்ப மயமாய் அவன் படுத்துக் கிடந்தான்.

காவியங் கண்ணி தன்பால் கண்ணிய காதல் நீரின்
-வவியையஉயிர்ப்பு என்றுஒதும்அம்பியிட்டுஅரைக்கின்ருன்

விரக தாபத்தால் வேதனையோடு தவித்துக் கிடக்கும் இராவணனுடைய பரிதாப நிலையை இதில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். உள்ளத்தின் மயல் இயல்களைத் தெள்ளத் தெளிய விளக்குவது நேர்ந்த கலைச் சித்திரமாய்ச் சிறந்து திகழ்கின்றது.

காவியும் கண்ணி என்றது சீதையை. குவளைமலர் போன்ற அழகிய கண்களையுடையவள் என அக் குலமகளது விழி எழிலை விளக்கி நின்றது. அந்தக் கண் அழகில் அவனுடைய உள்ளம் பறி போய் உயிர் உருகியுள்ளமை உணர வந்தது.

கண்ணி என்னும் சொல் இரு பொருளை ஈண்டு எண்ண அமைந்தது. மாய வலையுள் அகப்பட்ட தீய மிருகம் போல் தூய கண்ணியிடம் வீழ்ந்து மாய நேர்ந்துள்ளான். தன்னுடைய அழிவு நிலையை உணராமல் தானாகவே விழைந்து நுழைந்து தவித்து உழல்கின்ருன்.

கண்ணிய காதல் என்றது சீதையை எண்ணியுருகும் பேராசையை. கண்ணுதல்—அழுந்தி எண்ணுதல். கண்ணும் மனமும் வேறொன்றையும் காணுமல் சானகியையே எண்ணி ஏங்கியிருக்கும் இயல்பு தெரிய வந்தது.

கருதியது கைகூடாமையால் காம வேட்கையால் மறுகி அலமருகின்ருன். உன்னி யுன்னி யுருகி உழலுகின்ருன். மையல் நோயால் அவன் படுகின்ற துயரம் கொடிய பரிதாபமாய் நெடி தோங்கியுளது.

ஆவியை உயிர்ப்பு என்னும் அம்பி இட்டு அரைக்கின்ருன்

காம தாபத்தால் இலங்கை வேந்தன் அலமருகின்ற அவலநிலையை இது எவ்வளவு தெளிவாக விளக்கி நிற்கின்றது! உருவக மொழிகள் கலையுலகில் பெருமித ஒளிகள் புரிந்து வருகின்றன

கொடிய காம இச்சையால் அவன் உயிர் பதைத்துக் கிடந்தான் என்று சொல்லுவதை விடப் பல்லாயிரம் மடங்கு இது உணர்ச்சிகளை விளைத்திருக்கின்றன. ஒருவனிடம் நேர்ந்துள்ள நிகழ்ச்சியைத் துலக்கும் பொழுது உலக உள்ளங்கள் எல்லாம் வியந்து காணும் படி விளக்கி விடுகின்றார்

அம்மியில் அரைத்துக் கிண்ணியில் வழிக்கின்றான்.

என்பது பழமொழி. ஒருவன் அழிதுயர் புரிவதை விழி தெரிய இது வெளியிட்டு வருகின்றது. இந்த முது மொழியை எப்படியோ கேட்டிருந்த கவி இப்படிச் சுவையாகப் பாட்டில் அமைத்துக் காட்டியருளினர்

அம்மியில் அரைக்கப்படும் பொருள் செம்மையாய் அரைபடுதற்கு இடையிடையே நீரைத் தெளித்துக் கொள்வர்; அங்ஙனம் நீர் பெய்த போதுதான் அது நொய்தாய் அரைபடும்; அப்பாடு தெரிய இங்கே நீரும் வந்தது.

உள்ளம் அம்மி; உயிர் அரிசி; உயிர்ப்பு குழவி; காதல் நீர். சீதை மேல் கொண்டுள்ள காம வேட்கையால் அவன் பெருமூச்சு விடுந்தோறும் ஆவி தேய்ந்து தேய்ந்து மாய்ந்து வருகிறது; அந்த அழிவு நிலையை இவ்வழியால் தெளிவுறுத்தினர்

நல்லாள் மேல் வைத்த அந்தப் பொல்லாத காதல் அவனைக் கொல்லாமல் கொல்லுகின்றது; அதனைச் சொல்லாமல் சொல்லினர். இனிமேல் அவன் பிழைக்கவேமாட்டான்; செத்தே தொலைவான் என்பது உய்த்துணர வந்தது. சீதா தேவியைக் கண்டதிலிருந்தே அக் காதகன் ஆவிக்குக் கண்டம் தொடர்ந்தது.

அரிய அரச திருவினன்; பெரிய போர் வீரன்; சிறிய ஒரு காம இச்சையால் பெருமைகள் யாவும் குலைந்து பாழாய் அழிகின்றான் என்டதை யாவரும் எளிது தெளிய அவனுடைய விழுமிய நிலைமைகளை எல்லாம் வெளியே ஒளிசெய்து காட்டியருளினர்.

குழவி ஞாயிறு குன்று இவர்ந்து அனைய ன குருமணிநெடுமோலி இழைகளோடு நின்று இளவெயில் எறித்திட.

அவனுடைய மணி மகுடங்களையும் அணி வகைகளையும் இதில் கருதியுணர்ந்து பெரிதும் வியந்து நிற்கின்றோம்.

உதய கிரியில் பத்து இளஞ் சூரியர்கள் ஒருங்கே ஒத்து உதயமானது போல் அவனது திருமேனியில் இரத்தின கிரீடங்கள் ஒளி வீசி நின்றன. உதய காலத்தில் எழுகின்ற பால சூரியர்கள் என்பார் குழவி ஞாயிறு என அழகு மொழியால் கூறினர்.

"குழவி ஞாயிறு குன்று இவர்வது போல்
மழகளிற்று எருத்தின் மைந்து கொண்டிருந்த
மன்ன குமரன்." (பெருங்கதை, 1-33)

மதயானைமேல் மருவியிருந்த உதயண குமாரனைக் கொங்குவேளிர் இங்ஙனம் கூறியிருக்கிறார். இதன்கண் முதலடியில் வந்துள்ள தொடர் முழுவதும் நம் கவியுள் கலந்திருப்பது கருதியுணர வுரியது.

அதிசய அணிகளோடு இராச கம்பீரமாய்த் துயில்கின்றவனுடைய உயர் மகிமைகள் பல வகை நிலைகளிலும் பார்வைக்கு வந்திருக்கின்றன. அரசவையில் கொலு வீற்றிருக்கும் பொழுதும் வேறு விசேட காலங்களிலுமே சக்கரவர்த்திகள் முடி சூடி யிருப்பது வழக்கம். இங்கே உறங்கும் போதும் இராவணனுடைய தலைகளில் மணி மகுடங்கள் இருந்தன என்பது வியப்பாயுள்ளது. என்றும் அவ்வாறு இருந்ததில்லை; அன்று மாத்திரம் புதுமையாய்ப் பொலிந்திருந்தது.

சீதையைக் கவர்ந்து கொண்டு வந்து ஒன்பது மாதங்கள் ஆகின்றன; எவ்வளவு முயன்று பார்த்தும் யாதும் பலிக்கவில்லை. என்ன காரணத்தால் தன்னை மதியாமல் இன்னவாறு இகழ்ந்து வருகிறாள்? என்று அம் மன்னர் மன்னவன் அன்று மிகவும் உன்னி உளைந்தான்; இரவு வரவே தனது உருவ நிலையைக் காண விழைந்தான். உயர்ந்த உடை புனைந்து அணிகள் பலவும் அணிந்து மணிமுடிகள் சூடி அரிய அலங்காரங்களோடு பெரிய நிலைக் கண்ணாடியில் தன்னைப் பார்த்தான். பெரு மகிழ்ச்சியடைந்தான். முன்னும் பின்னும் திரும்பிப் பல முறையும் புன்னகை புரிந்து நோக்கி இன்ன எழிலுடைய என்னைச் சானகி ஏன் விரும்பாமல் வெறுத்து வருகிறாள்?" என்று வருத்தம் மீதூர்ந்தான். வெகு நேரம் வரையிலும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தவன் அந்த நிலையிலேயே போய்ப் பஞ்சணையில் படுத்தான்; ஆகவே குருமணி நெடுமோலி இழைகளோடு நின்று இளவெயில் வீசின. அந்நிலை

யினை அனுமான் பார்த்தான். அதிசயம் அடைந்தான். பகையாளி நிலைகளைப் பல வழிகளிலும் ஆராய்ந்து பூராயங்களை ஓர்ந்தான்

குழந்தை வெண்மதிக் குடுமியன் என்றது சிவபெருமானை. பெயர்களை வைத்து வழங்கும் முறைகள் உயர் பெருஞ் சுவைகளாய் உவகை புரிந்து உணர்வு சுரந்து வருகின்றன.

பிள்ளை மதி சூடிய பெருமானுடைய பெரிய வெள்ளி மலையை அள்ளிக் குலுக்கிய குலத்தோளன் என்றது அவனது அற்புத ஆற்றலை உள்ளத்தில் ஓர்ந்து கொள்ள வந்தது.

அத்தகைய அதிசய வீரன் காமவேதனையால் கருத்தழிந்து ஆவி அலமந்து ஏம வாதனையாய் யாமமும் துயிலாமல் அவல நிலையில் கவலை மீதூர்ந்து கண் மூடிக் கிடந்தான்.

## கண்டு கொதித்தது.

அரிய பல அலங்காரங்களோடு ஆடம்பரமாய் அமளியில் படுத்திருக்கின்ற இராவணனை அனுமான் கண்டான். காணவே கடுங்கோபம் மூண்டது.

கொண்டதோர் உருவம் மாயன் குறளினும் குறுக நின்றான்
திண்டலை பத்தும் தோள்கள் இருபதும் தெரிய நோக்கிக்
கண்டனன் காண்டலோடும் கருத்தின்முன் காலச் செந்தீ
விண்டன கண்கள் கீண்டு வெடித்தன கீழும் மேலும்.

மாருதி உள்ளம் கொதித்துள்ள நிலையை இவ்வுரைகள் உணர்த்தி நிற்கின்றன. நிகழ்ச்சிகளைப் படிக்கும் பொழுதே உணர்ச்சிகள் துடிக்கின்றன. உள்ளங்கள் துள்ளுகின்றன. ஊக்கங்கள் ஓங்குகின்றன. காணுகின்ற காட்சிகள் கண் எதிரே தோன்றி எண்ணரிய வேகங்களை இயக்கி விடுகின்றன.

குறளினும் குறுகிய வடிவம் மருவி அருகே போய்ப் பார்த்திருக்கிறான். கற்புத் தெய்வத்தைக் கள்ளமாக் கவர்ந்து வந்த வஞ்சன் என்று கருதவே நெஞ்சம் கனன்று நெடிது கொதித்தது; நெருப்புப் பொறிகளைக் கக்குவன போல கண்கள் சிவந்தன. கருத்தின் முன் காலச் செந்தீ விண்டன என்றதனால் அந்தக் கோபத்தின் உக்கிர வீரநிலையை உணர்ந்து கொள்கிறோம். சினம் காலாக்கினி போல் எழுந்தது எனவே சினந்தவனது பேராற்றலும் போராற்றலும் தெரிய வந்தன.

## கருதி அடங்கியது.

இவ்வாறு கொதித்துத் துடித்தவன் அவனைக் கொன்று சிதைத்துவிட வேண்டும் என்று கன்றி மூண்டான். சில கருத்துக்கள் நீண்டு அடக்கி நிறுத்தின. இவ்வீரன் வெகுண்டு விரைந்ததும், உடனே மடங்கி அடங்கியதும் வியத்தகு விவேகங்களாய் விளைந்து நின்றன. முனைந்து மூண்ட திறலும், நினைந்து மீண்ட நிலையும் ஈண்டு உணர்ந்து கொள்ள வருகின்றன.

தோள் ஆற்றல் என்னாகும்? மேல் நிற்கும் சொல் என்னும்?
வாள் ஆற்ற கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடி என்
தாள் ஆற்றலால் இடித்துத் தலைபத்தும் தகர்த்து என்றன்
ஆள் ஆற்றல் காட்டேனேல் அடியேனாய் முடியேனே. (1)

நடித்து வாழ் தகைமையதோ அடிமைதான் நன்னுதலைப்
பிடித்த வாள் அரக்கனார் யான்கண்டும் பிழைப்பரோ
ஒடித்து வான் தோளனைத்தும் தலைபத்தும் உதைத்துருட்டி
முடித்திவ்வூர் முடித்தால் மேல்முடிவதெலாம் முடிந்தொழிக.

என்றாக்கி எயிறுகடித்து இருகரனும் பிசைந்தெழுந்து
நின்றாக்கி உணர்ந்துரைப்பான் நேமியோன் பணியன்றால்
ஒன்றாக்கி ஒன்றிழைத்தல் உணர்வுடைமைக் குரித்தன்றால்
பின்றாக்கின் இதுசாலப் பிழையாகும் எனப் பெயர்ந்தான். (3)

ஆலம்பார்த் துண்டவன்போல் ஆற்றலமைந் துளர்எனினும்
சீலம்பார்க் குரியோர்கள் எண்ணாது செய்பவோ
மூலம் பார்க் குறினுலகை முற்று விக்கும் முறை தெரினும்
காலம் பார்த் திறைவேலை கடவாத கடல் ஒத்தான். (4)

இற்றைப்போர்ப் பெருஞ்சீற்றம் என்னோடு முடிந்திடுக
கற்றைப் பூங் குழலாளைச் சிறைவைத்த கண்டகனை
முற்றப் போர் முடித்ததொரு குரங்கு என்றால் முனைவீரன்
கொற்றப்போர்ச் சிலைத்தொழிற்குக் குறைவுண்டாமெனக்குறைந்தான்.

அங்கிலையான் பெயர்ந்துரைப்பான் ஆய்வளைக்கை அணியிழையார்
இங்கிலையால் உடன் துயில்வார் உளரல்லர்; இவன் நிலையும்
புன்னிலைய காமத்தால் புலர்கின்ற நிலை பூவை
நன்னிலையின் உளள் என்னும் நலன்எனக்கு நல்குமால். (6)

என்றெண்ணி ஈண்டினியோர் பயனில்லை என நினையாக்
குன்றன்ன தோளவன்றன் கோமனைபிற்படப் பெயர்ந்தான்

நின்றெண்ணி யுன்னுவான் அந்தோ இந் நெடு நகரம்
பொன்றுன்னு மணிப் பூணூர் இலரென்னப் பொருமுவான். (7)
(ஊர்தேடு படலம் 219-225)

அனுமானுடைய மன வுணர்வுகளையும் சின நிலைகளையும் மதி யூகங்களையும் அதிசய ஆற்றல்களையும் இப் பகுதியில் கண்டு மிகு தியும் கவன்று பலவகை விளைவுகளையும் தெரிந்து கொள்கின்றோம். உத்தம வீரனுடைய சித்த விருத்திகள் எத் திறத்தும் ஏற்றம் மிகப் பெற்று ஆற்றல் புரிந்து வருகின்றன.

இராவணனைக் கண்டவுடனே ஊழித் தீ என உள்ளம் கொதித்து உருத்திருக்கிறான் தன்னுடைய ஆண்டவனுக்குத் துரோகம் இழைத்த கொடியவன் என்று நெடிய கோபம் மூண் டமையால் அவனை அடியோடு அழித்துவிட வேண்டும் என்று கடுத்து விரைந்தான். "என் கால்களால் உதைத்து இவன் தலைகள் பத்தையும் இப்பொழுதே தகர்த்து எறிவேன்; அவ்வாறு செய்ய வில்லையானால் இராமனுக்கு நான் நல்ல அடியவனாகேன்; பதி விர தையை எடுத்து வந்த இந்தப் பாதகனுடைய தோள்களை ஒடித்து முறித்து உயிரைக் குடித்த போதுதான் நான் எடுத்த பிறவியும் அடுத்த கருமமும் முடித்த படியாம்; மலையைப் பறித்தெடுத்தேன் என்று மமதை கொண்டுள்ள இவனது தலையைப் பறித்தெடுத்து என் நிலையை உலகம் தெரிய நிலை நிறுத்துவேன்; கோதண்ட வீர னுடைய தூதன் ஆகிய நான் இப் பாதகனை நேரே பார்த்தும் யாதும் செய்யாமல் வேறே போவது பெரிய பேடித் தனமாம். இவனுடைய தோள் ஆற்றலும் வாள் ஆற்றலும் கேள் ஆற்றலும் ஆள் ஆற்றலும் என் தாள் ஆற்றலால் பாழ்படுத்தித் தோளாற் றலைத் துலக்கி இந் நாளாற்றலை நன்கு காட்டுவேன்" என்று பொங்கி எழுந்தான். ஏயிறு கடித்து இருகரனும் பிசைந்து என்றது உக்கிரவீரமாய் இவன் உருத்தெழுந்த நிலையை உணர்த்தி நின்றது. பல்லைக் கடித்து ஒல்லை விரைந்து கொல்லத் துடித்திருக்கிறான்.

இவ்வாறு சினந்து சீறி முனைந்து மூண்டவன் சிறிது நினைந்து மீண்டான். உள்ளக் கொதிப்பிலும் உணர்ச்சி துள்ளியது.

நேமியோன் பணி அன்றால்.

இராவணனைக் கொன்று தொலைக்க வேண்டும் என்று கன்றி

எழுந்த அனுமான் இங்ஙனம் கருதி அடங்கியிருக்கிறான்.

"சீதையை கண்டு வா!" என்றுதான் இராமன் கட்டளை யிட்டு அனுப்பினான்; அந்தப் பணியைச் செய்து முடியாமல் வேறு ஒன்று செய்யத் துணிவது விபரீதமாம் என்று தேறி நின்றான்.

தனக்குரிய காரியத்தைக் கருதிச் செய்வதே அறிவுடைமை யாம்; மாறு புரிவது மதிகேடாம். தன்னிடம் சிறந்த வலி அமைந்திருந்தாலும் தகுந்த காலம் வரும்வரையும் அடங்கியிருக் கவேண்டும். ஆலத்தை அமுதமாக உண்டு அமரரைக் காத்தருளிய நீலகண்டன் போல் நிறைந்த ஆற்றலுடையராயினும் மேலோர் காலம் கருதியே நிற்பர். ஞாலத்தையெல்லாம் உண்டு அழிக்க வல்ல கடலும் காலத்தை நோக்கியே கரையின்றி அடங்கிக் கிடக்கின்றது; ஆதலால் இதுபொழுது யாதும் செய்யலாகாது என்று நிலைமைகள் பலவும் நினைந்து அமைதியுடன் அடங்கினான்.

காலம் பார்த்து இறைவேலை கடவாத கடல் ஒத்தான்.

அன்று அனுமான் அடங்கி நின்றதற்கு இது உவமானமாய் வந்துள்ளது. உவமேயத்தின் நிலை உய்த்துணர வுற்றது

கடல் எல்லையில்லாத வல்லமை யுள்ளது; உலகம் முழுவ தையும் ஒருங்கே அழிக்க வல்லது; அங்ஙனம் பெரு வலியுடைய தாயினும் ஒரு சிறிதும் மீறாமல் காலம் கருதி யாண்டும் அடங்கி யிருத்தலால் அது ஈண்டு எண்ண வந்தது. வேலை = கரை. வீரன் அடங்கியது வீரை அடங்கியதாம்.

பேறும் பேராற்றலும் ஓராற்றலும் யாரும் அளவு காண முடியாதபடி அதிசய நீர்மையாய்ப் பெருகியுள்ளவன் ஆதலால் அனுமானுக்குக் கடல் உவமையாய் வந்தது. யுகாந்த காலத்தில் பொங்கி எழுகின்ற ஊழிக்கடல்போல் உருத்தெழுந்த அனுமான் கருத்தோடு அடங்கி நின்ற காட்சியை இங்ஙனம் காட்டியருளி னார். மாருதி அடக்கம் வாரிதி அடக்கம் என்று கூறியிருக்கும் குறிப்பு கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து கொள்ளத் தக்கது.

கல்விக் கடல் அறிவுக் கடல் வீரக் கடல் கருணைக் கடல் பொறுமைக் கடல் தருமக் கடல் நீதிக் கடல் ஞானக் கடல் என இம் மான வீரன் மருவி யுள்ளமையை வானமும் வையமும் அறிந்து தெளிய ஈண்டு இவ்வாறு வரைந்து காட்டினார்.

எந்தக் காரியத்தையும் முன்னும் பின்னும் தீர்க்க தரிசனமாய் எண்ணி ஆராய்கின்றான். நுண்மாண் நுழைமதி இப் புண்ணிய வீரனிடம் புகலடைந்துள்ளது "இன்று போராடி இராவணனை நான் வென்று மீண்டாலும் என் ஆண்டவன் புகழுக்கு அது மாசு ஆம்" என்று மறுகியிருக்கிறான்.

தனது அருமைத் தேவியைக் கவர்ந்து போனவனை நேரே கண்டு பொருது வென்று ஆவியைக் கவர்ந்தான் என்னும் அரிய புகழைக் கோதண்ட வீரன் அடைய வேண்டும்; அங்ஙனம் அடையாதபடி இடையே புகுந்து நான் ஒன்று செய்வது குரங்குச் சேட்டையாய் முடியும் என்று இரங்கியுள்ளான்.

முற்றப்போர் முடித்தது ஒரு குரங்கு என்றால் முனை வீரன்
கொற்றப் போர்ச்சிலைத் தொழிற்குக் குறைவுண்டாம்.

தன்னையும் தலைவனையும் எவ்வாறு எண்ணி ஒழுகி வருகிறான் என்பதை இம் மொழிகளால் தெளிவாகத் தெரிந்து கொள்கிறோம்.

இராமனை ஈண்டு முனை வீரன் என்றது அவனது நிலைமைகளையெல்லாம் நினைவு கூர்ந்து உணர வந்தது. அரக்கர் குலத்தோடு இராவணனை அழித்து ஒழிக்க மூண்டு முனைந்துள்ள வீரன் என்பதை வினைத்தொகைப் பெயரால் விளக்கியருளினான்.

முனை முகத்தில் இராமன் ஒருவனே தனி வீரன்; அவனோடு எதிர்த்து எவரும் முனை மழுங்காமல் நிற்க முடியாது; அழிந்து மாளுதல், அல்லது ஒழிந்து மீளுதல்: இந்த இரண்டில் ஒன்றே யாண்டும் எதிரிகள் கண்ட பலனும்.

முனை = துணிவு, போர், கூர். கொற்றப் போர்ச்சிலை என்று கோதண்டத்தைக் குறித்தது போரில் வீர விளையாடல் புரியும் அதன் வித்தக நிலையை உய்த்துணர.

இவ்வாறு எவ்வழியும் அதிசய வெற்றி வீரனாயுள்ள ஆண்டவன் நேரே மூண்டு செய்து நீண்ட புகழ் அடைய வுரிய அரிய கருமத்தை அடியவனான சிறியவன் செய்வது பெரிய தவறாம் என்று கருதி உறுதியை உணர்ந்து உள்ளம் அடங்கினான்.

குறைவுண்டாம் எனக் குறைந்தான்.

அநுமான் எண்ணி அடங்கியுள்ள நிலைமைய இவ்வண்ணம் காட்டியுள்ளார். நிறைந்த பெருந்தகைமையும் உயர்ந்த உள்ளப் பண்பும் இங்கே துலங்கியுள்ளன. அல்லும் பகலும் அனவரதமும் இராமனுடைய நலங்களையே கருதி யுருகி வரும் பேரன்பாளன் என்பதை இவ்வுரைகளால் உணர்ந்து கொள்கின்றோம்.

## நிலைமை தெளிந்தது.

சினந்து மூண்ட அநுமான் பலவும் நினைந்து இவ்வாறு அடங்கினான். மீண்டும் கூர்ந்து ஓர்ந்தான். பிராட்டியை யாண்டும் காணேனே! என்று கலங்கினான். நேரே காணவில்லையாயினும் அக் குலமகள் புனித நிலையில் உள்ளாள் என்பதை மதியூகயாய் நுணுகி யுணர்ந்து மனம் மிக மகிழ்ந்தான்.

புன்னிலைய காமத்தால் புலர்கின்ற நிலை பூவை
நன்னிலையில் உளள் என்னும் நலன் எனக்குநல்குமால்.

அநுமான் அநுமானமாய் இவ்வாறு யூகித்து உணர்ந்துள்ளான்.

இராவணன் விரக வேதனையால் வெந்து உருகுகிறான்; அந்தப் புரத்திலுள்ள சொந்த மனைவியர் எவரும் அவனுடைய பள்ளியறையுள் வந்து படுத்திருக்கவில்லை. காமக் கிழத்திகளான போக மடந்தையர் யாரையும் கருதாமல் காமதாபத்தால் அவன் அலமந்து உழல்கின்றான். மதன விதனம் மரண வேதனையாய் முறுகியுளது.

காமத்தால் புலர்கின்ற நிலை என்றதனால் அவன் உணர்வழிந்து உயிர் உலர்ந்து துயர் மிகுந்திருக்கும் நிலையினை நிலை தெரிந்துள்ளமை புலனாய் நின்றது. அவன் கருதியபடி கருத்து நிறைவேறியிருந்தால் இவ்வாறு மறுகி யுருகி மயங்கி உயங்கி உயிர் உலையான் ஆதலால் அதனை யூகமாய் ஓர்ந்து ஆய்ந்து உள்ளம் தேர்ந்தான்.

அவன் ஆவி அலைந்து குலைந்து தேய்வதே தேவி நிலை குலையாமல் இருக்கிறாள் என்பதை நேரே தெளிவுறுத்தி நின்றது.

பூவை நன்னிலையில் உளள் என்று இன்னவாறு இவ் வீரன் உன்னியுணர்ந்து உள்ளம் பூரித்துள்ளான்.

கற்பைக் காத்து அற்புதத் திரு உள்ளது என்னும் உறுதி பெரிதும் பேரின்பம் தந்தது. இருக்கும் இடத்தை அறிய விருப்பம் மீதூர்ந்தது. அந்த இடத்தை விட்டு அயலே போயினான்.

## கவலை அடைந்தது.

இராவணனுடைய அரண்மனையை நீங்கி விரைவில் அகன்று வெளி நகரங்கள் எங்கணும் விழியூன்றி நாடினன். யாண்டும் காணாமையால் முடிவில் அவலம் மீதூர்ந்து கவலையடைந்தான். எந்த இடர் நேர்ந்தாலும் யாதும் சிந்தை கலங்காத திட வீரன் அன்று நொந்து கவன்றான்.

கொன்றானோ கற்பழியாக் குலமகளைக் கொடுந்தொழிலால்
தின்றானோ அப்புறத்தே செறித்தானோ சிறையறியேன்
ஒன்றானும் உணரகிலேன் மீண்டினிப்போய் என்னுரைக்கேன்
பொன்றாத பொழுதெனக்குக் கொடுந்துயரம் போகாதால். (1)

கண்டுவரும் என்றிருக்கும் காகுத்தன் கவிகுலத்தோன்
கொண்டுவரும் என்றிருக்கும் யானிழைத்த கோளிதுவால்
புண்டரிக நயனத்தான் பாலின்னம் போவேனோ
விண்டவரோ டுடன்வீயாது யான்வாளா விளிவேனோ. (2)

கண்ணியநாள் கழிந்துளவால் கண்டிலெனால் கனங்குழையை
விண்ணடைதும் என்றுரை யாண்டிருந்தி விரைந்தயான்
எண்ணியது முடிக்ககிலேன் யான்முடியா திருப்பேனோ
புண்ணியம்என் றொருபொருளென் உழைநின்றும் போயதால்

ஏழுநூறு யோசனை சூழ்ந்து எயில் கிடந்தது இவ்விலங்கை
வாழுமா மன்னுயிர்யான் காணாத மற்றில்லை
ஊழியான் பெருந்தேவி ஒருவரையும் யான்காணேன்
ஆழி தாய் இடராழி இடையே வீழ்ந் தழிவேனோ! (4)

வல்லரக்கன் தனைப்பற்றி வாயாறு குருதியுகக்
கல்லரக்கும் கரதலத்தால் காட்டென்று காண்கேனோ
எல்லரக்கும் அயில்நுதிவேல் இராவணனும் இவ்வூரும்
மெல்லரக்கின் உருக்கியுக வெந்தழலால் வேய்கேனோ? (5)

வானவரே முதலோரை வினவுவெனேல் வல்லரக்கன்
தானொருவன் உளனாக உரைசெய்யும் தருக்கிலரால்
ஏனையர்கள் எங்குரைப்பார்? எவ்வண்ணம் தெரிகேனோ?
ஊனழிய நீங்காத உயிர்சுமந்த உணர்விலேன். (6)

எருவைக்கு முதலாய சம்பாதி இலங்கையில் அத்
திருவைக் கண்டன னென்என்றான்; அவனுரையும் சிதைந்ததால்;
கருவைக்கு நெடுங்கரைக் கடலிடையே கரையாதென்
உருவைக் கொண்டின்னமு நான் உளனாகி யுழல்கேனோ (7)

வடித்தாய்பூங் குழலாளை வானறிய மண்ணறியப்
பிடித்தானிவ் வடலரக்கன் எனுமாற்றம் பிழையாதால்
எடுத்தாழி இலங்கைதனை இருங்கடலின் இட்டிவனை
முடித்தாலே யான்முடிதல் முறைமன்ற என்றுணர்வான். (8)

எள்ளுறையும் ஒழியாமல் யாண்டையும் உளனாய்த்தன்
உள்ளுறையும் அழகனைப்போல் எம்மருங்கும் உலாவினான்
புள்ளுறை யுய்யானத்தை யுறநோக்கி அயல்போவான்
கள்ளுறையு மலர்ச்சோலை அயல்ஒன்று கண்ணுற்றான். (9)

(ஊர்தேடு படலம், 226-234)

அனுமானுடைய பரிதாப நிலைகளை இங்கே தெளிவாக அறிந்து பெரிதும் பரிவுறுகின்றோம். கருதி வந்த கருமம் கைகூடவில்லையே! என்று உறுதி குலைந்து உள்ளம் மறுகி இவ் வீரன் உளைந்து சிந்தித்துள்ள எண்ணங்களை ஊன்றி நோக்குவார் எவரும் கண்ணீர் சிந்தி உண்ணீர்மையை உணர்ந்து உருகி நின்று உரிமை மீக் கூர்வர். பரிதாப நிலைகள் பெரிதாயுள்ளன.

இம் மதிமானுடைய செயல் இயல்களிலும் உரை உணர்வுகளிலும் அதிசய நிலைமைகள் குதிகொண்டு குலாவுகின்றன. பெருமித நீர்மைகள் யாண்டும் பெருகி மிளிர்கின்றன. வீரமும் சோகமும் வீறு கொண்டு விளையாடுகின்றன. எவ்வழியும் ஊக்கம் மிகவுடையவன் இவ்வழி ஏக்கம் மிகுந்து இளைந்திருக்கிறான். பல பல எண்ணங்கள் பரிந்து வந்துள்ளன.

எவ்வளவு நினைவுகள்! எவ்வளவு துணிவுகள்! எவ்வளவு கவலைகள்! எவ்வளவு அவலங்கள்! இலங்கை முழுதும் தேடினான்; எவ்வழியும் நாடினான்; பிராட்டியை யாண்டும் காணாமையால் பெருங் கவலை நீண்டது; பெருந் துயரங்கள் மூண்டன.

கற்பு அழியாக் குலமகளைக் கொன்றானோ?

முடிவில் இப்படி எண்ண நேர்ந்தான். கொடிய கொலை பாதகன் என இராவணனை இவன் கருதியுள்ளது இவ்வாறு அறிய வந்தது. காமப் பித்தனான அத் தீயவன் தன் விருப்பத்திற்கு இணங்கவில்லையே என்று கொதித்து இத் தூயவளைக் கொன்றிருப்பானோ? என உள்ளம் துடித்து உளைந்து பதைத்திருக்கிறான்.

கற்பு அழியாக் குலமகள் எனச் சீதையை இம்மேதை இங்கே குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வந்தது. அத் தூர்த்தன் கொல்

லுதற்கு இவள் கற்பு அழியாமை காரணம் ஆதலால் அதனைக் கருதியுரைத்தான். கற்பு அழிந்திருந்தால் அவன் கொன்றிருக்க மாட்டான்; அற்புத போகங்களில் வைத்து ஆதரித்துப் போற்றி யிருப்பான். இந்தக் குறிப்புகளை யெல்லாம் நுனித்துணர்ந்து அதி வினயமாய் இனித்த அடைமொழிகளை இசைத்தருளினன். புனித மான இனிய பெயரால் தேவியின் தனி மகிமையை நன்கு துலக்கினன். பான்மை வழியே மேன்மை வெளியாகின்றது.

கற்பு அழியாதவளை குலமகள் என்றதனால் அது அழியின் எவளும் இழி மகளே ஆவள் என்பது தெளிவாகி நின்றது.

பெண்மைக்குக் கற்பு உயிரினும் சிறந்தது என்னும் உண்மை ஈண்டு நுண்மையாய் உணர வந்தது. உள்ளம் கவன்று சோகமாய் உரையாடும் பொழுதும் உறுதி நலங்கள் மொழிகளில் ஒளி வீசி வருகின்றன.

தனது தலைவனுடைய தருமபத்தினி நிலை குலையவில்லை என்று நெஞ்சம் களித்தாலும் அக் குலமகள் உயிரோடு இருக்கி ருளோ? இல்லையே! என்று அல்லலுழந்து அலமந்திருக்கிறன். கொன்று முடித்தானே? அல்லது வேறு அண்டங்களில் எங்கே யாவது கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிறனே? ஒன்றும் தெரியவில்லையே? என்று கன்றியுளைந்து கடுந்துயர் கூர்ந்தான். உள்ளத் துயரம் உயிரையும் வெறுத்தது.

பொன்றுபொழுது எனக்குக் கொடுந் துயரம் போகாது.

சுத்த வீரனை அனுமான் இப்படி எண்ண வேண்டுமானல் அந்தச் சித்தத்தில் ஊன்றிய துயரம் எத்தகை நிலையது! என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

நான் செத்துத் தொலைந்தால் ஒழிய இந்தக் கொடிய துயரம் என்னை விட்டு நீங்காது என்று ஏங்கியிருக்கிறன். பிராட்டியைக் காணவில்லையே என்ற கவலை உயிரை வாட்டி நிற்றலால் அது கொடுந் துயரம் எனக் கடிந்து பேச வந்தது.

## கருதி நொந்தது.

செய்து முடிப்பதாக உறுதி கூறி வந்த காரியம் முடியாமை யினல் தான் முடிந்து போவது நலம் என்று முடிவு கூர்ந்தான். பல எண்ணங்கள் நெஞ்சை ஊடுருவி நெடுந்துயர் செய்தன.

கண்டுவரும் என்றிருக்கும் காகுத்தன்; கவி குலத்தோன்
கொண்டுவரும் என்றிருக்கும்; யான் இழைத்த கோள் இது!

இராமனும் சுக்கிரீவனும் தன்னை எண்ணி எதிர்பார்த்திருத்தலையும், தன்னுடைய நிலையையும் இன்னவாறு எண்ணி மறுகியுள்ளான். சீதையை எப்படியும் பார்த்தே மீளுவான் என்று காகுத்தன் கருதியிருப்பார்; கையோடு அம்மையைக் கொண்டு வந்து விடுவான் என்று கவியரசன் உறுதி பூண்டிருப்பார்; ஆண்டவனும் அரசனும் அவ்வாறு என்னை நம்பி எதிர் பார்த்திருக்க நான் இங்கே இவ்வாறு யாதொன்றும் செய்யாமல் இருக்கின்றேனே! ஐயோ! என்று அலமந்து நின்றான்.

தன் அருமை மனைவியைக் கண்டு உறுதி மொழிகளை அனுமான் உரைத்து வரலாமேயன்றி அழைத்து வரமுடியாது; அயலவர் எவர் பின்னும் அவள் வர மாட்டாள்; தனது வரவையே எதிர்பார்த்திருப்பாள் என அக் குலமகள் இயல்புகளை நன்கு தெரிந்தவன் ஆதலால் கண்டுவரும் என்று காகுத்தன் கருதியிருந்தான். அந்தக் கருத்தை நன்கு தெரிந்தவன் ஆதலால் அதனை இங்ஙனம் குறித்தான். அந்த உத்தமியினுடைய உள்ளப் பாங்குகளைத் தெளிவாக அறியாதவன்; அனுமானுடைய பேராற்றலை நேரே தெரிந்தவன் ஆதலால் பிராட்டியைக் கையுடன் கொண்டு வந்து சேருவான் என்று சுக்கிரீவன் குறித்து நின்றான்; அந் நிலைமையைக் கூர்ந்துணர்ந்துள்ளமையால் கொண்டு வரும் என்று அம்மன்னன் உறுதியாகத் தன்னை நம்பியிருப்பாரே! என மாருதி வெம்பி மறுகினான்.

தலைவர் இருவருடைய உள்ளங்களையும் உறுதி நிலைகளையும் அனுமான் கருதி யுணர்ந்திருக்கும் திறம் எவரும் நுணுகி யுணர வந்தது. அதிசய மேதை அவதி தெரிந்து அலமந்துள்ளது.

காரியத்தில் செலுத்தி விட்டவர் என்னை மிகவும் மேன்மையாகக் கருதி எதிர்பார்த்திருப்பர்; நானோ ஒன்றும் புரியாமல் வீணே திரிகின்றேன் என்று வெதும்பியிருக்கிறான். நம்பிகளுடைய நம்பிக்கைகளுக்குப் பங்கம் விளைந்ததே என்று பரிதபித்துள்ளான். தனது நிலைமையை நினைந்து நெஞ்சம் கவன்றான்.

யான் இழைத்த கோள்இது! என்றது இகழ்ச்சிக் குறிப்போடு உள்ளம் உடைந்து சொல்லிய சொல். கோள் = வலி. புலி என என்னை அவர் அங்கு எதிர்பார்த்துளார்; நான் பூனையாய் இங்கே உழலுகின்றேன் என இளிவாக இகழ்ந்து உளைந்துளான்

இராம தூதனாய் வினையாண்மையில் மூண்டு வீறுடன் வந்த நான் ஈண்டு யாதும் புரியாமல் மீண்டு போய் அந்த ஆண்டகை முகத்தில் எப்படி விழிப்பேன்? என்று வெப்போடுவெய்துயிர்த்து நின்றான். யாவும் எண்ணி நோவுடன் அவலமுறுகின்றான்.

புண்டரிக நயனத்தான் பால் இன்னம் போவேனோ?

என்றது அங்கே போகக் கூடாது; இங்கேயே சாக வேண்டும் என்று தவித்தபடியாயது. மானமும் வீரமும் இங்ஙனம் மறுகச் செய்துள்ளன. புண்டரிகம் = தாமரை. நயனம் = கண்.

தாமரைக் கண்ணன் என இராமனை ஈண்டு உரைத்தது அந்த அழகிய விழிகளை நினைந்து உளம் உருகியுள்ளமை யுணர வந்தது. கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண! என்று முதலில் கண்ட பொழுதே அதில் நெஞ்சம் பறி போயுள்ளான்

“கருணை கனிந்து எழில் சுரந்து விழுமிய நிலையில் ஒளி புரிந்து விளங்குகின்ற அந்தச் செந்தாமரைக் கண்கள் நான் நல்ல தொழில் செய்து சுப சோபனத்தோடு வருவேன் என்று வழி நோக்கி நிற்குமே! அவை எதிர்பார்த்தபடி யில்லாமல் இழிவாய் நான் போவது கொடிய பழியாமே! அவ்வாறு அங்கே போவதினும் இவ்வாறு இங்கேயே சாவது நல்லதே!” என்று தத்தளித்துத் தவித்து நின்றதை இன்னம் போவேனோ? என்னும் இவ்வுரை உணர்த்தியுள்ளது. போனால் மானம் போம்; ஈனமாம்; அவ் வூனம் நேராமல் உயிரை ஒழித்து விட வேண்டும் என்று உறுதி செய்து நின்றான்.

பிராட்டியை நான் கண்டு வருவேன் என்று புண்டரிக நயனங்கள் பெரிதும் ஆவல் கொண்டிருக்கும்; நான் காண வில்லை என்று நேரே போய்ச் சொன்னால் அவை கலங்கித் தவிக்கும்; அந்த அழகிய விழிகள் அழுவதைக் காண்பதினும் நான் ஈண்டு அழிவது இனிது என உறுதி பூண்டான்.

துயரமான நினைவுகள் உயிர் வேதனைகளாய் எழுந்தன

"ஒரு மாதத்துள் கிட்கிந்தைக்கு மீண்டு வந்து சேர வேண்டும் என்று மன்னன் குறித்து விட்ட தவணையும் கழிந்து போயதே; அம்மையை இன்னமும் காண வில்லையே; நான் என்ன செய்வேன்? என்னோடு வந்த துணைவர் எல்லாரையும் மகேந்திர மலையில் விட்டு வந்தேன்; அவர்கள் முன்னமே துணிந்தபடி அங்கேயே இறந்து போயிருக்கலாம்; சிறந்த ஒரு பெரிய வீரன் போல் அவரைத் தேற்றியிருத்திவிட்டுக் கடல் கடந்து வந்தேன்; காரியத்தைச் சாதிப்பவன்போல் வீரியம் பேசி விரைந்து புகுந்த நான் ஈண்டு யாதும் செய்யாமல் இழிந்து நிற்கின்றேன்; ஈனமாய் இருப்பதை விட மானமுடன் மாண்டு முடிவது நல்லது; தருமம் என்னிடம் இல்லாமையினால் கருமம் கை கூடாது போயது; எழுநூறு யோசனை அளவு விரிந்து பரந்துள்ள இந்த இலங்காபுரியில் நான் காணாத இடம் யாதும் இல்லை; எல்லா உயிரினங்களையும் கண்டு எங்கும் தேடியிருக்கிறேன். தேவியைக் காண வில்லையே! இனி நான் ஆவி வைத்திருக்கலாமா? தனியே வீணே சாவதைக் காட்டிலும் ஆவதைச் செய்து விட்டு அழிவது மேல்; மீண்டும் அரண்மனைக்குள் புகுந்து இராவணனைப் பிடித்து அடித்து உதைத்து "அடே அரக்கப் பயலே! எங்கள் அரசியை வைத்திருக்கும் இடத்தைக் காட்டு! காட்டு!" என்று இரத்தங்கள் கக்கக் குத்திக் கேட்டுப் பார்ப்போம்; சொல்லவில்லையானால் அவன் தலைகளைத் திருகி எறிந்து அரக்கர் குலத்தையும் அழித்து இலங்கையைக் கடலில் கவிழ்த்து விட்டு என் உடலை மாய்த்துக் கொள்ள வேண்டும்; என் ஆண்டவனுக்கு வேண்டியதைச் செய்ய வில்லையே! சீதையம்மை இலங்கையில் இருக்கிறாள் என்று சம்பாதி உறுதியாகச் சொன்னான்; அவன் வாய்மொழி பொய்யாகாதே! ஐயோ! எனக்கு உய்யும் வழி ஒன்றும் தோன்றவில்லையே!" என்று இவ்வாறு வெய்ய வேதனைகளில் உழந்து வெய்துயிர்த்து நின்று அனுமான் அலமந்து நொந்தான்.

புண்ணியம் என்று ஒரு பொருள்
என் உழை நின்றும் போயது.

தான் எண்ணியபடி யாதும் முடியவில்லையே என்று உள்ளம் உடைந்து கண்ணீர் விட்டுச் சொல்லிய படியிது. புண்ணியமே எல்லா நலங்களையும் நல்கியருளும் என்று இந்தப் புண்ணியவான் எண்ணியுள்ளமையை இவ்வுரை இனிது காட்டியுள்ளது.

தன்னிடம் தருமம் இருந்தால் தான் கருதியபடி கருமம் முடிந்திருக்கும்; அவ்வாறு முடிய வில்லையே என்ற பரிதாபத்தால் இவ்வாறு கூற நேர்ந்தான். உற்றுள்ள நிலைமைகளை நினைந்து உள்ளம் மறுகியிருக்கிறான். ஊர் தேடி முடிந்தும் ஓர் முடிவும் காணாமல் இவ் வீரன் பரிதபித்திருப்பது நீர்மை சுரந்து திகழ்கின்றது. கடமையுணர்வு கடுங் கவலை புரிந்தது.

இராமபிரானுக்கு உரிமையாய் உதவி செய்ய முடியவில்லையே; இப் பிறவியால் என்ன பயன்? என்று உருகி மறுகியுள்ளமை உரைகள் தோறும் தெரிய வருகின்றது.

## அசோகவனம் புகுந்தது.

எள் அளவு இடமும் தவறாமல் இலங்கை மாநகரம் முழுவதும் தெளிவாகத் தேடியும் சீதையைக் காணாமையால் உள்ளம் உடைந்து தவித்த அனுமான் முடிவில் உயிரை ஒழித்து விட வேண்டும் என்று துயரம் மீதூர்ந்து துணிந்தான். அவ் வமையம் இயல்பாய் அயலே நோக்கினான். குளிர் மரங்கள் செறிந்து எழில் நிறைந்துள்ள விழுமிய பொழில் ஒன்றைக் கண்டான். அதிசய நிலையில் விளங்கிய அந்தப் பூஞ் சோலையைக் கண்டதும் சிறிது தேறி அங்கே போய்ப் பார்க்க வேண்டும் என்று உறுதி பூண்டான். ஆண்டும் பிராட்டி இல்லை ஆனால் இலங்கையை அழித்து விட்டு மாண்டு போக வேண்டும் என்று மனந்துணிந்து இந்த ஆண்டகை அங்கே சென்றான்.

இந்திரனுடைய நந்தனவனத்திலும் சிறந்து சுந்தர மிகுந்து துலங்கியுள்ள அந்தப் பூங்காவனத்தைப் பார்த்ததும் ஆங்கு அம்மை இருக்கலாம் என்று மாருதி ஒருவகை ஆறுதலடைந்தான். உள்ளே புகுந்தான். அதுபொழுது இரவு இருபது நாழிகை கழிந்திருந்தது.

இனிய கனி மரங்களும் அரிய செய் குன்றுகளும் தெளிந்த நீர் நிலைகளும் சிறந்த இளங் கொடிகளும் உயர்ந்த பூஞ்செடிகளும் பாரிசாதம் முதலிய தேவ தருக்களும் அதிசய மகிமையுடைய அசோக விருட்சங்களும் மாதவிப் பொதும்பர்களும் நிறைந்து இயற்கை வளங்களோடு எழில் சுரந்து திகழ்கின்ற அப் பொழிலுள் அனுமான் புகுந்தபொழுது தன்னையறியாமலே ஓர் உவகைக்

களிப்பு உள்ளே பொங்கி எழுந்தது. எங்கும் சுப சகுனங்கள் இனிது தோன்றின. உள்ளம் உவந்து ஒளி புரிந்தது.

அதிசய நிலையில் நிலவியுள்ள அப் பூஞ்சோலையுள் நுழைந்ததும் அதன் அரிய பல காட்சிகளை வியந்து நின்றான்.

இராம தூதனை இந்த நிலையில் நிறுத்தி விட்டுச் சீதை இருந்த நிலையை மேலே கவி காட்ட நேர்ந்தார். காட்சிப் படலம் என்னும் இதில் அரிய பல உண்மைகள் மருவியுள்ளன.

## சீதை இருந்த நிலை.

இராமன் தேவியை இராவணன் கவர்ந்து கொண்டு வந்து இலங்கை அருகே இனிய பூங்காவனத்தே தனியே வைத்திருந்தான். அந்தக் குலமகளுடைய மனம் கனிந்து இசைந்தருளும்படி நாளும் நாளும் விழைந்து வந்து பணிமொழிகள் பல கூறி அவன் நயந்து போவான். அந்தத் தூர்த்தனுடைய வார்த்தைகளைக் கேட்டு உள்ளம் கொதித்து வெறுத்து அகற்றித் தன் விதியினை நொந்து பதியினையே நினைந்து இப் பதிவிரதை அசோக வனத்தில் சிறையிருந்த நிலை உரையிடலரிய சோகங்களை யுடையது. அந்த அவல நிலைகளை அயலே வருகின்ற கவிகளில் காண்போம்

வன்மருங்குல்வாள் அரக்கியர் நெருக்கவங் கிருந்தாள்
கன்மருங்கெழுந்து என்றும்ஓர் துளிவரக் காணா
நன்மருந்து போல் நலனற உணங்கிய நங்கை
மென்மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்தாள். (1)

துயிலெனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள்
வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யாள்
மயிலியற்குயில் மழலையாள் மானிளம் பேடை
அயிலெயிற்று வெம் புலிக்குழாத்து அகப்பட்ட தன்னாள்.

விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல் வெருவல்
எழுதல் ஏங்குதல் இரங்குதல் இராமனை எண்ணித்
தொழுதல் சோருதல் துளங்குதல் துயருழந்துயிர்த்தல
அழுதலன்றிமற் றயல்ஒன்றும் செய்குவ தறியாள். (3)

தழைத்தபொன்முலைத் தடங்கடந்து அருவிபோய்த் தாழப்
புழைத்தபோல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்
இழைக்கும் நுண்ணிய மருங்குலாள் இணைநெடுங் கண்கள்
மழைக்கண் என்பது காரணக் குறி என வகுத்தாள். (4)

அரிய மஞ்சினோடு அஞ்சன முதலிய அதிகம்
கரிய காண்டலும் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்
உரிய காதலின் ஒருவரோடு ஒருவரை உலகில்
பிரிவெனும் துயர் உருவுகொண்டாலன பிணியாள். (5)

துப்பினல் செய்த கைகொடு கால்பெற்ற துளிமஞ்சு
ஒப்பினன் தனை நினைதொறும் நெடுங்கண்கள் உகுத்த
அப்பினல் நனைந்து அருந்துயர் உயிர்ப்புடை யாக்கை
வெப்பினல் புலர்ந்து ஒரு நிலை யுருத மென்துகிலாள். (6)

அரிது போகவே விதிவலி கடத்தல் என்று அஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச்
சுருதி நாயகன் வரும்வரும் என்பதோர் துணிவால்
கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள். (7)

ஆவியந்துகில் புனைவது ஒன்றன்றி வேறறியாள்
தூவியன்ன மென்புனலிடைத் தோய்கிலா மெய்யாள்;
தேவு தெண்கடல் அமிழ்து கொண்டு அநங்கவேள் செய்த
ஓவியம் புகை யுண்டதே ஒக்கின்ற உருவாள். (8)

கண்டிலன் கொலாம் இளவலும், கனைகடல் நடுவண்
உண்டிலங்கை என்று உணர்ந்திலர் உலகெலாம் ஒறுப்பான்
கொண்டிறந்தமை அறிகிலராமெனக் குழையாப்
புண்டிறந்ததின் எரிநுழைந் தாலெனப் புகைவாள். (9)

மாண்டு போயினன் எருவைகட்கு அரசன்மன் மற்றோர்
யாண்டை என்னிலை அறிவுறுப்பார்கள் இப்பிறப்பில்
காண்டலோ அரிதென்றென்று விம்முறும் கலங்கும்
மீண்டு மீண்டு புக்கு எரிநுழைந்தாலென மெலிவாள். (10)

என்னை நாயகன் இளவலை எண்ணலா வினையேன்
சொன்ன வார்த்தை கேட்டு அறிவிலள் எனத்துறந்தானே?
முன்னை யூழ்வினை முடிந்ததோ என்றென்று முறையால்
பன்னவாய்புலர்ந்து உணர்வுதேய்ந்து ஆருயிர் பதைப்பாள்.

அருந்து மெல்லடகு யாரிட அருந்துமென்று அழுங்கும்
விருந்து கண்டபோது என்னுறுமோ? என்று விம்மும்
மருந்தும் உண்டுகொல் யான்கொண்ட நோய்க்கென்று மயங்கும்
இருந்த மாநிலம் செல்லரித் திடவும் ஆண்டெழாதாள். (12)

வன்கண் வஞ்சனை அரக்கரித் துணைப்பகல் வையார்
தின்பர் என்னினிச் செயத்தக்க தென்று தீர்ந்தானே

தன் குலப் பொறை தன்பொறை எனத் தணிந்தானே
என்கொல் எண்ணுவேன் என்னுமங்கிராப்பகல் இல்லாள்.

பெற்ற தாயரும் தம்பியும் பெயர்த்தும் வந்து எய்திக்
கொற்றமாநகர் கொண்டிறந்தார்களோ குறித்துச்
சொற்ற வாண்டெலாம் உறைந்தன்றி அந்நகர் துன்னன்
உற்ற துண்டெனப் படருழந்து உருதநோய் உறுவாள். (14)

சீதையின் பரிதாப நிலைகளை இந்த உரைகளில் பார்க்கின்றோம். உள்ளம் உருகி உயிர் மறுகிக் கண்ணீர் வெள்ளம் பொழிகின்றோம். அரிய பிரிவு பெரிய பரிவாய்ப் பெருகியுளது. அவலக் கவலைகள் அளவிடலரியன. கவிகளைக் கருதி நோக்குவார் எவரும் துயரவுருவங்களைத் தெளிவாக் கண்டு அளிமீக் கொள்ளுவர்.]

சிறை நிலை.

அசோக வனத்தில் ஒரு அழகிய குளிர் தருவின் அடியில் சீதை மருவி யிருந்தாள். அரக்கியர் பலர் புடை சூழ்ந்து பாதுகாத்து வந்தனர். கரிய மேகங்களிடையே இனிய சந்திரன் மெலிந்து ஒளி வீசியுள்ளது போல் கொடிய இராட்சசிகள் இடையே சானகி பொறையோடு பொலிந்து விளங்கினள். மழை முகம் காணுத பயிர் என உளம் மிக மறுகி உயிர் வாடி யிருந்தாள். விழித்த கண்கள் இமையாமல் என்றும் ஒருபடியாய் ஒன்றி நின்றன. எழில்ஒளி தவழ்ந்த சிவந்த திருமேனி வெயிலிடை வைத்த விளக்கைப் போல் பொலிவிழந்திருந்தது. விழுதல், விம்முதல், வெதும்புதல், வெருவுதல், எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித் தொழுதல், சோருதல், துளங்குதல், துயருழந்து உயிர்த்தல், அழுதல் அன்றி வேறு ஒன்றும் அறியாதவளாய் அம்மை அங்கே அலமந்திருந்தாள். எப்பொழுதும் கண்ணீர் மாலை மாலையாய் மார்பில் வழிந்தோட ஆலைவாய்க் கரும்பு போல் துயரில் உயிர் நைந்து அயர்ந்து கிடந்தாள். கார் மேகங்களைக் கண்டாலும் நீர் நிலைகளைக் காணினும் தனது ஆருயிர்க் காதலனைக் கருதி அவசமாய் நின்றாள். பிரிவு எனும் துயரமே ஓர் உருவம் மருவி உருகியுள்ளது போல் பரிதாபமாய் மறுகி யிருந்தாள். உடுத்தி யிருந்த ஆடை கண்ணீரால் நனைந்தும், உடல் வெப்பத்தால் உலர்ந்தும் அடுத்தடுத்து நிலை மாறி நின்றது. எப்படியாவது தன் நாயகன் வந்தருளுவான் என்று திசைகள் நோ

றும் ஆவலோடு நோக்கி நாளும் அவாவி நின்றாள். கவலைகள் பல கதுவி நின்றன: "இலங்கை வேந்தன் என்னை எடுத்து வரும் பொழுது இடையே வந்து தடுத்து வீழ்ந்த சடாயு உயிரோடு இருந்தாலும் நிலைமையை எம் பெருமானிடம் சொல்லியிருப்பார்; முதிய வயதினரான அந்த அருளாளர் மாண்டு போனமையால் ஆண்டு நிகழ்ந்த ஆபத்தை எனது ஆண்டகையிடம் யார் சொல்லுவார்? அந்தோ! மாய மானின் பின் போன நாயகன் அந்த அருமைத் தம்பியை எதிரே கண்டாரோ? காண வில்லையோ? யாதும் தெரிய வில்லையே! அவ் வுத்தம இளவலை அநியாயமாய்த் திட்டி விரட்டிய பழிகாரியான எனக்குத் தெய்வம் விழி திறந்து நோக்கி அருள் புரியுமா? உழுவலன்புடைய அருமைத் தம்பியைச் சிறுமையாகப் பேசிய மூழு மூடம் என்று இகழ்ந்து அண்ணல் என்னை வெறுத்து விட்டிருப்பாரோ? ஐயோ! எவ்வளவு மடமைகளை மதியீனமாய்ச் செய்திருக்கிறேன்! என் கதி இவ்வாறு ஆயதே! பெற்ற தாய் முதலானவர் வந்து என் கொற்றக் குரிசிலைத் திருவயோத்திக்கு அழைத்துக் கொண்டு போயிருப்பரோ? நான் இழைத்த தீவினை தான் என்னே! ஒளி மிகுந்த சூரிய குலத் தோன்றலின் சீரிய குடிக்கு என்னால் சிறுமை நேர்ந்து விட்டதே! இனி நான் இருந்து வாழ்வது பெரும் பிழை" என இவ்வாறு மறுகி மயங்கி உருகி உயங்கி அங்கே இந்தப் பெண்ணரசி கண் கலங்கியிருந்த அவல நிலைகள் எண் கடந்து நின்றன.

கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள்.

பெண்கள் நாயகம் இலங்கைச் சிறையில் காலம் கழித்திருந்த நிலையை ஞாலம் தெரிய இது நன்கு விளக்கியுள்ளது.

இமை கொட்டாமல் விழித்த கண்கள் விழித்த படியே எப்பொழுதும் இருந்தன என்றதனால் அந்த இருப்பின் இயல்பும் துயரும் எளிதே தெளிவாய் உணர்ந்து கொள்ளலாம். பரம் பொருளை நினைந்து யோகக் காட்சியிலிருக்கும் தத்துவ ஞானிகள் போல் இந்த உத்தமி தனது இனிய தலைவனை எண்ணிச் சித்தம் குவிந்துள்ளமையை இது உய்த்துணர வந்தது.

இமையா நாட்டமுடையளாய் அமைதியோடு ஆருயிர்த் துணையைக் கருதி யுருகியிருந்த காட்சியை யாரும் மானச நோக்கால் கண்டு கொள்ளும்படி கவி வரைந்து காட்டியிருப்பது அரிய

சுவையை யூட்டியுள்ளது. பார்த்த பார்வை மாருமல் ஒரே நோக்காய் நிற்பது உயிரின் ஏக்கத்தை நிறை தூக்கி நேரே காட்டுகின்றது. பரம சிந்தனையுடைய ஞானயோகி போல் சானகி இராமனைத் தியானித்து மோனமா யிருந்துள்ளாள். அவ் வுண்மையைக் கண்கள் காட்டியுள்ளன.

அல்லும் பகலும் யாதும் கண் துயிலாமல் கணவனையே உள்ளியுருகி அல்லலுழந்து இந் நல்லாள் அங்கு கண்ணியிருந்தாள்.

வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள்.

இந்த விளக்கத்தை விழைந்து பார்த்து உளைந்து நிற்கின்றோம்.

உயிரடைந்துள்ள துயர நிலையை முன்னம் கண்கள் மூலம் காட்டினார்; இதில் அந்த உடலிருந்த நிலையை உணர்த்தியருள் கின்றார். மின்னின் ஒளி; பொன்னின் சோதி என்றபடி எழில் ஒளி தவழ்ந்திருந்த அந்தச் சிவந்த திருமேனி இதுபொழுது பொலிவிழந்து நலிவடைந்திருக்கும் மெலிவினை எளிது தெளிவுறுத்த உவமை அமைந்தது.

விளக்கு தனக்கு உரிமையான இரவில் இனிய ஒளி வீசி எங்கும் சொலித்து விளங்கும்; மாறான பகலில் வேறாய் மழுங்கி மெலிந்து நிற்கும். அம் மெலிவும் நலிவும் விழி தெரிய வந்தன.

எல் ஒத்த நிறத்தன்; அஞ்சன வண்ணன் என அழகு சுரந்துள்ள இராமன் அருகே இருந்த பொழுது பேரெழிலோடு பேரொளி கனிந்து சீதை உவந்திருந்தாள்; அவனைப் பிரிந்து வேறே அயலாய் வந்தமையால் இயல் ஒளி சிதைந்து துயருழந்து உயிர் மறுகியுள்ளாள் ஆதலால் பகல் விளக்கு என நேர்ந்தாள்.

உடல் மெலிந்து படர் மலிந்து உளம் கவன்று பொலிவு குன்றி பொறையோடு உறைந்திருக்கும் இக் குலமகளை வேயிலிடை வைத்த விளக்கு என கண்டு விளக்கியிருப்பது வியனான காட்சியாய் விளங்கியுள்ளது.

சிறையிடை வைத்த சீதை வெயிலிடை வைத்த விளக்கு என உருவ ஒளி மழுங்கி இருந்தாள் என்றதனால் அவளது பரிதாபமான பருவரல் நிலைகளை உணர்ந்து கொள்ளலாம்.

அருமை நாயகனைப் பிரிந்துள்ள அப் பிரிவு உயிரை வாட்டியிருத்தலால் உடல் ஒளி குன்றி வாடி வதங்கி மறுகி மயங்கி உருகி உயங்கி உணர்வு கலங்கி உயிர் பரிந்துள்ளாள்.

பிரிவுத் துயரால் உயிர் மறுகியுள்ளமையை உடல் நிலை உணர்த்தியது. அரிய காதலர் பிரிவு பெரிய நோதலாயது.

"பகல்எரி சுடரின் மேனி சாயவும்,
பாம்பூர் மதியின் நுதல்ஒளி கரப்பவும்,
எனக்குநீ உரையா யாயினை; நினக்குயான
உயிர் பகுத்தன்ன மாண்பினேன் ஆகலின்
அது கண் டிசினல் யானே" (நற்றிணை, 128)

கணவனைப் பிரிந்து வருந்தியிருந்த ஒரு தலைவியின் நிலையை இது காட்டியுள்ளது. பகலில் எரிகின்ற விளக்குப் போல் மேனி ஒளி மழுங்கி, நுதல் பசந்து துயருழந்து இருந்தனள் எனச் சங்கத்துச் சான்றோரும் இங்ஙனம் பாடியுள்ளனர்.

பிரிவில் பரிவுற்றிருக்கும் மகளிர்க்குப் பகல் விளக்கை உவமை கூறிவது கவி மரபு என்பது தெரிய வந்தது.

"To enlarge or illustrate this power and effects of love is to set a candle in the sun." (Burton)

"காதலின் விளைவுகளை உங்கள் முன் நான் விரித்து விளக்குவது சூரியன் எதிரே விளக்கை ஏற்றுவது போலாம்" என்னும் இது இங்கே அறியத் தக்கது. வெயிலில் இட்ட விளக்கு விளக்கமின்றி ஒளி மழுங்கியுள்ளமையைக் கலையுலகம் இங்ஙனம் கருதிக் காட்டியுளது.

தீபச் சுடர் போல் சோதித்திருந்த திருமேனி தேசழிந்து மாசு படிந்துள்ளது என மனம் படிய மொழிந்தார்.

பகலில் மழுங்கிய விளக்கு இரவில் ஒளி வீசி மிளிர்வது போல் கால வேற்றுமையால் கோலம் குலைந்துள்ள அவள் உரிய கணவனை அடைந்து பெரிய மகிழ்ச்சியை விரைவில் பெறுவாள் என்பதும் நுணுகி யுணர வந்தது

ஒளியிலா மெய்யாள் என்றது என்றும் ஒளியுடைய மெய்யாள் அன்று அங்கே இருந்த அவல நிலையை அறிய. வெய்யோன் வைத்த சிறையில் செய்யாள் மறுகியிருந்தாள்; அந் நிலையை

நோக்கி ஐயோ! என்று அலறி வையம் முழுவதும் வருந்தி நின்றது. உத்தம பத்தினி துயரம் உலக வுள்ளங்களை உருக்கியுளது.

மழைக்கண் என்பது காரணக்குறி என வகுத்தாள்.

சீதையின் கண்களை நம்முடைய கண்கள் காணும்படி இது காட்டியுள்ளது. ஓயாமல் அழுது அழுது அந்த அழகிய விழிகள் இமைகள் வீங்கி எழில் சிதைந்திருந்தன.

கரிய நீர்மையால் முன்னம் கண்ணுக்கு உவமையாயிருந்த கார்மேகம் இதுபொழுது நீரைப் பொழிகின்ற செயலினாலும் நிலையொத்து நின்றது. மேகம் பொழிவது போல் கண்கள் நீரைச் சொரிந்து கொண்டேயிருந்தன. மூலைத்தடம் கடந்து அருவி போய்த் தாழ என்றதனால் மார்பில் வழிந்தோடிய நீர் நிலையை ஓரளவு நேரறிந்து கொள்ளலாம்

வஞ்சமும் களவும் இன்றி மழை என மதர்த்த கண்கள் என விழுமிய நிலையில் மகிமை பெற்றிருந்த விழிகள் அஞ்சன வண்ணனை எண்ணி எண்ணி அழுது தவித்துள்ளன.

அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதலிய அதிகம்
கரிய காண்டலும் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்.

கருமை நீலம் பசுமை முதலிய உருவங்கள் எது எதிரே தோன்றினும் உடனே சானகி உருகி அழுது விடுவாள். இராமன் கரிய கோலத் திருமேனியன் ஆதலால் அவனது உருவச் சாயல்கள் தேவியின் உள்ளத்தை உருக்கியிருக்கின்றன. மஞ்சு = மேகம். கண்ணின் நீர் கடல் புகுந்தது என்றது அந்தப் பெண்ணரசி அழுது தவித்திருக்கும் அவல நிலையை அளந்து காட்டியது. பிரிய நாயகனைப் பிரிய நேர்ந்தது பெரிய பரிதாபமாயது.

பிரிவு எனும் துயர் உருவு கொண்டாலன பிணியாள்.

உழுவலன்பு சுரந்த காதலர் இருவர் ஒருவரை விட்டு ஒருவர் பிரிய நேர்ந்தால் அது பெரிய உயிர் வாதனையாம். அந்தப் பிரிவு என்னும் துயரமே ஒரு உருவம் கொண்டு உருகி மறுகியது போல் பிராட்டி கருகி யிருந்தாள்.

காதலன் பிரிவு சாதலினும் கொடிதாய் வேதனை புரிந்திருந்தது. விழுதல் எழுதல் தொழுதல் அழுதல் முதலிய துயரத்

துடிப்புகளால் அக் குலமகள் உயிர் பதைத்திருந்த நிலைமைகளை ஒருவாறு உணர்ந்து உள்ளம் பதைக்கின்றோம். கவலைகள் உயிரைத் தின்றிருக்கின்றன; தள்ளாடி எழுவதும், துயரம் தாங்க மாட்டாமல் கீழே விழுவதும், கிடந்தபடியே ஏங்குவதும், இராமனை நினைந்து திசை நோக்கித் தொழுவதும், உளம் மறுகி அழுவதும் ஆகிய அவல நிலைகளில் அழுங்கி யிருந்தாள்.

அழகுத் தெய்வமாகிய மன்மதன் அரிய அமுதத்தால் செய்த ஒரு திவ்விய ஓவியம் செவ்வி சிதைந்து புகை படிந்திருந்தது போல் தேவியின் திருமேனி தேசழிந்திருந்தது. பல வகையான கவலைகளால் உளம் ஊசலாடி உயிர் அலமந்து துயர வாரியில் அயர்வாய் ஆழ்ந்து செயலிழந்து கிடந்தாள்.

காண்டலோ அரிது என்று என்று விம்முறும்; கலங்கும்
மீண்டு மீண்டு புக்கு எரிநுழைந்தாலன மெலிவாள்

தன் அருமைக் கணவனை மீண்டும் காண முடியுமா? என்று சானகி கருதித் தவித்திருக்கும் நிலையை இதில் கண்டு கவலுகின்றோம். துணை பிரிந்த அன்றில் போல் மரண வேதனையை மருவியிருக்கிறாள். காண்டல் அரிது என்று கருதவே உள்ளம் துடித்து உணர்வு கலங்கி உயிர் பதைத்துள்ளாள். இனிய நாயகன் பிரிவு கொடிய தீயாய் நெடிது தகித்துள்ளது. தீயுள் வீழ்ந்த மலர்க்கொடி போல் பிரிவாகிய நோயுள் ஆழ்ந்து நொந்து துடித்திருக்கிறாள். உள்ளம் ஒரு நிலையிலின்றி உளைந்து தவித்துள்ளது.

என்னை நாயகன் இளவலை எண்ணலா வினையேன்
சொன்ன வார்த்தை கேட்டு அறிவிலள் எனத்துறந்தானோ?

சீதை எண்ணித் தவித்துள்ள எண்ணங்களையும் சீவ சுபாவங்களையும் கண் எதிரே கண்டு கருதி உளைகின்றோம். முன்னம் இளைய பெருமானைச் சினந்து மொழிந்ததை நினைந்து நினைந்து நெஞ்சம் குலைந்திருக்கிறாள்.

"மானின் பின் போன உன் அண்ணனுக்கு அபாயம் நேர்ந்துள்ளது என்று தெரிந்தும் நீ விரைந்து ஓடிப் போய்ப் பாராமல் இங்கேயே நாடி நிற்கின்றாயே! உன் நிலை சரி இல்லை; போனவன் காணி இருந்தவனுக்கு என்றபடி நீ எண்டு ஊனமாய் நிற்பது ஈனம்" என்னும் குறிப்போடு முன்பு இலக்குவனை நோக்கிச் சொன்ன சொற்களை எண்ணி நொந்து இன்னலுழந்துள்ளாள்.

எண்ணலா வினையேன் எனத் தன்னை இகழ்ந்து நொந்தது நிகழ்ந்த நிலைகளை நினைந்து. அந்த உத்தம இளவல் கூறிய உறுதி மொழிகளைக் கேளாமல் அறிவு கெட்டுப் பேசி அவனை அயலே போக்கியது கொடிய பாவம் என்று குலை துடித்திருக்கிறாள். பரம பரிசுத்தனைப் பழுது கூறிய அத் தீவினையே தன்னை அழுது தவிக்கும்படி செய்திருக்கிறது என வெய்துயிர்த்துள்ளாள்.

இளவலை வைது போக்காதிருந்தால் தனக்கு இந்த இழவுகள் நேர்ந்திரா என்று உளவினை ஓர்ந்து உள்ளம் இரங்கினாள்.

கண்ணினும் உயிரினும் இனிய தமது புண்ணியத் தம்பியை நான் எண்ணாது பேசினேன் என்று அண்ணல் என்னை இகழ்ந்து போயிருப்பாரோ? எனக் கண்ணீர் சொரிந்து கவன்றிருக்கிறாள். தனது நாயகனுடைய சகோதர வாஞ்சையை நன்கு தெரிந்தவள் ஆதலால் இங்ஙனம் நைந்து புலம்பினாள். தம்பியர்பால் பேரன்பும் பெருமதிப்பும் உடையவர்; தான் பேசியுள்ள பிழையைக் கேட்டால் தன்னை ஏசி வெறுத்திருப்பார் என்று எண்ணியிருக்கிறாள். எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணிப் பெண்ணீர்மையோடு கண்ணீர் பொழிந்து இப்பேராசி வருந்தியுள்ளாள்.

அருந்து மெல் அடகு யாரிட அருந்தும்?என்று அழுங்கும்;
விருந்து கண்டபோது என் உறுமோ? என்று விம்மும்:

கொண்ட கணவனுடைய நிலைகளை நினைந்து இக் குலமகள் இங்ஙனம் உளம் உருகி உரையாடியுள்ளாள். வாய் மொழிகள் மனத்தையும் மதியையும் வாழ்க்கை வாம்புகளையும் உலகம் அறிய உணர்த்தி விடுகின்றன.

கணவனைப் பேணி அதிதிகளை உபசரித்து விருந்து புரிந்து எவ்வுயிர்க்கும் இதமாய் இப் பதிவிரதை வாழ்ந்து வந்துள்ள உண்மைகளை இங்கே ஓர்ந்து கொள்கின்றோம்.

தன் நாயகனுக்கு இனிய உணவு ஊட்டி ஆதரிப்பார் யார்? என்று வேதனையடைந்துள்ளாள். நாளும் உடனிருந்து குறிப்பறிந்து நன்கு பேணி வந்த பதிவிரதை ஆதலால் இங்ஙனம் பதியின் தனிமையை நினைந்து பரிதபித்தாள்.

வனவாசம் வந்தபின் முனிவர்கள் போல் விரத ஒழுக்கங்களை மருவியிருந்தமையால் காய் கனி கிழங்கு கீரை முதலிய எளிய

உணவுகளையே இராமன் உண்டு வந்தான். அயோத்தியிலிருக்கும் பொழுது பொன் கலங்களில் அறுசுவை உணவுகளைப் பருவம் தவறாமல் நுகர்ந்து வந்த சக்கரவர்த்தித் திருமகன் கானகம் புகுந்து பட்டினி யிருந்து தவ வாழ்க்கை புரிந்துள்ளான்.

காட்டுக் கீரைகளைப் பக்குவமாச் சமைத்துத் தன் காதலனை ஊட்டி வந்தாள் ஆதலால் அந்தக் கானக போனகத்தைச் சானகி கருதி மொழிந்தாள். அடகு = இலைக் கறி.

அடகு யார் இட அருந்தும்? என்றதனால் இராமனுடைய வனவாச வாழ்வும் உணவு நிலையும் உலகம் அறிய வந்தன.

தன் கணவனுடைய மனம் வாடாமல் காலம் பார்த்துப் பசி வேளைக்கு உரிமையோடு உணவு தருவார் யார்? என்று இக் குல மகள் உள்ளம் உருகி யிருத்தலால் பதியின்பால் கொண்டுள்ள உழுவலன்பினைத் தெளிவாக உணர்ந்து கொள்கின்றோம்.

விருந்து கண்ட போது என் உறுமோ?

நாயகன் நிலைமையை முதலில் எண்ணி வருந்தினவள் பின்பு அவன்பால் வந்து போகின்ற அதிதிகளின் நிதிகளை இங்ஙனம் கருதி நொந்து மறுகி யுருகியுளாள்.

தன்பால் வருகின்றவர் எவராயினும் அவரை அன்போடு ஆதரித்து அனுப்புவது இராமனது வழக்கம். அந்தத் தருமகுண சீலர் இது பொழுது தனியே என்ன செய்வார்? என்று எண்ணி இரங்கிக் கண்ணீர் சொரிந்திருக்கிறாள்.

தான் அருகு இருந்தால் தன் நாயகன் கருதியபடியே உணவுகளை உளவாக்கி விருந்தினர்க்கு ஊட்டி அவரை உபசரித்து அனுப்பலாம்; தான் பிரிந்திருத்தலால் அப் பெருமான் விருந்தினரைக் கண்டபொழுது பெருந்திகைப்பாய் வருந்துவாரே! என்று இப் பெண்ணரசி வருந்தியிருக்கிறாள்.

இல்லற வாழ்க்கையில் இந்தச் சதிபதிகள் இருந்து வந்திருக்கும் நல்லற நீர்மைகள் இங்கே இச் சொல்லால் துலங்கி நிற்கின்றன. உபகார சீலங்கள் உரைகள்தோறும் ஒளி புரிகின்றன.

விருந்தினரைப் பேணுவது சிறந்த மனை வாழ்க்கையின் உயர்ந்த பண்பாம். அந்தப் பான்மையில் மேன்மை எய்தியுள்ள

மையால் சானகிராமருடைய நீர்மையும் சீர்மையும் நிலைமையும் தலைமையும் வானமும் வையமும் தெரிய வந்தன.

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. (குறள் 86)

விருந்து ஓம்புதலின் பெருமையைக் குறித்து வந்திருக்கும் இந்த அருமைத் திருக்குறள் ஈண்டு அறிய வுரியது. வந்த அதிதிகளை ஆதரித்து ஈண்டு விருந்து புரிந்து அருளுகின்றவன் மறு பிறப்பில் தேவனாய்ச் சிறந்து விளங்குவான் என்றதனால் இது எவ்வளவு பெரிய புண்ணியம் என்பது எளிது தெளிவாம்.

சீவர்கள்பால் பெருங் கருணையுடையவன் ஆதலால் யாவருக்கும் பசி தீர்த்தருள்வதில் இராமன் யாண்டும் தலை சிறந்து நிற்கின்றான். அந்தத் தரும சீலனுக்குத் தகுதியான இனிய மனைவியாய் மருவியுள்ளமையால் விருந்து பேணுவதைச் சிறந்த கடமையாகச் சீதை விழைந்து நின்றாள்.

தான் பிரிந்திருத்தலால் தனியே தன் நாயகன் விருந்து கண்டபோது பேண முடியாமல் நாணுவாரோ என்று வருந்தியுள்ளாள். சதிபதிகள் ஒன்று கூடியிருந்தாலொழிய விருந்து ஓம்புதல் முதலிய இல்லற தருமங்கள் இனிது நடைபெறாது என்பது இங்கே தெளிவாய் நின்றது.

"அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்துஎதிர் கோடலும் இழந்த என்னை."
(சிலப்பதிகாரம், 16)

கணவனைப் பிரிந்திருந்த கண்ணகி வருந்தி யுரைத்துள்ள இது ஈண்டு அறிந்து கொள்ள வுரியது. சிறந்த பதிவிரதைகளுடைய வாழ்க்கை வழக்கங்கள் பெருந்தன்மைகள் நிறைந்து எவ் வழியும் தரும நீதிகள் சுரந்து தகவுடன் திகழ்கின்றன.

உயிர்களின் பசியை நீக்குவது உயர்ந்த புண்ணியம்; விருந்து என்னும் பேரால் மனை வாழ்வில் அது தலைசிறந்து நிற்கின்றது

ஞான சீலனை சனகன் மனையிலும், தானவீரனை தசரதன் குடியிலும் விருந்து ஓம்புதல் பெருந்தகைமையாய் விளங்கியிருந்தது; பிறந்த குடியிலும் புகுந்த மனையிலும் திருந்திய பண்பாய்

அமைந்திருந்தமையால் விருந்து பேணலை நினைந்து சானகி இங்கே வருந்தியுள்ளாள். பழகி வந்தது பரிவு தந்தது

துயர நிலையிலும் உள்ளத்தில் உறைந்துள்ள தருமநீர்மைகள் உலகறிய வந்தன. விருந்தை நினைந்து இவ்வாறு வருந்தினவள் அங்கே இருந்துள்ளபடியை இறுதியடியில் துலக்கினர்.

இருந்த மாநிலம் செல் அரித்திடவும் ஆண்டு எழாதாள்.

சீதை சிறையில் இருந்த உறுதி நிலையை இது உணர்த்தியுள்ளது. அமர்ந்திருந்த நிலத்தைக் கறையான் அரித்துச் சிதைத்த பொழுதும் அந்த இடத்தை விட்டு எழுந்திராமல் இராம சிந்தனை செய்து அழுந்தியிருந்தாள். இது எவ்வளவு பெரிய அரிய நிலை! எத்துணை மனவுறுதி! தேகத்தை மறந்து மனம் அடங்கி ஆத்தும தியானத்தோடு மருவியிருக்கின்ற பரம தத்துவ யோகிகளுடைய உத்தம இயல்பு பிராட்டியிடம் சித்த நிரோதமாய்ச் செறிந்திருக்கின்றது. அருந் தவநிலை தெரிந்து கொள்ளவந்தது.

தன் உடம்பை முற்றும் புற்று மூடிய போதும் வால்மீகி முனிவர் இராம நாமத்தைச் செபித்துக் கொண்டே அரிய தவ யோக நிலையில் ஆழ்ந்து இருந்தது போல் சானகியும் இலங்கைச் சிறையில் இருந்துள்ளாள்; அந்த அற்புத இருப்பின் ஒப்புறவைச் செல் என்னும் சொல்லால் கவி உய்த்துணர வைத்தருளினர்.

அரிய பொறையோடு கொடிய சிறையில் இனிய குலமகள் மருவியிருந்தது பெரிய தவமாய்ப் பெருகி நின்றது. அயலான் ஊரில் அமர்ந்து கொண்டு தன் அருமை நாயகனை அனவரதமும் உரிமையோடு கருதி உள்ளம் உருகி உயிர் மறுகிக் கண்ணீர் சொரிந்து பெண்ணீர்மை கனிந்து திகழ இப் புண்ணியவதி பொருந்தியிருந்தது எண்ணரிய பரிவாய் விண்ணும் கவல விரிந்து விளங்கியது. உற்ற கவலைகள் உயிரை வாட்டியிருக்கின்றன.

பெற்றதாயரும் தம்பியும் பெயர்த்தும் வந்து எய்திக்
கொற்ற மாநகர் கொண்டிறந் தார்களோ?

தன்னை அறவே கைவிட்டுத் தன் நாயகன் திருவயோத்திக்கு மீண்டு போயிருப்பாரோ! என்று இப்படி எண்ணித் தவித்திருக்கிருள். கோசலைத் தாயும் பரதாழ்வாரும் மறுபடியும் வந்து

வருந்தி அழைத்து அருந்திறலாளனை ஊருக்குக் கொண்டு போயிருப்பாரோ? எனக் கருதி மறுகிக் கவலை கூர்ந்துளாள்.

பெற்ற தாயையும் உற்ற தம்பியையும் பேரன்போடு பேணுவாரேயன்றி இடையே தொடர்பாய் அயலிருந்து வந்த தன்னை அவ்வாறு பேணுவாரா? என்று பெண்மை மதியால் பேதுற்றுள்ளமை எண்மையாய் எதிர் தெரிந்தது. பெயர்த்தும் என்றது சித்திர கூடத்தில் முன்னம் வந்து போனதை உய்த்துணர வந்தது.

தன் குலப்பொறை தன்பொறை எனத் தவிர்ந்தானே?

தன் குடும்பத்தைக் காப்பாற்றுவது தனது கடமை என்று கருதி என்னை மறந்து போயிருப்பரோ? என இன்னவாறு உன்னி உன்னி உளைந்து தன்னை இகழ்ந்து நொந்து தளர்ந்து கவன்றாள்.

பதினான்கு ஆண்டுகள் வரையும் வனவாசம் செய்வதாக உறுதி கூறி வந்திருத்தலால் அந்த எல்லை கழியும் அளவும் நகர்க்குச் செல்லார் என்று உள்ளம் தேறினாள். அவ் வீர வள்ளலை மீளவும் காண முடியுமா? என்று கருதி ஏங்கினாள்.

கூடி வாழ்ந்த பொழுது நிகழ்ந்த சம்பவங்களை எல்லாம் நினைந்து நினைந்து உருகினாள். தன் கணவனுடைய உருவ எழில்களையும் குண நலங்களையும் கொடை நீதிகளையும் வீரப்பிரதாபங்களையும் எண்ணி எண்ணிக் கண்ணீர் மல்கி மறுகினாள்.

மெய்த் திருப்பதம் மேவென்ற போதினும்
இத் திருத்துறந்து ஏகுஎன்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருந்த முகத்தினை யுன்னுவாள். (1)

தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்
வாங்கு கோல வடவரை வார்சிலை
ஏங்கு மாத்திரத்து இற்று இரண்டாய் விழ
வீங்கு தோளை நினைந்து மெலிந்துளாள். (2)

இன்னல் அம்பர வேந்தற் கியற்றிய
பன்னலம் பதினாலாயிரம் படை
கன்னல் மூன்றிற் களம்படக் கால்வளை
வின்னலம் புகழ்ந் தேற்றி வெதும்புவாள், (3)

ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பிநின் தம்பி;
தோழன்; மங்கை கொழுந்தி எனச் சொன்ன
வாழி நண்பினை யுன்னி மயங்குவாள். (4)

மெய்த்த தாதை விரும்பினன் நீட்டிய
கைத்தலங்களைக் கைகளின் நீக்கி வேறு
உய்த்தபோது தருப்பையில் ஒண்பதம்
வைத்த வேதிகைச் செய்தி மனக்கொள்வாள். (5)

உரங்கொள் தேமலர்ச் சென்னி யுரிமைசால்
வரங்கொள் பொன்முடி தம்பி வனைந்திலன்
திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்கு
இரங்கி ஏங்குவது எண்ணி இரங்குவாள். (6)

பரித்த செல்வம் ஒழியப் படருநாள்
அருத்தி வேதியர்க்கு ஆன்குலம் ஈந்தவர்
கருத்தின் ஆசைக் கரையின்மை கண்டிறை
சிரித்த செய்கை நினைந்தழும் செய்கையாள். (7)

மழுவின் வாளினன் மன்னரை மூவெழு
பொழுதின் நூறிப் புலவுறு புண்ணினீர்
முழுகினான் தவ மொய்ம்பொடு மூரிவில்
தழுவு மேன்மை நினைந்துயிர் சாம்புவாள். (8)

ஏகவாளிஅவ் இந்திரன் காதன் மேல்
போக ஏவிஅது கண்பொடித்த நாள்
காக முற்றும் ஓர் கண்ணில வாக்கிய
வேக வென்றியைத் தன்தலை மேற்கொள்வாள். (9)

வெவ்விராதனை மேல்வருந் தீவினை
வவ்வி மாற்றரும் சாபமு மாற்றிய
அவ்விராமனை யுன்னித்தன் ஆருயிர்
செவ்விராதுணர் வோய்ந்துடல் தேம்புவாள். (10)

(காட்சிப் படலம் 20-29)

தன் நாயகனுடைய குண நீர்மைகளையும் குல வீரங்களையும் செயல் இயல்களையும் எண்ணி ஏங்கிச் சானகி இவ்வாறு மறுகியுள்ளாள். பழைய நினைவுகள் பரிதாப நிலைகளில் பெருகி வந்துள்ளன. உடனிருந்து கண்ட அனுபவங்கள் உள்ளத்தை உருக்கியிருக்கின்றன. நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எல்லாம் நேரே தோன்றி ஆர்வத்தை நீட்டி ஆருயிரை வாட்டியுள்ளன.

சக்கரவர்த்தியாய் முடி சூடுக என்று தந்தை வேண்டிய பொழுதும், அந்த மணி மகுடத்தை இழந்து காட்டுக்குப் போ என்று கைகேசி ஓட்டிய போதும், யாதொரு மாறுதலும் இன்றி அமைதியாய்ப் பொலிவு பொங்கி யிருந்த இராமனது திருமுக மண்டலத்தை நினைந்து நினைந்து நெஞ்சம் கரைந்திருக்கிறாள்.

மானச நோக்கில் அன்பும் ஆர்வமும் பெருகி இன்பமும் துன்பமும் மருவி எனவும் கரைய இணைந்து பிணைந்துள்ளன.

பெரிய அரச திருவையும், கொடிய வறுமையையும் ஒரு நிறையாகக் கருதியுள்ள அரிய அற்புத நிலையைத் தன் அருமை நாயகன்பால் நேரே கண்டிருந்த கற்பரசி அந்தக் காட்சியைக் கருதியுருகினாள். பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்தது நினைவு வெளியில் நேரே தோன்றியுள்ளது.

சிறந்த அரச குலமகன்; உயர்ந்த சுகபோகி; தருந்த யவ்வன பருவம்; இவ்வளவு இன்ப நலங்கள் நிறைந்துள்ளவன் துன்ப மய மான அடவிக்குப் போ என்று கொடியவள் கூறவே உடனே உவந்து சென்றது வியந்து நோக்க வந்தது. ஓடும் பொன்னும் ஒக்க நோக்குவதை, உலக பந்தம் நீங்கிய உயர்ந்த தவ நிலைக்கு உரிமையாக் காட்டுவர். அதனினும் இது மிக அருமையுடையது. அயலான பொன்னை மயலாய் விழையாமையை அது விளக்கி யுளது இதன் இயலும் செயலும் உயர் நிலையின.

தேச முழுவதும் ஆளும் பெரிய அரச திரு உரிமையாய் மருவி முடி புனைந்து அரியணை அமர நேர்ந்துள்ள சமையத்தில் யாவும் கைவிட்டுக் காட்டுக்கு நடந்து போ என்று இந்த அரச குமாரனை ஓட்டியிருப்பது அதி பரிதாபமான கொடிய துயரமாம்.

அந்த இருவகை நிலையிலும் ஒரு முகமாய் உள்ளம் ஒத்து இனிய அமைதியோடு இருந்தது மனித இயல்பை மீறியுள்ளது.

முற்றும் பற்று அற்ற முனிவர்களிடத்தும், அரிய பெரிய துறவிகளிடத்தும் காண முடியாத அற்புத சித்த சாந்தியை இங் கே சக்கரவர்த்தித் திருமகனிடத்தே கண்டு வியந்து கருதி உருகுகின்றோம். யாவும் அதிசய நீர்மைகளாய் மேவி யுள்ளன.

மெய்த்திரு என்றது அந்த அரச செல்வத்தின் உண்மை நிலையை உய்த்துணர. புனித நிலையில் பெருகியது; புண்ணியத்தால்

அமைந்தது; தருமம் சத்தியம் கருணை நீதிகளால் திரண்டு இட்சுவாகு முதல் பரம்பரையாய் உலக பரிபாலனமே செய்துவருகிற உண்மைத் திரு என்னும் தன்மை தெரிய வந்தது. பிறருடைய செல்வங்கள் எல்லாம் அதன் எதிரே போய்த்திரு வாய்ப் பொலிவிழந்து போம் என்பது புலனாய் நின்றது.

சில அரசர்களிடம் செல்வங்கள் நிறைந்திருக்கும்; அவை கொள்ளைப் பறிகளாய்ப் பலரையும் அல்லல் படுத்தி வந்திருக்கும்; இது அவ்வாறு அன்று என்னும் செவ்வி தெரிய விதந்து கூறினர்.

*அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பாலவை. (குறள், 659)

பொருளைக் குறித்து வந்துள்ள இந்த அருள் மொழியின் அமைதியை ஈண்டு உரிமையோடு கருதியுணர வேண்டும். பொல்லாத வழியில் வந்த செல்வம் அல்லலே செய்து போம் என்றதனால் அதன் அவல நிலைஅறியலாகும். அழ என்றது பொருளாசையுடையவர் புரிகின்ற இழவுகளின் அளவுகள் தெரிய வந்தது. பிறர் அல்லலடைந்து அழும்படி செய்து செல்வங்களைச் சேர்த்து வைப்பது தீமைகளை ஈட்டி வைப்பதேயாம்.

"Some treasures are heavy with human tears." (Ruskin)

"சில நிதியறைகள் மனிதருடைய கண்ணீர்களால் நிறைந்திருக்கின்றன" என ரஸ்கின் என்னும் ஆங்கிலப் பேராசிரியர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

பொருள் ஈட்டம் பெரும்பாலும் மருள் நீட்டமாய் மண்டி நிற்றலால் அங்கே அருள் காட்டம் அமையாது போகின்றது.

இவ்வாறான அல்லல் நிலை யாதும் இல்லாமல் யாண்டும் நல்ல தரும நெறியிலே பெருகியுள்ள அருமைச் செல்வம் ஆதலால் அயோத்தி மன்னன் பொருள் மெய்த்திரு என வந்தது.

---

* பிறர் அழுது புலம்பும் படி ஒருவன் கொடுமையாய்ப் பறித்துச் சேர்த்த பொருள் அவனை அழுது தவிக்கும்படி கடுமையாய் அது செய்து விட்டுப்போம்; நல்லவழியில் வந்த பொருள் நழுவிப் போனாலும் ஒல்லையில் மீண்டுவந்து உதவி புரிந்தருளும் என்பதாம். தருமவழி வந்தது இருமையும் இன்பம் தரும்: அவ்வழியேஈட்டி வருக என்று காட்டியருளினர்.

தனது அரச பதவியை ஏற்றருளும்படி தன்னுடைய அருமை மகனிடம் ஆவலோடு தசரதன் கூறினான் ஆதலால் அந்த ஆசைநிலையை மேவு என்னும் பதம் ஈண்டு இனிது உணர்த்தியது.

நம்பும் மேவும் நசை ஆகும்மே. (தொல்காப்பியம்)

அரச திருவைப் பெற்றருள் என்று அன்புத் தந்தை ஆசையோடு சொன்னபோது எப்படி இருந்தானோ அப்படியே முடி இழந்து வனம் போ என்று கைகேசி கூறிய போதும் சீர்மையோடு நிலவி நின்றான். வையம் கடந்த தெய்வீக நிலை ஐயனிடம் அமைந்துளது.

மேவு, ஏகு என்னும் இருமொழிகளுள் முன்னது ஆர்வமும், இன்பமும் சுரந்தது; பின்னது கடுமையும் கொடுமையும் நிறைந்தது; இருவகை நிலையிலும் ஒரு நிகராய் இவன் உள்ளம் மருவியிருந்தது; அதனை முகம் காட்டியது.

சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை ஒத்திருந்தது.

என அந்த முகத்தின் நிலைமையை இந்நாமம் விசித்திர உவமையால் விளக்கியருளினார். தண்ணீரில் உள்ள தாமரை பகலில் மலரும், இரவில் குவியும்; அவ்வாறு நிலை திரியாமல் எப்பொழுதும் ஒரே படியாய் அலர்ந்து பொலிந்திருக்கின்ற அதிசயமான ஓர் ஓவியத் தாமரையைப் படைத்து எதிர் நிறுத்தி இங்கே ஒப்புக் காட்டியிருக்கும் அழகு விழுமிய காட்சியாய் விளங்கி நிற்கின்றது. மன நிலையை முகம் காட்டும் ஆதலால் அது இனமாய் வந்தது. அகத்தில் இருந்தது முகத்தில் தெரிந்தது.

முடி புனைதற்காகத் தன்னை அன்போடு அடி வணங்க வந்துள்ள இராமனை நோக்கி "நீ அரசிழந்து இப்பொழுதே கானகம் போக வேண்டும்" என்று கொடிய கைகேசி கடிது கூறினாள். அக்கொடுமொழியைக் கேட்ட போது இக்கோமகன் முகம் எப்படி இருந்தது?

"அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா!"

இப்படி முன்னம் அங்கே * குறித்துள்ளமை இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. உதய காலத்தில் புதிதாய் மலர்ந்த செந்தாமரையினும் முகம் அலர்ந்து பொலிந்திருந்தது என்றதனால் அந்த இதயத்தின் உவகை நிலையை ஓர்ந்து கொள்கின்றோம்.

* இந் நூல் பக்கம் 1393, வரி 24 பார்க்க.

இயற்கைத் தாமரையை வென்றது; செயற்கைத் தாமரையை ஒத்திருந்தது; என்றது பிரம சிருட்டியினும் கவி சிருட்டி அதிசய முடையது என்பது அறிய வந்தது. சீவ வுணர்ச்சிகளை ஓவியக் காட்சிகளாக உணர்த்தியருள்கின்றார்.

சுக துக்கங்களில் சமன் ஒத்திருக்கும் தன்மை சீவன்முத்தர்களுக்கே அமையும்; அந்த அரிய பரிபக்குவ நிலை உலகை ஆளும் அரசனிடம் இயல்பாய் உரிமை பூண்டிருந்தது பெரிய அதிசயமாம். இனிய அரச வாழ்வையும், கொடிய வனவாசத்தையும் ஒரு படியாகக் கருதி நின்ற அரிய உள்ளம் உடைய இவ் வள்ளலைப் பிரிய நாயகி உள்ளியுருகிய பொழுது துள்ளி வந்துள்ள உரைகளை உலக வுள்ளங்கள் என்றும் அள்ளி நுகர்ந்து அதிசய ஆனந்தங்களை அடைந்து வருகின்றன.

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கும் உள்ளத் துரவோனே!—சித்தம்
வருந்தியவா என்என்றான் மாமறையால் உள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் தேர்ந்து. (நளவெண்பா)

அரசு இழந்து அடவி புகுந்த தருமனை நோக்கி வியாசமுனிவர் இவ்வாறு வினவியிருக்கிறார். நம் கவியின் வாக்கியங்கள் முழு உருவங்களில் இதில் வந்துள்ளன. கம்பருடைய இன்ப மொழிகளைப் புகழ்ந்திப் புலவர் அன்புரிமையோடு போற்றி வந்திருத்தலைப் பல வழிகளிலும் பார்த்து வருகிறோம்.

திருந்திய உள்ளப் பான்மையில் இராமரோடு தருமனை நேராகச் சொல்ல வந்தாலும் அல்லலில் அவர் சித்தம் வருந்தி அலமந்திருந்தார் என உள்ளதை ஒளியாமல் உரைத்து விட்டார்.

இன்பம் நேரின் மகிழ்தலும், துன்பம் சேரின் வாடுதலும் சீவர்களுடைய இயல்புகள்; அந்த நிலையைக் கடந்து மேலான நிலையில் உள்ளம் தெளிந்து உயர்ந்திருப்பது மிகவும் அருமை; அப் பெரு மகிமையை இங்கே நம் பெருமானிடம் உரிமையாக் கண்டு உள்ளம் பூரித்து உவகை மீதூர்ந்து வியந்து நிற்கின்றோம்.

இன்பமது அடைந்த காலை இனிதென மகிழ்ச்சி எய்தார்;
துன்பமது உற்ற போதும் துணை எனத் துளங்கிச் சோரார்;
இன்பமும் துன்பந்தானும் இவ்வுடற்கு இயைந்த என்றே
முன்புறு தொடர்பை ஓர்வார் முழுவதும் உணர்ந்த நீரார்.
(கந்த புராணம்)

இன்பம்வந் துற்ற காலை இருங்களி எய்தல் தானும்
துன்பம்வந் துற்ற காலைத் துயருழந்து அழுதல் தானும்
மன்பதை புரக்கும் வேந்தே! அறிவிலார் மாட்சி; நலலோர்
துன்பமும் இன்பந் தானும் தொல்வினைத் தொடர்ச்சி என்பார்.
(பிரமோத்தர காண்டம்)

இந்தப் பாசுரங்கள் இங்கே அறிய வுரியன.

அரிய ஞான சீலர்களுடைய மன நிலைகள் பெரிய அதிசயங்களாய்ப் பெருகியுள்ளன. அத்தகைய மேலான தத்துவஞானிகளும் வியந்து போற்றத் தக்க சித்த சாந்தமும் உத்தம நீர்மையும் இக் கோமகனிடம் சேமமாய்க் குடி கொண்டிருக்கின்றன.

தன் கணவனுடைய குணகணங்களை எண்ணி எண்ணிக் கண்ணீர் சுரந்து இப் பெண்ணரசி கரைந்திருந்துள்ளமையை உரைகளில் உணர்ந்து நாம் உள்ளம் கரைகின்றோம். மிதிலையில் வந்து தன்னை மணந்து கொள்ள வேண்டி அரிய வில்லை எளிதில் வளைத்த அந்த அழகிய தோள்களை நினைந்து நெஞ்சம் உருகினாள். கலியாணச் சடங்குகளில் அக் குலமகன் நடந்து கொண்ட நளின விளையாடல்களை இனிது சிந்தித்து விழி நீர் சிந்தினாள். பதினாலாயிரம் சேனைத் தலைவர்களுடன் முனைந்து வந்து விரைந்து வளைந்து வெகுண்டு பொருத கரனுடைய படைகள் முழுவதையும் மூன்றே நாழிகையில் கொன்று தொலைத்த அவ் வெற்றி வீரத்தை வியந்து மறுகினாள். கங்கைக் கரையில் குகனோடு நட்புரிமை கொண்டு பேசிய அற்புத நிலையைக் கருதி ஆர்வம் மீதூர்ந்தாள். "நீ என் தோழன்; எம்பி நின் தம்பி, இவள் உன் கொழுந்தி" என்று குகனை நோக்கி முன்னம் இராமன் சொன்ன மொழிகளை உன்னி உன்னி உள்ளம் உருகினாள். என்ன அன்பு! என்ன நண்பு! என்ன பண்பு! எவ்வளவு பெருந்தகைமை! எனக் காதலனுடைய அரிய நீர்மைகளை வியந்து பிரியம் மீதூர்ந்து புகழ்ந்தாள்.

ஏழை வேடன் என்றது குகனது நிலைமையையும் இராமனது தலைமையையும் கருதி வந்தது. முடி மன்னர் எவரும் அடி வணங்கித் தொழுகின்ற உயர்ந்த சக்கரவர்த்தித் திருமகன் தாழ்ந்த வேடனிடம் ஆழ்ந்த அன்பு பூண்டு ஆர்வத்தோடு அளவளாவியுள்ளது அதிசய நீர்மை ஆதலால் அதனை உவந்து துதி செய்து நின்றாள். தம்பி பரதனிடம் அந் நம்பி கொண்டுள்ள அன்புரிமையை நினைந்து நினைந்து என்புருகி இரங்கினாள்.

பெரிய அரச குலங்களையும் அரிய வீரர்களையும் பல தலை முறைகளாகக் கருவறுத்து வந்த பரசுராமனை ஒரு நொடியில் முறிய அடித்து உயிர்ப்பிச்சை உதவிய தன் நாயகனது உக்கிர வீர பராக்கிரமத்தை உடனிருந்து கண்டவள் ஆதலால் அவ் வீரக் காட்சியைக் கருதும் போதெல்லாம் ஆவி அலமந்து இத் தேவி மறுகினள். சித்திரகூட மலையில் இருந்த பொழுது காக வடிவம் பூண்டு கள்ளமாய் வந்த இந்திரன் சேய்மேல் அச் சுந்தரன் விடுத்த வாளியின் வேகத்தையும் வெற்றியையும் உள்ளம் கருதி உளைந்தாள். வள்ளல் இயல்புகளை உன்னி உன்னி உருகி உயிர் பரிந்தாள்.

## சிரித்ததை நினைந்து அழுதது.

இராமன் ஒருமுறை பலவகையான தானங்களைப் பலர்க்கும் கொடுத்தான். எல்லார்க்கும் யாவும் கொடுத்து முடிந்தபின் முடிவில் ஒரு முதிய வேதியன் ஆவலோடு வந்து "மகாராஜா! எனக்குத் தானம்" என்றான். "உமக்கு என்ன வேண்டும்?" என்று இராமன் கேட்டான். "ஒரு பசு வேண்டும்" என அவ் வயோதிகன் சொன்னான். நல்ல இளங் கன்றுகளையுடைய ஏழு பசுக்களை இவ்வள்ளல் ஈந்தான் அவனுக்கு ஆசை அதிகமாயது. ஒன்று கேட்டோம், ஏழு தந்தார்; மேலும் கேட்போம் என்று வேட்கை மீதூர்ந்து இன்னும் சில தந்தருளுங்கள் என வந்தனை புரிந்தான். அவனது சிந்தனையை உணர்ந்து "உமக்கு எவ்வளவு தேவை?" என்று ஏந்தல் இசைத்தான். அளவு கூறலாகாதென்று தெரிந்து கொண்ட அவன் "ஆண்டவன் மனம்போல் கொடுங்கள்" என்றான். "உம்முடைய மனம் போலவே தருகிறேன்; ஆசை கொண்ட மட்டும் கூசாமல் கேளும்" என்று இக் கோமகன் குழுமுறுவலோடு கூறினன். அந்தக் கிழவன் ஒரு யோசனை செய்தான்; தான் ஊன்றி வந்த கோலை வீசி எறிந்தால் அது எவ்வளவு தூரம் போய் விழுமோ அவ்வளவு எல்லையில் கொள்ளுகின்ற பசுக்களை எல்லாம் கொடுத்தருளுங்கள் என்றான். "சரி; எறியும்" என்றான். அவன் பேராவலோடு ஓங்கி எறிந்தான். அந்த வேகத்தில் கால் தடுமாறிக் கீழே வீழ்ந்தான். அவனது பேராசையைக் கண்டு யாவரும் நகைத்தார். இராமனும் சிறிது சிரித்தான்.

அந்த அருமைச் சிரிப்பை நினைந்து சீதை இங்கே அழுது தவித்துள்ளாள். விருத்த வேதியன் விழைவு பெருத்த விளைவாயது.

கருத்தின் ஆசை கரையின்மை கண்டு இறை
சிரித்த செய்கை நினைந்து அழும் செய்கையாள.

நாயகன் அன்று சிரித்த சிரிப்பு நாயகிக்கு இன்று அழுகையை விளைத்துள்ளது. பழகிக் கண்ட காட்சிகள் கருத்தையுருக்கிக் கண்ணீரைப் பெருக்கி யிருக்கின்றன. வீரம் கருணை கொடை நீதி அன்பு அறிவு அமைதி கனிவு முதலிய குண நலங்களை நினைந்து மனம் உருகி மறுகி யுள்ளமையை உடல் மெலிவும் விழி நீரும் உலகறியச் செய்துள்ளன. அமுதக் கடலான இராமனது குண நீர்மைகளை அனவரதமும் சிந்தனை செய்து ஆவி உருகித் தேயத் தேவியின் சிறைவாசம் மேவியிருந்தது. அரிய தவசிகளும் வியந்து போற்றப் பெரிய பொறையோடு பெண்ணரசி அங்கே மருவியிருந்தாள்.

கமையினுள் திரு முகத்தயல் கதுப்புறக் கவ்விச்
சுமையுடைக் கற்றை நிலத்திடைக் கிடந்த தாமதியை
அமைய வாயில் பெய் துமிழ்கின்ற அயில் எயிற் றரவின்
குமையுறத் திரண்டு ஒருசடை ஆகிய குழலாள்.

(காட்சிப்படலம், 10)

சிறை வாசத்தில் சீதையின் கூந்தல் இருந்த நிலையை இது குறித்துள்ளது. முழுக்கு இல்லாமையால் அழுக்குப் படிந்து அடையாய்த் திரண்டு ஒரு சடையாய் நீண்டு அந்த அளகபாரம் முதுகின்புறமாய்த் துவண்டு தரையில் தவழ்ந்து கிடந்தது. விரிந்து அடர்ந்து செறிந்து படர்ந்து நெடிது வளர்ந்து கருமேகம் போல் அழகு குடி கொண்டிருந்த கூந்தல் இங்ஙனம் அவல நிலையில் இருந்தது என்றது சீதையின் கவலை நிலையைத் தெரிந்து கரும நிலைகளை ஓர்ந்து கொள்ள வந்தது.

பூரண சந்திரனை இராகு என்னும் கரும்பாம்பு கவ்விக் கிடத்தல் போல் அந்த அழகிய முகத்தின் அயலே கரிய மயிர் அடர்ந்து நெடிய சடையாய் நீண்டு கிடந்தது. எழில் ஒளி தவழ்ந்த முகம் சந்திரனையும், கரிய குழல் அரவையும் ஒரு நிரையாய் உணர வந்தன. தலைப் பக்கம் விரிந்து ஒரு சடையாய்ப் படிந்து நெடிது வடிந்து கிடந்த மயிர்முடி, பாந்த படத்தையுடைய பெரிய கருநாகம் போல் காட்சி தந்துள்ளது. சுமையுடைக் கற்றை என்றதனால் அந்தக் கூந்தலின் செறிவும் நிறைவும் தழைவும் குழைவும் கருமையும் நெடுமையும் காணலாகும்.

நீண்டு சுருண்டு நெய்த்து இருண்டு நெறிந்து செறிந்து நெடு நீலம் பூண்டு தெய்வ மணம் கமழ்ந்து கொண்டிருந்த இராமனது கரிய குஞ்சி சடை முடியாய்த்து போல் சீதையின் கோதையும் ஆகியிருந்தது; ஆகவே இருவரது தவ நிலையும், உலகம் உய்யப் புரியும் உறுதி முறையும் தெரிய வந்தன.

கொடிய துன்பங்களை யெல்லாம் பொறுத்து அரிய தவம் புரிகின்றவளாய் நெடிய சிறையில் நிலைத்திருக்கின்றாள் ஆதலால் கமையினாள் எனச் சீதையை இங்கே அமைதியறியக் குறித்தார். கமை=பொறுமை. தன் ஒரு சொல்லால் அரக்கர் குலத்தை எல்லாம் அடியோடு எரித்து அழிக்க வல்ல கற்புத் தெய்வம் காலம் கருதிப் பொறுத்திருத்தலால் அப்பொறையை நிறை தூக்கிக்காட்டினார். பெயர் சூட்டுவதில் உயர் மாட்சிகளைத் தீட்டியருள்கிறார்.

உமையாள் ஒக்கும் கமையாள் என முன்னம் மிதிலை மாநகரில் கன்னி மாடத்தில் மன்னி மகிழ்ந்திருந்த மங்கையர்க்கரசி இங்கே இலங்கைச் சிறையில் இன்னலுழந்து உன்னி யுளைந்து உள்ளம் பதைத்து உயிர் பொறுத்துள்ளமையால் கமையினாள் எனப் பெயர் தரித்து அமைதி தெரிய நின்றாள். முன்னது கன்னிப் பொறை; பின்னது பன்னிப்பொறை என்க.

இராமனை மணந்து கொள்ளுமுன் மிதிலைக்காட்சியில் இட்ட பெயரை இலங்கைக் காட்சியில சுட்டியருளினார். அந்த ரகுவீரன் அவதரித்து வந்துள்ள கருமம் கைகூடும்படி அவனுடைய தரும பத்தினி முனைந்தாக மூண்டு அல்லல் எல்லாம் தாங்கி உரிமையோடு பொறுமை பூண்டிருக்கும் அருமை தெரிய வந்தது

கிரகணம் பிடித்த சந்திரன் என்றது துயரங்களால் விழுங்கப்பட்டுள்ளமையைச் சிந்தனை செய்து கொள்ள.

அரவு வாயில் பெய்து உமிழ்கின்ற மதி என அந்த அழகிய முகத்தையும, கரிய நெடிய சடையையும் விழி எதிரே விளக்கிக் காட்டியிருக்கும் வித்தகம் வியப்பு மிகச் செய்கின்றது.

நம் கவியின் கற்பனைக் காட்சி அற்புத மாட்சியாய் அறிவுலகை ஆட்சி புரிந்து வருகின்றது. இந்த உவமைக் குறிப்பை இடை மடுத்துச் சிவஞான முனிவர் பாடியுள்ள பாடல் ஒன்று அயலே வருகிறது.

சீர்கொண்ட கஞ்சக் கிழத்திதன் காந்தனைச்
சிறைசெய்த வாறு அறிந்தால்
செயிர்த்துநம் திருமனைவி மகன் மருகி தமைஎலாம்
சிறைசெய்யும் என்றறிந்தும்
ஏர்கொண்ட மைத்துனக் கேண்மையால் அர்ச்சுனற்கு
இறுதிநாள் பயவாமையே
எண்ணிமுன் பரிதியைப் பரிதியால் தடைசெய்த
ஏந்தற்பிரான் புரக்க:
பேர்கொண்ட மேனிலச் சோபான மிசையேறு
பேதைமார் முகம் நோக்கிநம்
பேரரசு கொள்ளவரும் மதிபோலும் இதுஎனப்
பெரிதும் ஏக்குற்று அவர்கள்தம்
கார்கொண்ட பின்னற் கரும்பாந்தள் கண்டுளம்
கவலாது களிகூர்ந்து தண்
கலைமதியம் வைகுபொழில் சூழ்குளத் தூர்வரும்
கடவுட் பிராட்டி தனையே.

(அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்)

இது, குளத்தூர் என்னும் ஊரில் உள்ள அம்பிகை மீது பாடியது. அவ்வூரிலிருந்த அழகிய பருவ மங்கையர் மேல் மாடங்களுக்குப் படிகளின் வழியே ஏறிச் சென்றனர். அவர்களுடைய முகங்கள் பூரண சந்திரன்போல் பொலிந்து விளங்கினமையால் தனது அரச பதவியைக் கவர்ந்து கொள்ள வருகிற புதிய எதிரிகள் என்று கலைமதி உள நிலை குலைந்து அஞ்சியது; மீண்டும் கூர்ந்து பார்த்தது, பின்னல் தொங்கியுள்ள கரிய கூந்தலின் பின்னலைக் கண்டது; காணவே அயலே கரும் பாம்பு தொடர்ந்து வருகிறது; விழுங்கி விடும்; நமது பகை தொலைந்தது என மகிழ்ந்து கொண்டது. முகத்தை மதி ஆகவும், சடையைப் பாம்பு ஆகவும் இதில் குறித்துள்ளமை கூர்ந்து காண வுரியது.

பார்த்தசாரதியாய் நின்ற கண்ணன் பதினான்காம் நாள் போரில் சூரியனைச் சக்கரத்தால் மறைத்தான்; ஆதவன் மறைந்தால் தாமரை குவிந்து கொள்ளும்; அவ்வாறு குவியின் இலட்சுமி, பிரமதேவன், சரசுவதி என்னும் மூவரும் தாமரை வாசிகள் ஆதலால் அவர் சிறையில் அகப்பட்டவராய்த் துயரமடைவர்.

தனது அருமை மனைவி, பெரிய மகன், இனிய மருமகள் துன்பம் உறுவதையும் கவனியாமல் நண்பனான அருச்சுனனைக் காப்பாற்றிய திருமால் என் அம்மையையும் காப்பானாக என்று கவி இங்ஙனம் காப்புக் கூறியுள்ளார். நம் கவி காட்டியது சுவை யூட்டியது.

கவிஞர்களுடைய மானச நோக்கும், கற்பனைகளும் அறிவு நலம் சுரந்து குண சீலங்கள் நிறைந்து இனிய சுவைகளாய்ப் பெருகி எங்கும் என்றும் இன்பம் புரிந்து வருகின்றன.

சிறைவாசம் செய்திருந்த சீதையின் பரிதாப நிலைகளை உரைகளில் கண்டு நேரே இரங்கி நெஞ்சம் கரைகின்றோம். அரவம் உமிழ்ந்த மதி என்றது விரைவில் விடுதலை நேரும் என்னும் தொனியோடு கதி காண வந்தது.

பிராணநாயகனை எண்ணி எண்ணி ஏங்கித் தவித்துக் கண்ணீர் சோரக் கரைந்திருந்த பெண்ணரசி இரவு நெடுநேரம் கடந்த பின் அயல் இருந்த திரிசடையை நோக்கிச் சில உரைகளாடினாள்.

### திரிசடை.

இவள் வீடணனுடைய அருமைத் திருமகள். நல்ல விவேகி. உள்ளம் தூயவள் சிறந்த குணவதி. அன்பு அடக்கம் அமைதி பொறுமை முதலிய இனிய நீர்மைகள் பல இவளிடம் குடி கொண்டிருந்தன. எவ்வுயிர்க்கும் இரங்கும் செவ்விய கருணையுடையவள். யாரிடமும் என்றும் ஆதரவாய் இன்சொல்லே பேசும் இயல்பினள். சீதைக்குப் பாதுகாவலாகப் பல இராட்சசிகளை இராவணன் நியமித்து வைத்திருக்கும் நிலைகளை நினைந்து வீடணன் வருந்தினான். பொல்லாத அரக்கிகள் அந்த நல்லாளுக்கு அல்லல் செய்து விடலாகாதே! என்று உள்ளம் பரிந்து தன் செல்வ மகளையும் அக்குழுவில் சேர்ந்து தழுவியிருக்கும்படி உரிமையோடு மருமமாய் அனுப்பியிருந்தான். அக்காவல் கூட்டத்தில் அதி சாதுரியமாய் இவள் மேவியிருந்தாள். அரச குடும்பத்தைச் சேர்ந்தவள் ஆதலால் இவள்பால் யாவரும் மதிப்புடன் அடங்கியிருந்தனர். எவ்வழியும் ஆதரவாய் ஆற்றி வந்தாள் ஆதலால் பிராட்டி இவளிடம் உள்ளன்பாய் உரிமை பூண்டிருந்தாள்.

அன்று இரவு இடையாமம் கழிந்து நெடு நேரம் ஆனமையால் அரக்கிகள் எல்லாரும் அயர்ந்து உறங்கிக் கிடந்தனர். அருகே

யிருந்த திரிசடையும் சிறிது கண் அயர்ந்தாள். தன் உள்ளே பலவும் கருதி உருகி அயர்ந்து மறுகி உளைந்திருந்த தேவி இறுதியில் உரிமையுடன் அவளை நோக்கி மெல்ல அழைத்தாள் அவள் திடுக்கிட்டு விழித்தாள். பிராட்டியை விழைந்து நோக்கினாள்.

சீதை திரிசடையிடம் கூறியது.

அல்லல் உள்ளமோடு அவலக் கவலையில் ஆழ்ந்து அலமந்திருந்த இந்தப் பதிவிரதை உள்ளன்புடைய அந்த நல்லவளிடம் எல்லா நிலைகளையும் நேரே சொல்ல நேர்ந்தாள். இத் தூயவள்பால் அது பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை வாய்மொழிகள் வெளிப்படுத்தின.

ஆயிடைத் திரிசடை என்னும் அன்பினாள்
தாயினும் இனியவள் தன்னை நோக்கினாள்
தூயைநீ கேட்டிஎன் துணைவி யாமென
மேயதோர் கட்டுரை விளம்பல் மேயினாள். (1)

நலந்துடிக் கின்றதோ நான்செய் தீவினைச்
சலந்துடித் தின்னமும் தருவ துண்மையோ
பொலந்துடி மருங்குலாய்! புருவம் கண்முதல்
வலந்துடிக் கின்றில வருவ தோர்கிலேன், (2)

முனியொடு மிதிலையில் முதல்வன் முந்துநாள்
துனியறு புருவமும் தோளும் நாட்டமும்
இனியன துடித்தன ஈண்டும் ஆண்டென
நனிதுடிக் கின்றன ஆய்ந்து நல்குவாய். (3)

மறந்தனென் இதுவும்ஓர் மாற்றம் கேட்டியால்
அறந்தரு சிந்தைஎன் ஆவி நாயகன்
பிறந்தபார் முழுவதும் தம்பியே பெறத்
துறந்துகான் புகுந்தநாள் வலம் துடித்ததே. (4)

நஞ்சனையான் வனத் திழைக்கு நாளிடை
வஞ்சனையால் வலம் துடித்த வாய்மையால்
எஞ்சல ஈண்டுதாம் இடம் துடித்ததால்
அஞ்சலென்று இரங்குதற்கு அடுப்பது யாதென்றாள். (5)

ஒரு சடை யுடையவள் திரிசடையிடம் இவ்வாறு உரைத்திருக்கிறாள். உள்ளச் சடைவுகளையும் நல்ல அடைவுகளையும் உரைகளில் காண்கின்றோம். இனிய பெண்ணீர்மை கண்ணீர்மை

யோடு கலந்து வார்த்தைகளில் வழிந்திருக்கின்றன. கொடிய துயர நிலையில் சிறிய ஒரு ஆறுதல் கடையாமத்தின் இடையே எழுந்துள்ளது. அருகிலிருந்த உரியவளிடம் அதனை ஆவலோடு கூறி ஆவதை அறிய அவாவியுள்ளாள்.

அன்பினள்; தாயினும் இனியவள் எனத் திரிசடையை இங்ஙனம் குறித்திருத்தலால் அவளுடைய பண்பும் பரிவும் உரிமையும் ஆதரவும் அறியலாகும். கொடிய பகையிடத்தில் நெடிய அல்லல் நிலையில் சீதைக்கு உள்ளன்புடைய நல்ல துணை இயல்பாய் வாய்த்திருப்பது காதைக்கு உயர்வான இனிமை தருகின்றது.

தூயை நீ என் துணைவி என்று தேவி மனங்கனிந்து மொழிந்தது, பரிசுத்தமான அவளது உள்ளப் பான்மையையும் உதவி நிலையையும் உலகம் அறிய உணர்த்தி நின்றது. பலகாலமும் உடனிருந்து பழகி வந்துள்ளமையால் அவளுடைய குண நீர்மைகளை இக்குலமகள் தலைமையாக உவந்து கொண்டாடினாள். கொடிய அரக்கிகள் இடையே இனிய இரக்கம் வாய்ந்த அப்புனிதவதி அருகிருந்தது இப்புண்ணியவதிக்கு ஓரளவு உறுதி தந்து வந்தது.

உரிமை மிகுந்த அந்த அருமைத் துணைவியிடம் தன் கருமவிளைவுகளைக் காட்டி வினவினாள். "அம்மா! இன்று சில குறிகள் எனக்குத் தோன்றுகின்றன. எனது இடது கண்ணும் புருவமும் இடையிடையே துடித்துக் கொண்டேயிருக்கின்றன. என் அருமை நாயகன் மிதிலைக்கு வருகிற முதல் நாள் என்னிடம் இந்தச் சுப சூசகங்கள் நிகழ்ந்தன; மறுநாள் அந்தச் சுந்தரனை நேரே கண்டு பேரானந்தம் அடைந்தேன். இன்றும் அவ்வாறே துடிக்கின்றன. என்றும் காணாத உள்ளக் கிளர்ச்சி மின்னல் ஒளிபோல் என் நெஞ்சை மின்னி மறைகின்றது; என்ன நேருமோ தெரியவில்லை? முன்னைய அநுபவங்கள் எனக்குப் பெரிய திகைப்பை விளைக்கின்றன. என் ஆருயிர்க் குரிசில் அரசு முடி துறந்து வனம் புக நேர்ந்த பொழுதும், மாய வேடம் கொண்டு அந்தீயவன் வந்து என்னை வஞ்சித்த அன்றும் எனது வலத்தோளும் வலக் கண்ணும் வலப்புருவமும் துடித்தன. இன்று யாவும் இடமே துடிக்கின்றன. துயரக் கடலில் வீழ்ந்து துடிக்கின்ற எனக்கு இந்த நல்ல நிமித்தங்கள் தோன்றியுள்ளன; இதனால் ஏதேனும் நன்மை விளையுமா? இதனை நீங்கள் ஆராய்ந்து சொல்லுங்கள்

அம்மா!" என்று இக்கோமகள் அக்குலமகளிடம் ஆவலோடு கேட்டாள். கொடிய துன்பங்களில் துவண்டு கிடந்த உள்ளம் இனிய நிமித்தங்களை எண்ணி உவந்து எழுந்துள்ளது.

கண்ணும் தோளும் வலம் துடித்தால் ஆணுக்கு நல்லது; பெண்ணுக்குக் கெட்டது; இடம் துடித்தால் ஆணுக்குத் தீமை; பெண்ணுக்கு நன்மையாம். இது துடி நூல் விதி. இந்த நிமித்தக் குறிகள் இங்கே இனிது நிகழ்ந்திருக்கின்றன.

புருவம் கண்முதல் வலம் துடிக்கின்றில.

என்றது இடம் துடிக்கின்றன என்பதாம். இங்ஙனம் எதிர் மறையில் சொன்னது தான் யாதும் எதிர்பாராத அதிசயமுடையது என்பது தெரிய வந்தது. அல்லலே அடைய நேர்ந்துள்ள தனக்கு நல்லது நேருமா? என உள்ளம் சலித்துள்ளமை உரையில் ஒலித்துள்ளது.

நலம் துடிக்கின்றதோ? நான் செய் தீவினைச்
சலம் துடித்து இன்னமும் தருவது உண்மையோ?

வினை விளைவுகளை நொந்து உள்ளம் உடைந்து உளைந்து சொல்லியுள்ள நிலைகளை இதில் உணர்ந்து கொள்கின்றோம்.

தன் வாழ்நாளில் மூன்று முறை துடிப்புக்குறிகள் தோன்றியிருக்கின்றன. கலியாணத்திற்கு முன்பு ஒன்று; பின்பு இரண்டு. முன்னது சுப சோபனமானது. பின்னவை கொடிய இன்னல்கள் ஆயின. இன்று நேர்ந்தது முந்திக் கன்னிமாடத்தில் நிகழ்ந்தது போல் இனிமையாய் இசைந்துள்ளது. அன்று மறுநாள் தன் ஆருயிர் நாயகனைக் கண்டாள்; இன்று நேரே நாதனுடைய தூதனைக் காண நேர்ந்துள்ளாள். அந்த இனிய காட்சிக்கு உரிய அறிகுறியாய்த் தனது புருவம் துடித்துள்ளது.

புருவமும் தோளும் கண்ணும் இடம் துடித்தன என்றமையால் முறையே ஒன்றன்பின் ஒன்றாய்த் துடித்துள்ள தொடர்பு நிலை தனித்துணர வந்தது.

இடம் என்னுமவ் இனியன என்றாள், முன்னைய இனிய அனுபவங்களை நினைந்து. இவ்வேளையில் அழுந்தியிருக்கின்ற தனக்கு இன்னவாறு ஒரு நல்லகுறி தோன்றியுளதே! என உள்ளம் உவந்துள்ளாள். அவல நிலையில் உவகை அரும்பியுளது.

ஈண்டும் ஆண்டு என நனி துடிக்கின்றன.

மிதிலையில் அந்த அழகிய அரச மாளிகையில் இருந்த பொழுது நிகழ்ந்த சுப நிமித்தம் இந்தக் கொடிய இலங்கைச் சிறையில் இப்பொழுது நிகழ்ந்துள்ளதே! என உவந்த உள்ளத்தளாய் வியந்து விளம்பி யிருக்கிருள். ஈண்டு ஆண்டு எனச் சுட்டியது இரண்டு இடங்களின் நிலைகளை எண்ணிக் கண்ணீர் துளித்துள்ளமை காண வந்தது. பெண்ணீர்மைகளைப் பேச்சுகள் எடுத்துக் காட்டுகின்றன.

அங்கத் துடிப்புகளிலும் இங்கிதப் படிப்புகள் அமைந்திருத்தலை இங்கே அறிந்து கொள்கின்றோம். மங்கையர் சுபாவங்கள் எங்கும் ஒருபடியாய் மணம் வீசி வருகின்றன. அவர் சொல்லுந் திறம் சுவை சுரந்து திகழ்கிறது.

“பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே.” (கலி, 11)

ஒரு தலைவி தன் தோழியிடம் சொல்லிய படியிது.

பல்லியும் நல்ல திசையில் இசைக்கின்றது, எனது இடது கண்ணும் துடிக்கின்றது ஆதலால் நம காதலர் இன்று உறுதியாய் வந்தருளுவார் என்று இவ்வாறு கூறியிருக்கிறாள்.

கைக்குறியின் முகக்குறி நன்று; இடத்து எழுந்த
கவுளி நன்று; கன்னிமார் வந்து
இக்குறி நன்று என்கின்றார்; இடக்கண்ணும்
துடிக்கின்றது; இதனமேல் உண்டோ?
பொய்க் குறிய சிறுமருங்குல் பூங்கொடி நீ
அங்கயற்கண் பூவை மாதின்
மெய்க்குறியும வளைக்குறியும முலைக்குறியும்
அணிந்தவர்தோள் மேவு வாயே.
(மீனாட்சியம்மை குறம், 11)

இடது பக்கத்தே பல்லி சொல்லுவதும், இடக் கண் துடிப்பதும் மகளிர்க்கு நல்ல நிமித்தம்; கலியாணம் விரைந்து கைகூடும் என இது சொல்லியுள்ளதைம் காண்க. கவுளி = பல்லி.

குறிகள் கேட்பதும் நிமித்தங்கள் பார்ப்பதும் பெண்களுடைய தனி இயல்புகள். அந்தப் பெண்மைத் தன்மை பெண்ணரசியாகிய

சீதையிடம் இங்கே பெருகி வந்துளது. பிரிவுத் துயரில் மறுகி மயங்கி இருந்தவளுக்கு இந்தக் குறியீடுகள் இங்கே பெரிய ஆறுதலாய்த் தோன்றியுள்ளன. அறந்தரு சிந்தை என் ஆவி நாயகன் என்றபோது இத் தேவியின் உள்ளம் பரவசமடைந்துள்ளது. “மறந்தனென் இதுவும் கேட்டி” என்றது பெண்கள் பேசும் முறையைக் கண்கள் காணக் காட்டியது.

நஞ்சு அனையான் என இராவணனை இங்கே நெஞ்சம் கொதித்துச் சொன்னது, அவன் செய்துள்ள வஞ்சனையை நினைந்து. தன் பிராண நாயகனுடன் மருவி மகிழ்ந்திருந்த பேரின்ப வாழ்வைப் பேதித்து நரக துன்பமாக்கி வைத்திருத்தலால் அத் தீயவனை எண்ணும் போதெல்லாம் இத் தூயவள் உள்ளம் பதைத்துள்ளாள். அந்த உள்ளக் கொதிப்பு உரையில் கதித்து வருகிறது.

## திரிசடை தேற்றியது.

தன்பால் நிகழ்ந்த நிமித்தங்களைக் குறித்துத் திரிசடையிடம் பிராட்டி அன்போடு கூறி அதன் பலனை ஆவலாய்க் கேட்டாள். ஆய்ந்து நல்குவாய்! என்றது ஆராய்ந்து சொல்லுமாறு வேண்டி நின்றமை விளங்கியது. தன்னுடைய அல்லல் நிலையை நோக்கி உள்ளம் ஆறுதல் அடையும்படி ஒப்புக்குச் சொல்லாமல் உண்மையை ஓர்ந்து உறுதியான விளைவுகளைத் தெளிவாகச் சொல்ல வேண்டும் என்று உரிமையோடு கூறினாள்.

இந்தப் பதிவிரதை இவ்வாறு பரிந்து கேட்கவே அந்தக் குணவதி உள்ளம் உவந்து நல்ல மொழிகளை நயந்து சொன்னாள். “அம்மா! நீங்கள் யாதும் கவலையுற வேண்டாம்; உங்களுக்கு நல்ல காலம் வந்துள்ளது; தங்கள் அருமை நாயகனை விரைவில் அடைந்து மகிழ்வீர்கள்; இதனை நான் உபசாரமாகச் சொல்லவில்லை; உண்மையாகவே சொல்லுகின்றேன்; என் வார்த்தையை உறுதியாக நம்புங்கள்; நானும் இப்பொழுது சில அற்புதக் காட்சிகளைக் கண்டேன்; அவை என் கனவில் தோன்றியனவாயினும் நனவு நிலை போலவே தெளிவாயுள்ளன; கனா எதிரேயும் ஒன்று காண நேர்ந்தது; பெண் அரசே! தைரியமாயிருங்கள்; நல்ல பலனை அதி சீக்கிரம் காணலாம்” என இவ்வாறு ஆறுதல் கூறி மேலும் தான் கண்ட நிலைகளை நேரே சொல்ல நேர்ந்தாள்.

## வண்டு வந்து ஊதியது.

தனது சுப நிமித்தங்களைக் கேட்டு மனம் மகிழ்ந்து இனிது தேற்றிய திரிசடை பின்பு உரிமையோடு பேச நேரவே சானகி ஆசை மீதூர்ந்து கேட்டாள். அவள் உரையாடும் பொழுது இவள் உள்ளம் உவந்து செவி சாய்த்து நோக்கி அமைதியாய் விழைந்திருந்தாள். நூன்னிலை முறையாய் அவள் சொன்ன உரைகள் உன்னி யுணர வுரியன.

உன்னிறம் பசப்புற உயிர் உயிர்ப்புற
இன்னிறத் தேனிசை இனிய நண்பிறால்
மின்னிற மருங்குலாய்! செவியில் மெல்லெனப்
பொன்னிறத் தும்பிவந்து ஊதிப் போயதால். (1)

ஆயது தேரின்உன் ஆவி நாயகன்
ஏயது தூதுவந்து எய்தல் உண்மையால்
தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம் என்
வாயது கேள்! என மறுத்துங் கூறுவாள். (2)

பொன்னிறமுடைய அழகிய வண்டு ஒன்று எங்கிருந்தோ பறந்து வந்து சீதையின் காதின் அருகே சிறிது நேரம் வட்டமிட்டு உலாவி ரீங்காரம் செய்து போயுள்ளது என்று தெரிகிறது. அதனை நேரே கண்ட திரிசடை சானகியிடம் இவ்வாறு கூறியுள்ளாள். தும்பி—வண்டு. காதின் ஓரம் மெதுவாய் வண்டு ஊதிப் போனதற்கு உரிய பொருளை யூகமாய் அவள் தெரிய உணர்த்தினாள். "அம்மா! உன் நாயகனிடமிருந்து ஒரு தூதுவன் விரைவில் வருவான்; எல்லா விபரங்களையும் உனக்கு அவனே நேரே சொல்லுவான்; அது நல்ல சுப சோபனமாயிருக்கும்; அல்லலெல்லாம் நீங்கி நீ ஆனந்தம் அடைவாய்" என இனிய உறுதிமொழிகளை இங்ஙனம் உரிமையுடன் உரைத்தருளினாள்.

பொன் நிறத் தும்பி என இங்கே வண்டைக் குறித்தது அனுமானுக்கும் நன்கு பொருந்தியது. "காஞ்சனாத்ரி கமநீய விக்ரஹம்" என ஆஞ்சநேயரது உருவப் பொலிவை வியந்து அமரரும் புகழ்ந்துள்ளனர். பொன்மலை போல் அழகிய திருமேனியுடையவன் ஆதலால் அவ் வுண்மை ஈண்டு உரிமையாய் மருவி வந்தது. கண் எதிரே கண்டது காட்சிக்கு நேர்ந்துள்ளது.

பூத்தோறும் அவாவிச் செல்லும் பொறிவரி வண்டிற் போனான் என முன்னம் ஊர்தேடு படலத்தில் அநுமானை வண்டு என நேர்ந்தான். சீதை செவியில் மெல்ல ஊதிப் போன வண்டைக் குறித்துச் சொல்லும் போதே வந்திருக்கும் அதனைச் சிந்தனை செய்து கண்டு கொள்ளும்படி வார்த்தைகள் மண்டி எழுந்துள்ளன. தன் கண்ணால் கண்டதை இயல்பாகச் சொன்னாள்; அது எண்ணுறல் காணும்படி உண்மை இசைந்து நின்றது.

உன் ஆவி நாயகன் என்று தேவியிடம் திரிசடை கூறியது அவளது சீவிய நிலைமையைத் தெரிந்து வந்தது. உயிர் பிரிந்த உடல் போல் பரிதவித்திருக்கும் துயரங்களை நேரே நெடுநாள் அறிந்தவளாதலால் இங்ஙனம் பரிந்து கூறினாள். அந்த விழுமிய ஆவியும் இந்த அழகிய தேகமும் மருவி மகிழும் காலம் என்றோ? என்று பரிவாய் அக் குலமகள் மறுகியிருக்குள்ளமை உரையில் வெளியாயது. தூது வந்து எதிர்தல் உண்மை என்று உறுதிமொழி தந்தது உள்ளம் தெளிந்து உவகை கொள்ள. வண்டு செய்து போன செயலை நன்கு கண்டிருந்தாள் ஆதலால் இவ்வளவு தெளிவாகத் துணிந்து சொன்னாள்.

தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம்.

அந்தத் தூயவள் வாயிலிருந்து இந்த நீதி மொழி வெளி வந்துள்ளது. நல்லவளான உனக்கு நன்மையுண்டாகும் என்று முதலில் சீதையின் உள்ளத்தைத் தேற்றினவள் பின்பு இங்ஙனம் சொல்லினாள். இங்கே தீயவர் என்றது குறிப்பாக இராவணனைச் சுட்டியது. பெரிய தந்தை ஆதலால் மரியாதைப் பன்மையில் உரைத்தாள். மகா பதிவிரதையான சீதைக்குத் தீமை செய்துள்ள பாவி அடியோடு நாசம் அடைவான் என்பதை இவ் வாசகம் வரைந்து காட்டியது. தீயது என்றது பொருள் அழிவு, உயிர் அழிவு முதலிய நாசங்களை. திண்ணம் என்றது எண்ணம் தெளிய

தீய காரியங்களைச் செய்யும் பாவகாரிகளை வெறுத்து இகழ்ந்திருத்தலால் அவளுடைய உள்ளத் தூய்மையை உணர்ந்து கொள்கிறோம். தந்தை போலவே தரும நீதிகளில் தலைசிறந்துள்ளவள் என்பதை உரைகளும் செயல்களும் உணர்த்தி வருகின்றன.

தீவினையாளர் அல்லல் அடைந்து அழிவர்;

நல்ல நீதிமான்கள் நலம்பல பெறுவர்.

என்று திரிசடை இங்கே வரம்புசெய்து உரைத்துள்ளாள்.

'The fear of the wicked, it shall come upon him: but the desire of the righteous shall be granted." (Bible)

"அஞ்சி நடுங்கும்படியான கேடு தீயவனுக்கு வந்து சேரும்; நெஞ்சம் விரும்பியதை எய்தி நீதிமான் வாழ்வான்" என்னும் இது இங்கே அறியவுரியது, உறுதியுண்மைகள் உணர வந்தன.

## கனவு நிலை யுரைத்தது.

வண்டு வந்து போன வகையை இவ்வண்ணம் கண்டு சொன்னவள் அப்பொழுது கனவில் கண்ட காட்சிகளையும் கருத்தோடு தொடர்ந்து சொன்னாள். பின்னே விளைவன முன்னே தெரிந்தன.

எண்ணெய்ப்பொன் முடிதொறும் இழுகி ஈறிலாத்
திண்ணெனுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்
அண்ணலவ் இராவணன் அரத்தை ஆடையான்
நணணினன் தென்புலன் நவையில கற்பினாய்! (1)

மக்களும் சுற்றமும் மற்றுளோர்களும்
புக்கனர் அப்புலம் போந்த தில்லையால்;
சிக்குற நோக்கினென் தீப இன்னமும்
மிக்கன கேட்டென விளம்பப மேயினேன். (2)

திரியுமால் இலங்கையும் மதிலும் திக்கெலாம்
எரியுமால் கந்தர்ப்ப நகரம் எங்கணும்;
தெரியுமால் மங்கல கலசம் சிந்தின;
விரியுமால் விளக்கினை விழுங்குமாலிருள். (3)

தோரணம் முறிந்தன துணியச் சூழுமால்
வாரணம் முறியுமால வலத்த வாண்மருப்பு
ஆரண மந்திரத்து அறிஞர் நாட்டிய
பூரண குடத்துநீர் நறவு பொங்குமால். (4)

விண்தொடர் மதியினைப் பிளந்து மீனெழும்
புண்தொடர் குருதியிற் பொழியும் போர்மழை
தண்டொடு திகிரிவாள் தனு என்றின்னன
மண்டமர் புரியுமால ஆழி மாறுற. (5)

மங்கையர் மங்கலத் தாலி மற்றையோர்
அங்கையின் வாங்கினர் எவரும் அன்றியே
கொங்கையின் வீழ்ந்தன குறித்த வற்றினல்
இங்கிதன் அற்புதம் இன்னும் கேட்டியால். (6)

மன்னவன் தேவிஅம் மயன் மடந்தை தன்
பின்னவிழ் ஓதியும் பிறங்கி வீழ்ந்தன;
துன்னிரும் சுடர்சுடச் சுறுக்கொண் டேறின;
இன்னலுண்டு எனுமிதற்கு ஏதுவீதென. (7)

என்றனள் இயம்பி வேறிசைப்பக் கேட்டியால்
இன்றிவண் இப்பொழுது இயைந்தது ஓர் கன
வன்றுணைக் கோளரி இரண்டு மாறிலாக்
குன்றிடை உழுவையங் குழுக்கொண்டு ஈண்டியே. (8)

வரம்பிலா மதகரி யுறையும் அவ்வனம்
நிரம்புற வளைந்தன நெருக்கி நேர்ந்தன
குரம்பறு பிணம்படக் கொன்ற மாறிலாப்
புரம்புக இருந்ததோர் மயிலும் போயதால். (9)

ஆயிரம் திருவிளக்கு அமைய மாட்டிய
சேயொளி விளக்கது ஒன்றேந்திச் செய்யவள்
நாயகன் திருமனை நின்று நன்னுதல்
மேயினள் வீடணன் கோயில் மென்சொலாய்! (10)

பொன்மனை புக்கவப் பொருவில் போதினில்
என்னை நீ உணர்த்தினை முடிந்த தில்லென
அன்னையே அதன்குறை காண என்று ஆயிழை
இன்னமும் துயில்கென இருகை கூப்பினாள். (11)

தான் கண்ட கனவின் நிலைகளைத் திரிசடை இவ்வாறு கூறி யிருக்கிறாள். பயங்கரமான கொடிய கெடு குறிகள் கடிது தோன்றி யிருக்கின்றன நினைவிலிருந்த படியே நேரே சொல்லி யுள்ளாள். “இராவணனுடைய தலைகளிலிருந்து எண்ணெய் இழிந்து வழிகின்றது; இரத்தம் தோய்ந்த சிவந்த ஆடையையுடுத்தியுள்ளான்; கழுதைகளும் பேய்களும் பூண்ட தேரின் மேல் ஏறித் தென்திசை வழியே அவன் அழுது கொண்டு போகின்றான்; மக்கள் சுற்றம் ஒக்கல் முதலிய எல்லாரும் அவன் பக்கமே சூழ்ந்து படர்ந்து செல்கின்றார்; அரண்மனைகளில் இடிகள் வீழ்கின்றன; அவை நேரே இடிந்து தாழ்கின்றன; இலங்கை நகரம் யாண்டும் நாச விளைவுகள்;

நீச இழவுகள்; தோரணங்கள் முறிந்து சாய்கின்றன; யானைகள் மறிந்து மாய்கின்றன; பூரண கும்பங்களில் கள்ளுகள் பொங்கி வடிகின்றன; எங்கும் தீ மண்டி எரிகின்றன; புகைப் படலங்கள் மேலே மிகைத்தெழுகின்றன; மேகங்கள் உதிரமழை பொழிகின்றன; சந்திரன் இருபிளவாய்க் கிழிந்து விழுகின்றான்; வாள்வேல் முதலிய கொலைக் கருவிகள் யாண்டும் மூண்டு நீண்டு போராடுகின்றன; பெண்களுடைய தாலிகள் எல்லாம் தாமாகவே அறுந்து கீழே விழுகின்றன; கண்களில் நீர்கள் பொங்கி வழிகின்றன; அழுகை ஓசைகளும் அவல ஒலிகளுமே எங்கும் பெருகி விரிகின்றன; யாவரும் ஓலிவன்றலறிக் கூவி யலைகின்றனர்; பட்டத்துத் தேவியாகிய மண்டோதரியின் கூந்தல் அவிழ்ந்து சரிந்து எரிந்து கரிந்தது; எல்லாம் பரிதாபமாயுள்ளன; நினைந்து சொல்லும் போதும் என் நெஞ்சம் நடுங்குகின்றது; தாயே! நான் என்ன சொல்லுவேன்? இந்திரன் உலகமும் நாண இருந்த சுந்தர நகரம் எந்த இடமும் பிணங்கள் நாறி வீசிச் சுடுகாடாய் இழிந்துபட நேர்ந்ததே! கடைசியில் ஒரு கனக் கண்டேன் அம்மா! அது மிகவும் புதுமையானது; இரண்டு சிங்கங்கள் பல புலிகளோடு கூடி வந்து ஒரு பெரிய வனத்தை வளைந்து கொண்டு அங்கே நெடுநாளாக வாழ்ந்திருந்த மதயானைகளை அடியோடு அழித்து ஒழித்தன; ஆண்டு ஒரு புறமாய் ஒதுங்கியிருந்த அழகிய மயில் ஒன்று வெளியேறிப் போயது; ஆயிரம் சுடர்கள் கதிர் வீசி எரிகின்ற அதிசயமான ஒரு சோதி விளக்கைக் கையில் ஏந்திக் கொண்டு இராவணனுடைய அரண்மனையிலிருந்து வீடணன் மாளிகைக்கு ஒரு பேரழகி உவந்து வந்து புகுந்தாள்; அந்தச் சமையத்தில் நீங்கள் என்னை எழுப்பி விட்டீர்கள்; கனவு கலைந்து போயது; முடிவை முடிவாக அறிய முடியவில்லை" என்று திரிசடை இவ்வாறு சொல்லி முடிக்கவே சீதை உள்ளம் களித்தாள்; முடிவு காணுதபடி இடையே தடைசெய்து விட்டோமே! என்று இரங்கி "அம்மா! மறுபடியும் கொஞ்சம் உறங்கி அந்தக் கனவை முழுதும் பார்த்தருளுங்கள்" எனப் பேராவலோடு கேட்டுத் தொழுது வேண்டினாள்.

கனவு நிலை காவியத்தில் இவ்வாறு வந்துளது.

பின்னே நனவில் நிகழவுரியன முன்னே கனவில் காண வந்தன. குறிப்புகள் எல்லாம் கூர்ந்து ஓர்ந்து உண்மைகளை உறுதியாகத் தேர்ந்து கொள்ளும்படி நேர்ந்திருக்கின்றன.

கோளரி இரண்டு என்றது இராமலட்சுமணர்களைக் கருதிக் கொள்ள வந்தது. அரி = சிங்கம். கோளரி = ஆண்சிங்கம். எந்த மிருகங்களையும் எளிதே வெல்ல வல்ல வீறுடையன என்பது பேரடையால் விளங்கியது. வன் துணைக் கோளரி என்றது அண்ணனும் தம்பியுமாய் மருவி வந்துள்ள உரிமை யுணர

அருந்திறலும் பெருந்தகவும் உடைமையால் சிங்க ஏறுகள் இங்கே உவமையாய் அமைந்தன. இராச சிம்மங்கள் காடு புகுந்து பாடுபட்டு வருகிற பீடும் பிறவும் காடியறிய வுரியன

உழுவைக் குழு என்றது வானர சேனைகளைச் சுட்டியது.

உழுவை = புலி. குழு = கூட்டம். வடிவங்களில் குரங்குகள் ஆயிருந்தாலும் அரியபெரிய அடல் ஆண்மைகளையுடையன ஆதலால் அவை புலிகள் என வலிகள் தெரிய நின்றன.

> “வெங்கண் ஆளி ஏறு மீளி மாவும் வேக நாகமும்
> சிங்க ஏறும் இரண்டொடுந்திரண்ட அன்ன செய்கையார்.”

இராமலக்குவருடன் தொடர்ந்து வந்த வானரங்களை முன்னமும் * இன்னவாறு குறித்துள்ளமை ஈண்டு எண்ணத்தக்கது.

வீர கம்பீரமுடைய இரண்டு சிங்க ஏறுகள் பல புலிகளுடன் வந்து அடவியை வளைந்து அங்கு வாழ்ந்த யானைகளை யெல்லாம் கொன்று தொலைத்தன என்றது இராமலக்குவர் வானர சேனைகளுடன் போந்து இலங்கையை முற்றுகையிட்டு அரக்கர் குலத்தை வேரறுப்பதைக் குறித்து நின்றது. மதத்துக் கொழுத்துக் களித்துச் செழித்திருந்த கொடியதடியர்கள் அடியோடு அழிந்து ஒழிவர் என்பது விழிகாண வந்தது.

வரம்பு இலா மத கரி என்றது அளவிடலரிய நிலையில் அரக்கர்கள் பெருகியுள்ள உளவினை அறிய. வரம்பு = எல்லை.

ஓர் மயிலும் போயது.

சிறையிருந்த சீதை வெளியேறிப் போவதை இவ்வுரை தெளிவாக்கியது. இலங்கை பாழாய் அழிந்து, அரக்கர் குலம் நாசமாய் ஒழிந்து போன பின்புதான் சானகி சிறையை விட்டு எழுந்து போவள் என்பது தெளிந்து கொள்ள வந்தது.

---

* இந் நூல் பக்கம் 2390, வரி 5 பார்க்க.

மயிலுடைச் சாயலாள் என இராவணன் முன்னம் வஞ்சிக்க நேர்ந்தபோது சீதையைக் குறித்திருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கத்தக்கது. ஓர் மயில் என்றது ஒப்பற்ற அற்புத நிலையது என அதன் சீர்மை நீர்மைகளைக் கூர்மையாகத் தெரிய நின்றது.

கார்மேகத்தைக் கண்டபொழுதுதான் மயில் களித்து நிற்கும்; மேக வண்ணனை இராமனைக் கண்டபோதுதான் சீதை உள்ளம் உவந்து உயிர் தளிர்த்து நிற்பள். சனகன் வளர்த்த ஞான மயில்; வான மயில்கள் எல்லாம் மாண மயில்களாய் வாழக் கான மயில் கடுந்தவம் புரிகின்றது; முடிந்ததும் அயோத்தி மயிலாய் ஆண்மையில் உயர்ந்தவனை அடைந்து மேன்மையில் மகிழ்ந்து வாழும் என்க.

இராவணன் திருமனையிலிருந்து ஆயிரம் சோதிகளுடைய ஓர் அதிசய விளக்கைக் கையில் ஏந்திக் கொண்டு செந்நிறத் திருமேனியளான ஒரு தருண மங்கை விபீடணன் வீட்டுக்கு வந்து புகுந்தாள் என்றது, அரிய பல செல்வங்களையும் பெரிய இன்ப நலங்களையுமுடைய இராசலட்சுமியை அடைந்து முடி மன்னனாய் அவன் வாழ நேர்ந்துள்ளமையை வரைந்து காட்டியது.

இவ்வாறு கனவுக் காட்சிகளைச் சொல்லி வந்தவள் முழுதும் காணுமுன் என்னை எழுப்பி விட்டீர்கள்! என்று சொல்லவே மீண்டும் துயிலும்படி சானகி பேராவலோடு வேண்டியிருப்பது வியப்பாய் உள்ளது.

அன்னையே! அதன்குறை காண்என்று ஆயிழை
இன்னமும் துயில்கென இருகை கூப்பினாள்.

என்ன ஆசை! எவ்வளவு துடிப்பு! தனக்கு அனுகூலமான கனவுகள் என்று மனம் மகிழ்ந்துள்ளமையால் குறையும் கண்டு சொல்லும்படி கும்பிட்டு வேண்டினாள்.

இனிய ஒரு நாடகக் காட்சியாய் இது கண்டு இசைந்துள்ளது. பெண்ணின் இயல்பு இங்கே கண் எதிரே தெரிகின்றது.

அரிய நீர்மைகளையும் பெரிய சீர்மைகளையும் இயற்கை புணர்ச்சிகளையும் உரிய இடங்களில் கவி நளினமாக வெளிப்படுத்தி வருவது மிகவும் சுவை சுரந்து திகழ்கின்றது. உலக அனுபவங்கள் ஒளி செய்து உலாவுகின்றன.

நிமித்தம் பார்ப்பது, குறி கேட்பது -கனவுமுறை வேட்பது முதலிய நிலைகளில் ஆடவரினும் மகளிர் மிகவும் நம்பிக்கை யுடையவர். பெண்மைகள உண்மையுரிமைகளை ஓம்பி வருகின்றன.

## கனவு.

விழிப்பு உறக்கம் என்னும் இருவகையுள் மனித வாழ்வு தொகையாயுளது. இந்த இரண்டு நிலையினும் வேறாய் ஒன்று ஒன்றி வருகிறது. உறங்கும் பொழுது ஓவோவழி அருகித் தோன்றும் மன வுணர்வு கனவு என வந்தது. இதனை வடமொழி யாளர் சொப்பனம் என்பர். சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்று அவதைகளையுடையது சீவன் என வேதாந்த சாத்திரங்கள் விதந்து கூறுகின்றன.

விழிப்போடு தெளிவான மன நினைவுடையது நனவு; அங்ஙனமின்றி ஒளி மறைவாய் மருவி வருவது கனவு; யாதும் அறியாமல் அமைதியாய் ஆழ்ந்து தூங்குவது உறக்கம். தெருள் நிலை, மருள் நிலை, இருள் நிலை என இம் மூன்றும் முறையே கூறப்படும்.

பின்னே நேர்கின்ற ஆக்கக் கேடுகளுக்கு முன் அறி குறிகளாய்ச் சில கனவுகள் தோன்றுகின்றன. தன் கணவன் மதுரையில் கொலையுண்டு இறக்கும் துயர நிலைகளைக் கண்ணகி கனவில் கண்டு கலங்கியிருக்கிறாள். தான் கண்ட கனவு நிலையைத் தனது தோழியிடம் அவள் சொல்லியுள்ளாள்; அயலே வருவது காண்க.

‘கடுக்கும் என் நெஞ்சம் கனவினால் என்கை
பிடித்தனன் போய்ஓர் பெரும்பதியுள் பட்டேம்;
பட்ட பதியில் படாதது ஒருவார்த்தை
இட்டனர் ஊரார் இடுதேள் இட்டு என்றன்மேல்
கோவலற்கு உற்றதோர் தீங்கு என்றது கேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன்; காவலனோடு
ஊர்க்குற்ற தீங்கும் ஒன்று உண்டால் உரையாடேன்
தீக்குற்றம் போலும் செறிதொடீஇ தீக்குற்றம்
உற்றேனொடு உற்ற உறுவனோடு யான் உற்ற
நற்றிறம் கேட்கின் நகை ஆகும்.” (சிலப்பதிகாரம் 9)

மதுரையில் போய் கோவலன் மாண்டு படுவதும், பாண்டிய மன்னன் எதிரே கண்ணகி அழுது வழக்காடுவதும், அவன்

இறந்து முடிவதும், ஊர் தீயுறுவதும், பிறவும் ஒரு மாதத்திற்கு முன்னதாகவே அப் பதிவிரதையின் கனவில் தோன்றியிருத்தலை இதில் ஊன்றி உணர்ந்து கொள்கின்றோம்.

மதுரையை அடைந்து வைகை நதியருகே ஒரு பூஞ்சோலையில் தங்கியிருக்கும் பொழுது அன்றிரவு வைகறையில் கோவலன் ஒரு கனவு கண்டான். அதனை மறுநாள் மாடலன் என்னும் மறையவனிடம் அவன் உரைத்தான்.

"கோவலன் கூறும், ஓர் குறுமகன் தன்னால்
காவல் வேந்தன் கடிநகர் தன்னில
நாறைங் கூந்தல நடுங்குதுயர் எய்தக்
கூறை கோட பட்டுக் கோட்டுமா ஊரவும்
அணித்தகு புரிகுழல ஆயிழை தன்னொடும்
பிணிப்பறுத தோர்தம் பெற்றி எயதவும்
மாமலர் வாளி வறுநிலத்து எறிந்து
காமக் கடவுள கையற்று ஏங்க
அணிதிகழ் போதி அறவோன் தன்முன்
மணிமேகலையை மாதவி அளிப்பவும்
நனவு போல நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன் கடிதீங்கு உறுமென." (சிலப்பதிகாரம் 15)

மறுநாள் மாண்டு போக நேர்ந்துள்ள கோவலனுக்கு முதல் நாள் இரவு இங்ஙனம் கனவு தோன்றியுளது. இவ்வாறு கெடுகுறிகளைப்போல் நல்லனவும் கனவில் தோன்றும்.

நறவார்ந்த தொர் நாகிளம் தாமரைவாய்
உறவீழ்ந்ததொர் ஒண்மணி போன்றுரவோன்
அறவாகிய இன்பம் அமர்ந்த இருட்
கறைவேற் கணிளாள் கனவுற்றனளே. (சீவகசிந்தாமணி 218)

குளிர்ந்த தாமரையில் சிறந்த மணி ஒன்று மருவியிருந்ததாக விசயை என்னும் அரசி கனவு கண்டாள். தன் வயிற்றில் அழகிய ஒரு புதல்வன் பிறப்பான் என்பதை இது காட்டிநின்றது.

ஏசுநாதர் தாய் வயிற்றில் கருவடைந்துள்ளதைத் தேவதூதன் அவரது தந்தையின் கனவில் தோன்றிச் சொல்லியருளினான்.

"The angel of the Lord appeared unto him in a dream" (Bible)

கனவுக் காட்சியை எந்நாட்டவரும் நம்பியுள்ளமையை இதனால் அறிந்து கொள்கிறோம்.

இத்தாலி தேசத்து மன்னன் ஆகிய சீசருக்கு நாசம் நேர்ந்திருந்ததை அவனுடைய மனைவி கனவில் கண்டிருக்கிறாள். அயர்ந்து உறங்கும்பொழுது வாய் புலம்பி வெருவியுள்ளாள்.

"Thrice hath Calpurnia in her sleep cried out, "Help,
ho! they murder Caesar!" (Julius Caesar 2-2)

"ஐயோ! சீசரைக் கொல்லுகிறார்களே! ஓடி வந்து உதவுங்கள் என்று மூன்று முறை கல்பூர்னியா உறக்கத்தில் கூவியிருக்கிறாள்" என்னும் இது இங்கே அறியவுரியது.

கல்பூர்னியா என்பவள் சீசருடைய மனைவி.

"நகர வீதியில் இரத்த வெள்ளங்கள் பெருகி ஓடுகின்றன; செத்த சவங்கள் பேசுகின்றன; பேய்கள் ஆடுகின்றன; நாய்கள் ஊளையிட்டு ஓடுகின்றன; எங்கும் போராட்டங்களாய்ப் பொங்கி நிற்கின்றன" என இவ்வாறு தான் கண்ட பல தீய கனவுகளைத் தன் நாயகனிடம் அவள் நேரே கூறியிருக்கிறாள்.

"She dreamt to-night she saw my statua,
Which, like a fountain with an hundred spouts,
Did run pure blood; and many lusty Romans
Came smiling, and did bathe their hands in it."

"என் உடம்பில் நூற்றுக்கணக்கான வெட்டுக் காயங்கள் பட்டு இரத்தம் பீறிட்டு ஓட அந்த உதிர வெள்ளத்தில் பல கொடிய ரோமர்கள் உவகையோடு வந்து தம் கைகளைக் கழுவினதாக" என் மனைவி இரவு ஒரு கனவு கண்டிருக்கிறாள் என்று சீசர் தமது நண்பரிடம் கூறி நிலைமைகளை ஆலோசித்திருக்கிறார்.

அவ்வாறே அம்மன்னன் மறுநாள் மாண்டு முடிந்தான்.

"மலர்க்கருங்குழல் சோர்ந்து வாய்வெரீஇச் சிலமாற்றங்கள் பறைகின்றாள்" என மண்டோதரியை நேரே கண்ட அனுமான் அவளது நிலைமையை ஓர்ந்து இவள் கணவன் விரைந்து அழிவான் என முன்னம் எண்ணியதும், இங்கே திரிசடை அவளைக் குறித்துக் கனவு கண்டு சொல்லியுள்ளதும் கண்டு சிந்திக்கத் தக்கன.

எந்தத் தேசத்திலும், எக்காலத்திலும், மக்களுடைய வாழ்க்கை நிலைகளும் மானச வுணர்ச்சிகளும் பொதுவாய் ஒத்திருக்கின்றன. நூல்கள் அவர்களுடைய கால வழக்கங்களைக் காட்டியருளுகின்றன. பேசுகிற மொழிகள் தேச நிலைமைகளைத் தெரியச் செய்கின்றன.

தமிழ் இலக்கியங்களிலும், கணித ஆருடங்களிலும் கனவுநிலைகளும், அவற்றின் பலன்களும் பலவாறு பரவி வந்திருக்கின்றன.

"கனவில் தொட்டது கைபிழை யாகாது
நனவில் சேஎப்பநின் நளிபுனல் வையை
வருபுனல் அணிகென வரங்கொள்வோரும்." (பரிபாடல், 8)

தனது காதலனைக் கனவில் கண்டு தழுவியது பிழையாகாதபடி நனவில் நல்கியருள வேண்டும் என ஒரு காதலி முருகக் கடவுளை இவ்வாறு தொழுதிருக்கிருள். கனவுகள் காதலிகளுக்கு இனிய ஆதரவுகள் ஆகின்றன.

நனவினுன் நல்கா தவரைக் கனவினுல்
காண்டலின் உண்டென் உயிர். (குறள், 1213)

பிரிவில் மறுகியிருந்த காதலி கணவனைக் கனவில் கண்டு மகிழ்ந்துள்ளமையை இது காட்டியுள்ளது. நனவில் காணுத ஆறுதல் கனவில் நேருதலால் அது ஒரு இனிய பேறு என்ணநேர்ந்தது.

முதல் சாமத்தில் கண்ட கனு ஓர் ஆண்டில் பலன் தரும்; இரண்டாம் சாமத்தில் காணின் எட்டு மாதம் ஆம்; மூன்றும் சாமத்தில் தோன்றின் மூன்று மாதம் ஆம்; கடைச் சாமம் ஆயின் பத்து நாளில் ஆம் கனவின் விளைவுகள் கருத வுரியன.

"படைத்த முன்சாமத்து ஓராண்டிற் பலிக்கும்;
பகர் இரண்டாய்க
கிடைத்தபின் சாமத்தில் திங்கள் எட்டாவதில்
கிட்டும் என்பர்;
இடைப்பட்ட சாமத்து மூன்றினில் திங்களுள்
மூன்று என்பரால்;
கடைப் பட்ட சாமத்து நாட்பத்திலே
பலன் கைபபெறறதே. (1)

என்பும் பருத்தியும் நீறும் வெண் சோறும் இனிது வைத்த
அன்புறு மோரிவை ஐந்தும் தவிர வெளுத்த வெல்லாம்
இன்பம் தரும் என்ப; மேனிமியலலாம எறும பூரக் கண்டால்
துன்பம் தவிர்ந்து நலங்கள் எல்லாம் வந்து சூழ்ந்திடுமே. (2)

எய்திடும் செல்வம் மணிகை பெற்றால்; எழில் மேகம் எங்கும்
பெய்திடக் கண்டிடின் பூசல் உண்டாகும்; பிண்ணாக்கு அரிசி
நைவது செய்திடும்; நஞ்சடர் வேல்விழி நாகரிகீர்
கொய்திடும் சாகமும் கொள்ளியும் தான் கொள்ளின் நோய்கொள்ளுமே

சொல்லத் தகுமுக்ட்டு ஒட்டகம் வெட்டும் துணைமருப்போடு
இல்லத்து எருமை கழுதை என்றிங்கிவை ஏறிநின்றே
மெல்லத் தரையில் இழிவதன் முன்னம் விழித்திடுமேல்
கொல்லத் தலைவரும் மாற்றருஞ் சீற்றத்துக் கூற்றுவனே.' '(4)

(கனா நூல்)

இன்னவாறு பலவகையான கனவுக் காட்சிகள் விரித்து விளக்கப்பட்டுள்ளன. குறிப்புகள் கூர்ந்து அறியத் தக்கன.

எண்ணெய்த் தலையனாய்க் கழுதை பூட்டிய தேரில் தென் திசை நோக்கி இராவணன் சென்றான் என்றது, எமபுரம் புகுந்து நரக துன்பங்களை அவன் அடைய நேர்ந்துள்ளான் என்பதை ஓர்ந்து கொள்ளச் செய்தது.

திரிசடை கண்ட கனவுக் காட்சிகள் விதிமுறை அமைந்துள்ளன. அரசிழந்து இராவணன் நீசமாய் நாசமடைவான் என்பது முதலில் தோன்றியது; அரச திருவை எய்தி வீடணன் இலங்காதிபதியாய்த் துலங்குவான் என்பது முடிவில் விளங்கி நின்றது. இடையே அழிவு நிலைகள் பல வெளியாயுள்ளன.

குறித்த கனவு நிலைகள் பலவற்றுள்ளும் இரண்டு கோளரிகள் வந்தன; ஒரு மயில் அவற்றோடு உவந்து போயது என்ற உரைகள் மாத்திரம் சீதையின் உள்ளத்தில் ஊன்றி நின்றன.

குறையும் காண முடியாமல் இடையே விழிக்க நேர்ந்தது என்று அவள் உரைக்கவே அதையும் அறிய வேண்டும் எனஆவல் உண்டாயது. மறுபடியும் துயில வேண்டினள்.

ஆழ்ந்த உறக்கத்தில் கனவுகள் தோன்றா; துயில் என்பது இளந் தூக்கம். அறிதுயில் எனத் திருமாலின் யோக நித்திரை மருவியுளது. அரிதுயில் அறிதுயில் ஆயதால் அது கரிதுயிலாய்க் கனவு நிலைகளில் காட்சிகள் தருகின்றன.

துயில் இல ஆதலின் கனவு தோன்றல என்று முதலில் திரிசடை சொன்னது நினைவிலிருந்தது ஆதலால் இன்னமும் துயில்க என இறுதியில் இக் குலமகள் பரிவுடன் வேண்டினள்.

அன்னையே! என்றது ஆர்வமீதூர்ந்து வந்தது.

பெற்றமகளுக்கு உற்ற தாய்போல் உழுவலன்புடன் உரிமை செய்து வருதலால் அந்தக் கெழுதகைமையை நினைந்து உளம் உருகியுள்ளது; அவ்வுண்மை உரையில் வெளியாயது.

தாய் என உலகம் உவந்து போற்றிவரும் இத் தூயவள் வாயால் திரிசடையைத் தாய் என விழைந்து போற்றியுள்ளாள்; ஆகவே அவளது பான்மை மேன்மைகள் காவிய உலகில் சீவிய ஒளிகளாய் மிளிர்கின்றன.

தயவும் தண்ணளியும் சீவர்களைப் புண்ணியவுருவங்களாக்கிப் புகழ் மிகச் செய்கின்றன. அரக்கர் குலத்தில் பிறந்திருந்தும் இரக்கமும் நீதியும் எய்தியிருந்தமையால் திரிசடையும் வீடணனும் பெருமகிமைகளையடைந்தனர்.

## அனுமான் சீதையைக் கண்டது.

அசோகவனத்துள் புகுந்து அந்தப் பொழிலின் எழில் நிலைகளை வியந்து நின்ற அனுமான் யாவும் விழைந்து நோக்கி யாண்டும் ஆராய்ந்து வந்தான். குளிர்ந்து நறுமணம் கமழ்ந்துள்ள ஓர் பொதும்பர் இடையே அரக்கியர் திரளைக் கண்டான். அயிர்த்து ஓர்ந்தான். தான் கண்ட கனவுக் காட்சிகளைத் திரிசடை பிராட்டியிடம் சொல்லிக் கொண்டிருக்குங்கால் நினைவிழந்து அயர்ந்து உறங்கிக் கிடந்த யாவரும் விரைந்தெழுந்து அயல் எங்கும் ஆரவாரமாய்த் திரிந்து வரும்பொழுதுதான் அந்த இடத்தை மாருதி ஆவலோடு கூர்ந்து பார்த்தான். பெண்கள் என்னும் உருவில் பேய்களைப் போல் அலைந்து வருகிறவர்களைக் காணவே அனுமான் ஓர் உயர்ந்த மகிழ மரத்தில் மறைந்து அந்த இடத்தை விழைந்து நோக்கினன். கரிய மேகங்கள் இடையே ஒரு பூரண சந்திரன் பொலிந்து விளங்குவது போல் அரக்கிகள் நடுவே எழில்ஒளி வீசியிருந்த சீதையைக் கண்டான். மேனி மெலிந்திருந்தாலும் வானசோதிபோல் வயங்கியிருத்தலால் சானகியே என்று துணிந்து கொண்டான். தண்ணீர்த் தடாகத்தில் தனி இருக்கும் அரச

அன்னம் போல் கண்ணீர்ப்பெருக்கில் பெண்ணீர்மை சாந்திருந்த புண்ணியத் திருவைக் கண்டதும் அனுமான் பேரானந்தமுடையனாய் அங்கும் இங்கும் தாவிக் குதித்துப் பொங்கி மகிழ்ந்து அதிசய பரவசனாய்த் துதி செய்து தொழுதான்.

உள்ளக் களிப்பினால் தனக்குள்ளேயே அவன் உரையாடிக் கொண்டான்; அவ்வுரைகள் உணர்ச்சிப் பெருக்காய் ஓங்கியுள்ளன.

வீடின தன்றறன்; யானும் வீகலேன்;
தேடினென் கண்டனென் தேவியே எனு!
ஆடினன்; பாடினன்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து
ஓடினன்; உலாவினன்; உவகைத் தேனுண்டான். (1)

எள்ளரும் உருவினவ் இலக்கணங்களும்
வள்ளல்தன் உரையொடு மாறு கொண்டில;
கள்ளவாள் அரக்கனம் கமலக் கண்ணனார்
உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்தவா! (2)

மூவகை யுலகமும் முறையின் நீக்கிய
பாவிதன் உயிர்கொள்வான் இழைத்த பண்பிதால்
ஆவதே ஐயமில் அரவின் நீங்கிய
தேவனே அவன் இவள் கமலச் செல்வியே. (3)

மாசுண்ட மணியனாள் வயங்கு வெங்கதிர்த்
தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்
காசுண்ட கூந்தலாள் கற்பும் காவலும்
ஏசுண்ட தில்லையால் அறத்துக் கீறுண்டோ? (4)

புனைகழல் இராகவன் புயத்தையோ புகழ்
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ
வனைகழல் அரசரின் வண்மை வீக்கிடும்
சனகர்தம் குலத்தையோ யாதைச் சாற்றுகேன். (5)

தேவரும் பிழைத்திலர் தெய்வ வேதியர்
ஏவரும பிழைத்திலர் அறமும் ஈறின்றால்
யாவதிங் கினிச் செயல் அரியது எம்பிராற்கு
ஆவஎன் அடிமையும் பிழைத்தின் றாமன்றே (6)

கேழிலாள் நிறைஇறை கீண்ட தாமெனின்
ஆழியான் முனிவெனும் ஆழி மீக்கொள
ஊழியின் இறுதிவந் துறும்என் றுன்னினேன்
வாழிய ருலகினி வரம்பில் நாளெலாம். (7)

வெங்கனல் மூழ்கியும் புலன்கள் வீக்கியும்
நுங்குவ அருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர் குலனில் வந்து இல்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவம் நவிலற் பாலதே. (8)

பேண நோற்றது மனைப் பிறவி பெண்மைபோல்
நாண நோற்றுயர்ந்தது நங்கை தோன்றலால்
மாண நோற் றீண்டிவள் இருந்த வாறெலாம்
காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால் (9)

தருமமே காத்ததோ? சனகன் றன் வினைக்
கருமமே காத்ததோ? கற்பின் காவலோ?
அருமையே அருமையே யாரிது ஆற்றுவார்?
ஒருமையே எம்மனோர்க்கு உரைக்கற் பாலதே. (10)

செல்வமோ அது; அவர் தீமையோ இது;
அல்லினும் பகலினும் அமரர் ஆட்செய்வார்
ஒல்லுமோ ஒருவர்க்கி தூறுகண் யாதினி
வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால். (11)

(காட்சிப் படலம் 65-75)

அனுமான் கருதி மகிழ்ந்து களித்துள்ள நிலைகளை இவ் வுரைகளில் கண்டு உணர்வுநலங்களை ஓர்ந்து ஓகை மீதூர்ந்து நாம் உறுதி கூர்ந்து நிற்கிறோம். அரிய பல இயல்புகள் தெரிய நேர்ந்தன.

ஆவலோடு தேடிவந்த பொருள் கண் எதிரே காணவே எண்ணரிய இன்ப வெள்ளத்தில் மிதந்திருக்கிறான். தன்னை மறந்து பரவசனாய்க் கூத்தாடியிருத்தலால் அவனுடைய உள்ளத்தில் பொங்கியுள்ள ஆனந்தப் பெருக்கின் எல்லை தெரிய வந்தது. உள்ளக் களிப்பின் நிலைகளை உரைகளால் தெளிவாக விளக்கிச் சொல்லமுடியாது ஆதலால் அவனது செயல்களைக் கொண்டே அதிசாதுரியமாய்க் கவி வெளிப் படுத்தி யருளினர். அரிய உணர்ச்சி வேகங்களை எளிதே விளக்கி விடுவது கலா விநோதங்களின் அதிசய ஆடலாய் ஒளி செய்து உலாவி நிற்கிறது.

ஆனந்த நிலை.

ஆடினன்; பாடினன்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து
ஓடினன்; உலாவினன்;

சீதையைக் கண்டபொழுது இராம தூதனுக்கு உண்டான ஆனந்தக் களிப்பை இந்த ஆடலும் பாடலும் ஓடலும் உலாவலும் ஓரளவு காட்டியுள்ளன.

பிராட்டியைப் பார்த்ததும் குதித்துக் கூத்தாடியிருக்கிறான்.

கடல் கடந்து இலங்கை புகுந்து ஊர் எங்கும் தேடியும் காணுமையால் உள்ளம் உடைந்து உயிரை மாய்த்து விட ஊக்கி நின்றான்; அங்ஙனம் மாண்டு போக மூண்டு நின்றவன் சிறிது தேறி இறுதியை அறுதியிட்டு ஈண்டு வந்து தேடினான்; தெய்வாதீனமாய்க்கண்டான்; பிராட்டியைக் காணவே பேரின்பவெள்ளத்தில் மூழ்கினான்; அந்த ஆனந்த பரவசத்தில் களித்துத் திளைத்து ஆற்றுமை மீதூரவே களியாட்டங்கள் நிகழ்ந்தன.

உள்ளத்தில் உவகை பொங்கி எழுந்தபொழுது உடல் அதன் வயமாய் ஓடி உழலுகின்றது. முதலில் ஆட்டம்; பின்பு பாட்டு; என்ன பொருள்களை இசைத்துப் பாடியிருக்கிறானே? அது தெளிவாய் வெளியாக வில்லை; சானகி ராம்; சீதா ராம்; என இராம நாமங்களையே அழகாக இணைத்துப் பாடியிருப்பான் என்று தெரிகிறது. குளத்தின் உள்ளே பெருகிய நீர் மதகு வழியே பாய்வது போல் உளத்தில் பொங்கிய உவகை வெள்ளம் பாட்டு வழியாய் வெளிப் பட்டுள்ளது. நெஞ்சில் நிறைந்த ஆனந்தப் பெருக்குக்குக் கொஞ்சம் வெளியே போக்கு விடு செய்திருக்கிறான்.

ஆண்டும் ஈண்டும் பாய்ந்து ஓடினன்.

இது அவனது ஆவேச ஆடலை நாடியுணரச் செய்தது.

ஒரு கிளையிலிருந்து மறு கிளைக்குத் தாவிப் பாய்ந்து வாவி வாவி ஆவி மகிழ்ந்து மேவியிருக்கிறான். இங்கே இயல்பான சாதி சுபாவம் அயல் அறிய வந்தது. அசோக வனத்தில் காவல் காத்து வருகிற காவலாளிகள் யாருக்கும் தெரியாதபடி உயர்ந்த ஒரு மரக்கிளையில் சிறிய குரங்கு வடிவமாய் மாருதி மருவியிருந்த போதுதான் சீதையைக் கண்டான் ஆதலால் அங்கிருந்தபடியே ஆனந்த மீதூர்ந்து கிளைக்குக் கிளை தாவிப் பாய்ந்துள்ள அவனுடைய விசித்திர வேலைகளை வியந்து நோக்கி உல்லாச விநோதமாய் உவந்து கொள்கிறோம். இயற்கைக் காட்சி இனிது நிகழ்கிறது.

உவகைத் தேன் உண்டான்.

ஆடிப்பாடி அங்கும் இங்குமாய் ஓடிப் பாய்ந்து அவன் உலாவிக் களித்தமைக்கு உரிய காரணத்தை இறுதியில் இங்ஙனம் உணர்த்தியருளினர். தேவியைக் கண்டதும் உள்ளத்தில் உவகை மண்டியது; உயிர் பரவசமாயது. ஈண்டு அவன் கண்ட காட்சி யாண்டும் காணாத பேரின்ப வெள்ளமாய்ப் பெருகி எழுந்தது; ஆகவே ஏகமாய் ஆவேச ஆடல்கள் நிகழ்ந்தன.

புளித்த புலைக் கள்ளை உண்டவன் இழிவெறி கொண்டு களித்தல் போல் இனித்த இன்பக் கள்ளை உண்ட இவன் ஆனந்த வெறியனாய் ஆடிப்பாடி ஓடி உலாவி உளம் களித்து நின்றான்.

கருதி மகிழ்ந்தது.

பிராட்டியைப் பார்த்துப் பெருங்களிப்போடு பரவசமடைந்தவன் பல பல கருதினான். "இராமபிரான் கூறியருளிய அடையாளங்கள் யாவும் சரியாயுள்ளன; அந்த வீர வள்ளலுடைய உயிரைத் திருடிக் கொண்டு வந்து யாரும் அறியாதபடி கொடிய இராவணன் இப்படி ஒளித்து வைத்திருக்கிறான்; நீசக் கள்ளனை அவன் நாசம் அடையச் செய்துள்ள நிட்டூரம் இது; தேவதேவனுடைய ஆவியைப் பறித்துக் கொண்டது போல் தேவியைப் பிரித்து வந்து இந்தப் பாவி இப்படிச் சிறைப் படுத்தி யிருக்கிறான்; மாசு படிந்த மணிபோல் தேசு மடிந்துள்ள பெண்ணரசியின் கற்பும் காவலும் அற்புத நிலையில் ஒளி செய்துள்ளன. இராகவன் புகழும் சனகன் குலமும் உலக வுயிர்களும் உயர் நிலையடைய இக்குலமகள் இங்கே தவ நிலையில் இருக்கிறாள்; தேவ கணங்களும், முனிவர் திரள்களும், மனித குழாங்களும், தரும நீதிகள் யாவும் பெருமகிமைகள் பெற இத் திருமகள் இங்ஙனம் சிறைவாசம் புரிகின்றாள்; உணவு துறந்து, உதிர் சருகு அருந்திப், புனலிடை நின்று, கனலிடையிருந்து நெடிய தவம் புரிந்த பெரிய மாதவர் எவரும் இப் பதி விரதையின் அரிய தவத்தைக் காணின் அதிசயமடைந்து துதி செய்து தொழுவர்; இந்த அருந்தவ நிலையை அந்தப் பெருந்தகை நேரே கண்டிருக்க வேண்டும்; அழகிய அக் கமலக் கண்களால் காணவுரிய பாக்கியம் கை கூடாது போயது; கொடிய அரக்கிகளிடையே தருமமே ஒரு பெண்ணுருவம் மருவி அரிய பொருளைக் கருதி நெடிய தவம் புரிகின்றது போல் தெரி

ன்றது; எண்ணரிய பிறவிகளில் நான் பண்ணியுள்ள புண்ணிய வினைவுகளால் இப் பெண்கள் நாயகத்தை ஈண்டு என் கண்கள் காணப் பெற்றேன்; என்ன அழகு! என்ன அமைதி! என்ன தவம்! அம்மா! இது அருமை! அருமை!'' என்று அதிசயபரவசனாய்த் துதி செய்து தொழுதான்.

அனுமானுடைய உள்ளப் பண்பும், உழுவலன்பும், ஆர்வமொழிகளும் இங்கே அதிசய நிலையில் வெளி வந்துள்ளன.

இராமநாதனைக் கண்டதுமுதல் அந்த மூர்த்தியிடம் பேரன்பு கொண்டு யாண்டும் பத்திப் பரவசனாய்ப் பணிபுரிந்து வருகிறான். ஈண்டு அவனது உரிமையும் உருக்கமும் பெருக்கெடுத்து ஓடியிருக்கின்றன.

சீதையை இதுவரையும் கண்டதில்லை; இப்பொழுதுதான் நேரே கண்டுள்ளான்; காணவே அந்தக் கற்பரசியின் அற்புத நீர்மைகளை உய்த்துணர்ந்து உள்ளம் உருகியிருக்கிறான்.

கமலக் கண்ணனூர் உள்ளுறை உயிர்.

சீதைக்கு ஒரு இனிய பெயராய் இது எய்தியுள்ளது.

இராமபிரானுடைய அரிய உயிரே அழகிய பெண் உருவம் கொண்டு இலங்கையில் தவம் புரிந்திருக்கிறது என அனுமான் இவ்வாறு கருதியிருக்கிறான். தேவியே ஆவி என்றது இருபாலும் மேவியுள்ள நிலைமையை நினைந்து. இராமன் சீதை என உருவத்தால் வேறுபட்டிருப்பினும் இருவர்க்கும் உயிர் ஒன்றே என்று உறுதி செய்துள்ளான். பிரிவினால் இருவரும் உயிர் பிரிந்த உடல் போல் மறுகி மயங்கியுள்ளமை தெரிய வந்தது.

''கூடு தன்னுடையது பிரிந்து ஆருயிர் குறியா
நேடிவந்தது கண்டிலதாம் என நின்றான்'' (சடாயுவுயிர், 158)

மாயமானைத் தொடர்ந்து போன இராமன் மீண்டு ஓடி வந்து சீதையைக் காணமல் கலங்கி நின்ற நிலையை முன்னம் இங்ஙனம் குறித்திருக்கிறார். தன்னுடைய உயிரைக் காணாத உடல்போல் இராமன் பரிதபித்துப் பதைத்தான் என அங்கே குறித்தார்; அந்த உயிர் இங்கே உள்ளபடியை உரைத்தார் உள் உறை உயிர் வெளியே அயலிடத்தில் எல்லா உயிர்களும் காணும்படி அல்லலுழந்து அலமந்துள்ளது உள்ள நிலை உணர வந்தது.

ஈர் உயிரும் துயரில் ஓர் நிலையாய் ஆழ்ந்திருத்தலால் தேகம் பிரிந்திருப்பினும் ஏகத்தின் இயல்பு இங்கே இனிது தெரிந்தது.

காகத்து இருகண்ணிற்கு ஒன்றே மணிகலந்தாங்கு இருவர்
ஆகத்துள் ஓருயிர் கண்டனம் யாமின்று யாவையுமாம்
ஏகத்தொருவன் இரும்பொழில் அம்பலவன் மலையில்
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய்வரும் இன்பத்துன்பங்களே
(திருக்கோவையார்)

உழுவலன்புடைய உயர்ந்த சதிபதிகளின் இயல்பினை மணிவாசகப் பெருந்தகை இவ்வாறு குறித்துள்ளார். இருவர் ஆகத்துள் ஓர் உயிர் கண்டனம் என்னும் இது ஈண்டு உரிமையாய்க் காண நின்றது. தோகை, தோன்றல் என்றது சனக குலமயிலையும், இரவி குலத் தோன்றலையும் ஊன்றி உணரச் செய்தது.

உள் உறை உயிர் என்றது உயிர்க்கு உயிர் என்றவாறு.

அஞ்சன வண்ணமான அந்த அழகிய உடலுள் ஓர் ஒளி உயிர் உளது; அதன் உள்ளே ஒரு களி உயிர் மருவியுள்ளமை தெரிய வந்தது. பாலுள் நெய்யும், நெய்யுள் சுவையும் நிலவியுள்ளது போல் இராமனுயிருள் சீதை தோய்ந்துள்ளாள் என்க. சத்தன் இடத்தே சத்தி உறைந்துள்ள உண்மை உய்த்துணர வந்தது. இராமனுடைய சீவிய இன்பம் தேவியே என்பதைக் காவிய மொழியில் காட்டியருளினர். இந்த இன்பத்தை இழந்துள்ளமையால் அந்த உயிர் வாழ்வு துன்பமாய் எழுந்தது.

கமலக் கண்ணன் என மரியாதைப்பண்மையில் உளமுருகியுரைத்துளான். கமலம் = தாமரை. நீரில் அலர்ந்திருப்பது என்னும் ஏதுவான் அமைந்தது. கம் = நீர். பெண்ணீர்மையை எண்ணி எப்பொழுதும் கண்ணீர் சுரந்துள்ள உண்ணீர்மையும் ஈண்டு உணர வந்தது. உள்ளுறை உயிர் கமலக் கண்ணிலும் உறைந்திருக்கும் உரிமை தெரிய நேர்ந்தது.

எம் வள்ளலுடைய உயிரைக் கள்ள அரக்கன் களவாய்க் கவர்ந்து கொண்டு வந்து இப்படி ஒளித்து வைத்திருக்கிறனே! என்று உள்ளம் உருகியிருக்கிறன். கள்ளன் மறைத்து வைத்துள்ள களவுப் பொருளைக் கண்டு உடையவன் காவலன் ஆவலாய் உவந்து நிற்கும் காட்சியை இங்கே உணர்ந்து நிற்கிறேம்.

உத்தம உயிர்களுக்குத் துயர் இழைத்துள்ள அந்த மகா பாவி அடியோடு நாசம் அடையச் செய்த நீச வேலை இது என்று நெஞ்சம் கொதித்திருக்கிறான். இந்தக் குலமகளின் குலை துடிக்கச் செய்தவன் குலத்தோடு அழிவான் என உளத்தோடு உரைத்துளான். அந்த உள்ளத்தின் பரிவு வெள்ளம் என விரிந்தது.

அவன் அரவின் நீங்கிய தேவனே;
இவள் கமலச் செல்வியே.

இராமனையும் சீதையையும் அனுமான் இவ்வாறு கருதி உறுதி செய்திருக்கிறான். பரமபத நாதனான திருமாலும் இலட்சுமியுமே இவ்வண்ணம் மனித வுருவில் மருவி வந்துள்ளனர் என்று மனம் மிக மகிழ்ந்துளான். இராமனது அரிய அற்புத நிலைகளையும், அப் பெருமான்பால் தன் உள்ளம் உருகி உரிமை பூண்டுள்ளதையும், நேரே அனுபவித்து அறிந்தவன் ஆதலால் தேவியைக் கண்டதும் இருவரையும் ஒரு முகமாய் எதிர் நோக்கி அருமறை முடிவினைப் பெரு மகிழ்வுடன் உறுதி செய்து நின்றான்.

மனித உருவங்களில் மருவியுள்ள புனித தெய்வங்கள் என்று மருமமாய் இனிது கனித்துள்ளதை உரைகள் வெளிப் படுத்தியுள்ளன. அழகு அமைதி முதலிய அரிய நீர்மைகள் இரு பாலும் பெருகி எப்பாலும் இணையொத்திருத்தலை எண்ணி வியந்தான். புண்ணிய உருவங்கள் என்று புகழ்ந்து தெளிந்தான்

என்றும் பிரியாத தனது அருமைத் துணையைப் பிரிந்து கொடிய சிறையில் தனியே தவம் புரிந்திருக்கிற இக் கற்பரசி நிலை அற்புத முடையது என அதிசய மீதூர்ந்து துதி செய்து மகிழ்ந்தான். இராகவனது அருந்திறலும், சானகியின் பெருந்தகவும், சனக மன்னனுடைய குல நீர்மையும் உலகம் நலமுற ஒளி செய்துள்ளன என்று உளம் மிக உவந்தான்,

இந்தப் பெண்ணரசி பிறந்த குடியும், புகுந்த குலமும் பெரு மகிமை பெற்றன. இவளை மகள் என்று சொல்லச் சனகனும், மனைவி என்று கொள்ள இராமனும் என்ன புண்ணியம் பண்ணினார்களோ? என எண்ணி உருகினான். சீவ கோடிகள் நலமுற இத் தேவி உதயமாயுளாள். பிள்ளை நோய் தீர்ந்து சுகமடையும்படி பெற்ற தாய் மருந்து அருந்துதல் போல் உலகிலுள்ள நல்ல உயிர்

கள் அல்லல் நீங்கி இன்புற இந்த அம்மை சிறையிலிருந்து அருந் தவம் புரிகின்றாள்.

மாண நோற்று ஈண்டு இவள் இருந்த வாறுஎலாம்
காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்

நாம் கண் ஊன்றிக் கண்டு கருதி நோக்கும்படி இந்த வாக்கியம் இங்கே காட்சிக்கு வந்துள்ளது. தான் நேரே கண்ட அதிசய நிலையைத் தன் ஆண்டவன் காண நேரவில்லையே என்று அனுமான் பரிந்து இரங்கியிருக்கிறான். தனது அருமை மனைவியை இராகவன் என்றும் கண்டு மகிழ்ந்திருக்கிறான்; இருந்தும் ஈண்டு அவன் காண நோற்றிலன் என்று வேணவாவோடு அனுமான் ஏங்கியுள்ளான். நோற்றல் = தவம் செய்தல். அரிய தவசிகளும் பெரிய தவம்செய்து காணவுரிய அவன் இவளை இங்கே காணத் தவம் செய்யவில்லையே! என்று ஏங்கியிருப்பது அதிசய ஏக்கமாயுள்ளது.

சானகியை இராமன் மிதிலையில் கண்டதும், அயோத்தியில் கண்டதும், தண்டக வனத்தில் கண்டதும் காட்சி அன்று; அவன் இலங்கையில் கண்டிருக்க வேண்டும் என்று மாருதி உளங்கவன்றுள்ளமையை நாம் உரையில் காண்கின்றோம்; உரிமை நிலைகளை ஓர்ந்து உண்மை காண விழைகின்றோம்.

மிதிலையில் கண்டது காதல் காட்சி; மணந்து கொண்டபின் அயோத்தியில் கண்டது இன்பக் காட்சி; கானகத்தில் கண்டது உழுவலன்புடைய உரிமைக் காட்சி; இவ்வளவே காண நேர்ந்தன.

உயிர்க் கிழமையான உண்மைக் காட்சி இலங்கைச்சிறையில் பெண்மையுருவில் பெருகியுளது; இந்த அருமை நீர்மையை உரிமையாளன் நேரே கண்டால் நெஞ்சம் நீராயுருகி ஆராமை மீதூர்ந்து ஆனந்த பரவசமாவன்; அந்த அற்புத நிலையை ஆண்டவன் பெறவில்லையே! என்று நீண்ட கவலை மூண்டு நின்றது

## முன்னும் பின்னும்.

அனுமான் இராமனைக் கண்டு உள்ளம் உருகி உரிமையன்பனாய் மருவி நின்றான். உரிய ஆண்டவனுக்கு உண்மை ஊழியனாய் யாண்டும் உதவி புரிந்து வந்தான். குடியடிமையாய் அடிதொழுது எவ்வழியும் உழுவலன்போடு பணிசெய்து வருங்கால் இடையிடையே சில நினைவுகள் நிகழ்ந்தன. பிரிவுத் துயரால் மறுகி

பிருந்த இராமன் பல சமையங்களில் பரிதாபமாய் உருகிப் புலம்பினான்.

"வரியார் மணிக்கால் வாளமே! மட அன்னங்காள்! எனை நீங்கத் தரியாள்; நடந்தாள்; இல்லைளேல் தளர்ந்தபோதும் தகவேயாம் எரியாநின்ற ஆருயிருக்கு இரங்கினால் ஈது இசை அன்றோ? பிரியாது இருந்தேற்கு ஒருமாற்றம் பேசில் பூசல்பெரிதாமோ?"

சக்கரவாளப் பறவைகளையும், அன்னங்களையும் பார்த்து இன்னவாறு இராமன் பன்னிப் புலம்பியிருக்கிறான். தனது அருமை மனைவியைப் பிரிந்தபின் இக் கோமகன் மனநிலை குலைந்து மறுகிப் புலம்பி உருகித் திரிந்தது பெரிதும் பரிபவமுடையது.

வாவும் இளமான்காள்! மயில்காள்! மடப்பிடிகாள்! கூவும் கரிய குயில் இனங்காள்! என் ஆவியைக் காணீரோ? என இவ்வண்ணம் தன் தேவியை நினைந்து கனவிலும் நனவிலும் இக் குல மகன் புலம்பி வருவதை அநுமான் சில முறை கேட்டான். மனம் மிக மறுகினான். "நம் ஆண்டவனுக்குக் கொஞ்சம் நெஞ்சுரம் காணாது; காதலில் இவ்வளவு நோதலா? வசிட்டர், விசுவாமித்திரர் முதலிய பெரிய மகான்களோடு பழகியிருந்தும், அரிய ஞானிகளோடு அளவளாவி வந்தும் மன வுறுதியும் தெளிவும் சரியாய் நிறையவில்லையே; மனைவிமேல் மையல் பெருகியுளது; சிறந்த வீரன் உள்ளத்தில் இத்தகைய பெண்பித்து இடம் பெற்றிருக்கிறது; சிறிது அமைதியோடு இருக்கலாம்; ஆயினும் எம் பெருமானிடம் நான் என்ன சொல்வது? பெரிய இடத்து நிலை!" எனப் பிரிவுத் துயரில் மனைவியை நினைந்து இராமன் படுகின்ற பரிதாப நிலைகளில் அநுமான் சில குறைபாடுகளைக் கண்டு மனதுக்குள்ளேயே மறுகியிருந்தான். முன்னம் அவ்வாறு இருந்தவன் இப்பொழுது சீதையைக் கண்டதும் முழுதும் மாறினான்: "ஆ! இந்த அற்புத அழகியை; கற்பின் திருவை; அயலே பிரிந்து இராமன் எப்படித்தான் உயிர் வாழ்ந்திருக்கிறான்! அந்த நெஞ்சத் திண்மை கல்லினும் இரும்பினும் வலியது; யாண்டும் எதற்கும் அஞ்சாத அசகாய சூரன் ஆதலால் இத்தகைய அருமை மனைவியைப் பிரிந்தும் மனவுறுதி குலையாமல் பொறுத்திருக்கிறான்" என இவ்வாறு இங்கே புகழ்ந்து நின்றான். நிலைமைகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன.

சீதையை நினைந்து இராமன் பரிந்து பரிதபிக்குங்கால் மாருதி அங்கே சிறிது மாறாயிருந்தான்; நேரே கண்டபின் முன் கொண்டது முற்றும் மாறி ஈண்டு வேறாய் இரங்கினான்.

பிரிந்த பொருளின் அருமையையும், காதலின் சுவையையும் சிறிதும் தெரியாதவன் ஆதலால் இராமனது விரக வேதனையில் பரிவு காணாமல் அங்கே அனுமான் விரத்தியாயிருந்தான்; இங்கே பிராட்டியை நேரே காணவே பெருமான் உயிர் பிழைத்திருக்கிறதே! உயர் வீரம் என்று உவந்து கொண்டாடினான். இருவகை நிலையிலும் நெறி முறையே நின்று நிலைமைகளை நிறுத்து நீர்மைகளைக் கூர்மையாக நோக்கியிருக்கிறான்

இன்னுயிர் அனைய இனிய தேவியைப் பிரிந்து தன்னுயிர் தாங்கியிருப்பது அதிசய ஆண்மையாய்த் துதி செய்ய வந்தது.

"துஷ்கரம் க்ருதவாந் ராமோ"(வால்மீகி, சுந்தர, 15-52)

"செய்ய முடியாத அரியசெயலை இராமன் செய்திருக்கிறான்" என வால்மீகத்தில் குறித்துள்ளதும் ஈண்டு அறியத் தக்கது. பிரிவாற்றாமையால் மனம் உடைந்து இராமன் மறுகி மயங்கினாலும் உறுதியாய் உயிர் தாங்கியுள்ளது அரிய வியப்பாயது. பிரிந்திருக்கின்ற பொருளின் மகிமையை இவை தெரிந்து கொள்ள வந்தன. உயிராதாரங்கள் ஒருமை எய்தியுள்ளன.

தனது அருமை நாயகனையே கருதி உருகிச் சீதை சிறைவாசம் செய்திருப்பது அரிய தவயோகமா யுள்ளமையால் இந்த நிலையை அந்தச் செந்தாமரைக் கண்களால் இராமன் காணவில்லையே! என்று தான் கண்ட காட்சியை அனுமான் கொண்டாடி நின்றான். கற்பு கருணை தருமம் பொறுமை என்னும் அருமை நீர்மைகள் ஓர் உருவமாய் மருவி அரிய தவம் புரிகின்றன என உவகை மீதூர்ந்து வியந்தான். இந்த உத்தம பத்தினிக்குப் பிழை செய்துள்ளவன் குடியோடு அழிவான் என முடிவு செய்தான்.

தேவர்களும் ஏவல் செய்கின்ற மூவுலகாட்சியை இந்த ஒரு தீவினையால் இராவணன் நாசமாக்கிக் கொண்டான்; தீவினைவுகளை நினையாமல் ஆசை மீக் கொண்டு அவமே அழிய நேர்ந்தான் என உள்ளம் கவன்று உறுதி கூர்ந்தான்.

செல்வமோ அது! அவர் தீமையோ இது!

இலங்கை வேந்தனுடைய செல்வ நிலைகளை நினைந்து வியந்து அவன் விரைந்து அழிந்து போக நேர்ந்துள்ள தீவினையை எண்ணி இங்ஙனம் இரங்கினான். பிராட்டியை விழைந்தது பெரு நீசம்; அதனால் குல நாசமே என்று குறித்தான்.

அமரர்களையும் அடிமைகளாக் கொண்டு திரிலோகாதிபதியாய் நின்றாலும் அரக்கர்பதி அடியோடு அழிவான் என்று உறுதி பூண்டான். பாவ புண்ணியங்களின் நிலைகளைப் பரிந்து வியந்தான்.

வெல்லுமோ தீவினை அறத்தை.

கற்பு நிலை குலையாமல் சீதை யிருக்கும் அற்புத நிலையை இது கருதி வந்தது. இந்தத் தருமபத்தினியின் அருமைநாயகன் எதிரே பாவிகளான அரக்கர் பாழாய் அழிவர்; உரிமை மனைவியை அடைந்து இராமன் வெற்றி வீரனாய் உலகம் புகழ விளங்கி மகிழ்வன் என உள்ளம் பூரித்து அனுமான் உவகை மீதூர்ந்து நின்றான்.

## இடையே நிகழ்ந்தது,

இராம தூதன் சானகியைக் கண்டு ஆனந்த பரவசனாய்த் தொழுது துதித்துப் பல பல எண்ணி நிலைமைகளை இங்ஙனம் சிந்தனை செய்து கொண்டிருக்கும் பொழுது, அரசஆடம்பரமான ஆரவாரங்களும் ஆயிரக்கணக்கான தீபங்களின் ஒளிகளும் அயலே தோன்றின. அனுமான் வியந்து நோக்கினான்.

தேவ மங்கையர் புடை சூழ ஒரு சக்கரவர்த்தி அங்கே வருவது தெரிந்தது. இலங்காதிபதியே அங்ஙனம் வருகிறான் என்று மாருதி குறிப்பால் ஓர்ந்து அருகே அங்கு ஓர் பூஞ் சோலையின் பொதும்பருள் மறைந்து நின்றான், நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்தான்.

## இராவணன் வந்தது.

அசோக வனத்தை நோக்கி இராவணன் வரும் பொழுது அதிசய கம்பீரங்கள் வழி முழுதும் விதி முறையே விளங்கி நின்றன. அந்தக் கோலாகல நிலைகளைக் கவி விசித்திர கதியில் விளக்கி யிருக்கிறார். வருணனைகள் பல கவிகளைக் கவர்ந்திருக்கின்றன; சில அயலே வருகின்றன.

சிகரவண் குடுமி நெடுவரை எவையும்
ஒருவழி திரண்டன சிவண

மகரிகை வயிர குண்டலம் அலம்பும்
திண்டிறல் தோள்புடை வயங்கச்
சகர வேலையின்நீர் தழுவிய கதிரின்
தலைதொறும் தலைதொறும் தயங்க
வகையபன் மகுடம் இளவெயில் எறிப்பக்
கங்குலும் பகல்பட வந்தான். (1)

உருப்பசி உடைவாள் எடுத்தனள் தொடர
மேனகை வெள்ளடை உதவச்
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல
அரம்பையர் குழாம்புடை சுற்றக்
கருப்புரம் சாந்தும் கலவையும் மலரும்
கலந்துமிழ் பரிமள கந்தம்
மருப்புடைப் பொருப்போர் மாதிரக் களிற்றின்
வரிக்கைவாள் மூக்கிடை மடுப்ப; (2)

நானநெய் விளக்கம் நாலிரு கோடி
நங்கையர் அங்கையின் எடுப்ப
மேனிவந் தெழுந்த மணியுடை யணியின்
விரிகதிர் இருளெலாம் விழுங்கக்
கான்முதல் தொடர்ந்த நூபுரம் சிலம்பக்
கிண்கிணி கலையொடும் கலிப்பப்
பானிறத் தன்னக் குழாம்படர்ந் தென்னப்
பற்பல மழலையும் பகர; (3)

அந்தரம் புகுந்த துண்டென முனிவுற்று
அருந்துயில் நீங்கினன் ஆண்டைச்
சந்திர வதனத்து அருந்ததி இருந்த
தண்ணறுஞ் சோலையின் தனையோ
மந்திரம் யாதோ யாரொடும் போமோ
என்றுமா மனம் மறுக்குறலால்
இந்திரன் முதலோர் இமைப்பிலா நாட்டம்
முகிழ்த்தனர் உயிர்ப்பவிந் திருப்ப; (4)

தோள்தொறும் தொடர்ந்த மகரிகை வயிரக்
கிம்புரி வலயமாச் சுடர்கள்
நாள்தொறும் சுடரும் கலிகெழு விசும்பின்
நாளொடு கோளினை நக்கத்

தாள்தொறும் தொடர்ந்த தழங்குபொற் கழலின்
தகைஒளி நெடுநிலம் தடவக்
கேள்தொறும் தொடர்ந்த முறுவல் வெண்ணிலவின்
முகமலர் இரவினும் கிளர; (5)

தன்னிறத் தோடு மாறுதந் திமைக்கும்
நீவியம் தழைபட உடுத்த
பொன்னிறத் தூசு கருவரை மருங்கில்
தழுவிய புதுவெயில் பொருவ
மின்னிறக் கதிரிற் சுற்றிய பசும்பொன்
விரற்றலை அவிரொளிக் கரகின்
கன்னிறக் கற்றை நெடுநிழல் பூத்த
கற்பக முழுவனம் கவின; (6)

சன்ன வீரத்த கோவைவெண் தரளம்
ஊழியின் இறுதியில் தனித்த
பொன்னெடு வரையில் தோற்றிய கோளும்
நாளும் ஒத்து இடையிடை பொலிய;
மின்னொளி மௌலி உதயமால் வரையின்
மீப்படர் வெங்கதிர்ச் செல்வர்
பன்னிரு வரினும் இருவரைத் தவிர்வுற்று
உதித்ததோர் படி ஒளி பரப்ப; (7)

அங்கயல் கருங்கண் இயக்கியர் துயக்கில்
அரம்பையர் விஞ்சையர்க் கமைந்த
மங்கையர் நாக மடந்தையர் சித்தர்
நாரியர் அரக்கியர் முதலாக்
குங்குமக் கொங்கைக் குவிமுலைக் கனிவாய்க்
கோகிலம் துயர்ந்த மென்குதலை
மங்கையர் ஈட்டம் மால்வரை தழீஇய
மஞ்ஞையங் குழுவென மயங்க; (8)

மாலையும் சாந்தும் கலவையும் பூணும்
வயங்குநுண் தூசொடு காசும்
சோலையின் தொழுதிக் கற்பகத் தருவும்
நிதிகளும் கொண்டு பின்தொடரப்
பாலின்வெண் பரவைத் திரைகருங் கிரிமேல்
பரந்தெனச் சாமரை பதைப்ப;

வேலை நின்றுயரும் முயலில் வெண்மதியின்
வெண்குடை மீதுற விளங்க; (9)

விரிதளிர் முகைபூக் கொம்படை முதல்வேர்
இவையெலாம் மணிபொனால் விரிந்த
தருவுயர் சோலை திசைதொறும் கரியத்
தழலுமிழ் உயிர்ப்புமுன் தவழத்
திருமகள் இருந்த திசையறிந் திருந்தும்
திகைப்புறு சிந்தையன் கெடுத்த
ஒருமணி நெடும்பற் பஃறலை அரவின்
உழைதொறும் உழைதொறும் உலாவ. (10)

இனையதோர் தன்மை எறுழ்வலி அரக்கர்
ஏந்தல் வந்து எய்துகின்றானை
அனையதோர் தன்மை அஞ்சனைச் சிறுவன்
கண்டனன் அமைவுற நோக்கி
வினையமும் செயலும் மேல்விளை பொருளும்
இவ்வழி விளங்கும் என்று எண்ணி
வனைகழல் இராமன் பெரும்பெயர் ஓதி
இருந்தனன் வந்தயல் மறைந்தே. (11)

ஆயிடை அரக்கன் அரம்பையர் குழுவும்
அல்லவும் வேறு அயல் அகல
மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையாள்
இருந்துழி ஆண்டவள் வெருவிப்
போயின உயிரள் ஆமென நடுங்கிப்
பொறிவரி எறுழ்வலிப் புகைக்கட்
காய்சின உழுவை தின்னிய வந்த
கலையிளம் பிணையெனக் கரைந்தாள். (12)

(நிந்தனைப் படலம்)

இந்தப் பகுதியில் வந்துள்ள கவிகள் கம்பீர நிலைகளில் களித்து விளைந்துள்ளன. எடுப்பும் தொடுப்பும் நடையும் தொடையும் சொல்லும் பொருளும் ஓதியுணருந்தோறும் உவகை சுரந்து பெருகுகின்றன. உணர்ச்சி ஓசைகளை உள்ளச்செவிகள் சுவைத்து மகிழுகின்றன. கலையின் சுவைகள் கழிபேருவகைகளை விளைத்தருளுகின்றன. காவிய நிகழ்ச்சிகள் ஓவியக் காட்சிகளாய் ஒளிசெய்து மிளிர்தலை விழிகள் களிப்ப விழைந்து நோக்கி வியந்து நிற்கிறோம்.

## வந்த கோலம்.

விரக வேதனையோடு அமளியில் கிடந்த இராவணன் விடிய ஐந்து நாழிகைக்கு முன்பே எழுந்து கொண்டான். சீதை மீது மோதிய காதலால் ஆவி அலமந்து கிடந்த அவன் எழுந்ததும் அசோக வனத்துக்குப் புறப்பட்டான். அதிசய ஆடம்பர அலங்காரங்களோடு சக்கரவர்த்தி புறப்படவே உரிய பரிசனங்கள் ஒக்கத் தொடர்ந்தனர். காதல் மீக்கூர்ந்து மையல் மயக்கமாய்த் தையலை நாடி வருதலால் மங்கையர் திரள்கள் மருங்கு வந்தன. அந்தப்புரத்திற்குச் செல்லும் பொழுது அழகிய மகளிர் ஊழியம் புரிந்து வருவது வழக்கம் ஆதலால் அந்த முறையில் இந்தக் காட்சிகள் இங்கே எழுந்தன. தேவ மங்கையர் ஏவல் செய்து ஆவலோடு வருவது அவனது இராச போகங்களையும் அதிசய மரியாதைகளையும் விழுமிய மேன்மைகளையும் வெளி அறிய விளக்கி நின்றன. எழில் ஒளிகள் எங்கும் துலங்கின.

இலங்கை வேந்தன் அலங்காரங்கள் புனைந்து எழுந்த பொழுது அரண்மனையிலிருந்து அசோகவனம் வரையும் இருமருங்கும் அழகிய இளங்குமரிகள் நெய் விளக்குகளை ஏந்தி நெறிமுறையே வரிசையாய் நின்றனர். அரசர் பிரான் அதிசய நிலையில் வந்தான்.

நெடிய சிகரங்களையுடைய அழகிய மலைகள் ஒரு வழியே திரண்டு வந்தது போல் வாகு வலயங்கள் புனைந்து விழுமிய தோள்கள் இருபதும் துலங்கி நின்றன. நீலக் கடல் முகட்டில் உதயமாகிய பால சூரியர்களைப் போல் தலைகளில் இரத்தின கிரீடங்கள் பத்தும் எத்திசையும் ஒளி செய்து உலாவின. சன்னவீரத்தம் என்னும் வெற்றி மாலையோடு முத்து மாலைகளும் இரத்தின ஆரங்களும் அவனுடைய கழுத்திலும் மார்பிலும் நட்சத்திர கணங்களைப்போல் மின்னி மிளிர்ந்தன. கைகளிலும் விரல்களிலும் அணிந்திருந்த கங்கணங்களும் மோதிரங்களும் மரகதம் முதலிய நவமணிகளின் ஒளிகளை எங்கணும் பரப்பிப் பொங்கிப் பொலிந்தன. கால்களில் அணிந்திருந்த கழல்கள் மேலான சோதிகளை வீசின. சந்திர வட்டக் குடை பின்னே துலங்க, முன்னே இன்னெழில் மிகுந்த கந்தருவ மகளிர் வெண்சாமரைகளை வீச இராச கம்பீரமாய் இராவணன் நடந்து வந்தான். வருங்கால் உருப்பசி உடைவாளை எடுத்துக் கொண்டு அவனது தேகக் காப்

பாட்டிபோல் போகக் குறிப்போடு அருகே தொடர்ந்து வந்தாள்; வாசனை வெற்றிலையை மடித்து அடுத்து நடந்து இடையிடையே புன்னகையுடன் மேனகை நன்னயமாய்க் கொடுத்து வந்தாள்; அவனுடைய அழகிய தங்கப் பாதுகைகளைத் தன் கைகளில் ஏந்திக் கொண்டு திலோத்தமை தொடர்ந்தாள்; தெய்வ அரம்பையர் யாவரும் புடைசூழ்ந்து ஏவலோடு படர்ந்தனர்; நறிய மலர்களும் அரிய கலவைச் சந்தனங்களும் பரிமள கந்தங்களும் எங்கும் படர்ந்து அடர்ந்து தொடர்ந்து கமழ்ந்தன; விஞ்சையர் மாதரும் நாக கன்னியரும் கின்னர மகளிரும் இன்னிசை பாடிச் சென்றனர்; சித்தர் மங்கையர் விசித்திர அபிநயங்கள் புரிந்து சுதி முறை தழுவிச் சதிகள் கெழுமி நன்னய ஆடல்கள் காட்டி நாட்டியம் கூட்டி நவரசங்களையும் ஊட்டிப் போயினர். வேணுகானமும் வீணை நாதமும் செவிகளுக்கு அமுதங்களாய் வார்த்துக் கந்தருவ சுந்தரிகள் சந்திரபிம்பங்கள் போல் கண்களுக்கு அமுதங்களாய்ப் பண்கள் பாடி ஏகினர். இத்தகைய அதிசய மாட்சிகளோடு இலங்காதிபதி எழுந்து வரவே இமையவர் எவரும் திகில் கொண்டு நோக்கினர். இந்திரனும் சிந்தை கலங்கி மந்திரிகளோடு மறுகி அந்தரம் யாது? என ஆராய நேர்ந்தான். தன்னை நோக்கி விண்ணும் மண்ணும் அங்ஙனம் வியந்து திகைக்கத் தான் ஒரு பெண்ணரசியை நோக்கிக் கண்ணும் கருத்தும் கலங்கி அப் பேதை மன்னன் ஏதமாய் இங்ஙனம் வந்தான். கந்தருவ உலகம்போல் எவ்வழியும் திவ்விய எழிலோடு பொலிந்து விளங்குகின்ற அந்தப் பொழிலை அடைந்ததும், உடன் வந்த எல்லாரையும் வெளியே நிறுத்தி விட்டுத் தான் ஒருவன் மாத்திரம் தனியே உள்ளே புகுந்தான். அவனைக் கண்டதும் அஞ்சனைச் சிங்கம் வியந்தான்; நெஞ்சில் சினம் மூண்டது; அடக்கிக் கொண்டு மேலே நிகழ்வதை நேரே காண வேண்டும் என்னும் வேணவாவோடு விரைந்து மறைந்தான்; விளைவு ஓர்ந்து நின்றான்.

கொடிய காமப்பித்தனாய் நெடிய அலங்காரங்களோடு பல இடங்களையும் கடந்து சிறையை நாடி வந்தான். அவனைக் கண்டதும் தேவி ஆவி குலைந்தாள்; அலமந்து பதைத்தாள்; அத் தீயவன் யாதும் கருதாமல் அயல் அணுகினான். மையலோடு மருங்கு நெருங்கித் தையல் நாயகத்தின் அருகே பைய அமர்ந்தான்.

## நிலைமை.

இராவணனுடைய அதிசய மகிமைகளையும், ஆடம்பர நிலைமைகளையும், இராச போகங்களையும் கவி இங்கே ஆர்வத்தோடு வருணித்திருக்கிறார். பலவகையான நிலைகளை இருபது கவிகளில் மிகவும் தெளிவாக உரைத்திருக்கிறார். உரைகள் எல்லாம் அவனுடைய உன்னதமான பெருமிதநீர்மைகளைச் சுவையாய் வெளிப்படுத்தியுள்ளன. மலை கடல் கதிர் மதி முதலிய அரிய பொருள்களை உவமை காட்டி அவனது மேன்மைகளை மாட்சிமைப் படுத்தி விளக்கியிருப்பது வித்தகக் காட்சிகளாய் விளங்கி வியப்பையும் விம்மிதத்தையும் விளைத்து நிற்கின்றது.

மகுடம்இளவெயில் எறிப்பக் கங்குலும் பகல்படவந்தான்.

அவனது மணி மகுடத்தின் நிலைமையும் தலைமையும் இதனால் அறிய வந்தன. வந்த நேரம் இரவு என்பதை இந்த வாக்கியம் விளக்கியுளது. மணியணிகள் ஒளிவீச வந்தது மகிமைகளை வெளி வீசி நின்றது. உள்ளே மருளுடையவன் வெளியே இருளுடைய வந்தான். நசையும் வசையும் இசையும் திசையும் பரவின.

ஊர்வசி, திலோத்தமை, மேனகை, அரம்பையர் ஊழியம் புரிந்தனர் என்றது அவனது இன்ப நலங்களின் வரம்பு காண வந்தது. அதிசய போகங்கள் துதி செய்து தொடர்ந்தன.

பேரழகுடைய தேவ மங்கையரும் தனக்கு ஆவலாய் ஏவல் செய்கின்றனர் என்பதைச் சீதை கண்டால் தன்னை மதித்துத் தன்பால் அன்பு கொள்வாள் என்னும் ஆசை மீதூர்ந்தே அப்பேயன் அவ்வாறு மடந்தையர் கூட்டத்தை உடந்தையாக அன்று ஈட்டி வந்தான். ஈட்டமெல்லாம் களியாட்டங்களை நீட்டி நின்றன.

காம இச்சை உள்ளே புகுந்த பொழுது உணர்வு வெளியே பாழாய்ப் போகின்றது; நாணம் நாசம் ஆகின்றது; எவனும் மானமழிந்து ஈன நிலையில் இழிந்து வீழ்கின்றான். ஆணவரையும் ஆசையைப் பூர்த்தி செய்ய ஆவலாய் மூண்டு அடாத செயல்கள் செய்து படாத பாடுகள் படுகின்றான்.

செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல என்றது நம் உள்ளத்தில் எவ்வளவு பரிதாபத்தை ஓங்கச் செய்கின்றது! அவ

னது அதிகார ஆணைகள் அமரர் திரள்களை அடிமைகள் ஆக்கி அதிசய நிலைகளில் விதிசெய்து வருகின்றன.

"தெய்வ சுந்தரி ஆன திலோத்தமையும் என் கால் செருப்பைத் தன் தலையில் தாங்கி வருவதை ஒரு தனிப் பெருமையாக மதித்து மகிழ்வள்; நீ என்னை யாதும் மதியாமல் மதி கெட்டிருக்கிறாயேபேதாய்!" எனச் சீதைக்குச் சுட்டிக் காட்டவே அம் மதிகேடன் அங்ஙனம் சதி கூட்டிச் சதி நீட்டி அடைந்தான்.

அவனுடைய கருத்தும் கவனமும் குறிப்புகள் யாவும் சானகியைத் திருத்தி எப்படியும் வசப்படுத்த வேண்டும் என்றே யாண்டும் மூண்டு விருத்தியாய் வேலை செய்து வருகின்றன. தூக்கம் பிடிக்காமல் ஏக்கம் பிடித்து அளவிடலரிய ஆடம்பரங்களோடு பேராசை மண்டி ஒரே நோக்கமாய் நேரே அசோக வனத்தை நோக்கி அப் போக்கன் பொங்கி வந்தான்.

விடியுமுன் எழுந்த இவனது எழுச்சியை நோக்கி என்ன விடியுமோ? என்று இமையவர் எல்லாரும் உள்ளம் அஞ்சினர்.

மந்திரம் யாதோ? யாரொடும் போமோ? என்று
இந்திரன் முதலோர் உயிர்ப்பு அவிந்திருந்தார்.

இராவணனுடைய அடலாண்மைகள் வானவர் குலத்தை எவ்வாறு அச்சுறுத்தி வைத்திருக்கிறது என்பதை இதனால் உய்த்துணர்ந்து கொளலாம்.

என்றும் இமையாத கண்களையுடைய அமரர் அன்று அச்சத்தால் தங்கள் நயனங்களை மூடிக் கொண்டனர். இமைப்பிலா நாட்டங்கள் முகிழ்த்தனர் என்றது அவரது நெஞ்சத் திகிலின் நிலை தெரிய வந்தது.

மூச்சு விடாமல் பேச்சடங்கிக் கண்ணை மூடிக் கடும் பயங்கொண்டு கலங்கி யிருந்தமையால் இலங்கை வேந்தனது கொடுந்தண்டங்கள் துலங்கி நின்றன. இந்திரன் முதலாயினோர் அஞ்சி நடுங்கிய நிலைமை இங்கே குறித்துக் காட்டியது அந்தரத்தோடு எவ்வுலகையும் அவன் அடக்கி ஆண்டு வரும் ஆற்றலும் ஏற்றமும் தெரிய. அகிலமும் திகிலுற ஆட்சி புரிவது காட்சிக்கு வந்தது.

இத்தகைய போரசன் காம பரவசனாய் அசோக வனத்துள் வந்து புகுந்தான்; சீதை அமர்ந்துள்ள குளிர் தருவின் சூழலை

நன்கு தெரிந்திருந்தும் மதி மயக்கத்தால் திசை தடுமாறி அப் பொழில் முழுவதும் சுருளி உலாவினான்.

திருமகள் இருந்த திசை அறிந்திருந்தும்
திகைப்புறு சிந்தையன் கெடுத்த
ஒருமணி நெடும்பற் பஃறலை அரவின்
உழைதொறும் உழைதொறும் உலாவ.

பத்துத் தலைகளையுடைய பாம்பு தனது சீவரத்தினத்தைத் தேடி அலைந்தது போல் இராவணன் சீதையை நாடி அலமந்தான் என இங்ஙனம் உவமை கூறி உணர்த்தியிருக்கிறார். பல்தலை= பஃறலை என மருவியது. லகர ஒற்றின் முன் தகரம் வரின் நிலை மொழியும் வருமொழியும் உருமாறி இடையே ஆய்தம் ஆம் என்பது இயல்விதி. பல தலை என்று கூறியிருக்கலாம்; அங்ஙனமின்றி அருமையும் ஒருமையும் தெரிய இங்ஙனம் கூறியருளினார்.

தனக்கு உயிராதாரமாயுள்ள மணியை வெளியே உமிழ்ந்து வைத்துவிட்டு அயலே மேயப் போயிருந்த பாம்பு மீளவும் வந்து அதனை விழுங்கிக் கொள்ளும்; அந்த மணியைக் காணவில்லையானால் அது ஏங்கி மாண்டு போம்.

மணி சீதைக்கும், பாம்பு இராவணனுக்கும் ஒப்பாம். உவமைக் குறிப்பால் பொருளின் உண்மைகள் நுண்மையாக உணர வந்தன. அருமையும் பெருமையும் அழகும் மகிமையுமுடைய பிராட்டியைக் கொடுமையும் தீமையும் கடுமையும் சிறுமையுமுடைய இராவணன் மடமையாய் விழைந்து மாள நேர்ந்துள்ளான்.

கெடுத்த ஒருமணி என்றது அவன் கேடாய் எடுத்து வந்த பாடு தெரிய: இராமனது சீவமணியைக் களவாக் கவர்ந்து கொண்டு வீணே விழைந்து விளிந்து படுகிறான். அரிய பெண்மணியை அரவின் ஒரு மணி என்றது அருமை கருதி.

"பைந்தொடித் தாயரும் ஏனையோரும்
பாங்குற மூவர்க்கும் தாழ்ந்து கூறிக்
கொந்தொளி மாமணி இட்டுப் போதும்
கோளரவிற் கருத்திட்டுப் போந்தார்."

(தணிகைப்புராணம், விடையருள், 7)

வள்ளி நாச்சியாரை அரவின்மணி என இது குறித்துள்ளது

"அரவுமிழ் மணியிற் குறுகார்" (புறம், 294)

நாகரத்தினம் போல் இராமரத்தினம் அவனுக்குச் சிவசத்தியாயிருக்கிறது. அவனையன்றி வேறு எவரும் அதன் அருகே அணுகலாகாது; துணிந்து அணுகின் அவர் விரைந்து அழிவர் என்னும் தெளிவு இங்கே வெளியாய் நின்றது.

இத்தகைய அற்புதக் கற்பரசியை அக் காமப்பித்தன் அணுகவே, இக் குலமகள் உளம் துடித்து உயிர் பதைத்துப் புலியைக் கண்ட மானிளம் பேடைபோல் மறுகி அலமந்தாள்.

ஆசை மீதூர்ந்து அவன் வந்துள்ளதையும், சானகி அஞ்சி அலமருவதையும் நேரே கண்ட மாருதி நெஞ்சம் கனிந்தான். உத்தம பத்தினியின் புனித நிலை உள்ளத்தை உருக்கி உவகையை விளைத்தது. இராம சிந்தனை செய்து திசைநோக்கித் தொழுது மேலே நிகழ்வதை விழைந்து நோக்கி ஒளிந்து நின்றான்.

## இராவணன் வாதாடியது.

பெருகிய மயலோடு இராவணன் அருகு வரவே அங்கே காத்து நின்ற அரக்கியர் எல்லாரும் அஞ்சி வணங்கி அயல் ஒதுங்கிப் போயினர். திரிசடையும் விரைந்து மறைந்து நின்றாள். சீதை எதிரே அமர்ந்து ஆதர மீதூர்ந்து காதலோடு களித்து நோக்கிய அவன் மையல் மொழிகள் பல மறுகி மொழிந்தான்.

அவ்விடத்தரு கெய்தி அரக்கன் தான்
எவ்விடத் தெனக்கு இன்னருள் ஈவது?
நொவ்விடைக் குயிலே! நுவல் கென்றனன்
வெவ்விடத்தை அமிழ்தென வேண்டுவான். (1)

ஈசற் காயினும் ஈடழி வுற்றிறை
வாசிப் பாடழியாத மனத்தினன்
ஆசைப் பாடும்அந் நாணும் அடர்த்திடக்
கூசிக் கூசி இனையன கூறினன்: (2)

இன்று இறந்தன நாளை இறந்தன
என்றிறந்தரும் தன்மையிதால்! எனைக்
கொன்றிறந்த பின் கூடுதியோ? குழை
சென்றிறங்கி மறந்தரு செங்கணாய்! (3)

உலகம் ஒன்றொடிரண் டொருங்கு ஓம்பும்என்
அலகில் செல்வத்து அரசியல் ஆணையில்
திலகமே! யுன்திறத்து அநங்கன் தரும்
கலகமல்லது எளிமையும் காண்டியோ? (4)

பூந்தண் வார்குழற் பொற் கொழுந்தே! புகழ்
ஏந்து செல்வம் இகழ்ந்தனை இன்னுயிர்க்
காந்தன் மாண்டிலன் காடு கடந்துபோய்
வாழ்ந்த வாழ்வது மானுடர் வாழ்வன்றோ? (5)

நோற்கின்றோர்களும் நுண்பொருள் நுண்ணுதின்
பார்க்கின்றோரும் பெறும்பயன் பார்த்தியேல்
வார்க்குன்றமுலை என்சொல் மௌலியால்
ஏற்கின்றா ரொடுடனுறை இன்பமால். (6)

பெண்மையும் அழகும் பிறழாமனத்
திண்மையும் முதல் யாவையும் செய்யவாய்க்
கண்மையும் பொருந்திக் கருணைப் படர்
வண்மை என்கொல் சனகரின் மாண்டவா! (7)

வீட்டுங் காலத்து அலறிய மெய்க்குரல்
கேட்டுங் காண்டற்கு இருத்திகொல் கிள்ளைநீ
நாட்டுங் கால்நெடு நல்லறத்தின் பயன்
ஊட்டுங் காலத்து இகழ்வது நுங்கொலோ? (8)

தக்கதென் னுயிர் வீடெனின் தாழ்கிலாது
ஒக்க செல்வம் உலையும் ஒருத்தி நீ
புக்குயர்ந்த தெனும்புகழ் போக்கி வேறு
உக்க தென்னும் உறுபழி கோடியோ? (9)

தேவ தேவியர் சேவடி கைதொழும்
தாவின் மூவுலகின் தனி நாயகம்
மேவுகின்றது நுன்கண் விலக்கினை
யாவர் ஏழையர் நின்னின் இலங்கிழாய்! (10)

குடிமை மூன்றுலகும் செயும் கொற்றத்தென்
அடிமை கோடி அருளுதியால் எனு
முடியின் மீது முகிழ்த்துயர் கையினன்
படியின் மேல்விழுந் தான்பழி பார்க்கலான். (11)

காம வெறியனாய்க் களித்து வந்தவன் கற்பரசி எதிரே இருந்து கொண்டு பேசியுள்ள பேச்சுகளையும், ஆசைத் தவிப்புகளையும் இங்கே அறிந்து இரங்குகின்றோம்; வருந்தி வைகின்றோம்.

ஆசையால் அறிவழிந்திருத்தலால் யாவும் கூசாமல் பேசினான்.

“சீதா! எனக்கு நீ என்று கருணை செய்ய எண்ணியிருக்கிறாய்? இன்று இரங்குவாய், நாளை இரங்குவாய், என்று நாளும் நாளும் நான் தவித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு கணம் கழிவது பல யுகமாயுள்ளது; எனது கண்ணும் கருத்தும் எண்ணும் எழுத்தும் யாவும் நின் உருவமாகவே நிலவி வருகின்றன; என் உயிர் வேதனை கொடிய துயரமாய் நெடிதோங்கி நிற்கிறது; நான் செத்து ஒழிந்த பின்புதான் நீ சித்தம் இரங்கி அருள்வாய் போலும்? நான் மூன்று உலகங்களையும் ஒருங்கே ஆளுகின்றேன்; எல்லாச் செல்வங்களும் என்பால் நிறைந்திருக்கின்றன; எனக்கு யாதொரு குறையும் இல்லை; நீ ஒருத்தி தான் பெருங்குறை செய்து வருகிறாய்; உன்மேல் நான் கொண்ட ஆசையினால் அற்பனான மன்மதனும் என்மேல் அதிகாரம் செலுத்த நேர்ந்தான்; தேவர் முதல் யாவரும் அஞ்சி அடி வணங்குகின்ற என்னைப் பஞ்சபாணன் யாதும் அஞ்சாமல் அருந்துயர் செய்கின்றான்; தேவர்க்கும் வலியனாய் நின்ற நான் உன்னால் யாவர்க்கும் எளியனாயினேன். என்னைக் காதலித்து எவ்வளவோ தெய்வ மங்கையர் எதிர்பார்த்துள்ளனர். நான் உன்னைக் காதலித்து உழலுகின்றேன்; எனது நிலைமையை நீ யாதும் உணரவில்லை; எய்திய அரசை இழந்து விட்டு நாட்டில் வாழ முடியாமல் காட்டில் போய் அலைந்து திரிகிற அந்த மனிதனை மதித்து மதிமயங்கி யிருக்கிறாய்; என்னை மதியாமல் மதி கெட்டுள்ளாய்; உன் மடமையை நினைந்து வருந்துகிறேன்; உனக்கு அழகைப் படைத்த கடவுள் அறிவைப் படைக்காமல் போனானே! இந்த உலகத்தில் அரிய தவங்களைச் செய்பவர்களும், பெரிய புண்ணியங்களைப் புரிபவர்களும் மறுமையில் தேவர்கள் ஆகின்றனர். அந்தத் தேவர்கள் யாவரும் என்னை அடிவணங்கி ஏவலர்களாய் எனக்கு ஊழியம் செய்து வருகின்றனர். எனது மகிமை மாட்சிகளையும் செல்வக் காட்சிகளையும் இன்ப போகங்களையும் சிறிதும் சிந்தனை செய்து பாராமையால் நீ நிந்தனை செய்திருக்கிறாய்; இந்திரனும் அஞ்சித் தொழுகின்ற நான் அன்புரிமையோடு உன்னைக் கெஞ்சி மறுகுகின்றேன்; நீ கொஞ்ச

மும் நெஞ்சம் இரங்காமல் வஞ்சம் சாதித்துள்ளாய்! உன் இருப்பு எனக்கு நெருப்பு ஆகின்றது; சானகி! என் மேல் கொஞ்சம் இரங்கியருள்; உன் அழகும் இளமையும் வீணே கழிந்து போகின்றன; பருவ அழகைப் பயன் படுத்தாமல் பாழாக்காதே; கடந்து போன பொழுது மீள வராது; அரிய இன்ப வாழ்வை அடைந்து மகிழாமல் கொடிய துன்பத்தில் நீ வீழ்ந்துழல்வது நெடிய பேதைமையாம்; தாலி கட்டிய கணவன் ஒருவன் வேலியிட்டுள்ளதாக நீ எண்ணியிருப்பின் அது பெரிய கேலியாம். மாய மான் என்று தெரியாமல் மடத்தனமாய் இராமன் அதனைப் பிடிக்கப் போனான். போன இடத்தில் மாண்டான்; அவன் பதைத்துச் சாகும் பொழுது துடித்துக் கூவிய சத்தம் உன் காதில் கேட்கவில்லையா? கேட்டிருந்தும் வீணாசை கொண்டு நாளை விருதாவாய்க் கழிக்கின்றாயே! சிறந்த பட்டத்து அரசியாய் அரியணையில் ஒக்க அமர்ந்து . தேவ மங்கையர் யாவரும் ஊழியம் புரிய மேலான இன்ப போகங்களை நீ அனுபவிக்க வேண்டும்; என் ஆவித் துணையாக உன்னை நான் பாவித்திருக்கிறேன்; மூன்று உலகங்களுக்கும் ஆண்டவனான என்னை உனக்கு யாண்டும் என்றும் அடிமையாக்கியுள்ளேன்; எனக்கு உயிர்ப்பிச்சை தந்தருள்'' என்று இங்ஙனம் சொல்லிக் கொண்டே தலைமேல் கைகளைக் கூப்பிப் பிராட்டியின் காலில் நெடிது விழுந்து பணிந்து கிடந்தான்.

இங்கே நிகழ்ந்திருக்கின்ற பேச்சுகளும் காட்சிகளும் வியப்பும் வெறுப்பும் உவப்பும் கலந்து வெளி வந்துள்ளன. காம நசையின் பிதற்றல்களைக் கவி நயமாகக் காட்டி யிருக்கிறார். வார்த்தைகளில் தூர்த்தத் தனங்கள் நிறைந்திருப்பினும் சொல்லுகிற முறைகளில் சுவைகள் சுரந்து திகழ்கின்றன. விளைவுகளை உணராமல் விழைந்து வீழ்கின்றான்.

வெவ்விடத்தை அமிழ்துஎன வேண்டுவான்.

சீதையை இராவணன் விரும்புவது தான் அழிவதற்கே என்பதை இவ்வளவு அழகாக விளக்கியிருக்கிறார். தன்னைக் கொல்ல வல்ல கொடிய நஞ்சை இனிய அமுதம் என்று ஆவலோடு உண்ண அவாவிய முழு மூடன் என நீண்டு அவன் எண்ண நேர்ந்தான்.

வெவ்விடம் என்றது கிட்ட நெருங்காமலும், தொட்டுக்

கொள்ளாமலும் எட்ட நின்று பார்த்த அளவிலேயே கொல்லுகின்ற திட்டிவிடம் என்பது ஒட்டி உணர வந்தது.

"உண்ணாதே, உயிர் உண்ணாது ஒரு நஞ்சும்;
சனகி எனும் பெருநஞ்சு உன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே உயிர்"

அண்ணன் இறந்துபட்ட பொழுது வீடணன் இன்னவாறு பின்னே அழுதுள்ளது ஈண்டு எண்ண வுரியது. நஞ்சை அமிழ்து என விழைந்து உழல்வது விபரீதமான நாசகாலத்தை விளக்கியது.

தனக்கு நாசத்தையும் நீசத்தையும் விளைக்கத் தக்க வழியில் அவன் ஆசை பொங்கி மூண்டு எங்கும் நீண்டு நிற்கிறது; அந்நிலையினை இங்ஙனம் குறித்தருளினர்.

ஈசற் காயினும் ஈடு அழிவுற்று இறை
வாசிப்பாடு அழியாத மனத்தினன்.

இராவணனுடைய அதிசயமான மனவுறுதியை இது துதி செய்துள்ளது. கைலாசகிரியை இவன் அசைத்தபொழுது ஈசன் காலால் ஊன்றிக் கீழே அழுத்தினன்; மலையினிடையே அகப்பட்டு நெரிந்தும் இவன் உள்ளம் தளராமல் உறுதியாய் நின்று பரமனைப் புகழ்ந்து பாடினன்; இவனுடைய மனத் திண்மையையும் இசையின் தன்மையையும் வியந்து நோக்கிச் சிறந்த வரபலங்களையும் உயர்ந்த படைக்கலன்களையும் பரமன் உவந்து உதவினன்.

விரிகடல் இலங்கைக் கோனை வியன்கயி லாயத்தின்கீழ்
இருபது தோளும பத்துச் சிரங்களும் நெரிய வூன்றிப்
பரவிய பாடல் கேட்டுப் படைகொடுதது அருளிச்செய்தார்
குரவொடு கோங்கு சூழ்ந்த கோவல் வீரட்டனாரே

(தேவாரம்)

பரமனோடு உறவாய் இவ்வாறு பாடு பெற்றிருக்கிறான்.

இறைவன் சினந்த போதும் இறையளவும் மனந்தளராமல் நின்று உயர் நலன்களை அடைந்துள்ளமையால் இவனது உள்ளத் திண்மையையும் உறுதிப் பாட்டையும் ஈண்டு வியந்து கூறினர். ஈடு = வலிமை, நிலைமை. வாசிப்பாடு = பெருமை.

ஈசனுக்கும் ஈடு அழியாத வாசிப்பாடுடையவன் இங்கே ஆசைக்கு ஈடழிந்து இழிந்து அவமாய்ப் பிதற்ற நேர்ந்தான்.

மங்கையர் ஆசை யுள்ளம் மருவினுல் மேரு மானத்
தங்கிய திறலோ டோங்கித் தனிப்புக முடைய ரேனும்
அங்கியின் மெழுகாய் ஏங்கி அகம் குழைந்தழிவர் அந்தோ
பொங்கிய காம ஆசை புகின் எல்லாம் நாசமாமே

எவ்வளவு உயர்ந்த ஆண்மையாளன் ஆயினும் காம இச்சை கதுவின் அவன் ஈனமாய் இழிந்து மானம் அழிந்து மறுக நேர்கின்றான். மத்துறு தயிர் எனப் பித்தேறி யுலைகின்றான்

ஆசைப் பாடும் நாணும் அடர்த்திட.

இலங்கை வேந்தன் உயிர் ஊசலாடியுள்ளமையை இதனால் உணர்ந்து கொள்கின்றோம். இச்சையும் இலச்சையும் கொடிதாக நெடிது போராடியிருக்கின்றன. ஆசை அவனைப் பிடர்பிடித்து வெளியே தள்ளுகின்றது; நாணம் தடுத்து நிறுத்துகின்றது. அகில உலகங்களையும் ஆளுகின்ற பெரிய சக்கரவர்த்தி ஒரு பெண்ணினிடம் போய் இழிந்து நின்று பல்லைக் காட்டுவதா? என்று நாணம் உள்ளத்தைத் தடுக்கின்றது; அந்தத் தடையை அடியோடு முறித்து அணையை உடைத்து எழுகின்ற பெரு வெள்ளம் போல் ஆசை அவனை மோசமாக ஈர்த்து வந்துள்ளது.

இச்சைமிகின் இலச்சை இல்லை என்பது பழமொழி.

நாளும் நச்சி உழன்ற அவன் அன்று வைகறையில் வைதேகியை நாடி ஏதேனும் உய்தி கிடையாதா? என்று ஓடி வந்துள்ளான். நெஞ்சம் துணிந்து வந்தாலும் நிலைமையை நேரே வாய்விட்டுச் சொல்ல அஞ்சியிருக்கிறான்.

கூசிக் கூசிக் கூறினன்.

சீதை எதிரே இராவணன் பேசியிருக்கும் நிலையை இவ் வாசகம் வரைந்து காட்டியுளது. பிழையான வழியில் இச்சை நுழைந்திருத்தலால் அச்சமும் இலச்சையும் உள்ளத்தில் மலிந்திருக்கின்றன. நெஞ்சம் குன்றிக் கெஞ்ச நேர்ந்தான்.

இன்று இறந்தன; நாளை இறந்தன.

நாள்கள் வீணே கழிந்து போயின; இன்று இரங்குவாய், நாளை இரங்குவாய் என்று நாள்தோறும் நான் ஏங்கியுழல்கின்றேன்; நீ யாதும் அருளாமல் மருள் மண்டியிருக்கிறாய்; உன்னை அவலோடு நான் காதலித்து இங்கே கொண்டு வந்து பல மாதங்

கள் ஆகின்றன; நாளும் வந்து நொந்து கேட்கின்றேன்; படாத பாடுகள் படுகின்றேன்; பேரழகியான உன்னைக் கண்டது முதல் என் உள்ளமும் உயிரும் ஒன்றையும் காணுமல் உருகி மறுகிப் பரிதாபமாயுள்ளன; உணவை வெறுத்து உறக்கத்தை மறுத்துக் கணமும் உன்னையே கருதி மறுகுகின்றன. நீ மனம் கனிந்து இசையாமல் மாறுபட்டிருக்கிறுய்; இனிமேல் என்னல் பொறுக்க முடியாது; உன் ஆசையால் நான் மாண்டே போவேன்; பெண்ணரசே! கண் இரங்கியருள் என்று இன்னவாறு இங்கே பேசியிருக்கிறுன். இன்னலுழந்து பலவும் பன்னிப் பிதற்றுகின்றுன்.

எனைக் கொன்று இறந்தபின் கூடுதியோ?

என்னை உயிரோடு கொல்லுகின்றுய்; நான் சொல்லுகின்ற துயரமொழிகளைக் கேட்டும் கருணை காட்டாமலுள்ளாய்; நான் மாண்டு மடிந்த பின்புதான் நீ மீண்டு இரங்கிச் சேர்வாயோ? உன் எண்ணந்தான் என்னே? உண்மையைச் சொல்லியருள் என்று இங்ஙனம் உரைத்து வேண்டினுன்.

தன் கருத்துக்கு யாதும் இசையாமல் கற்பரசி உச்சநிலையில் உறுதி பூண்டிருத்தலால் இறந்த பின் கூடுதியோ? என இப்படிப் பச்சையாகப் பாடழிந்து கூறினுன்.

திலகமே! உன்திறத்து அநங்கன் தரு
கலகம் அல்லது எளிமையும் காண்டியோ?

அளவிடலரிய செல்வங்களையுடையனுய் எல்லா வுலகங்களையும் ஆண்டு யாண்டும் வென்றி வீரனுய் வீறு கொண்டுள்ள நான் உன்னல் இன்று சீரழிந்து நிற்கிறேன் எனத் தன் நிலைமையை இங்ஙனம் அவன் நினைவுறுத்தினுன். சீதையைத் திலகமே! என்று இங்கு உவந்து புகழ்ந்தது, பெண்கள் திலகமாய்ப் பேரெழில் எய்தியுள்ளமையை வியந்து. அநங்கன் தரு கலகம் என்றது நாளும் அவன் அடைந்து வருகிற காமவேதனையின் கடுமையைக் காட்டியது. மேரு மலையைப் பெயர்த்தெடுத்துத் திக்கு யானைகளைச் செயிர்த்தடக்கி உலகம் எங்கும் வெற்றி கண்டுள்ளவன் காமன் எதிரே படுதோல்வியுற்றுப் பலரும் பழிக்கக் கடையனுய் இழிந்து நிற்கின்றுன். அந்நிலையை நினைந்து நெஞ்சம் தவித்துள்ளான்.

என்றும் எவர்க்கும் வசியனுய் நின்ற நான் இன்று உன்னல்

மெலியனாய் மயங்கியுள்ளேன்; கொஞ்சம் கருணை செய்து இந்தச் சிறுமையைத் தீர்த்தருள் என்று தன் பெருமையை விளக்கி உரிமையோடு வேண்டியிருக்கிறான்.

ஈண்டு நாளும் இளமையும் ஈண்டில
மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய:

இளமையின் நிலைமையை இங்ஙனம் உளமறிய உரைத்துள்ளான்.

"மனித வாழ்வில் இளமை மிகவும் இனிமையுடையது; எல்லா இன்ப நலங்களையும் அன்பு மீதூர்ந்து அனுபவிக்கும் பருவம் இது; இத்தகைய அரிய இளமைப் பருவம் உன்னிடம் வளமையாய்ச் சுரந்துள்ளது; இதனைப் பயன் படுத்தாமல் பாழாக்குகின்றாயே! கழிந்து போன இளமை மீண்டு வாராதே; இளமை தவழ்ந்து அதிசய எழில் பொலிந்துள்ள உனது திருமேனி இனிய பஞ்சணையிலும் அரிய மலரணையிலும் அமர்ந்து நறிய பரிமளகந்தங்கள் தோய்ந்து நாளும் மகிழ வுரியதே; பட்டினி கிடந்து வாடி உன் பொன் மேனியைப் படுகொலை செய்து வருவது எனக்குக் கொடிய அடு துயராகின்றது; சரணம்! கொஞ்சம் கொஞ்சம் இரங்கி நம் இருவர் வாழ்வையும் இன்ப மயமாக்குக" என ஏங்கி இயம்பினான். பொழுது பழுதாகிறதே! என்று அழுது தவித்துள்ளான்.

பருவம் கழிவதை நினைந்து பரிந்து மறுகுகிறான்.

பல பிள்ளைகளுக்குத் தந்தையாயிருந்தும் தன்னை ஒரு இளங் காளையாகவே எண்ணிக் காம நசையில் காலாழ்ந்திருக்கிறான். பழங்கிழவர்களும் இளங்குமரிகளை மணந்து கொள்ள இக் காலத்தில் இழிந்து வருவதைக் கண்கூடாகக் கண்டு வருகிறோம். பெண்ணாசையில் மனிதன் பேயனாய் உழல்கின்றான்

மங்கையர் ஆசை எங்கும் மனிதரைச் சூறையாடி
அங்கவர்க் கடிமை யாக்கி, ஆளலால் ஆண்மை எங்கே?

பெண்மை எதிரே ஆண்மை படும்பாட்டை இது காட்டியுளது.

அரிய அரச பதவிகளையும், பெரிய வர பலங்களையும் பெற்றுத் திவ்விய போகியாய் இருக்கின்ற இராவணன் செவ்வி சிதையாத காம போகத்தைக் காமித்து எவ்வழியும் கடுகியலைகின்றான். தன் உள்ளத்தில் கருதியுள்ள நசைகள் எல்லாம் உரைகளில் விசையாய் வெளியேறி வருகின்றன.

"அழகு இளமை அறிவு அமைதி முதலிய நல்ல நீர்மைகள் எல்லாம் நன்கு அமைந்திருந்தும் உன் உள்ளத்தில் இரக்கம் இலாதிருப்பது எனக்கு உயிர் வேதனையாயுள்ளது" எனத் தனது விரகதாபத்தை வெளிப்படுத்தி வீணை புலையாடியுள்ளான். நாணம் இழந்து நசையுழந்து வேணவாவுடன் விளிந்து அலைகிறான்.

எவ்வளவு செல்வங்களைக் காட்டியும், எத்துணை ஆசைகளை மூட்டியும் யாதும் கருதாமல் தன்னை அவமதித்திருக்கிறாளே! என்னே இது! என எண்ணி உளைந்தவன் இறுதியில் உறுதியாக ஒரு கண்ணியை வீசினான்.

வீட்டும் காலத்து அலறிய மெய்க்குரல்
கேட்டும் காண்டற்கு இருத்திகொல்? கிள்ளை நீ!

இப்படி எடுத்துக் காட்டியிருக்கிறான்.

"மானின் பின் போன உன் நாயகன் அன்றே மாண்டு போனானே! மீண்டும் அவனைக் காணலாம் என்று கருதி யிருக்கிறாயா? அவ்வாறாயின் அது வீணேயாம். ஒரு அசுர சக்கரவர்த்தி அருமையாக வளர்த்து வந்த நல்ல புள்ளி மான் முன்பு அங்கு வந்தது; அதன் அழகில் மயங்கி இராமன் அதனைப் பிடிக்கச் சென்றான். சென்ற இடத்தில் அசுரர்கள் பிடித்து அவனைக் கொன்று விட்டனர்; அன்று அவன் சாகும்பொழுது வாய்விட்டு அலறியது உன் செவியில் கேட்டிருக்கும்; செத்துப் போனவன் மறுபடியும் வருவான் என்று எண்ணுவது எவ்வளவு பைத்தியம்! உன்னைக் கைவிட்டுப் போன அவனை மறந்துவிடு; எவ்வகையிலும் உனக்குக் கதியாயுள்ள என்னை உவந்து கொள்!" என இங்ஙனம் உறுதி சூழ்ந்து மொழிந்தான். பொல்லாத வஞ்சன் புலையாடுகின்றான்.

மானாய் வந்த மாரீசன் இராமபாணம் பட்டுக் கீழே வீழும் பொழுது "ஆ! சீதா! லட்சுமணா!" என்று இராமன் கூவுவது போலவே வஞ்சமாய் அவன் கூவி மாண்டான் ஆதலால் அக் கூவலை ஆவலோடு கண்டு குறித்துக் காட்டினான். அந்தப் பொய்க் குரலை மெய்க்குரல் என்று புனைந்து புளுகி யிருக்கிறான். வீட்டுதல் = கொல்லுதல். அது பொய்யான போலிக் குரல் என்று வைதேகி ஒரு வேளை கருதியிருக்கவும் கூடும் என்று மெய்யானது என அதனை வலியுறுத்தினான். பொல்லாத பொய்யனும் மெய்

யினை உள்ளுற மதித்திருப்பன் என்பதை இவன் வாய்ச் சொல் இங்கே உணர்த்தியுளது.

தன் கணவன் மீது கொண்டுள்ள நம்பிக்கையை இழந்து எப்படியாவது தன் பக்கம் சானகி மனம் திரும்ப வேண்டும் என்றே இந்தக் காமப்பித்தன் படாதபாடுகள் பட்டு வருகிறான்.

நீ பண்ணியுள்ள பெரிய புண்ணியமே அரிய கண்ணியவானை நான் உன்னைக் காதலிக்கும்படி செய்துள்ளது. உண்மையை உணர்ந்து உள்ளம் திரும்பு; காலத்தை வீண் கடத்தாதே; ஞாலத்தை யெல்லாம் தன் காலடிக் கீழ் வைத்திருக்கும் சக்கரவர்த்தி உன் காலடிக் கீழ் வந்து அன்புரிமை பூண்டு ஆர்வம் கொண்டாடுகின்றான்; நீர்மை சீர்மைகளை நினைந்து நெஞ்சம் தெளிந்து எழுந்தருள்; பேரின்ப நலங்களில் பேரரசியாய் இருந்து வாழலாம்; நேரம் தாழ்த்தாதே! என்று நேரே பிதற்றினன்.

கையில் கிடைத்துள்ள அமுதத்தை வாயில் பெய்து உண்ணுமல் பிறர் வாய் பார்த்திருக்கும் பேயனைப் போல் நான் பிழைபட்டு நிற்கிறேன்; என் நிலைமையை நினைந்து பார்; நீ என் வசம் வந்து இருக்கிருய்; உன்னை நான் காதலித்து உருகுகிறேன்; என்னை நீ ஆதரித்தருளாமல் இருப்பது அநியாயமல்லவா?

யாண்டும் நினைந்ததை முடித்து வருகிற சிறந்த அரசனை நான் உன்னை வலிந்து தீண்டாமல் மெலிந்து நின்று கெஞ்சிக் கேட்டு உன்பால் அன்பு கொண்டாடி வருவதிலிருந்தே என்னுடைய பெருந்தகைமைகளை நீ அறிந்து கொள்ளலாம். உன் சம்மதத்தை எதிர் நோக்கியே என் மதத்தை அடக்கியுள்ளேன். மேலும் என்னல் பொறுத்திருக்க முடியாது. என் பொறுமை எல்லை கடந்து போயது ஒல்லையில் இரங்கியருள்; இல்லையேல் இறந்துபட நேரும். நான் செத்தால் என் ஆம்? உய்த்துணர்.

தக்கது என் உயிர் வீடு எனின்.

என்றது தனது நிலைமையை நாடியறிய. உன்னல் நேர்ந்த ஆசை நோய் நாளும் நீசமாய் வளர்ந்து என்னை நாசம் செய்து வருகிறது; நான் செத்துப் போனல் வையம் எல்லாம் உன்னை வைது பழிக்கும். “பாவி சீதை புகுந்தாள், இலங்கை வேந்தன் அழிந்தான்” என உலகம் உன்னை இகழ்ந்து வையுமே என்று வருந்துகிறேன்; வைதேகி! உன்பால் பேரன்புடைய என்பால் ஓரன்பு

செய்; உரிமையை உணர்ந்து உண்மை தெளிந்து நன்மை செய் தருள் என்று இங்ஙனம் நயந்து வேண்டினான்.

புக்கு உயர்ந்தது எனும் புகழ் போக்கி வேறு
உக்கது என்னும் உறுபழி கோடியோ?

சீதைக்கு இப்படி ஓர் உறுதியை எடுத்துக் காட்டியிருக்கிறான்.

நீ புகுந்த குடி உயர்ந்து வாழ்ந்தால் உனக்குப் புகழ் உண்டாம்; இழிந்து அழிந்தால் பழியாம்; நல்ல புகழைப் போக்கிப் பொல்லாத பழியை ஆக்கிக் கொள்ளாதே எனத் தன் வழிக்கு வரும்படி இங்ஙனம் வளைத்து வேண்டினான்.

உடனே உரிமையாய் இசைந்தருள்; மேலும் பிடிவாதமாயிருப்பின் காம தாபத்தால் என் உயிர் அழிந்தே போகும்; நான் இறந்து போனால் என் அரசும் குலமும் அடியோடு பாழாம்; அவ்வாறு ஆயின் "சீதை கால் வைத்தாள் இலங்கை நாசமாயது" என்று உலகமெல்லாம் உன்னைப் பழித்துத் தூற்றும்; அந்தப் பழியை நீ அடையலாகாது என்று நான் பரிந்து வேண்டுகிறேன்; என்னைக் கொஞ்சம் கண் எடுத்துப் பார்! பெண்ணரசே! என்று அப் பேதை மகன் காதல் மீதூர்ந்து சோகமுழந்து ஆதரவு நாடி வாதாடினான். ஆசைக் கடலில் வீழ்ந்து அலமந்து தவிக்கிறான்.

உக்கது = அழிந்தது. தீ புகுந்த பஞ்சுப் பொதிபோல் சீதை புகவும் தானாகவே இலங்கை சிதைந்து அழிந்தது என அந்த அழிவு நிலை விழி தெரிய உகுதல் என்னும் வினையால் உணர்த்தியருளினார். பின்னே வருகின்ற பெரு நாசம் மன்னனுடைய வாய் மொழியில் முன்னே ஒளி வீசி வெளி வந்தது.

தேவரும் ஏவல் புரிகின்ற அரிய பெரிய அரச செல்வங்கள் வலிய வந்தும் உவந்து விழைந்து கொள்ளாமல் இகழ்ந்து இருக்கிறாய்; தலையால் வந்த சீதேவியைக் காலால் உதைத்தது போல் உன் நிலைமை மடமை மண்டி மதியீனமாயுளது.

தாவில் மூவுலகின் தனிநாயகம், மேவுகின்றது.

தனது அரச திருவின் மகிமையை இவ்வாறு பரசியிருக்கிறான். இவ்வளவு பெரிய அற்புத பாக்கியத்தை நான் உனக்கு உவந்து உரிமையாக்குகிறேன்; அதனை நீ இகழ்ந்திருப்பது எவ்வளவு பேதைமை! எனத் தனது பேதைமையை ஓதினான்.

யாவர் ஏழையர் நின்னின்?

உன்னைக் காட்டிலும் ஏழைகள் யார்? புத்தி கெட்டுள்ள பெண்கள் எவர்? என அக் காமப்பித்தன் இவ் வுத்தம பத்தினிக்கு இப்படிப் புத்தி போதித்துள்ளான். ஏழையர் என்பது வறியரையும், பெண்களையும் குறித்து வரும். அந்தப் பதத்தை நளினமாக இங்கே உபயோகித்திருக்கிறான். தனது அரச திருவை மருவிப் பெரிய செல்வி ஆகாமல் இப் பேதை பிழையாயுள்ளாள் என அப் பேதை பிழை திருத்தியுள்ளான்.

செல்வத் திருமகளை ஏழை என்று பிழை பேசியிருப்பது இருவர் இயல்புகளையும் ஒரு முகமாய் உணர வந்தது.

உண்மை நிலையை உணராமல் புன்மை நிலையில் புலை மண்டியிருக்கிறான். மையல் நோயால் மதியழிந்து புலம்பி வருகிறான்.

## செல்வக் களிப்பு.

தன்னுடைய செல்வ நிலையைக் கண்டு தன்னை இச்சித்து வந்த மங்கையர் பலரையும் மருவிக் களித்தவன் ஆதலால் அந்தக் களிப்பின் சுவையில் இங்ஙனம் ஒளிப்பின்றிப் பேசினான்.

எண்ணிய எதையும் பொருளால் பெறலாம் என மருள் கொண்டிருக்கும் செல்வச் செருக்கு இங்கே தெரிய வந்தது.

"எண்ணிப்பத்து அங்கைஇட்டால் இந்திரன் மகளும் ஆங்கே
வெண்ணெய்க்குன்று எரியுற்றாற்போல் மெலிந்துபின்நிற்கும்"
(சீவக சிந்தாமணி, 1597)

பெண்கள் நிலையைப் பொதுவாகக் கண்கள் காண இது காட்டியுளது. "பத்துக்கு மேலே பத்தினி இல்லை' என்னும்பழமொழியும் வழங்கி வருகிறது. பணத்தைக் கொடுத்துப் பல மகளிரையும் கெடுத்து வந்த பொல்லாச் செல்வன் ஒருவன் ஒரு காலத்தில் சொல்லியது எல்லார் வாயிலும் எக்காலத்திலும் இப்படி ஒரு முதுமொழியாய் இழி நிலையில் வெளி வர நேர்ந்தது.

பொருளில் ஒரு வசியம் உளது; அது எவரையும் மருளாக்கி விடுகிறது. அரிய பெண்ணும் சிறிய பொன்னால் உரிமையாம் என இழி வெறியர் உறுதி பூண்டுளார்.

"பொன்னின் உண்மையை நெருப்பில் பார்;

பெண்ணின் திண்மையைப் பொன்னில் காண்;
ஆணின் மேன்மையை பெண்ணில் தேர்.''

என ஓர் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிருர். பெண்ணின் கற்பையும், ஆணின் சீலத்தையும் சோதித்துத் தெளிதற்கு இங்கே கருவிகள் போதிக்கப் பட்டுள்ளன.

பணம் பத்தும் செய்யும் என்பது உய்த்துணர வுரியது.

ஆதர் எனினும் அறிவு குடிபோன
ஏதர் எனினும் எளிதாக—மாதர்
மனத்தைக் கவர்ந்து மருவி மகிழத்
தனத்தை யருளும் தனம்.

பணத்தின் தொழில் இவ்வாறு பரவியுளது.

''காட்டிலே போய்க்களவு காட்டாமல் வெட்டுமரம்
மூட்டிலே தீ வெளிச்சம் மூட்டாமல்—கூட்டமிட்டுக்
கைவேலிக் குள்ளே கலையாமல் மாவுத்தர்
நெய்வேல் எடுத்ததட்டி நில்லாமல்—மெய்பிணைக்கும்
சோட்டாணை இல்லாமல் தோகைமார் கும்பமுலைக்
கோட்டாணை வந்து விழும் கொப்பமே!—நாட்டிலுள்ள
சித்தர்கள் கூடிச் செபியாமல் ஆங்கவர்தம்
புத்திரர் ஏதோ புலம்பாமல்—மொய்த்து நிற்கும்
ஆளரவம் இல்லாமல் ஆயிழையார் அல்குல் எனும்
வாளரவம் உள்ளாக்கும் மந்திரமே!—நீளஒரு
மூங்கிற் கழியில் முடிந்த கயி றில்லாமல்
தூங்கச் சிறியஉண்டை தூக்காமல்—நாங்குழுவை
வள்ளுகிரால் ஏற்ருமல் மாதர் சிறுகணைக்கால்
துள்ளு வரால் இழுக்கும் தூண்டிலே!—கள்ளுண்ணத்
தேன்மறுகி வீழும் செறி குழலார் கள்ளவிழி
மான்மறுகி வீழும் மணிவலையே!—தான்மறுகி
அங்கொலியல் கூடி நிற்கும் அன்னநடை யாரிடத்தில்
சங்கொலி யுண்டாக்கும் தடாகமே!—துங்கமுலை
குன்றணைந்த மின்ஞர் கொடியிடையாம் சிங்கத்தைச்
சென்றணைந்து தூக்கிவரும் சிம்புளே!—வென்றிவிழி
மாவடுவை ஒப்பார் மனதில் அபிமானமெனும்
காவல் அழிக்கு மத கைக்களிறே!—பாவையரில்
பேச மவுனம் பிடித்துப் பேசாதார் வாய்க்குமுத

வாச மலரைத் திறக்கு மாமதியே!—ரோசமுடன்
முந்தானை போர்த்து முலைப்பாற் கவிழ்ந்த முகச்
செந்தா மரைமலர்த்தும் செங்கதிரே!—இந்துவைநேர்
நெற்றி மட மின்னார் நிதம்பத் துகில் குலையச்
சுற்றி யடிக்கும் சுழல் காற்றே!—பற்றிஒரு
தட்டுடுத்த சேலையுமாய்த் தையல்நல்லார் ஓடிவர
வட்டமிட்டுப் பெய்யும் மழை மாரியே!' (பணவிடுதூது)

இந்தக் கலிவெண்பாவைக் கண்ணூன்றிப் படித்துப் பொருள் நிலைகளைக் கருதிக் கொள்ள வேண்டும். கொப்பம், மந்திரம், தூண்டில், வலை, தடாகம், சிம்புள், களிறு, மதி, கதிர், காற்று, மாரி எனப் பொருளை உருவகித்து அது செய்துவரும் திறங்களைக் கவி சுவையாகப் பாடியிருக்கிறார். கொஞ்சம் கொச்சையாகத் தோன்றினாலும் உலக வுண்மைகளை உச்ச நிலையில் உணர்த்தியுள்ளது. அனுபவ நிலைகள் மொழிகளில் வெளிவரும் பொழுது இனிமைகள் சுரந்து உவகை யுணர்வுகள் ஒளி பெறுகின்றன.

இன்னவாறு பெண்மையின் திண்மையைச் சிதைத்து எவரையும் எண்மையாக்கி யருளும் என்று இறுமாந்து களித்துச் செல்வத்தை மதித்து வந்தவன் ஆதலால் இராவணன் இங்கே சீதை முன்னிலையில் ஏமாந்து இழிந்து நிற்கின்றான். பலவும் மொழிந்து நிலையைப் பேதிக்க நெளிந்து பார்க்கின்றான். எப்படியாவது கருதியதை முடிக்க உறுதி பூண்டு உழல்கிறான்.

காலில் விழுந்து தொழுதது.

தன் அரச செல்வம் முழுவதும் கைக்கொண்டு சிறிது விழியருள் புரிக என விழைந்து வேண்டியும் இக் குலமகள் இகழ்ந்து வெறுத்து எள்ளியிருத்தலை உள்ளியுளைந்தான். உறுதி நாடி மறுகினான். முடிவில் என்ன செய்தான்?

முடியின் மீது முகிழ்த்து உயர் கையினன்
படியின் மேல் விழுந்தான் பழி பார்க்கலான்.

கும்பிட்டுக் கீழே வீழ்ந்து கிடக்கின்ற இராவணனை இங்கே நாம் வியந்து பார்க்கின்றோம். யாதும் இரங்காமல் இகழ்ந்து நிற்கின்றோம். இழி நகை விழி எதிரே வெளி தெரிகிறது.

மூன்று உலகங்களையும் ஏக சக்ராதிபதியாய் ஆண்டு வரு

திறவன் மோக இச்சையால் நிலைகுலைந்து படாதபாடுகள் பட்டு இறுதியில் காரியத்தைச் சாதிக்கக் காலில் விழுந்து தொழுதான்.

அடிமையாக ஏற்றுக் கொண்டு என்னை ஆண்டு அருள் புரிய வேண்டும் என்று கைகளைத் தலைகளில் கூப்பித் தரையில் விழுந்து சானகியின் பாதங்களில் முடி படியும்படி பணிந்து நெடிது கிடந்துள்ளான். படு கிடக்கையாய்ப் பாடு படுகிறான்.

மையல்நோயால் மதிமயங்கி உழன்றவன் உய்தியிடையாமையால் முடிவில் இப்படிப் படியில் விழுந்து அடி தொழுதிருக்கிறான்

யாண்டும் யாருக்கும் யாதும் தலை வணங்காத முடிமன்னன் ஈண்டு ஒரு பெண்ணின் காலடியில் உடல் முழுதும் தரையில் படிந்து கிடக்கக் கும்பிட்டுவீழ்ந்திருப்பது அதிசய வியப்பாயுளது.

"குடிமை மூன்றுலகும் செயும் கொற்றத்து என்
அடிமை கோடி அருளுதி"

என அடி பணியும் பொழுது அவன் இவ்வாறு பொருள் மொழி கூறி விழுந்திருக்கிறான். காம ஆசை மிகுந்தாலும் காலில் விழலாமா? என்று சிலர் கேலி செய்வர். அவனுடைய நெஞ்சை நிறை தூக்கி நோக்கின் எவரும் இரங்கி நிற்பர். மத்துஎறி உடைதயிர் போல் காமப்பித்து ஏறி அவன் உள்ளமும் உயிரும் உடைந்து உருக் குலைந்து போயுள்ளன; எப்படியாவது உயிர் பிழைக்க வழி தேடி மானம் மரியாதைகளை மறந்து ஆசைப் பேயால் அலைப் புண்டு நீச நிலைகளில் ஊசல் ஆடி வருகிறான்.

அமரர் அசுரர் முதலிய எவரும் எமன் என அஞ்சி நடுங்கும் ஏற்றம் மிகப் பெற்றவன்; பல்லாயிரம் போர் வீரர்களையும் ஒருங்கே வெல்ல வல்லவன்; அத்தகைய அருந்திறலுடையவன் மையல் நோயால் மயங்கித் தையல் அடியில் வீழ்ந்து வையம் சிரிக்க வணங்கிக் கிடக்கின்றான்; பெரிய வீரர்களையெல்லாம் காமம் இப்படிச் சூறையாடி வருகிறது. ஆகையினாலேதான் பிறர்மனை நோக்காத ஒருவனே யாண்டும் பேராண்மையாளன் எனப் பெருமித நிலைக்கு வள்ளுவப் பெருந்தகை ஓர் உரைகல்லை இவ்வாறு உரைத் தருளினர். பிழை வழியில் இழிபவர் பேடிகளாகின்றனர்

உள்ளத்தில் காமத்தை வென்றவனே உலகத்தில் உத்தம வீரனாய் உயர்ந்து திகழ்கிறான். செல்வம் அதிகாரம் முதலிய எத்

தகைய நிலைகளில் உயர்ந்திருந்தாலும் காம இச்சை மிகின் அவன் ஈனப் பித்தனாய் இழிந்து படுகின்றான்.

காதல்எனும் மனைவியின்பின் செல்கின்ற மனம் என்னும் கடியஞாளி
பேதைமைமேவியஎன்னைப் பிணந்தின்னுமாறுபோல்பிடுங்கித்தின்னும்
மோதுபெருங் காற்றினால் முறிந்தெழுந்த துரும்புபோல் மோகம்எய்த
வாதை மனம் பெரும்பாழின் மிக வீழ அதிதூரம் மலங்கத் தள்ளும்.

(ஞான வாசிட்டம்)

காம ஆசை மனிதனை ஈன நாய் ஆக்கி விடும்; பெருங் காற்றில் அகப்பட்ட சிறு துரும்பு போல் இழிந்து சுழன்று அவன் அழிந்து அலைவன் என இது உணர்த்தியுள்ளது. உருவக நிலை ஊன்றியுணர வுரியது. உயிரினங்கள் துயரினங்களிலுழலுகின்றன.

இத்தகைய கொடிய காமம் நெடிதோங்கி யுள்ளமையால் இராவணன் இங்கே அடி வீழ்ந்து தொழுது படி தோய்ந்து கிடக்கின்றான். செயல்கள் யாவும் மயல்கள் மேவி யுள்ளன.

காம தாபத்தால் வருந்தி ஊன நோக்கில் சானகி காலில் இவ்வாறு விழுந்து கிடந்தாலும் ஞான நோக்கில் வேறு ஒரு பொருளும் இதில் தெளிந்து கொள்ள வுள்ளது.

"தேவர் யாவரும் ஏவல் செய்ய மூவுலகளுட்சியும் பெற்றுத் திருவின் போகங்களை இதுவரை நான் நன்கு அனுபவித்து வந்தேன்; காலம் நெருங்கியது; திருமகளான நீயே உன் உடைமைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு எனக்கு நல்ல கதியை நல்கியருள்" என்று உள்ளுற அவன் வேண்டி வணங்கியது போல் ஈண்டு இது நுணுங்கிய நிலையில் இணங்கி யிருக்கிறது.

அவதார மருமங்களை நினைந்து சமய நோக்கோடு அமைய நோக்கிய போதுதான் இது அமைதியாய் ஆறுதல் தரும்.

காலில் விழுந்து தொழுது வணங்கினால் யாரும் இரங்கியருளுவர் ஆதலால் அந்த அரிய உபாயத்தைத் தனக்கு உறுதியாக இறுதியில் செய்தான். படிப்படியாய்ப் பலவும் பேசி வந்தவன் முடிவில் முடிபடியப் படியில் வீழ்ந்து தொழுதது பரிதாபமா யுள்ளது. ஈன இச்சையில் இழிந்து எண்ணம் தீமையாயுள்ளமையால் அவன்பால் இரக்கம் கொள்ளாமல் இகழ்ந்து நிற்கிறோம்.

சானகி கனன்று மொழிந்தது.

காம மோகியாய் வந்து காதல் மொழிகளை இராவணன் பலவாறு ஆவலோடு பேசும்பொழுது சீதை யாதும் காது கேளாதவளாய் நோதலுழந்து தலை கவிழ்ந்து இராமனை நினைந்து கொண்டு தரையை நோக்கிப் பொறையுடன் மறுகியிருந்தாள்.

முடிவில் தன் காலில் விழுந்து அவன் தொழுது வணங்கவே இக் கற்பரசி உள்ளம் கொதித்து உருத்து வெறுத்தாள். அமைதியாய் இருந்தவள் ஆவேசமாய்ச் சீறி அவனை நோக்காமல் இடையே ஒரு துரும்பை எடுத்து வீசி அதனைப் பார்த்துக் கொண்டு அவன் பேசிய வார்த்தைகளுக்கெல்லாம் வாசியோடு பதில் சொல்ல நேர்ந்தாள்.

மல்லடு திரள்தோள் வஞ்சன் மனம்பிறி தாகும் வண்ணம்
கல்லொடு தொடர்ந்த நெஞ்சம் கற்பின்மேல் கண்டதுண்டோ?
இல்லொடு தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன வல்ல வெய்ய
சொல்லிது தெரியக் கேட்டி துரும்பெனக் கனன்று சொன்னாள்

மேருவை உருவல் வேண்டின் விண்பிளந்து ஏகல் வேண்டின்
ஈரேழு புவனம் யாவும் முற்றுவித் திடுதல் வேண்டின்
ஆரியன் பகழி வல்லது அறிந்திருந்து அறிவி லாதாய்
சீரிய வல்ல சொல்லித் தலைபத்தும் சிந்து வாயோ? (2)

அஞ்சினை ஆதலான் அன்று ஆரியன் அற்றம் நோக்கி
வஞ்சனை மான்ஒன்று ஏவி மாயையால் மறைந்து வந்தாய்
உய்ஞ்சனை போதி யாகின் விடுதி உன் குலத்துக் கெல்லாம்
நஞ்சினை எதிர்ந்த போது நோக்குமே நினது நாட்டம். (3)

பத்துள தலையும் தோளும் பலபல பகழி தூவி
வித்தக வில்லி ஞற்குத் திருவிளை யாடற்கு ஏற்ற
சித்திர இலக்கம் ஆகும் அல்லது செருவில் ஏற்கும்
சத்தியை போலும் மேனாள் சடாயுவால் தரையில் வீழ்ந்தாய். (4)

தோற்றனை பறவைக்கு அன்று துள்ளுநீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய் அன்றெனின் இறத்தி யன்றே
நோற்ற நோன்புடைய வாழ்நாள் வரமிவை நுனித்த எல்லாம்
கூற்றினுக் கன்றே வீரன் சரத்திற்கும் குறித்த துண்டோ? (5)

பெற்றுடை வாளும் நாளும் பிறந்துடை யுரனும் பின்னும்
மற்றுடை எவையும் தந்த மலரயன் முதலோர் வார்த்தை

விற்றொடை இராமன் கோத்து விடுதலும் விலக்குண்டெல்லாம்
இற்றிடைந் திறுதல் மெய்யே விளக்கின்முன் இருளுண்டாமோ?

குன்றுநீ எடுத்தநாள் தன் சேவடிக் கொழுந்தால் உன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரம் துரந்த மேரு
என்றுணைக் கணவன் ஆற்றற்கு உரனிலா திற்று வீழ்ந்த
அன்றெழுந் துயர்ந்த ஓசை கேட்டிலை போலும் அம்மா! (7)

சானகி கூறியிருக்கும் வீர மொழிகளை இங்கே உவந்து கேட்டு நாம் வியந்து நிற்கின்றோம். உள்ளச் செவிகளில் ஒலித்து உணர்ச்சிகளை ஊட்டி உறுதி நலங்களை யூட்டி உரைகள் ஒளி வீசி நிற்கின்றன. தன்னை நச்சி வந்து இச்சை மொழிகளைக் கொச்சையாகப் பேசிய இராவணன் அச்சமுறும்படி வார்த்தைகள் ஆர்த்து வந்திருக்கின்றன. துரும்பை நோக்கிக் கொண்டு தலை கவிழ்ந்தபடியே கனன்று பேசியிருக்கிறாள். "ஆ! அரக்கர்பதியே! எனது நிலைமையை ஒரு சிறிதும் உணராமல் வீணே பழி வழிகளில் பாழாய் வீழ்கின்றாய்! என் நாயகனுடைய பாணங்கள் மேரு மலையை உருவும்; விண் பிளந்து ஏகும்; அகில உலகங்களையும் ஒரு நொடியில் அழிக்கும்; அந்த அற்புத ஆற்றல்களை அறிந்திருந்தும் அறிவு கெட்டு வெறியனாய் அலைகின்றாய்! அரிய குல வீரனுடைய தரும பதனியிடம் இழி மொழிகளைப் பேசி உன் தலைகள் பத்தையும் தரையில் உருளும் வழிகளைச் செய்கின்றாய்; எனது பிராண நாயகனுக்கு நீ மிகவும் அஞ்சினதினாலேதான் வஞ்சனையாக மாயமானை ஏவி அஞ்சன வண்ணனை அயல் அகலும்படி செய்து கள்ளமாய் வந்து எள்ளலான இளி வினை புரிந்தாய்! கொல்லுகின்ற கொடிய நஞ்சம் என்று என்னை நீ நெஞ்சம் தெளியாமல் நீசமாய் கிமிர்ந்து நாசமடைய நேர்ந்துள்ளாய்; உன்னுடைய தலைகளும் தோள்களும் இராமபாணங்களால் நிலைகுலைந்து சிந்தும் என்பதை நீ சிந்தனை செய்து கொள்! தீய வஞ்சம் புரிந்து திருட்டுத் தனமாய் அன்று என்னை எடுத்து வரும்பொழுது இடையே வந்து தடுத்து நிறுத்திய பறவையிடம் நீ பட்டபாட்டைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்; சிவன் கொடுத்த வாளால் அவம் படுத்தி வந்தாய்; இல்லையேல் அந்தக் கழுகுக்கு இரையாய் அன்றே அங்கு நீ கழிந்து போயிருப்பாய்; இன்று இங்கே பெரிய சுத்த வீரன் போல் ஆடம்பரமாய்ப் பிதற்றி நிற்கிறாய்; அரிய தவங்கள் புரிந்து நீ பெற்றிருக்கிற அரச செல்வங்களும், வாபலங்

களும், பிற நலங்கள் யாவும் எம்பெருமான் வில்லில் அம்பைப் பூட்டும் போதே கூட்டோடு குடி வாங்கிப் போம்; ஒளிமுன் இருள் போல் உன்குலம் முழுதும் இராமச்சந்திரனால் அழிந்தே ஒழியும்; இதனை உறுதியாக உணர்ந்து உய்யும் வழியை விரைந்து தெளிந்து கொள்க; ஈசன் இருந்த மலையையும் ஊசியிலேவரோடு பெயர்த்தெடுத்ததாகப் பல முறையும் நீ வாசி பேசுகின்றாய்; எனது ஈசனுடைய நிலையை ஒரு சிறிதும் கருதியுணராமல் நீ அறிவு கேடனாய் இருப்பது பரிதாபமாகின்றது; கைலாச கிரியை நீ எடுத்த பொழுது தன் காலின் பெருவிரல் நுனியினால் நெறு நெறு என்று மலையோடு உன்னை மிதித்து அமிழ்த்திய அந்தப் பரமசிவம் உன்னைக் காட்டிலும் எவ்வளவு பெரிய வலியுடையவர்? அந்த ஈசன் அருமையாகப் பிடித்திருந்த வில்லை என் கணவன் எளிமையாக ஒடித்து எறிந்தான்; அவ் வில்லை முறித்த பொழுது துள்ளி எழுந்த ஓசை உலகம் எல்லாம் கேட்டதே; உன் காதில் கேட்கவில்லையா? கேட்டும் மாட்டுப் புத்தியாய் மதி கெட்டிருப்பது கதி கெட்டபடியாம்'' என இவ்வாறு இடித்து அறிவு கூறி மேலும் தொடுத்துப் பேசினாள்.

## சொல்லின் குறிப்புகள்.

ஈன நசையால் இழிந்துள்ள அவன் மானமுடையனாய் மனம் தெளியும்படி சானகி இங்கே விரைந்து மொழிந்துள்ளாள். பல வகையான குறிப்புகளை உள்ளத்தில் கொண்டு உரைகள் வெளி வந்திருக்கின்றன. இராமனது வில்லின் ஆற்றலைச் சொல்லத் தொடங்கினவள் முதலில் மேருவை உருவும் என இராமபாணத்தின் அதிசய மகிமையை எதிரி மதி தெரியச் சொல்லினள். ஏன் இங்கே மேரு முந்தி வந்தது? இராவணன் வஞ்ச வேடம் பூண்டு சந்நியாசியாய் முன்னம் பன்னசாலைக்கு வந்து சீதை எதிரே அமர்ந்து விரகோடு உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது இறுதியில் மறைமுகமாகத் தன்னைப் புகழ்ந்து கூறினான்.

''மேருவைப் பறிக்க வேண்டின், விண்ணினை இடிக்கவேண்டின்,
நீரினைக் கலக்க வேண்டின், நெருப்பினை அவிக்க வேண்டின்,
பாரினை எடுக்க வேண்டின், பலவினை சிலசொல் ஏழாய்!
யாரெனக் கருதிச் சொன்னாய்! இராவணற்கு அரிது என்?''

என முன்னர் அவன் வீறுடன் * கூறியது தன் உள்ளத்தில் பதிந்திருந்தது ஆதலால் அந்த உரைகள் முந்துறத் துள்ளிவந்தன.

மேருவைப் பறிப்பேன்; விண்ணினை இடிப்பேன்; எனத் தன்னுடைய அருந்திறலாண்மைகளை மேட்டிமையோடு ஆண்டு அவன் விரித்துக் காட்டினன் ஆதலால் அதற்குத் தக்க மறுப்பாக ஈண்டு அந்த அடலாண்மைகள் யாவும் அடியோடு நாசமாம் என்று தன் நாயகனுடைய வீரப் பிரதாபத்தை இந்நாயகி சுட்டியுரைத்தாள். அவன் தனது தோள் ஆற்றலை அங்கே துலக்கினன்; இவள் கணவன் வில் ஆற்றலை இங்கே விளக்கினுள். இரண்டு பாடல்களையும் எதிர் இணைத்து ஒருங்கே படித்துப் பார்க்க வேண்டும். உரைகளுள் உணர்ச்சிகள் பொங்கியிருக்கின்றன.

எண்ணங்கள் உருப்பெற்று மொழிகளாய் வெளி வருகின்ற வித்தக நிலைகள் வியந்து நோக்கி நயந்து சிந்திக்கத் தக்கன.

ஆரியன் பகழி வல்லது என ஒருமையில் குறித்தது, இராம பாணத்தின் தனி மகிமையை இனிதுணர. பல பட விரிந்துள்ள உன் குலத் திரள்களையெல்லாம் அடியோடு தொலைத் தொழிக்க என் நாயகியின் அம்பு ஒன்றே போதும் என அந்த வம்பனுக்கு இந்த நங்கை நன்கு அறிவுறுத்தியிருக்கிறுள். ஈரேழு புவனங்களையும் நீறு செய்யும் என்றதில் வீர ஒளி வீறு கொண்டுள்ளது.

தனது நாயகனுடைய வீர பராக்கிரமங்களைக் குறித்துக் காட்டி இக் குலமகள் கூறி வருவன யாவும் நிலைமைகளை நேரே தெரியச் செய்கின்றன. அரிய சுத்த வீரனுடைய பத்தினியை இச்சித்து அடியோடு பாழாகாதே என்று அறிவு நலங்களை அருளி வருகின்றுள்

அறிவிலாதாய்! என்று விளித்தது அவனது மதி கேட்டை நினைந்து இரங்கி வந்தது. இழி வழிகளில் இறங்கி வீணே பழி பாவங்களை அடைந்து அழிவுற நேர்ந்துள்ளாய்! அந்த அழிவு நிலையை விழி திறந்து நோக்கி வழி தெரிந்து உய்ந்து கொள் என உணர்வு கூறியுள்ளாள்.

நீ சுகமாய் வாழ வேண்டுமானல் என்னை உடனே வெளியே விட்டுவிடு; இல்லையாஞல் உன் குலத்தோடு நீ அழிந்தே படுவாய்; இதனை உறுதியாகத் தெளிந்து கொள் என மொழிந்தருளினுள்.

* இந் நூல் பக்கம் 1990, வரி 27 பார்க்க.

உன் குலத்துக் கெல்லாம் நஞ்சு.

இராவணனுடைய நெஞ்சம் தெளிய இராமனை இங்ஙனம் குறித்துக் காட்டியிருக்கிறாள். அமுத குண சீலன் எனத் தன் கணவனை யாண்டும் கருதி மகிழ்ந்து உருகி வருகிறவள் ஈண்டு நஞ்சு என்று சொன்னது அக் காமப் பித்தன் தீமையிலிருந்து விலகிச் சேமமாய் வாழவேண்டும் என்னும் கருணையினால் வந்தது.

"சீதை உன் உயிர்க்கு நஞ்சு; திட்டி விடம்; உடனே விட்டு விடு" என வீடணன் இராவணனுக்கு முன்னம் சுட்டி யுரைத்தான். இங்கே உன் குலத்துக்கு எல்லாம் நஞ்சு என இராமனை அவனுக்குச் சுட்டிக் காட்டி சீதை போதனை செய்துள்ளாள்.

நாக ரத்தினத்தை எடுத்தவனை நாகம் கொல்லும்; இராம னது சீவரத்தினத்தைக் கவர்ந்தவனை அவன் குலத்தோடு கொன்று தொலைப்பான் என்பது நன்கு காண வந்தது.

பத்துள தலையும் தோளும் சித்திர இலக்கம்.

இராவணனுக்குப் புத்தி வரும்படி போதித்து வருகிற மொழிகள் இப்படி விசித்திர கதிகளில் வெளி வந்துள்ளன.

"தேக பலம், ஆயுத பலம், சேனை பலம் முதலியவற்றில் சிறந்துள்ளேன்; வானவர் தானவர் யாவரும் எனக்கு அடங்கி யுள்ளனர்; என்னை வெல்ல வல்லார் மூவுலகிலும் இல்லை" என்னும் செருக்கோடு நெஞ்சு நிமிர்ந்து நிற்கிற இராவணனை நோக்கிச் சீதை இங்ஙனம் அஞ்சாமல் பேசி யிருக்கிறாள்.

பல தலைகளும், தோள்களும் நிலவியுள்ளமையால் என் குல வீரனுடைய வில்லாடலுக்கு நல்ல இலக்கமாம் எனச் சொல்லி யிருத்தலால் அக் கோமகனுடைய அதிசய வீரத்தை இக் குல மகள் எவ்வாறு துதி செய்துள்ளாள் என்பது மதிதெளியலாகும்.

என் நாயகனோடு எதிர்த்துப் போராடுவதற்கு உன்னால் யாதும் இயலாது; அவ் வீர மூர்த்தி உல்லாசமாய்ப் போராடல் புரிய நல்ல குறிகளையுடைய நெடிய தறியாய் நேரே நிற்கலாம்; அவ்வளவே அன்றி வேறு ஓரளவும் உன்னிடம் இல்லை; பேரிழவுகள் மட்டும் பெருகியுள்ளன என அவனுக்கு நேரேவுள்ள இழவுகளை நெஞ்சறியச் சுட்டி நிலை தெரிய வுரைத்தாள்.

புதிதாய் எய்து பழகுவதற்குத் தெளிவான குறிகள் அமைந்த நெடுமரம் என இங்கே அவனை உருவகம் செய்துள்ளது கருதியுணர வுரியது. பெரிய போர் வீரனுடைய அருமை மனைவி ஆதலால் போர் முறைகளைக் கூர்மையாகக் கருதி யிருக்கிறாள்.

பத்துத் தலைகளையும், இருபது தோள்களையும் கொத்துக் கொத்தாகக் கொய்து வீழ்த்தவன் என்பது சித்திர இலக்கம் என்றதனால் உய்த்துணர வந்தது. தனது கணவனது அற்புத பராக்கிரம நிலைகளை நன்கு தெரிந்தவள் ஆதலால் இங்ஙனம் இறுமாந்து பேச நேர்ந்தாள். எதிரிக்கு அச்சமும் திகிலும் தோன்றும்படி உச்ச நிலையில் உரையாடி வருகிறாள்.

ஒரு பறவையோடு நேரே போராடி வெல்ல முடியாமல் கரவாய்க் கொலை புரிந்து வந்தவன் என அப் புலை நிலையை எடுத்துக் காட்டி இடித்துக் கூறி எள்ளி இகழ்ந்தாள்.

அரிய தவங்கள் செய்து பெற்றுள்ள அவனுடைய பெரிய வர பலங்கள் எல்லாம் இராமன் வில்லை வளைக்க நேர்ந்த வுடனே அடியோடு குடிவாங்கிப் போம் எனக் குறித்தருளினாள்.

குறிப்புகள் யாவும் கோதண்ட வீரனுடைய அற்புத ஆற்றல்களையும் அதிசய நிலைகளையும் வெளிப்படுத்தி யுள்ளன. அவன் உள்ளம் தெளிந்து உறுதிகளை யுணர்ந்து தப்பிப் பிழைக்கும்படி வார்த்தைகள் வெளியே ஆர்த்து வந்திருக்கின்றன.

மேருமலையை வேரோடு எடுத்த பெரிய போர்வீரன் என்பதை ஒரு சிறிதும் உணராமல் பேதை மதியால் பேசுவதாக அப் பேதை மகன் எண்ணவும் கூடும் என்று இப் பெண்ணரசி நுண்மையாக எதிரறிந்து இறுதியில் பேசியுள்ளது உறுதிமிகவுடையது.

குன்று நீ எடுத்த நாள்.

சீதை வாயிலிருந்து இந்த வார்த்தை வந்ததும் இராவணன் உள்ளம் உவந்தது. ஏன்? தான் வெள்ளி மலையை அள்ளி எடுத்த அதிசய ஆண்மையை இவள் அறிந்திருக்கிறாள்; ஆதலால் கொஞ்சம் மதிப்பும் மரியாதையும் தன் மேல் புரிந்தருளுவாள் என்று அந்தக் காம வெறியன் ஏம மீதூர்ந்தான். அடுத்து வருகிற மொழிகளைக் கேட்க ஆவலோடு செவி சாய்த்து ஆசை கூர்ந்து நின்றான். அந்நிலையில் என்ன நேர்ந்தது?

தன் சேவடிக் கொழுந்தால் உன்னை வென்றவன்.

இந்த வாக்கியம் அவனுக்கு இடி விழுந்தது போலாயது. முதல் எடுப்பில் விளைந்த உவகை அடுத்த மொழியில் அடியோடு மாய்ந்தது. "நீ மேரு மலையை எடுத்த பொழுது தன் கால் விரல் நுனியினால் உன்னைக் கீழே அழுத்தி அழுது ஓலமிடும்படி செய்த அந்த முழுமுதல் பரமன் அருமையாகக் கையாண்டு வந்த திரியம்பகம் என்னும் அற்புத வில் என் கணவன் கை வைத்தவுடன் நெறு நெறு என்று ஒடிந்து போயதே! அது இற்று விழும் பொழுது எழுந்த ஓசை உன் செவியில் கேட்க வில்லையா? ஐயோ! முழு மூடமே! ஆளை இனம் தெரியாமல் வீணே அழிந்து போக விரைந்து நிற்கின்றாயே! உனது அவலநிலை கவலைக்கு இடமானது" என்று காட்டியருளினாள்.

பெருவிரல் இறைதான் ஊன்றப் பிறை எயிறிலங்க அங்காந்து
அருவரை அனைய தோளான் அரக்கன் அன்று அலறி வீழ்ந்தான்
இருவரும் ஒருவ னாய உருவமங் குடைய வள்ளல்
திருவடி சுமந்து கொண்டு காண்க நான் திரியுமாறே. (தேவாரம்)

இராவணன் குன்று எடுத்த நிலையைச் சமய குரவர்கள் இவ்வாறு பல இடங்களிலும் கூறியுள்ளனர். குன்று என்றது கைலையங்கிரியை. கைலாச பதியின் அதிசய மகிமையைச் சுட்டிக் காட்டித் தனது பதியின் தகுதியை உணர்த்தினாள்.

காலின் பெருவிரல் நுனியினால் உன்னை நிலைகுலைத்து அடக்கினவன் எவ்வளவு பெரியவன்! அந்தப் பரமசிவனுடைய அரிய வில்லும் எனது நாயகன் வலிக்கு ஈடு செய்ய முடியாமல் பாடழிந்து போயதே! அவ்வாறு ஆயின் நீ எங்கே? அவன் எங்கே? எறும்பு யானையையும், சுண்டெலி சிங்கத்தையும் சண்டைக்கு இழுத்தால் எப்படியோ அப்படியாம் நீ இராமனோடு போராட நேர்வது. நிலைமையை நினைந்து பாராமல் நீசமாய் நிற்கின்றாய்.

அந்த வெற்றி வீரன் வில்லை வளைத்த பொழுது அது இற்று வீழ்ந்த ஓசையை நீ கேட்க வில்லையா? கேட்டிருந்தால் இப்படி மாட்டுப் புத்தியாய்க் கேடு செய்யமாட்டாய்! மதிகேடு அதிகேடாய் விதி மூடியுள்ள உனக்கு என் பதியின் வில் ஓசை கேளாது போனதாயின் உன் செவி பாழானதேயாம்.

கேட்டிலை போலும் அம்மா!

இராவணனை நோக்கி இந்த அம்மை இப்படிக் கேட்டிருக்கிறாள். ஐயமும் ஆச்சரியமும் கேள்வியில் கிளர்ந்து நிற்கின்றன. இரண்டு செவியுடையாரும் அந்த ஓசையைக் கேட்டுள்ளாரே! இருபது செவிகளையுடைய நீ கேட்கவில்லையா? எனக் கேலியும் கிண்டலும் இதில் கோலி வந்துள்ளன.

பெரிய அருந்திறலாளன் என்று உள்ளம் செருக்கியிருந்த அவனது அகந்தையை இங்ஙனம் எள்ளலாக இகழ்ந்து அகழ்ந்து தள்ளியிருக்கிறாள். உரையாடுந் திறம் உணர்வு நலம் சுரந்து உறுதிகள் படிந்து விநய சாதுரியங்கள் விரவி மிளிர்கிறது.

சேவடிக் கொழுந்து எனச் சிவ பெருமானுடைய கால் விரல் நுனியைக் குறித்திருக்கும் அழகு கூர்ந்து நோக்கத் தக்கது. சொல்லின் சுவை உள்ளுந் தோறும் உவகை புரிந்தருளுகிறது. இன்ன பொருள் இன்ன சொல்லில் இன்னபடி இன்னார் வாயிலிருந்துதான் வரும் என்று நம் கவி நாயகன் நவின்று வருவது உவகைக் காட்சியாய் ஒளி செய்து வருகின்றது.

உலகத்தை இயக்கிவரும் இறைவன் போல உருவம் கரந்து நின்று கலையுலகத்தை நிலையாக இவர் இயக்கி வருகிறார்.

நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து

என * முன்னம் கோசிகர் வாய்மொழியாக ஈசனை இவ்வாறு குறித்தருளினார். இந்த அமுத வாக்கியத்திற்குச் சிவ பெருமான் எவ்வளவு காலம் செவி சாய்த்திருப்பார்! அரிய பதங்கள் இனிய உருவங்களை மருவி உரிய இடங்கள் தோறும் புதிய மணங்களை வீசிப் பொலிந்து விளங்குகின்றன

மையல் மீதூர்ந்து வந்துள்ள அந்தப் பொல்லாதவனுக்குத் தன் நாயகனுடைய பேராண்மையை நன்கு சொல்ல வேண்டி ஈசன் வில்லை இங்கே எதிரெடுத்துக் காட்டினாள்.

சீதையின் மணப் பரிசாக வாய்ந்திருந்த இந்தத் தெய்வீக வில்லின் பான்மை மேன்மைகள் காவியத்தில் பல உருவங்களில் பரந்து விரிந்து வந்திருக்கின்றன.

வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து இப்
பிள்ளைமுன் இட்டது பேதைமை.

---

* இந் நூல் பக்கம் 959, வரி 32 பார்க்க.

என மிதிலை வாசிகள் இப்படிப் பேசியிருக்கிறார்.

சலப் பிரளயமாய் உலகங்கள் யாவும் அழிந்து போகும்படி ஆங்காரத்தோடு ஆர்த்து வந்த ஆகாய கங்கையைத் தன் சடையிலுள்ள ஒரு மயிர் நுனியில் அடக்கியருளிய சிவபெருமான் எடுத்தாண்ட வில்லை இந்தப் பிள்ளையை வளைக்கச் சொல்லுவது பெரிய பிழை என இராமன் மீதுள்ள பிரியத்தினால் பொது மக்கள் இப்படி உருகியுரையாடியுள்ளனர்.

வெள்ளம் அணைத்தவன் என்னும் இந்த அருமைப் பதத்தின் பெருமையை யுணராமல் ''வெள்ளை மனத்தவன்'' என்று திருத்தியிருக்கின்றனர். வெள்ளை மனத்தவன் ஆன சனகன் என அதற்குப் பொருளும் கூறுகின்றனர். வில்லின் மகிமையை விளக்கியுள்ள நல்ல அடைமொழியைச் சிதைத்து, மகாஞானியான சனக மன்னனை மதிகேடன் ஆக்கித் தங்கள் மதி கேட்டை உலகம் காணக் காட்டியிருக்கின்றனர்.

உயர்ந்த நூலில் உள்ள சிறந்த கவிகளைத் தம் மனம் போனபடி துணிந்து திருத்துவதும் மாறான பொருள் கூறி விபரீதமாய் வேறுபாடுகளை விளைப்பதும் இழிந்த செயல்கள்; மிகுந்த பாவம்.

''கலந்தவர் தமைப்பிரித்துக் கலகம் கண்டிடவல்லானும்,
புலந்தரு நூலின் இல்லாப் பொருளினைக் கூறு வானும்,
நலந்தனை அழுக்காறெய்தி நகைத்துஇகழ்கிற்போன் தானும்
மெலிந்தவர் இடத்து மிக்க வெகுளியைப் பெருக்குவானும்''

(பிரபுலிங்க லீலை)

இழிந்த பாவிகள் என இது இகழ்ந்துள்ளது. நரக துயரங்களுக்கு ஏதுவான பழி பாவங்களைக் குறித்துக் கூறிவரும் பொழுது ஒரு தவ முதுமகள் இவ்வாறு உரைத்திருக்கிறாள். முன்னோர் மொழிகளைப் பிழைப்படுத்துவது கொடிய பிழையாம்.

புலம் தரு நூலின் இல்லாப் பொருளினைக் கூறுவான்.

பாவி என்றதனால் அந்தப் பிழை பாட்டின் தீமை தெளிவாம்.

இராம காவியத்துள் பல பாடல்களைப் பிழையாக மாற்றித் தனியே பதிப்பித்திருக்கின்றனர் அதனைப் பிழைப் பதிப்பு என்று சொன்னால் பொறுத்துக் கொள்ளலாம். அதுதான் திருத்தமான பதிப்பு என்னும் போதுதான் வருத்தமாகின்றது. வயிறும் எரி

கிறது. "கலைத்தாயே! இங்கே நீதியில்லையா? நெறி இல்லையா? அறிவின் சுவை இந்நாட்டில் அடியோடு நாசமாய்ப் போயிற்றா? புனிதமான கலையுலகில் போலிகள் புகுந்து புலையாடல்கள் புரிவது கொடிய கொலைகள் அல்லவா?" என்று குலை துடிக்கின்றது.

அதிகார நிலைகளிலோ, பத்திரிகைகளிலோ தங்களுக்குக் கிடைத்துள்ள செல்வாக்கை நெறிகேடான முறையில் பாழாகப் பயன் படுத்துவது கொடிய பழியாம்; தேசத்திற்கு அது பெரிய துரோகமாகும். பிறரை வீணாகப் புகழ்ந்து பேசுபவர் தம்மைக் காணமல் காட்டி வருகின்றனர். பீடைகள் கோடிகளாய்ப் பெருகி எழுகின்றன; கேடுகள் கிளைக்கின்றன; நாடு விழிப்படையவேண்டும்.

தமிழ்மொழி எவ்வளவு கலை நலங்களையுடையது! அது எவ்வாறு பரிதாப நிலையில் மறுகி யுழல்கிறது. சிறந்த கல்வியறிவும் திருந்திய உள்ளப் பண்பும் நல்ல சீலமும் நயத்தகு நீர்மையும் மக்களிடம் மருவிய பொழுதுதான் நாடும் மொழியும் நலம் பல பெற்றுப் பீடும் பெருமையும் பெருகி விளங்கும்.

கலை ஞானத்திலும் கவி நிலையிலும் இந்நாடு எந்நாட்டினும் தலை சிறந்துள்ளது. இருந்தும் அறிவின் சுவையை உண்மையாக அனுபவிப்பவர் அருகியுள்ளனர். அதனாலேதான் தகுதி காண முடியாமல் மிகுதியும் போலிகள் மேவி விடுகின்றன. அவற்றின் போக்கும் நோக்கும் புலையாட்டமும் யாண்டும் ஆக்கக் கேடுகளாய் நீண்டு நிற்கின்றன. அவல நிலைகள் கவலைகளாய்க் கலித்து வருகின்றன; கலையுலகின் நிலை பல வகையிலும் பரிதாபமா யுளது

உலகமகா கவிகளெலாம் தலை வணங்க
 ஒளிர்கின்ற உதய ஞான
திலகமெனும் கம்பனைமுன் திருவயிறு
 வாய்த்திருந்த தேசம இன்று
கலகமிடும் சிறுகுரைகள் கவிகளென
 வெளிவருதல் கண்டு நொந்து
பலமுறையும் அழுகின்ற பரிதாப
 நிலைவிண்டு பகர லாமோ? (1)

கம்பனடித் துகள்நிலையும் காணுத
 கழிமடங்கள் கம்பன் பாட்டின்
செம்பொருளும் நுண்பொருளும் தெளிபொருளும்
 தெரிந்தவர்போல் செருக்கு மீறி
உம்பர்அமு தங்களென ஒளிமிகுந்த

கவிகளிலே ஊனம் செய்து
வம்புகளை மிக வளர்த்து வசைவளர
வளர்கின்றார் வளர்வ தென்னே? (2)

கலையுணர்வின் சுவைகனிந்த கம்பனுயர்
காவியமும் கருதுந்தோறும்
தலையுணர்வு தழைத்துவரும் தருமநூல்
முதலாய தகைமை வாய்ந்த
விலைவரம்பில் நூல்களையும் விளைத்துவந்த
தமிழ் இன்று வெறுமையான
புலையுணர்வின் புகைமண்டிப் பொலிவிழந்து
போயுளதே புன்மை என்னே! (3)

பண்டிருந்த கொடை எங்கே? படையிருந்த
நிலை எங்கே? பரிந்து நீதி
கண்டிருந்த அரசெங்கே? கலை எங்கே?
கவி எங்கே? கற்பு வாய்மை
கொண்டிருந்த குலம எங்கே? குணம் எங்கே?
நலம் எங்கே? கொற்றம் எங்கே?
உண்டிருந்த நலமெல்லாம் ஒளிந்தோடிப்
போனவகை உரையாய் அம்மா! (4)

பொல்லாதார் நல்லரெனப் புல்லரெலாம்
வல்லரெனப் புனிதம் யாதும்
இல்லாதார் பெரியரென இனியாதார்
இனியரென இயல்கள் ஏதும்
கல்லாதார் கலைஞரெனக் காணுதார்
கண்ணரெனக் கடமை ஓர்ந்து
நில்லாதார் நிலையரென நெடியராய்
நிலவுகின்றார் நிலைஎன் அம்மா! (5)

(இந்தியத் தாய் நிலை)

உலக மாதாவை நோக்கி இப்படிப் புலம்ப நேர்ந்துள்ளது.

உள்ளம் திருந்தி நல்ல நீர்மைகள் தோய்ந்து நாட்டுக்கும் மொழிக்கும் நலம் பல சூழ்ந்து எல்லாரும் இனிது வாழ எம் பெருமான் அருள் புரிய வேண்டும். கலை நிலை சீவகோடிகளுக்குத் தேவ அமுதம். அதனை அரசாங்கமும் அறிஞர்களும் கண்ணூன்றிப் பேணிவரின் பல உயிர்களுக்கும் அரிய உதவிகள் செய்த பெரிய புண்ணியமாம். புலையான புன்மைகள் பொன்றியொழிந்து நிலையான நன்மைகள் என்று பெருகி வருமோ அன்றுதான் திருவும் அறிவும் திறலும் தேசும் தேசமெங்கும் வாசமாய் ஒளிவீசும்

உறுதி யுணர்த்தியது.

ஈசன் கைலையை எடுத்தேன்; தேவர்களைவென்றேன்; திக்கு யானைகளை அடக்கினேன்; யாவரும் எனக்கு அடங்கி யுள்ளனர்; என்னை வெல்ல வல்லார் எவரும் இல்லை என்று இன்னவாறு தன்னை வியந்து தருக்கியுள்ள அவனது செருக்குகளுக்குச் செருப்படி கொடுப்பது போல் செருப்படி வீசப் பிராட்டி பின்பு பேச நேர்ந்தாள்.

மலைஎடுத்து எண்திசை காக்கு மாக்களை
நிலைகெடுத் தேன்என மாற்றம் நேருநீ
சிலைஎடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை
தலைஎடுத்து இன்னமும் மகளின் தாழ்தியோ? (1)

ஏழைநின் ஒளித்துறை இன்ன தாமென
வாழிஎம் கோமகன் அறிய வந்தநாள்
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமோ
ஊழியும் தீயும் உன்னுயிரொடு ஓயுமோ? (2)

வெஞ்சின அரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சும் என்று
அஞ்சுகின்றேன் இதற்கு அறனும் சான்றரோ. (3)

அங்கண்மா ஞாலமும் விசும்பும் அஞ்சவாழ்
வெங்கணாய் புன்தொழில் விலக்கி மேற்கொளாய்
செங்கண்மால் நான்முகன் சிவன்என்றே கொலாம்
எங்கள் நாயகனையும் நினைந்தது ஏழை நீ. (4)

இருவர்என்று இகழ்ந்தனை என்னின் யாண்டெல்லை
ஒருவனன்றே உலகழிக்கும் ஊழியான்
செருவருங் காலை என் மெய்ம்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந்து அநாயம் பொன்றுவாய். (5)

திருவின் வாய்மொழிகள் இவ்வுருவில் வந்துள. உரைகளில் மருவியுள்ள வேகங்களையும் விவேகங்களையும் யூகமாய் ஓர்ந்து கொள்பவர் உவகை மீதூர்ந்து துள்ளுகிறார். உள்ளம் நாணி உளைய அவனது கள்ளங்களை எடுத்துக் காட்டி இடித்து அறிவுறுத்தி யிருப்பது இனிமை சுரந்து திகழ்கிறது.

சிலை எடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை.

மலை எடுத்தேன்; மாக்களை நிலை கெடுத்தேன் என்று தலை எடுத்து வந்து தன் முன் புலை எடுத்து நிற்கிறவனை நோக்கிச் சீதை இப்படிச் சொல்லம்பு தொடுத்திருக்கிருள். இன்று பெரிய போர் வீரன் போல் என் முன் வந்து பிதற்றுகின்றாய்! அன்று அங்கே பன்னசாலை முன் வில்லும் கையுமாய் நின்ற அந்தப்பிள்ளை எதிரே வர உள்ளம் பதறி ஒளித்துக் கள்ளம் புரிந்து கபடஞ் செய்தாயே! நீயும் ஒரு ஆண்மையாளனுய் மேன்மை காட்டிப் பான்மை நீட்டிப் பேசுவது மிகவும் ஈனமாம்.

சிலையை எடுத்து நின்ற அவன் உன் தலையை எடுத்து விடுவான் என்று அஞ்சியே புலையெடுத்துப் போக்கிப் போலி வேடம் பூண்டு காலித்தனம் செய்தாய் என அவனைக் கடுத்து வைதுளாள். இளையவனுக்கே அவ்வாறு அஞ்சிய நீ மூத்தவனைக் கண்டால் எவ்வாறு அஞ்சுவாய்? இவ்வாறு கேட்கும் கேள்வி இவ் வாக்கியத்துள் மறைந்துள்ளமையை நோக்கி அறிக.

தன்னைக் காத்து நின்ற இலக்குவனது நிலையும், தான் அவனை நிட்டூரமாகத் திட்டி நீக்கிய புலையும் சீதையின் உள்ளத்தை வாட்டி வருகின்றன. அவ் வரவு நிலைகளை உரிய இடங்களில் பரிதாபமாய்க் கண்டு வருகிறோம். புனிதமான அப்பிள்ளையின் உள்ளம் கொதிக்கச் சொல்லிய பாவமே இப்பொழுது தான் அனுபவிக்கிற துயரங்களுக்கு மூல காரணம் என்று சாலவும் மறுகி யிருக்கிருள்.

## பரிவு கொண்டது.

இளவலுக்கு அஞ்சிக் களவு செய்தவன் என அவனை இகழ்ந்துசொல்லி அதன்பின் வந்தல் நிலையினை ஓர்ந்துணர வுரைத்தாள்.

என்னைக் கவர்ந்து கொண்டு வந்துள்ள நீ இங்கே உறைந்திருப்பதை அறிந்தால் எம்பெருமான் உடனே விரைந்து வருவார்; அந்த வீர நாயகன் வந்தால் இந்த இலங்கை பாழாய் அழிந்து போம்; அரக்கர் குலம் அடியோடு நாசமாம்; நீயும் குடியோடு அழிவாய்; அந்தக் கோதண்டவீரன் சினந்தால் மூதண்டங்களும் சிதைந்து படுமே! என்று என் உள்ளம் பரிந்து பதறுகிறது; நீ ஒருவன் தீமை செய்ய உலக வுயிர்கள் பலவும் அழிய நேர்ந்துள்ளனவே! நிலைமை தெரிய வில்லையே! என்னும் பரிதாபம் இரவும் பகலும் என் நெஞ்சை வருத்தி வருகிறது.

எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சும் என்று
அஞ்சுகின்றேன்; இதற்கு அறனும் சான்று.

இராம பிரானுடைய கோபத்தால் உலகமெல்லாம் நிலைகுலைந்து சிதையுமே! என்று சீதை உள்ளம் கருதி மறுகியுள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்கிறோம்.

மடமையாய் நீ ஒருவன் இழைத்துள்ள கொடுமையால் பல கோடி உயிர்கள் பாழாகும்படி மூண்டுள்ளனவே பாவி! என்று தேவி ஆவி துடித்திருக்கிறாள். இதனால் இவளது கண்ணோட்டமும் கருணையும் பொறுமையும் பெருமையும் நன்கு தெரியவந்தன.

அஞ்சுகின்றேன் இதற்கு அறனும் சான்று என்றது அக் கொடியவன் நெஞ்சம் தெளிந்து நிலைமையை உணர்ந்து பிழை நீங்கி உய்ய வேண்டும் என்னும் பரிவினால் ஆயது.

பல கொலைகள் விழும்; நீயும் குலத்தோடு அழிந்து போவாய்; இலங்கை நாசமாம்; உலகமெல்லாம் துயரமடையும்; இராம கோபத்தால் இவ்வாறான அழிவுகள் நேராமல் நீ இப்பொழுதே வழி தேடிப் பிழைத்துக் கொள்! என்பது குறிப்பு.

இவன் ஒருவனால் அரக்கர் குலம் அழியப்போகிறதே என்று பிராட்டி இரக்கம் மீதூர்ந்திருத்தலால் அந்த உள்ளப் பண்பை நினைந்து நாம் உருகி மகிழ்கிறோம். அரிய பெரியோர்களுக்கு அருள் நீர்மை தனியுரிமையாயுளது. அறம் சாட்சி என்றதனால் தருமம் துணை காத்து அருகிருக்கும் மருமம் தெரிய வந்தது.

மண்ணுலகமும் விண்ணுலகமும் அஞ்சி நடுங்கும்படியாக வெஞ் செயல்கள் புரிந்து வருகிற உனது கொடுமைக்கு முடிவு காலம் வந்துள்ளது; தேவர் யாவரும் ஏவல் செய்கின்றனர்; அகிலத்தையும் அடக்கி ஆளுகின்றோம் என்னும் உள்ளக் களிப்பினால் எம்பெருமானுடைய மகிமையை நீ அறிய மாட்டாமல் மதிகேடு மண்டி அவலமாயிருக்கின்றாய்.

செங்கண்மால் நான்முகன் சிவன் என்றேகொலாம்
எங்கள் நாயகனையும் நினைந்தது ஏழை நீ.

இங்ஙனம் பேசியிருப்பது வியப்பாயிருக்கிறது.

தேவர்களை ஏவல் கொண்டு திரிமூர்த்திகளையும் மதியாமல் இராவணன் மதம் மீறியிருத்தலால் அவன் வியந்து சிந்தனை

செய்து தெளிந்து கொள்ளும்படி இந்த வாசகம் இங்கே வந்துளது.

திருமால், பிரமன், சிவன் என்றே என் நாயகனை நீ நினைந்திருக்கிறாய்; அங்ஙனம் நினையாதே! என நினைவுறுத்தியுள்ளாள். ஏ அறிவிலியே! என்பாள் ஏழை நீ என்றாள். தனக்கும் தன் குலத்துக்கும் அழிவைத் தேடிக் கொள்ளுகிற முழு மடையன் என்பதை இம் மொழி கிளர்ந்துள்ளது.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையுடைய தேவர்களாலும் தனக்கு அழிவு நேராதபடி வரம்பெற்று வந்துள்ளமையான் அம் மூவர்பாலும் அச்சமின்றி எவர்பாலும் எங்கும் அதிகாரங்களை வரம்பின்றிச் செலுத்தி உச்ச நிலையில் இராவணன் உரம் பெற்று நிற்கின்றான். அந்நிலை குலைந்து தலை குனிந்து அஞ்சும்படி இவ் வார்த்தைகள் ஈண்டு ஆர்த்து எழுந்து கூர்த்த நோக்கோடு கூடி வந்துள்ளன.

செங்கண்மால் செய்யாத, நான்முகன் காடாத, சிவன் ஆற்றாத அரிய செயலை இராமன் செய்ய வந்துள்ளான் என்பதை இங்கே மருமமாக அறிந்து கொள்ளுகிறோம்.

தேவ தேவர்களாலும் அழிவில்லை என்னும் களிப்பினால் எங்கும் அழி துயரங்களைச் செய்து வருகிறான்; அதற்கு முடிவு வந்துள்ளமை இவண் முடிவாய் நின்றது.

ஆதி மூலப் பரம்பொருளே இராமனாய் அவதரித்து வந்துள்ளான் என்னும் அவதார வுண்மை சீதையின் வாக்கு மூலமாகவும் ஈண்டு நன்கு தெரிய வந்தது.

தம் காவிய நாயகனை நம் கவி நாயகன் கருதியுள்ளதைத் தேவியின் வாய்மொழியாகவும் உலகம் அறியச் செய்து உவகை கூர்ந்துள்ளார். உரைகளில் அதிசய மகிமைகள் ஒளி செய்து வருகின்றன. துதி மொழிகள் மதிநலம் கனிந்து மிளிர்கின்றன.

என் நாயகன் என்னாமல் எங்கள் நாயகன் என்றது நல்லோர் பல்லோரையும் தன்னொடு தழுவியுரைத்த தன்மைப்பன்மையாம். இலங்கைச் சிறையில் சீதை தனியே துயருற்றிருந்தாலும் உலகிலுள்ள தரும சீலங்கள் யாவும் அவளுக்கு இனிய துணையாயமைந்துள்ளமை உரையில் நுணுகி உணர வந்தது.

தன்னுடைய அருமைக் கணவனை இக்குலமகள் கருதி யுருகி

யிருக்கும் உரிமையை உணருந்தோறும் எவரும் உள்ளம் உருக நேர்வர். கடவுள்பால் பேரன்பு மண்டி மனம் கரைந்து வருகிற பத்தகோடிகளுடைய சித்த நிலையும், இராமன்பால் சீதை கொண்டுள்ள உத்தம பத்தியும் ஈண்டு ஒரு முகமாய் உய்த்துணர வந்தன. உருகிய அன்பு பெருகி ஓடுகிறது.

நாயகி நாயக நேயம் எனத் தெய்வ பத்திக்கு எடுத்துக்காட்டி வரும் தூய அன்புரிமைக்கு இவர் பண்பாயுள்ளனர்.

தேவதேவனே மனித வுருவில் இராமன் என வந்துள்ளான்; அவனோடு மாறுபட்டு நில்லாதே; நின்றால் நீ நீறுபட்டு அழிவாய் என்று அவன் நெஞ்சம் தெளிய நேரே கூறினாள்.

இருவர் என்று இகழ்ந்தனை என்னின் யாண்டு எல்லை
ஒருவன் அன்றே உலகு அழிக்கும் ஊழியான்.

எதிரியின் எண்ணங்களை எதிர்நோக்கி மொழிகள் வெளி வருகின்றன. வாதமுறை தோய்ந்து போதனை பாய்ந்துள்ளது.

என்னிடம் ஆயிரவெள்ளம் படைகள் உள்ளன; மூன்று உலகங்களையும் அடக்கி ஆளுகின்றேன்; ஒரு மனிதன் வந்து என்னை என்ன செய்ய முடியும்? தன்னுடன் பிறந்த தம்பி மாத்திரம் அவனுக்குத் துணையாயிருக்கிறான்; அந்த இரண்டு பேரின் எளிமையும் திரண்டசேனைகளையுடைய எனது வலிமையும் எதிர் தூக்கி நோக்கின் அணுவும் மேருவும் போல் பெரிதும் இழிவாம் என அவன் களி மீதூர்ந்து நிற்பான் என்று கருதி இவ்வாறு தெளிவூர்ந்து வரப் பேசினாள்.

இருவர் தானே என்று நீ இகழ்வாக எண்ணுவாயானால் அது பெரிய மடமையாம். யுக முடிவில் உலக முழுவதையும் ஒருங்கே அழித்து ஒழிப்பவன் ஒருவனே என்பதை நீ உணர்ந்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் உணர்வாயாயின் இந்த இருவர் நிலையும் உனக்கு எளிது தெளிவாம் என அறிவூட்டியருளினாள்.

யாண்டு எல்லை என்றது யுகாந்த காலத்தை.

ஊழியான் எனச் சங்கார கருத்தாவுக்கு ஒரு பெயர் அமைந்தது. ஊழிக் காலத்தில் யாவும் அழித்து தான் ஒருவனே தனித்து நிற்றலால் அந்தப் பரம்பொருளை ஊழியான் என்றார்.

ஊழியார் ஊழிதோறும் உலகினுக்கு ஒருவராகிப்
பாழியார் பாவம் தீர்க்கும் பராபரர் பரமதாய
ஆழியான் அன்னத்தானும் அன்றவர் அளப்பரிய
பாழியார் பரவி ஏத்தும் பழனத்தெம் பரமனாரே. (தேவாரம்)

ஊழியார் எனச் சிவபெருமானை இதில் குறித்திருத்தலறிக.

யுகாந்த காலத்து உருத்திரமூர்த்தி போல் இராமபிரான் ஒருவனே உன் குலத்தையெல்லாம் அடியோடு அழித்தொழிக்க வல்லான்; அவனோடு தம்பியும் துணை சேர்ந்துள்ளான் ஆதலால் உனது அழிவு நிலையை விழி தெளிந்து கொள்க என விளக்கியுள்ளாள். ஒப்பு நிறுத்திய ஒட்பம் நுட்பம் மிகவுடையது.

செரு வருங்காலை என் மெய்ம்மை தேர்தியால்

தான் சொல்லிய வாய்மொழிகளின் உண்மைகளை அவன் உணருங்காலமும் நேரமும் இங்ஙனம் உரைக்கப்பட்டன.

நான் கூறுகிற உறுதிமொழிகளை இப்பொழுது நீ உணரமாட்டாய்; செருக்கும் களிப்பும் தலைக்கு ஏறியிருத்தலால் யாருடைய புத்தி போதனையும் உனக்கு யாதும் ஏறாது; போர் மூண்டு அந்தக் கோதண்ட வீரனை நேரே கண்டபோது இன்று நான் இங்கே உரைத்தன யாவும் உண்மை என்பதை அன்று அங்கே நீ அனுபவத்தில் நன்கு உணர்ந்து கொள்வாய் என இங்ஙனம் உறுதியாக உணர்த்தியிருக்கிறாள். உணர்வுரை பரிவு மருவி வந்தது.

அரிய அரச செல்வங்களை இழந்து அநியாயமாய் அழிந்து தொலையப் போகின்றாய்; நிலைமையைத் தெளிந்து அழிவு நிலை அடையுமுன்னமே வழுவியுள்ள பிழை நீங்கி இப்பொழுதே பிழைக்கும் வழியைத் தேடிக் கொள்க எனத் தெளித்தருளினாள்.

போருவரும் திரு என்றது வானும் வையமும் வணங்க வாழ்ந்து வருகிற அவனது திவ்விய போகங்களையும் செவ்விய இராச்சிய செல்வ நிலைகளையும் கருதி வந்தது. எவரும் பெறலரிய பெருந் திருவினை ஒருங்கே இழந்து நாசமாய்ப் போக நேர்ந்துள்ளாயே! என்று அவனுடைய அழிவு நிலைக்கு இரங்கியிருக்கிறாள். இப் பெண்ணரசியின் அருள் நீர்மை உரைகளில் ஊடுருவி மிளிர்கின்றது. அநாயம் பொன்றுவாய் என்றது அநியாயமாய் மாண்டு படுவதை ஈண்டு விழி எதிரே தெளிவாக உணர்த்தினாள்

நாயம்=நியாயம், நீதி. அதற்கு மாறானது அநாயம் என்க.

வீணே அழிந்து போகாதே என நேர்ந்துள்ள அழிவு நிலைகளை அவன் நினைந்து நோக்கி எவ்வகையிலாவது திருந்தி வாழும்படி பரிந்து பேசுகிறாள். அருள் நீர்மை ஆதரவு புரிகிறது.

## இறுதியில் கூறிய உறுதிகள்.

புத்தி போதனைகள் பலவகையான யுத்திகளோடு கலந்து உலக அனுபவங்களைத் தழுவி உணர்வு நலங்களை வெளி செய்து வருகின்றன. பாவ வழிகளின் பழிதுயரங்களையும் புண்ணிய சீலங்களின் கண்ணியஇன்பங்களையும் கருதிகாணக் காட்சிதருகின்றன.

பூவிலோன் ஆதியாகப் புலன்கள்போம் நெறியிற் போகாத்
தேவரோ அவுணர்தாமோ நிலைநின்று வினையில் தீர்ந்தார்?
ஏவல்எவ் வுலகும்செய்யச் செல்வம்நிற்கு இசைந்த என்றால்
பாவமோ முன்னிசெய்த தருமமோ தெரியப் பாராய்! (1)

இப்பெருஞ் செல்வம்நின்கண் ஈந்தபே ரீசன் யாண்டும்
அப்பெருஞ் செல்வம் துய்ப்பான் நின்றுமரீ தவத்தினன்றே
ஒப்பருந் திருவும் நீங்கி உறவொடும் உலக்க வுன்னித்
தப்புதி அறத்தை ஏழாய் தருமத்தைக் காமி யாதே. (2)

மறந்திறம் பாத தோலா வலியின ரெனினும் மாண்டார்
அறந்திறம் பினரு மக்கட் கருள்திறம் பினரு மன்றே·
பிறந்திறந் துழலும் பாசப் பிணக்குடைப் பிணியில் தீர்ந்தார்
துறந்தரும்பகைகள்மூன்றும் துடைத்தவர்பிறர்யார் சொல்லாய்.

தென்தமிழ் உரைத்தோன் முன்னைத் தீதுதீர் முனிவர் யாரும்
புன்தொழில் அரக்கர்க்கு ஆற்றேம் நோற்கிலம் புகுந்த போதே
கொன்றருள் நின்னால் அன்னார் குறைவது சரதம் கோவே!
என்றனர் யானே கேட்டேன் நீ அதற்கு இயைவ செய்தாய்! (4)

உன்னையும் கேட்டு மற்றுன் ஊற்றமும் உடைய நாளும்
பின்னையிவ் அரக்கர் சேனைப் பெருமையும் முனிவர் பேணிச்
சொன்னபின் உங்கை மூக்கும் உம்பியர் தோளும் தாளும்
சின்ன பின்னங்கள் செய்த அதனை நீ சிந்தியாயோ? (5)

ஆயிரம் தடக்கையானின் ஐந்நான்கு கரமும் பற்றி
வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம்
நீயறிந் திலையோ ஏகும் நெறியறிந் திலாத நீசா! (6)

கடிக்கும்வல் லரவும் கேட்கும் மந்திரம் களிக்கின்றோயை
அடுக்குமீ தடாதென் றுன்ற ஏதுவோடு அறிவு காட்டி
இடிக்குநர் இல்லை; உள்ளார் எண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்குநர் என்ற போது முடிவன்றி முடிவது உண்டோ? (7)
(நிந்தனைப்படலம், 53-59)

முடிவில் இவ்வாறு முடிவாகக் கூறியிருக்கிறான்.

“பிரமதேவன் முதலாகத் தேவர் யாவரும் உயர்ந்த இன்ப நிலைகளில் சிறந்து வாழ்ந்து வருதல் தரும நீதிகளினாலேயாம். அவற்றைக் கைவிட்டுப் பாவங்களைத் தழுவி நின்ற அசுரர் எல்லாரும் பாழாய் அழிந்து போயுள்ளனர். தேவர்களும் வணங்கி ஏவல் செய்யும்படி நீ பெற்றுள்ள இந்தப் பெருஞ் செல்வங்கள் பாவத்தினால் வந்தனவா? அல்லது புண்ணியத்தினால் கிடைத்தனவா? இதனைக் கொஞ்சம் சிந்தனை செய்து பார்! பெறலரிய இந்தப் பெரும் பாக்கியங்களை உனக்குத் தந்தருளிய சிவ பெருமானும் தருமத்தினாலேதான் நிலைத்து வருகிறார்; தருமம் நீங்கினால் கடவுளாயினும் வாழ முடியாது; கடையாகவே தாழ்ந்துபட நேரும்; தேவ கோடிகளுக்கும் ஜீவகோடிகளுக்கும் தருமம் ஆதாரமாயுள்ளது. அதனை எவன் இழந்தானோ அவன் உயிர் அற்ற சவம் ஆகின்றான். அத்தகைய தருமத்தை மறந்து பாவத்தை விழைந்து கொண்டு நீ வாழலாம் என்று எண்ணுவது முழுமூடமேயாம். அரசும் குலமும் அடியோடு அழிய வழி தேடிக் களி மிகுத்து நிற்கின்றாய்! உன் நிலை இழி மடமையானது; பரிதாபமுடையது. உலகையெல்லாம் வெல்ல வல்ல அதி வீரர் ஆயினும் அறமும் அருளும் அவர்பால் இல்லையாயின் அவர் இழிந்து அழிந்தே போவர். இதனை உண்மையாக நீ தெளிந்து கொள். பிறவி நீங்கிப் பேரின்ப நிலைகளை அடைபவர் எவரும் அறமும் அருளும் உடையவரேயாவர். தரும சீலர்கள் இருமையும் பெருமை பெறுகின்றனர். அருந்தவக்குரிசிலான அகத்தியர் முதலிய மாதவர்கள் என் நாயகனை வனத்தில் கண்டு உன் இனத்தவர்கள் செய்து வருகிற கொடுமைகளை எடுத்துரைத்தனர்; தமக்கு நேர்ந்துள்ள இடர்களை நீக்கித் தம்மைக் காத்தருளும்படி அவர் முறையிட்டு வேண்டினர். அரக்கர் குலம் அழிந்தாலன்றி உலகம் இனிது வாழ முடியாதென்று முனிவர் திரள் கூறவே, தீயோரை அடியோடு அழித்து நல்லோரைக் குடியோடு காத்தருளுவதாக எம்

பெருமான் வாக்களித்தருளினர். அந்த உறுதிமொழியை அன்று நான் அருகு நின்று கேட்டேன். அதற்கு உரிய வழியை உன்னிடம் இன்று காண்கிறேன். பழி புரிந்து பாழாகின்றாய்; விளைவுகளை விழி திறந்து காணாமல் வீணே மடிகின்றாய்; உன்னுடைய அதிகார ஆற்றல்களை நன்கு கேட்டிருந்தும் உன் தங்கையை மூக்கு அறுத்து, கரன் முதலிய சேனைத்திரள்களைக் கொன்றழித்துள்ளாரே அந்த வெற்றி வீரருடைய விசய பராக்கிரமங்களையும், உள்ளக் குறிப்புகளையும் ஒரு சிறிதும் சிந்தனை செய்து பாராமல் நிந்தனையில் நிமிர்ந்து நிற்கின்றாயே! உன் மடமைதான் என்னே! உனக்கு சுய புத்தியுமில்லை; சொல்லுவார் பேச்சையும் கேட்க மாட்டாய்; மாட்டு மதியிலும் கேட்டு மதியனையுள்ள உனக்குக் கதி காட்டுவார் யார்? கார்த்தவீரியன் என்னும் சீர்த்திமிகுந்த அரசன் உன்னை இரத்தம் கக்கக் குத்திச் சிறையில் அடைத்து வைத்தான்; அந்த அதிசய வீரனைப் பரசுராமன் கொன்று தொலைத்தான். அரசர் குல காலனை அவனை என் குல நாயகன் வென்று அடக்கினன். உன்னை இழிவாக அடக்கிச் சிறையில் வைத்தவனை எளிதே கொன்றவன் எவ்வளவு வலிமையுடையவன்! அவனை ஒரு நொடியில் வென்று வீறு கொண்டு நிற்கிற அவ் வீர மூர்த்தியின் சீரையும் சிறப்பையும் எண்ணி உய்யாமல் மண்ணாய் மாண்டு போக மூண்டுள்ளாயே! இழி மடையினிலும் கழி மடையனாய் நீ களித்து நிற்பது வருத்தம் விளைக்கிறது. கொடிய பாம்பு கூட மந்திரத்திற்குக் கட்டுப்படுமே! நீ ஒன்றுக்கும் கட்டுப் படாமல் உள்ளம் களித்துள்ளாயே! நல்லது சொல்லி உன்னைத் திருத்துவார் யாரும் இல்லையே; அருகிலுள்ளவர்கள் எல்லாரும் நீ கருதிய படியே பழி பாவங்களைச் செய்து கொடுத்து உன்னைத் தொழுது வாழ்த்தி வருகிறார்களே! ஐயோ! இழுதையே! நீ அடியோடு அழிந்து போவதைத் தவிர வேறு உய்யும்வழி யாதும் இல்லையே!''
என விழி நீர் ததும்ப அளி மீதூர்ந்து பழி நிலைகளை எடுத்துக் காட்டி வழி தெரிந்து பிழைக்கும்படி பிராட்டி பேசியுள்ளாள்.

வாய்மொழிகள் அந்தத் தூய உள்ளத்தின் அருள் நீர்மைகளையும் அறிவு நிலைகளையும் தெளிவாக விளக்கியுள்ளன. யாவும் பொருள் பொதிந்த போதனைகளாய்ப் பொலிந்து திகழ்கின்றன.

புலன்கள் போம் நெறியில் போகாதவர் புண்ணிய சீலராய் உயர்ந்து போகிறார்; மனம் போனபடி இழிவழிகளில் அலைந்து

திரிபவர் இழிந்தவராய்க் கழிந்து தாழ்கின்றார் என்றதனால் பொறி களை அடக்கி நெறியே ஒழுகுபவர் நிலையும், அல்லாதவர் புலையும் நேரே தெரிய வந்தன.

செயற்கு அரிய செய்வார் பெரியர்; அங்ஙனம் செய்யாதார் சிறியர் என்ற தேவர் கருத்தும் இங்கே கருதத்தக்கது.

இழிந்த காம இச்சையில் அழுந்தி ஈனனாய் அழிந்து போகாதே என்ன அவன் நிலைமையைத் தெளிந்து தேற முதலில் இங்ஙனம் புலன் அடக்கத்தை மொழிந்தருளினாள்.

ஏவல்எவ் வுலகும் செய்யச் செல்வம் நிற்கு இசைந்த என்றால்
பாவமோ? முன் நீ செய்த தருமமோ? தெரியப் பாராய்!

காமத்தால் கண் குருடு பட்டிருக்கிற இராவணன் கொஞ்சம் கண் திறந்து பார்க்கும்படி கற்பரசி இங்ஙனம் சுட்டிக் காட்டி யிருக்கிறாள். உற்றுள்ள நிலைகளை உணர வுணர்த்தினாள்.

தேவரும் தலைவணங்கி ஏவல் செய்யும்படி மூவுலகஆட்சியை மாட்சிமையாகப் பெற்றிருக்கிறாயே! இந்த அரிய பாக்கியம் நீ செய்த பாவத்தால் வந்ததா? புண்ணியத்தால் கிடைத்ததா? இவ் வுண்மையை எண்ணிப் பார்! அரிய தவத்தையும் அளவிடலரிய புண்ணியங்களையும் செய்தே இந்தப் பெரிய செல்வங்களைப் பெற் றிருக்கிறாய்! இனிய தரும பலன்களை அனுபவித்து வருகிற நீ கொடிய பாவத்தைச் செய்யத் துணிந்தது குலநாசத்திற்கு மூல காரணமாய் மூண்டுள்ளது. உடனே உணர்ந்து திருந்துக; இல்லை யானால் அடியோடு அழிந்தே போவாய்!

மறம் திறம்பாத தோலா வலியினர் எனினும்
அறம் திறம்பினரும் மக்கட்கு அருள்திறம்பினரும் மாண்டார்.

எவரையும் வெல்ல வல்ல வெற்றி வீரராயினும் அறமும் அருளும் இலர் எனின் அவர் அழிந்தே தொலைவர் என்னும் இது இங்கு அவன் உணர்ந்து கொள்ள வந்தது. மறம்=வீரம்.

பெரிய வீரன் என்று செருக்கி நிற்கின்ற அவனுக்கு உரிய போதனையாய் ஈண்டு இது உணர்ச்சி யூட்ட எழுந்தது.

தருமமும் கருணையும் இங்கே காட்சிக்கு வந்துள்ளன.

இந்த இரண்டும் உன்னிடம் இல்லை; ஆதலால் நீ எவ்வளவு

பெரிய வெற்றி வீரனாயிருந்தாலும் இழிந்து அழிந்தே போவாய் என நேரே கூறாமல் படர்க்கையில் வைத்துப் பதமாக வுரைத்தாள். மாள்வார் என்னாமல் மாண்டார் என இறந்த காலத்தால் கூறியது விரைந்து அழிவார் என்னும் தெளிவு தோன்ற வந்தது.

அறமும் அருளும் இன்றிக் கொடிய செயல் செய்கின்றவனை இரக்கம் கெட்ட பாவி என்று வையம் வைகின்றது. அதனை அரக்கர் தலைவனுக்கு இங்கே குறித்துக் காட்டினாள்.

தரும சீலனான இராமனுக்குத் துரோகம் செய்து, அவனது தரும பத்தினியைக் கவர்ந்து கொண்டு வந்து அல்லல் புரிகின்றான் ஆதலால் பொல்லாத பாவி என இராவணன் எள்ளலுற நேர்ந்தான். தீயது செய்பவன் தீயனாய் இழிகின்றான்.

அறமும் அருளும் திறம்பி மறமும் மதமும் நிரம்பி அவன் செய்து வந்த கொடுமைகள் எவற்றினும் இந்தப் பதிவிரதைபால் செய்தது அதி பாதகமாயது; ஆகவே அவன் கொடிய பாவி என்று நெடிய பழி உலக முழுவதும் பரவி நின்றது.

பாவத் தீமைகள் எவரையும் நாசப்படுத்தி விடும் ஆதலால் நீசமான அந்த நாச நிலைகளை நேரே எடுத்துக் காட்டினாள்.

"All evil is so much death or nonentity." (Divinity)

"தீமைகள் எல்லாம் பாழான அழிவையே தரும்" என்னும் இது இங்கே அறிய வுரியது. தீமையை எவரும் வெறுத்து இகழ்கின்றனர்; நன்மையை யாண்டும் விழைந்து புகழ்கின்றனர்.

அறமும் அருளும் சீவ அமுதங்கள்; அவற்றையுடைய சீவர்கள் திவ்விய கதிகளை எய்துகின்றனர்; இழந்தவர் வெவ்விய துயரங்களை அடைகின்றனர் என்னும் உறுதி யுண்மை இங்கே கருதியுணர வந்தது. சானகி வாய் மொழிகள் ஞான மணம் கமழ்ந்து நலம் பல சுரந்து அரிய போதனைகள் நிறைந்து இனிது மிளிர்கின்றன.

கொடுமை நஞ்சுபோல் மனிதனை நாசப் படுத்தும்;
கருணை அமுதமாய் ஆனந்தம் அருளும்.

இந்த இனிய போதனை அந்தக் கொடியவனுக்கு ஏதாவது உணர்வு அருளி உதவி புரியாதா எனக் கருணையோடு போதித்திருக்கிறாள். அருளை இழந்தாயானால் அடியோடு அழிந்தாய் என்

றது அதனை யுடையனாய் உய்தி பெறுக என்றவாறும்.

"So much benevolence as a man hath, so much life hath he."

"கருணையுள்ள அளவு மனிதன் உயிருடையனாய் ஒளிபெற்று நிற்கின்றான்" என அமெரிக்க மேதை ஆகிய எமர்சன் இங்ஙனம் கூறியிருக்கிறார். அமுத நீர்மையான இனிய பண்புகளை இழந்து கொடுமைகளைச் செய்து படுபாதகர்களாய் மனிதர் இழிந்து அழிந்து போவது பரிதாபமாகிறது.

இங்ஙனம் பலவாறு நீதிகலங்களை உரைத்து வந்தவள் பின்பு அவனது ஆற்றலை அளந்து காட்ட நேர்ந்தாள். பழைய நிகழ்ச்சி ஒன்றை எடுத்துக் காட்டி இகழ்ச்சிக் குறிப்போடு உணர்த்தியிருப்பது உணர்ச்சி மிகுந்து உவகை சுரந்து திகழ்கின்றது.

கார்த்த வீரியன்.

இவன் சந்திர குல வேந்தன். கிருத வீரியன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். அரிய வரபலங்களை யுடையவன்; பெரிய போர்வீரன். நல்ல நீதிமான். போரில் வேண்டியபொழுது ஆயிரம் கைகள் தோன்றும்படி வரம் பெற்றுள்ளவன். இவன் ஆட்சிபுரிந்து வருங்கால் ஒருநாள் நருமதை நதி அருகே உலாவி நின்றான். இலங்கை வென்று உள்ளம் செருக்கிப் படைகளோடு அங்கு இராவணன் வந்தான். இருவருக்கும் போர் மூண்டது. அந்த அமரில் அவன் தோல்வி யடைந்தான். அவனைப் பிடித்துக் கொண்டு போய் மாகிமதி என்னும் நகரில் இம் மன்னன் சிறைப் படுத்தினான். பின்பு புலத்திய முனிவர் வந்து வேண்டினமையால் வெளியே விட்டான். அது முதல் இராவண சித்து என்னும் வெற்றிப் பெயரோடு இவ் வேந்தன் சிறந்து விளங்கி நின்றான்

அந்தச் சரித்திரத்தை இங்கே குறித்துக் காட்டி இராவணனுடைய செருக்கைப் பிராட்டி நன்னினமாக அடக்கியிருக்கிறாள்.

ஆயிரம் தடக்கையான் எனக் கார்த்த வீரியார்ச்சுனனை இங்ஙனம் குறித்தது அவனது அதிசயமான ஆற்றல் நிலை தெரிய.

நின் ஐந்நான்கு கரமும் பற்றி வாய் வழி குருதி சோரக் குத்தி.

அவனிடம் அகப்பட்டு இவன் அடைந்துள்ள சிறுமையை இப்படிக் குத்திக் காட்டியுள்ளாள். பத்து வாய்களிலுமிருந்து

அன்று இவன் இரத்தம் கக்கியிருப்பதை நம் கண்கள் காண இங்ஙனம் காட்டியிருப்பது பரிதாபக் காட்சியாய்ப் பெருகியுள்ளது.

வான் சிறையில் வைத்த தூயவன்

என்றதனால் அந்த மன்னனை இந்த அம்மை மதித்துள்ளமை வெளியாயது. தீயவன் ஆன இவனைச் செருக்கடக்கிச் சிறையில் அடைத்து வைத்தமையால் அவன் தூயவன் என நேர்ந்தான்.

வலிய வந்து சண்டைக்கு இழுத்து இழிவடைந்தமை தெளிய வந்தது. நிகழ்ச்சிக் குறிப்புகள் இகழ்ச்சிச் சிரிப்புகளோடு இசைந்திருக்கின்றன. உரைகள் உணர்ச்சிகளை ஊட்டி வருகின்றன.

*தூயவன் வயிரத்தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம்*
*நீ அறிந்திலையோ? ஏகும் நெறியறிந் திலாத நீசா!*

இந்த வாசகம் எவ்வளவு கொடுமையாய் வந்துள்ளது! உள்ளக் கொதிப்புகள் உரைகளில் துள்ளி எழுகின்றன.

ஈசனோடு வாதி பேச நின்றவன் இங்கே நீசன் என நேர்ந்தான். மன நிலைகுலைந்து பழிவழிகளில் இழிந்தால் எவரும் இழிவடைந்து தாழ்வர் என்பதை இம்மொழி விழிதெரிய விளக்கியது.

*தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்*
*நிலையின் இழிந்தக் கடை.* (குறள், 964)

உயிரை உயர் நிலையில் பேணி வரும்படி மயிரை உவமை காட்டி உணர்த்தியிருக்கும் இதன் அழகை ஊன்றி நோக்குக. தரும நீர்மை தழுவியுள்ள வரையும் மனிதன் உயர்வாய்ப் பெருமை பெறுகிறான்; நழுவின் இழிவாய்ச் சிறுமையுறுகிறான்.

ஏகும்நெறி என்றது மேலோர்கள் நடந்து சென்றுள்ள நல்வழியை. தரும நீதி தழுவி ஒழுகுபவர் சன்மார்க்கர் என உயர்ந்தார்; அங்ஙனம் ஒழுகாதவர் துன்மார்க்கர் என இழிந்தார். "முத்தி நெறி அறியாத மூடர்" என்றார் மாணிக்கவாசகர்,

ஏகும் நெறியறிந்து நடப்பவர் ஈசன் அருளை எய்தி இன்பநிலையை அடைகின்றார்; அங்ஙனம் நடவாதவர் நீசராய் இழிந்து நாசமான நரக துன்பங்களில் உழல்கின்றார்.

தனக்கு உரிய மனைவியிருப்ப அயலான் மனைவியை நச்சி அல் வழியில் இழிந்து அவகேடுறாய் அவன் அழிந்துபட நேர்ந்

துள்ளமையைக் குறிப்பாக இங்ஙனம் இகழ்ந்து கூறினாள்.

உன்னைப் பற்றிப் பிடித்துக் குத்திச் சிறையில் வைத்தான் கார்த்த வீரியன். அந்தப் பெரிய போர் வீரனைப் பரசுராமன் பொருது அழித்தான்; அரிய திறலுடைய அவன் என் நாயகன் எதிரே எளியனாய் இழிந்து தொலைந்தான். இதனைத் தெளிந்து கொள்.

கோதண்ட வீரனுடைய அருந்திறலாண்மையை வானும் வையமும் அறிந்து வியந்து உவந்து புகழ்ந்து வருகின்றன.

நீ அறிந்திலையோ? என்னும் இவ்வினா அவனது அறியாமைக்கு இரங்கிப் பரிந்து வந்தது. இங்ஙனம் பரிவோடு இகழ்ந்து பேசி வந்தவள் இறுதியில் விளித்தது எரி வீசி எழுந்தது.

நெறி அறிந்திலாத நீசா! என இங்ஙனம் துணிந்து கூறியது அவனது நீச நிலைகளை நன்கு தெரிந்து வருதலால் நேர்ந்தது. கள்ளம் புரிந்து தன்னைக் கவர்ந்து கொண்டு வந்து நாளும் உள்ளம் கொதிக்கச் செய்து வருதலால் இக்குலமகளது உரையும் கொதித்து வந்தது. உள்ளச்சூடு உரைகள் தோறும் ஊடுருவி வருகிறது.

இராவணனை வென்றவனைக் கொன்றவனை வென்றவன் என இராமனை இங்கே எடுத்துக் காட்டியது "அந்தக் குலவீரனுடைய குலபத்தினியைக் குலை துடிக்கச் செய்யாதே புலைமகனே! நிலைமையை உணர்ந்து பிழைத்துக் கொள்" எனத் தலைமை தோன்ற உணர்த்திய படியாம்.

கடிக்கும் வல் அரவும் கேட்கும் மந்திரம்.

தன் பேச்சை முடிக்கும் பொழுது முடிவில் இதை உரைத்தருளினாள். கொடிய நச்சுப் பாம்பினும் கொடியவன் என இராவணனை இடித்துக் கூற இதனை எடுத்துக் காட்டினாள்.

பாம்பும் மந்திரத்திற்குக் கட்டுப்படுமே; நீ ஒன்றுக்கும் கட்டுப்படாமல் உள்ளம் செருக்கி நிற்கின்றாயே! இது எவ்வளவு கொடுமை! உலகிற்கு எவ்வளவு துயரம்! உலகை ஆளுகிற அரசன் நெறியுடையனாய் உயிர்களை இனிது பேணி வர உரியவன்; அவன் தீயவன் ஆனால் பாம்பின் வாய்த் தீமை போல் வையமெல்லாம் வெய்ய துயரால் நொந்து தவிக்கும்; பாம்பின் கடியும் ஒருவாறு நீங்கும்; கொடிய அரசன் தீம்பு அதனினும் தீயது.

பாம்புக்கு மந்திரவாதிகள் போல் அரசனுக்கு மந்திரம் கூறும் மந்திரிகள் உள்ளனர். மந்திரம் = ஆலோசனை.

நல்ல நீதி முறைகளை எடுத்துச் சொல்லிப் புத்திமதிகள் கூறும் அமைச்சர்கள் அரசனுக்கு உயிர்த்துணைகளாய் உதவி புரிந்து வருகின்றனர். அத்தகைய மந்திரிகள் ஒருவரும் உனக்குத் துணையில்லையே என்று அவனுடைய ஆட்சியின் அவல நிலைகளைக் காட்சிப் படுத்தினுள்.

அறிவு காட்டி இடிக்குநர் இல்லை.

இது செய்யலாம்; இது செய்யலாகாது என நன்மை தீமைகளை எடுத்துக் காட்டி உறுதி நலங்களை உணர்த்தத்தக்க உண்மையான மந்திரிகள் உன்னிடம் இலர்; இருப்பவரோ உன் விருப்பின் படியே தீமைகளுக்கே உதவி புரிந்து வருகின்றனர்; ஆகவே நீ எவ்வாறு நன்மை அடையப் போகிறாய்! எவ்வழியும் உனக்கு அழிவுதான்! என இவ்வாறு இரங்கியிருக்கிறான்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும். (குறள் 448)

இடித்து அறிவு கூறும் நல்ல அமைச்சர்கள் இல்லாத அரசன் கெடுப்பார் இல்லாமலே கெட்டு அழிவான் என்னும் இந்தப் பொய்யா மொழியைப் பொதிந்து இது இங்கே வந்துள்ளது. நாயனார் வாரி வழங்கியுள்ள அரச நீதிகள் உரிய இடங்களில் புதிய உருவங்களோடு பொலிந்து விளங்குகின்றன.

பொல்லாதவர்களே புடை சூழ்ந்துள்ளனர் என்றது மகோதரன் முதலிய மந்திரிகளைச் சுட்டி எழுந்தது. யாதும் நீதி கூறாமல் இராவணன் எண்ணியபடியெல்லாம் அவர் தீது புரிந்து வருதலால் நன்மை இடையாதென்றான்.

உள்ளார் உன்னை முடிக்குநர்; முடிவு அன்றி முடிவது உண்டோ?

முடிவில் இப்படிச்சொல்லித் தன்பேச்சைமுடித்திருக்கிறான்.

உன்னிடம் நீசங்கள் வளர்ந்திருக்கின்றன; ஆதலால் நீ நாசமாய்ப் போவதைத் தவிர யாதும் நன்மை அடையமாட்டாய் எனப் பிராட்டி இங்ஙனம் சொல்லி முடிக்கவே அவன் உள்ளம் கொதித்துத் துள்ளி எழுந்து உருத்துச் சீறினன்.

## இராவணன் சினந்து சீறியது.

தன்னை யாதும் மதியாமல் சீதை பேசிய வார்த்தைகள் இலங்கை வேந்தனுக்கு வேதனைகளை விளைத்து வந்தன. முடிவில் கூறிய மொழிகள் கூரிய அம்புகள் போல் அவன் உள்ளத்தை ஊடுருவிப் பாய்ந்தன; பாயவே கோபம் மூண்டு கொதித்தெழுந்து அவன் ஆங்காரங்கள் செய்தன அதி பயங்கரங்களாய் நீண்டன.

என்றறத்துறை கேட்டலும் இருபது நயனம்
மின்திறப்பன ஒத்தன வெயில்விடு பகுவாய்
குன்றிறத் தெழித்துரப்பினன் குறிப்பதென் காமன்
தன் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை. (1)

வளர்ந்த நாணினன்; மாதிரம் அனைத்தையும் மறைவித்து
அளந்த தோளினன்; அனல்சொரி கண்ணினன்; இவளைப்
பிளந்து தின்பென் என்று உடன்றனன் பெயர்ந்தனன் பெயரான்
கிளர்ந்த சீற்றமும் காதலும் எதிர்எதிர் கிடைப்ப. (2)

அன்ன காலையின் அனுமனும் அருந்ததிக் கற்பின்
என்னை யாளுடைய நாயகன் தேவியை என்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன் முன்துகைத் துழக்கிப்
பின்னை நின்றது செய்குவேன் என்பது பிடித்தான். (3)

தனியின் நின்றனன் தலைபத்தும் கடிதுகத் தாக்கிப்
பனியின் வேலையில் இலங்கையைக் கீழுறப் பாய்ச்சிப்
புனித மாதவத் தணங்கினைச் சுமந்தனன் போவான்
இனிதின் என்பது நினைந்தனன் கரம்பிசைந் திருந்தான். (4)

ஆண்டவாளரக்கன் கனன்று அண்டத்தை அளப்பான்
மூண்ட காலவெந் தீயென முற்றிய சீற்றம்
நீண்ட காதல்நீர் நீத்தத்தின் வீவுறு நிலையின்
மீண்டு நின்றொரு தன்மையால் இவையிவை விளம்பும். (5)

இராவணனுடைய கோப தாபங்களையும், மாருதியின் வீரத் துடிப்புகளையும் ஈண்டு நேரே கண்டு நெடிது திகைத்து முடிவை நோக்குகிறோம். நிகழ்ச்சிகள் நெடுந்திகில்களாய் நீண்டுநிற்கின்றன.

காம நசையால் கருத்தழிந்து முதலில் காலில் விழுந்து தொழுதவன் பின்பு பிராட்டியைக் கொன்று தின்று விடுவதாகக் கன்றிக் கடுத்தெழுந்து குதித்துக் கொதித்துக் கூத்தாடி நிற்கிறான். அந்தக் கொடியவனுடைய மன நிலைகளையும் கோபக் கொதிப்புகளையும் தாபத் துடிப்புகளையும் கவி வரைந்து காட்டியிருக்கும் காட்சி வியப்பையும் வியனுன அச்சத்தையும் விளைத்து நிற்கிறது.

காமன் தன் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை. இந்த விளக்கம் வியப்பு மிக வுடையது.

தன்னுடைய அரச செல்வங்கள் யாவும் செலுத்தித் தானும் அடிமை என இராவணனை அடி தொழுது கிடக்கச் செய்த காம இச்சை இதுபொழுது மறைந்து போக அவன் உள்ளத்தில் சீற்றம் பொங்கி நிற்கும் ஏற்றத்தைக் கவி நீட்டிக் காட்டியிருக்கும் காட்சி மானச நோக்குகளுக்கு அதிசயமான மகிழ்ச்சியை யூட்டி யுளது. அரிய அந்தக் கரண நிகழ்ச்சிகளை உலகம் தெரியத் தெளிவாக விளக்குவது மிகவும் அரிய செயலாம். உயிருணர்ச்சிகளை மொழிகளில் பொதிந்து எளிதாக வெளிவீசி வருவது நம் கவிக்கு வித்தக விநோதமாய் விளைந்து வருகிறது.

சீதையின் உள்ளம் யாதும் நோகாதபடி எவ்வழியும் செவ்வி நோக்கி இதமாய் நடந்து வந்தவன் இங்கே அவளைக் கொல்வதாகக் கொதித்து மூண்டுள்ளான். முன்னைய நிலை காமத்தால் அமைந்தது; பின்னையது கோபத்தால் விளைந்தது.

சானகியைத் தலையில் சுமந்து திரியப் பெருகியிருந்த பிரியம் பிரிந்து நிற்கக் கொலை புரிய மூண்டு நின்ற அந் நிலையினைக் கலையின் சுவை கனிய விளக்கியருளினர். என்ன சொன்னாலும் எது செய்தாலும் பொறுத்துப் பொறுத்து ஆசை வயத்தனாய் அலைந்து திரிந்தவன் அந் நிலை திரிந்து கோபம் மீதூர்ந்து நின்றமையால் காமன் திறத்தையும் சீற்றம் கடந்தது என்றார். அதனை யாரும் எளிதில் கடந்து போக முடியாது என்பதை உம்மை உணர்த்தி நின்றது. காமக்கடல் கோபத் தீயால் வற்றியது என்றார்.

இச்சையும் சீற்றமும் நெடுநாளாகப் போராடி வந்துள்ளன; இன்று சீற்றம் மீறி யுள்ளது; ஆயினும் விரைவில் மாறி விடும் என்பது கூறிய குறிப்பில் தெரிய வந்தது.

கொன்று தின்று விடுவதாகக் கோபம் மூண்டு கொதித்து எழுந்த அவன் ஆசை மோகத்தால் அடங்கி வந்து மீண்டும் அலமந்து பிதற்றுவதைப் பின்னே அறியலாகும்.

மாருதி கருதியது.

இராவணன் சீறி எழுந்த பொழுது அயலே மறைவாய் ஒளித்திருந்த அனுமான் உருத்து நின்றான். பிராட்டியை எதேனு

அத் தீயவன் செய்து விடுவானோ என்று துடித்து மூண்டு கடுத்தான். தன் ஆண்டவனுடைய தேவிபால் அப் பாவி நெருங்கு முன் பாய்ந்து கொன்று அவனுடைய தலைகளைத் திருகி எறிந்து உடலைச் சிதைத்து ஒழித்து விட வேண்டும் என்று ஊக்கி மூண்டான். வீரத் துடிப்பு வீறு கொண்டு நின்றது.

என்னை ஆளுடை நாயகன் தேவியை என்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன்முன் துகைத்து உழக்கி.

என்றதனால் அனுமான் எண்ணி நின்ற நிலைமையை நாம் கண் எதிரே கண்டு நிற்கிறோம். காட்சிகள் வீரத் துடிப்புகளை விளக்கி நிற்கின்றன. மறைந்து நின்ற அவனை இடையே நாம் மறந்திருந்தோம்; அந்த அருந்திறலாளனைத் திறந்து காட்டி கவி இங்கே வீரச் சுவைகளை யூட்டி யிருக்கிறார். சரித நிகழ்ச்சி இனிய சுவைகளை விளைத்து அரிய உணர்ச்சிகளை வளர்த்து இன்பம் புரிந்து வருதலை இடங்கள் தோறும் அறிந்து வருகிறோம்.

அசோக வனத்தில் வைத்தே இலங்கை வேந்தனைக்கொன்று தொலைத்து இராம பத்தினியை எடுத்துக் கொண்டு போய் விட வேண்டும் என்று துடித்திருத்தலால் அவ் வீரனுடைய உள்ளத் துணிவும் ஊக்கப் பாடும் உரிமை அன்பும் உலகம் அறிய நிலவி நின்றன. காரிய வேகம் வீரிய விவேகமாய் வீறிட்டு நின்றது.

நினைந்தனன் கரம் பிசைந்திருந்தான் என அவனது நிலைமையை இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார்.

இராவணனது நிலைமை எதிர் நோக்கிக் கொலைக் குறிப்போடு அனுமான் அவ்வாறு மூண்டு நிற்க ஏறிய கோபம் இறங்கினவனாய் மீண்டும் நகையால் தாழ்ந்தான்; ஆசையால் அடங்கி வந்து பிராட்டி எதிரே அவ் வேந்தன் சாந்தமாய்ப் பேச நேர்ந்தான்.

ஊழித் தீபோல் பொங்கி எழுந்த கோபத்தை ஆசைக்கடல் அவித்து நின்றது என்றதனால் அவனது நிலைகளை நன்கு தெரிந்து நீர்மைகளைக் கூர்மையாய் ஓர்ந்து கொள்கிறோம்.

சீதை இகழ்ந்து பேசிய பேச்சுகள் எல்லாம் அவனுடைய நெஞ்சத்தை எரித்து நிலை குலைத்து நின்றன. கூறிய மொழிகளை நினைந்து நினைந்து மானமும் நாணமும் மிகுந்து மறுகி யுளைந்தாலும் அருகு நெருங்கித் தேறுதலாக வேறே மாறு கூற நேர்ந்தான்.

## இராவணனது போலி மறுப்பு.

என் நாயகன் எதிரே வர நீ அஞ்சினதினலேதான் ஒரு மாய மானை ஏவி அன்று வஞ்சம் புரிந்து தீயது செய்து வந்தாய். என்னைக் காத்துப் பன்னசாலை முன்னே இளையவன் நிற்கும் போது வந்திருந்தால் அன்றே உன்னைக் கொன்று தொலைத்திருப்பான். அந்தக் கொலைக்குத் தப்பித் தந்திரமாய்ப் புலைத்தொழில் புரிந்து விட்டு நிலைத்த போர்வீரன்போல் இன்று என் எதிரே வந்து புலையாடுகின்றாய்; கார்த்த வீரியன் கையால்அடிபட்டுச் சிறையுற்றாய்; என இன்னவாறு இகழ்ந்து இடித்துக் கூறிய உரைகள் அவன் உள்ளத்தை நாணச் செய்தன ஆதலால் அவற்றிற்கு மறுப்பாகப் போலி நியாயங்களைக் கூற நேர்ந்தான்:

"சானகி! என் பெருமையையும் வினைத் திறத்தையும் நீ சரியாகத் தெரிந்து கொள்ளாமையால் பிழைபடப் பேசினாய். நான் யாருக்கும் யாண்டும் அஞ்சுகின்றவனல்லன்; அன்று வஞ்சனை செய்தது உன்பால் வைத்த அன்பாலேயாம்; நான் நேரே வந்திருந்தால் இராமனும் தம்பியும் போருக்கு நேர்ந்து என் கைவாளால் மாண்டு போயிருப்பர். அவர் செத்துத் தொலையாதபடி தந்திரமாக விலக்கி உன்னை எடுத்து வந்தேன்; ஈக்களை ஓதுக்கி இனிய தேனை எடுப்பது போல் அம் மாக்களை அயலே போக்கி உன்மேல் மயலாய் அது செய்தேன். உன்னை உதவியுள்ள நன்றிக்காக அவரை உயிரோடு விட்டிருக்கிறேன்; கார்த்த வீரியனோடு நான் போராடியது முதலியன எல்லாம் உல்லாசமான விளையாடல்களேயாம்; தேவதேவர்களும் என்னோடு எதிர் பேச மாட்டார்களே! மானிடப் பதர்களா இலங்கை வேந்தனோடு மாறு கொள்ள வல்லார்? கைலாச வாசனான ஈசானும் இலங்கை வாசனான இராவணேசுவரனை வியந்து மகிழ்ந்துள்ளான்; நீ பேதைப் பெண் ஆதலால் ஏதமாய் இகழ்ந்து பேச நேர்ந்தாய். உள்ளக் காதலால் அவ்வுரைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டேன். என் உரிமையை உணர்ந்து பெருமையை நினைந்து அருமையை அறிந்து பொறுமையை வியந்து என்பால் அன்பாய் நீ இரங்கியருளுவாய் என்று நம்பியிருக்கிறேன்; துன்பங்களைப் பேசித் துயரங்களை மூட்டாதே; மூட்டினால் இனி உன் உயிருக்கு ஆபத்தேயாம்; என் தாபத்தைத் தீர்த்தருள்; தனியே யோசனை செய்து பார்; போய் வருகிறேன்"

என்று அப் பேயன் பயபயங்களைக் காட்டி விட்டு அரண்மனைக்கு மீண்டு போயினான். போகும் பொழுது நல்ல சமர்த்திகளான சில அரக்கிகளைத் தனியே அழைத்து நிறுத்தி, "இவளை எப்படியாவது வசப்படுத்தி இன்னும் ஒரு வாரத்துள் என்னிடம் கொண்டுவந்து சேர்த்து விட வேண்டும்; இல்லையானால் உங்கள் உயிர்கள் உங்களுக்கு இல்லையாம்" எனச் சொல்லி அச்சுறுத்தி அவன் அகன்று போனான். காம வெறியன் போனபின் கடு வெறிகள் கிளர்ந்தன.

## அரக்கிகள் அரற்றியது.

எல்லா அரக்கிகளும் உள்ளம் நடுங்கி உயிர் பதறினர். தங்கள் சக்கரவர்த்தி இட்ட கட்டளையை நிறைவேற்ற வேண்டுமே என்று நெஞ்சம் கலங்கிப் பலவகையான சூழ்ச்சிகளைச் செய்ய நேர்ந்தனர். "குலத்திலும் நலத்திலும் பலத்திலும் தலை சிறந்துள்ள எங்கள் அரசர் பெருமானுக்குத் தேவ மங்கையர் யாவரும் ஏவல் செய்ய ஆவலோடு காத்து நிற்கின்றனர்; நீ ஒன்றும் தெரியாத முழு மூடமாய் மடமை மண்டி மதி கெட்டிருக்கிறாய்; உன்பால் அவர் அன்பு கொள்ள நீ முன்பு எவ்வளவு தவம் செய்துள்ளாயோ! உனக்குக் கிடைத்துள்ள அரிய பாக்கியத்தை எண்ணி இந்திராணியும் ஏங்கி நிற்கிறாள்.

"வையம்தந்த நான்முகன் மைந்தன் மகன்மைந்தன்;
ஐயன்; வேதம் ஆயிரம் வல்லான்; அறிவாளன்;
மெய்யன்பு உன்பால் வைத்துளன் அல்லால் வினைவென்றோன்
செய்யும் புன்மை யாதுகொல் என்றார் சிலர் எல்லாம்."

"உலகங்களைப் படைத்தருளுகின்ற பிரமதேவனுடைய பேரன்; ஆயிரம் வேதங்களையும் கற்றவன்; பெரிய அறிவாளி; அரிய போர் வீரன்; அகிலமும் ஆளுகின்றான்; தேவர் முதல் யாவரும் தொழுது துதிக்கும் திவ்விய மகிமையாளன்; இந்தப் பேரரசனுக்கு கோராசியாய் நீ வாழ நேர்ந்தால் உனது மகிமை எவ்வளவு மேலானதாம்; எங்கள் போன்ற பெண்பால் ஆதலால் உன்பால் உரிமையன்போடு இதனை உரை செய்கின்றோம்" என இன்னவாறு பலபல பிதற்றி அரக்கிகள் பேசித்தனர். அவர்களுடைய பேதைமைக்கு இரங்கி பிராட்டி யாதும் பேசாதிருந்தாள். தாங்கள் செய்து பார்த்த சாகசங்கள் ஒன்றும் பலியாமல் போகவே தங்கள் உயிர் போய் விடும் என்று அஞ்சி முடிவில் கொடுமையாக

வைய மூண்டனர்: "உள்ளம் இரங்காத பொல்லாத மாயக் கள்ளி இவள்; இவளைக் கொல்லுங்கள்; மெல்லுங்கள்; அடியுங்கள்; பிடியுங்கள்; தலையைத் திருகுங்கள்; குலையைப் பிடுங்குங்கள்; நமக்குக் கொலையை விளைக்க வந்த பழிகாரி" என இவ்வாறு வெவ்வுரைகளாடி வெகுண்டு சூழ்ந்தனர்; சூழவே திரிசடை அனைவரையும் அதட்டி விலக்கினாள். எல்லாரும் ஒதுங்கிப் போயினர். அதன் பின் அக் குலமகள் இத் தலைமகளுக்கு ஆறுதல் பல கூறி ஆற்றியருளினாள். அன்பு மொழிகள் ஆதரவு புரிந்தன.

## பின்பு நிகழ்ந்தது.

இராவணன் வந்து வாதாடிப் போனபின்பு அரக்கிகள் எல்லாரும் அயர்ந்து உறங்கினர். திரிசடையும் கண் அயர்ந்தாள். அனைவரும் அங்ஙனம் மயங்கி உறங்கும்படி அனுமான் ஓர் மந்திரம் புரிந்தான். அவனது விஞ்சை வினையால் யாவரும் துஞ்சினர் போலத் துயில நேர்ந்தனர். சீதை தனியே துனியாய் இருந்தாள். மன வேதனை மிகுந்தது. என்ன பிழைப்பு! என்ன இருப்பு! என எண்ணி எண்ணி நொந்தாள். கண்ணீர் வார்ந்தது; தனது அருமை நாயகனைக் கருதிக் கருதி உள்ளம் உருகி மறுகினாள். அன்று இக் குலமகள் உருகி மறுகிய நிலைகளுள் சில அயலே வருகின்றன.

கருமேகம் நெடுங்கடல் கார் அனையான்
தருமே தனியேன் எனது ஆருயிர்தான்?
உருமேறுறழ் வெஞ்சிலை நாண் ஒலி தான்
வருமே உரையாய் வலியார் வலியே! (1)

கல்லா மதியே! கதிர் வாள் நிலவே!
செல்லா இரவே! சிறுகா இருளே!
எல்லாம் எனையே முனிவீர் நினையா
வில்லாளனை யாதும் விளித்திலிரோ? (2)

தழல்வீச உலாய்வரு வாடை தழீஇ
அழல்வீர் எனது ஆவி அறிந்திலிரோ?
நிழல்வீரை யனாருடன் நீர் நெடுநாள்
உழல்வீர் கொடியீர் உரையாடிலிரோ? (3)

வாரா தொழியான் எனும் வண்மையினால்
ஓராயிர கோடி இடர்க்கு உடையேன்
தீரா ஒருநாள் வலி சேவகனே
நாராயணனே தனிநாயகனே! (4)

தருவொன்றிய கானடைவாய் தவிர் நீ
வருவென் சிலநாளினில் மாநகர் வாய்
இரு என்றனை இன்னருள் தானிது வேல
ஒருவென் தனிஆவியை உண்ணுதியோ? (5)

பேணும் உணர்வே உயிரே பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநாயகனைக்
காணும் துணையும் கழிவீரலிர் நான்
பூணும் பழியோடு பொருந்துவதோ? (6)

முடியா முடி மன்னன் முடிந்திடவும்
படிஏழும் நெடுந்துயர் பாவிடவும்
மடியா நெறி வந்து வனம் புகுதும்
கொடியார் வரும்என்று குலாவுவதோ? (7)

என்றென் றுயிர் விம்மி இருந்தழிவாள்
மின்றுன்னு மருங்குல் விளங்கிழையாள்
ஒன்றென் னுயிர் உண்டெனின் உண்டிடர் யான்
பொன்றும் பொழுதே புகழ்பூணும் என. (8)

(உருக்காட்டு படலம், 3-10)

சீதை அடைந்துள்ள துயர நிலைகளை இவ் வுரைகளில் கண்டு உள்ளம் வருந்துகிறோம். இராமனை நினைந்து உருகி மறுகியிருப்பன பரிதாபங்களாய்ப் பெருகி நிற்கின்றன. பிரிவுத் துயரம் உரைகள் தோறும் உருவிப் பாய்ந்துள்ளது.

நாயகன் உடனிருந்த காலத்தில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் எண்ணி எண்ணிக் கண்ணீர் சொரிந்திருக்கிறாள். உள்ளப் பண்புகளும் செயல்களும் உயிரை உருக்கித் துயரைப் பெருக்கியிருக்கின்றன. பசுமை ஒளி தவழ்ந்து எழில் கனிந்துள்ள அந்த உருவத் தோற்றம் மனக் கண் முன் இரவும் பகலும் தோன்றி இன்பத்துன்பங்களை இழைத்து வருகின்றது. உழுவலன்பு எவ்வழியும் பொங்கி விழி நீராய் வெளியே பாய்கின்றது. எப்படியும் தன்னை வந்து மீட்டியருளுவார் என்று தனது ஆருயிர் நாதனை நம்பி ஆறுதலடைந்து தேறுதல் கொண்டாலும் மாறி மாறி மனம் கரைந்து இக் குலமகள் குலை துடித்துள்ளது பெரிய பரிதாபமாய்ப் பெருகி யிருக்கிறது.

கருமேகம் அனையான் எனது ஆருயிர் தருமே

இராமபிரானை எண்ணி இளைந்து சீதாதேவி கண்ணீர் சொரிந்துள்ளமையை இது காட்டியுள்ளது. தன்னுடைய உயிர் இன்னார் கையில் இன்னவகையில் நிலைத்திருக்கிறது என்பதை இப் பெண்ணரசி அதி வியமாக விளக்கியிருக்கிருள். அஞ்சன வண்ணன் வந்து என் ஆருயிரைத் தந்தருளுமா? என்றது அவன் விரைவில் வராவழி இப் பதிவிரதையின் உயிர் இராது என்பதை வெளியாக்கி நின்றது. தனது நாயகன் வரவை எதிர் நோக்கி இத் தேவி உயிர் பதைத்துள்ளமையை உரைகள் உணர்த்துகின்றன.

சிலை நாண் ஒலிதான் வருமே?

எதிர் கால விளைவுகளை எவ்வாறு கருதி யுருகியுள்ளாள் என்பதை இம்மொழிகள் விழிகாணச் செய்கின்றன. வீர கோதண்டத்தின் ஒலியை விரைந்து கேட்கலாம்; இராவணனோடு நேரே போராடி வென்று அரக்கர் குலத்தை முழுதும் அழித்து ஒழித்த பின்பே தன்னைச் சிறை மீட்டியருளுவார் என்று தனது மீட்சி நிலையைக் கருதியுள்ள காட்சி இங்கே காண வந்துள்ளது.

வலியார் வலியே!

விதியை நோக்கி இவ்வாறு விளித்துப் பேசியிருக்கிருள். தன் மதியை முதலில் கெடுத்து, அதி மேதையாகிய தனது நாயகன் மதியையும் மயக்கி மான் பின் போகச் செய்து தனக்குக் கொடிய துயரங்களை விளைத்திருத்தலால் விதியின் வலியை வியந்து உள்ளம் நொந்து இங்ஙனம் பேச நேர்ந்தாள்.

மதி வலியால் விதியை வெல்ல முடியாது; எல்லா வலிகளையும் தன்னுள் அடக்கி யாண்டும் அது முன்னேறி மூண்டு நிற்கும் என அதன் நிலைமையை ஈண்டுச் சொல்லால் துலக்கினுள்.

தன்னை இந்த இன்னல் நிலையில் அழுத்தி வைத்துள்ளமையால் ஊழ்வினையை முன்னிலைப் படுத்திப் புண்பாட்டோடு கண்பாடு கொள்ளாமல் பெண்பால் இயல்பால் பேசியுள்ளாள்.

கார் அனையான் எனது உயிர் தருமா? சிலைநாண் ஒலி வருமா? என ஏங்கிப் புலம்பி யிருப்பது உள்ளத்தின் ஏக்கத்தைப் புலப்படுத்தி யுளது. கணவன்பாலுள்ள காதலும் உழுவலன்பும் பிரிவுத் துயரங்களாய்ப் பெருகி வருத்துகின்றன. தனக்கு நேர்ந்துள்ள

பழி அவமானங்கள் என்று ஒழியும்? எப்படி உய்தி கிடைக்கும்! என இப்படி வெப்போடு வெய்துயிர்த்து வருகிறாள்.

வாராது ஒழியான் எனும் வண்மையினால்
ஓராயிர கோடி இடர்க்கு உடையேன்.

சீராமனைத் தேவி நம்பியிருக்கும் நிலையை இதனால் தெரிந்து கொள்கிறோம். வீர ராகவன் ஈர நெஞ்சுடையவன்; கருணை வள்ளல்; அடைந்தார் எவரையும் ஆதரித்தருளும் அருந்திறலாளன்; பேதைப் பெண் ஆன தன்னை எவ்வகையிலாவது சிறை மீட்டியருளுவார் என்று பிராட்டி பொறை நீட்டியுள்ளமையை உரைகள் உலகறியக் காட்டியுள்ளன.

ஓர் ஆயிர கோடி இடர் என்றது தான் அனுபவித்து வருகின்ற துயரங்களின் எல்லைகளை ஓரளவு வரைந்து சொல்லியபடியாம். மன வேதனைகள் அளவிடலரியன. எல்லையில்லாத துன்பங்களை எல்லாம் பொறுத்துக் கொண்டு தான் உயிர் வாழ்ந்திருத்தற்குக் காரணம் தனது ஆவி நாயகன் கைவிடார்; கருணை புரிந்து மீட்டுவார்; மீண்டும் ஆண்டவனோடு வாழலாம் என்னும் உறுதியேயாம்; ஆகவே தேவியின் உயிர் நிலை தெரிய வந்தது

பேணும் உணர்வே! உயிரே பெருநாள்
நாண் இன்று உழல்வீர்!

தன்னுடைய உணர்வையும் உயிரையும் எதிர்நோக்கி இன்னவாறு இணைந்து பேசியிருக்கிறாள். நீங்கள் இரண்டு பேரும் இந்த உடம்பை விட்டு ஒழிந்து போகாமல் உறைந்திருக்கிறீர்களே! பழி அவமானங்களைச் சுமந்து நான் வருந்துகின்றேனே! நீங்கள் ஒழிந்து போனால் என் துயரம் மறைந்து போமே! ஒழியாமல் நின்று அழி துயரங்களை ஆற்றி வருகின்றீர்களே! எவ்வளவு நாள் இந்த வெவ்விய இழி பழியில் அழுந்தி யுழல்வேன்? அந்தோ! உணர்வே! ஐயோ உயிரே! என்று அலமந்திருக்கிறாள்.

தனி நாயகனைக் காணும் துணையும் கழிவீரலிர்!

எவரும் தனக்கு நிகரில்லாத அந்த உத்தம நாயகனைக் காணக் கருதி வேணவாவோடு இருந்து வருகிற இருப்பை இதில் துனித்து உணர்ந்து கொள்கிறோம். சீதையின் உணர்வும் உயிரும் இராமனையே கருதியுருகியுள்ளன. அவ்வுண்மையின் நுண்மையை வாய்மொழிகள் எண்மையாக ஈண்டு வெளிப்படுத்தியிருக்கின்றன

பிரிவில் மறுகி இவ்வாறு உருகிவரும்பொழுது இடையே வேறு ஒரு சிந்தனையும் வந்தது. தனது அருமைத் தந்தையாகிய சக்கரவர்த்தி மாண்டு முடியவும், உலகம் முழுவதும் கொடிய துயரங்களை அடைந்து வருந்தவும், தான் யாதும் இரங்காமல் மனம் துணிந்து நெடிய கானகம் போன அந்தக் கொடிய வன் கண்மையுடையவர் அநாதையான எனக்கு இரங்கி இங்கே வருவார் என்று எண்ணி எண்ணி ஏங்கி நின்று எதிர்நோக்கி மகிழ்வது இழி மடமையாம் எனக் கண்ணீர் சொரிந்தாள்.

இன்னவாறு பலவும் பன்னி யுளைந்து உன்னி யுருகி யுணர்வு சோர்ந்தாள்; பின்னும் பலபல எண்ண நேர்ந்தாள்; சிறைவாய்ப் பட்டிருக்கிற தனது நிலைமைகளை நினைந்து இக் குலமகள் அலமந்து நொந்து அயர்ந்து கவன்றுள்ளமை பிரிவின் பரிபவங்களாய்ப் பெருகி உயிரை வாட்டி உலக வுள்ளங்களை உருக்கி நிற்கின்றது.

## இறுதியில் மறுகியது.

புனிதமான ஒரு உத்தம உயிர் இழி பழிகளை அஞ்சி அலமருகிற அவலக் காட்சிகளைக் கவி தெளிவாக வரைந்து காட்டியிருக்கிறார். உணர்ச்சி யுருக்கங்கள் உரைகள் எங்கணும் பொங்கி வழிகின்றன. நிறையும் நீர்மையும் நேரே தெரிகின்றன.

பொறையிருந் தாற்றிஎன் உயிரும் போற்றினேன்
அறையிருங் கழலவற் காணும் ஆசையால்
நிறையிருஞ் பல்பகல் நிருதர் நீணகர்
சிறையிருந் தேனை அப் புனிதன் தீண்டுமோ? (1)

உன்னினர் பிறர்என உணர்ந்தும் உய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்
மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
என்னின்வேறு அரக்கியர் யாண்டை யார்கொலோ? (2)

சொற்பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப் புடைமையும் நாணும் நன்றரோ
கற்புடை மடந்தையர் கதையு ளோர்கள்தாம்
இற்பிரிந் துய்ந்தவர் யாவர் யானலால். (3)

பிறர்மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறனல தென்றுயிர்க் கிறைவன் தீர்ந்தனன்;

புறனலர் அவனுறப் போது போக்கியான்
அறனலது இயற்றிவேறு என்கொண் டாற்றுகேன் (4)

எப்பொழுது இப்பெரும் பழியின் எய்தினேன்
அப்பொழுதே உயிர் துறக்கும் ஆணையேன்
ஒப்பரும் பெருமறு உலகம் ஓத யான்
துப்பழிந் துய்வது துறக்கம் துன்னவோ? (5)

அன்பழி சிந்தைய ராய ஆடவர்
வன்பழி சுமக்கினும் சுமக்க வானுயர்
துன்பழி பெரும்புகழ்க் குலத்துள் தோன்றினேன்
என்பழி துடைப்பவர் என்னின் யாவரே? (6)

வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கிஎன்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயென
நஞ்சனை யான் அகம் புகுந்த நங்கையாள்
உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ? (7)

வல்லியல் மறவர்தம் வடுவில் தீர்பவர்
வெல்லினும் வெல்கபோர் விளிந்து வீடுக
இல்லியல் அறத்தையான் இறந்து வாழ்ந்தபின்
சொல்லிய என்பழி அவரைச் சுற்றுமோ? (8)

வருந்தலில் மானமா வனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வனூர்
இருந்தவள் இவளென ஏச நிற்பெனோ. (9)

அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்
இற்புகத் தக்கலை என்னின் யானுடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்? (10)

ஆதலான் இறத்தலே அறத்தின் ஆறெனாச்
சாதல்காப் பவருமென் தவத்தில் சாம்பினார்
ஈதலாது இடும்பைவே றில்லை என்றொரு
போதுலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள். (11)

(உருக்காட்டு படலம், 11-21)

நேர்ந்துள்ள பரிதாப நிலைகளை நேரே கண்டு நெஞ்சம் கவல் கின்றோம். கவிகளைக் கண்ணூன்றி நோக்கின் எண்ணங்களின் துடிப்புகளையும் பதைப்புகளையும் எதிரே காணலாகும்.

உத்தமமான உயர்ந்த குலமகள்; சுத்த வீரன் பத்தினி; பெண்மை உலகம் முழுவதும் பெருமையடையத் தக்க பேரழகுடையவள்; நிறையும் பொறையும் நீர்மையும் நிறைந்தவள்; அத்தகைய அரிய பதிவிரதை நெடிய தொலைவிலுள்ள கொடிய ஒரு சிறையில் அகப்பட்டுத் தனது இனிய கணவனை எண்ணி எண்ணி ஏங்கித் தவித்து யாதொரு ஆறுதலும் காணுமல் முடிவில் உயிரை மாய்த்துக் கொள்ள முடிவு செய்து மூண்டுள்ளாள்; அந்தப் பரிதாப நிலையை இங்கே பார்த்து நடுங்கிப் பரிந்து உருகி இனைந்து மறுகுகின்றோம். புனித உள்ளத்தின் துடிப்புகள் மனித வுள்ளங்களை மறுகச் செய்கின்றன.

## வாழ்வினை வெறுத்தது.

தன்து நிலைமையை நினைந்து ஆவி அலமந்து இத்தேவி உளைந்திருப்பன உள்ளத்தின் பண்பாடுகளை வெளிப் படுத்தி யுள்ளன. "எனது பிராண நாயகனைக் காணலாம் என்னும் ஆசையினுல் இந்த இழி சிறையில் அழி துயரோடு வாழ்ந்து வருகிறேன். தீயவனுடைய சிறைவாய்ப் பட்டுள்ள என்னை அந்தத் தூயவன் தீண்டுவானு? அயலான் ஒருவன் மயலாய் விரும்பினுன் என்பதை அறிந்த வுடனே நான் இறந்திருக்க வேண்டும்; அங்ஙனம் இறந்து போகாமல் இருந்து வாழுகின்றேன்; என்னைக் காட்டிலும் இழிந்த அரக்கியர் வேறு யார் உளர்? உயர்ந்த குல மகளிர் எவரும் இகழ்ந்து நகைக்கும்படி இழிவான பழிகளைச் சுமந்து நிற்கின்றேன்; பிறர்மனை எய்திய பெண்ணை நல்ல மானிகள் நயந்து கொள்ளார்; சிறந்த குலவீரன் இழிந்த பழிகளை அடைந்து வருந்த அந்தோ! நான் இருந்து வாழ்கின்றேனே! எப்பொழுது இப்பழி நேர்ந்ததோ அப்பொழுதே ஆவியைப் போக்கி விடாமல் பாவி இப்படிப் பழி வாழ்வு கொண்டுள்ளேனே! பெண் குலத்திற்குப் பெரும்பழியாயுள்ள என் பழி இனி எப்படி நீங்கும்? மாயமானைப் பிடித்துத் தரும்படி உரிய கணவனை ஊனமாய்ப் போக்கி, அருகே காத்து நின்ற அருமைக் கொழுந்தனை நிட்டூரமாகத் திட்டி நீக்கிக் கொடிய வஞ்சகனுடைய மனையில் மடமையாய் வந்து புகுந்துள்ள நான் உயிர் வாழ்ந்திருப்பதை உலகம் சகிக்குமா? என் இருப்பு அக் குல வீரர்களுக்கு எவ்வளவு வெறுப்பு! மயிர்நீப்பின் உயிர் வாழாத கவரிமானைப் போல் உயிர் நீத்து மானம் பேணும்

மாட்சிமையுடைய மடந்தையர் எதிரே எவரும் ஏசி இகழ நான் கூசி உயிர் வாழ்வது சீ சீ மிகவும் ஈனம்! அற்புத மூர்த்தியாகிய அந்தக் கோதண்டவீரன் இலங்கை புகுந்து அரக்கர் வருக்கத்தை அடியோடு கருவறுத்துத் தனது வெற்றித் திறத்தைக் காட்ட என்னைச் சிறை மீட்டினாலும் அயோத்தி அரண்மனையுள் இனி நுழைய விட மாட்டார்; "பிறன் வீட்டில் இருந்த நீ என் வீட்டில் புகாதே" என எள்ளி அயலே தள்ளி விடுவார்; ஐயோ! அப்பொழுது எனது கற்பு நிலையை அந்தச் சத்திய சீலனுக்கு நான் எப்படி விளக்கிக் காட்டுவேன்? நான் உயிர்வாழ்வது எதற்கு? பிறந்த குடிக்கும் புகுந்த குலத்திற்கும் பெரும் பழிகளை விளைத்துக் கொண்டு நான் இருந்து வருந்துவதினும் இறந்து தொலைவது சிறந்த நலமாம்" என இங்ஙனம் இறுதியாக உறுதி பூண்டு இக்குலமகள் உயிரை மாய்த்துக் கொள்ள ஊக்கி எழுந்தாள்.

பிராட்டியின் மனவேதனைகள் ஒன்றன்பின் ஒன்றாய் இங்கே அலைமோதி யிருக்கின்றன. பலபல நினைவுகள் பரிதாப நிலைகளில் பெருகி மானச மருமங்களை மருவி வந்துள்ளன.

உன்னினர் பிறர்என உணர்ந்தும்
மன்னுயிர் காத்து வைகினேன்

பிறன் ஒருவன் காம நோக்கோடு விருப்பும்படி நேர்ந்ததே! உண்மையான பதிவிரதையானால் அயலான் இவ்வாறு மயலாய் விழைந்திருக்க முடியாதே; ஏதோ என்னிடம் குறையுள்ளது; இல்லையானால் இத் தூர்த்தன் இப்படி இச்சை மண்டி நச்சி வந்து கொச்சை வார்த்தைகளை அச்சமின்றிப் பேசுவானா? என இக்குலமகள் உளம்உளைந்து தன்னை இகழ்ந்து வருந்தியுள்ளமையை உரைகளில் உணர்ந்து கொள்கிறோம்.

பிறன் விழைந்த பொழுதே உயிர் ஒழிந்திருக்க வேண்டும்; அங்ஙனம் ஒழியாமல் உறைந்திருப்பது பழி பாவங்களைச் சுமந்து கொள்ள வழியாய் நின்றது என விழிநீர் சிந்தி யுள்ளாள்.

## அற்புதக் கற்பு.

உத்தமமான உயர்ந்த கற்பின் தன்மை தன்னிடம் இல்லையே என்று பிராட்டி இங்கே இரங்கியிருக்கிறாள். நிகழ்ந்திருப்பதை நினைந்து தன்னை இகழ்ந்து வெறுத்தாள். இழிந்த காமி ஒருவன்

தன்னை விழைந்து நோக்கும்படி நேர்ந்ததே! என்று உளைந்து தவித்துள்ளாள்.

மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிர் ஆயின் பிறர்நெஞ்சு புகாஅர். (மணிமேகலை, 22)

புனிதமான சிறந்த கற்பிற்கு உயர்ந்த உரைகல்லை இது உணர்த்தியுளது. தன் நாயகனைத் தவிர வேறு எவரையும் காம நோக்கோடு கருதாத நிறையுடையவளைப் பதிவிரதை என்று உலகம் துதிசெய்து வருகிறது. தெய்வமும் தொழாமல் தன் கொழுநனையே உழுவலன்போடு தொழுது வருபவள் பெய் என்றால் மழை பெய்யும் எனப் பொய்யாமொழியும் புகன்றுள்ளது.

மழைதரும் பெண்டிர் என்று பதிவிரதைகளுக்கு இப்படி ஒரு விழுமிய பெயர் கலையுலகில் நிலவி நிற்கிறது.

கற்பில் நின்றன கால மாரியே.

என நம் காவியமும் நாட்டுப் படலத்தில் காட்டியுளது.

தன் கணவனை அன்றிப் பிறரைக் காதலியாதவளே கற்பினள் ஆயினும் வேறு ஆடவர் எவரும் தன்னை இச்சியாதபடி உள்ளம் தூய்மையாய் உச்ச நிலையில் உயர்ந்திருப்பவளே உத்தம பத்தினியாம் என்க. உன்னதமான புனிதம் உன்னியுணர வந்தது.

தன் நெஞ்சுள் பிறர் புகாமையோடு தானும் பிறர் நெஞ்சு புகாதபடி அவ்வளவு திவ்விய நிலையில் சிறந்திருப்பதே செவ்விய கற்பாம். அரிய நிறைக்கு உரிய நிறைகோல் அறிய நின்றது.

காமியும் சாமி எனக் கைதொழும்படி நேமம் நிறைந்து நிலையுயர்ந்திருப்பதே தலைமையான புனிதக்கற்பாம் என்பது குறிப்பு.

இலட்சுமி, சரசுவதி, பார்வதி தேவிகளுடைய எழிலுருவங்களைப் படங்களில் காணும்பொழுது மானிடர் உள்ளங்கள் எவ்வாறு திவ்விய நோக்கோடு பத்தி புரிகின்றனவோ அவ்வாறே உத்தம பத்தினிகளைக் காணுங்கால் ஆடவருடைய சித்தங்கள் பேதியாமல் அச்சமோடு அன்பு தோய்ந்து நிற்கும் என்க.

"தீது இலா வட மீன்" (சிலப்பதிகாரம், 1)

என அருந்ததியை இளங்கோவடிகள் இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார். தீது இன்மையாவது பிறர் நெஞ்சு புகாமை என அடியார்க்கு நல்லார் இவ்வாறு அதற்கு உரை கூறியுள்ளார்.

இத்தகைய உயர்ந்த உத்தமமான பரிசுத்த நிலை தன்பால் இல்லாமல் போயதே; தன்னை ஒரு காமப்பித்தன் இச்சிக்க நேர்ந்தானே! என்று சானகி நெஞ்சம் துடித்து நிலைகுலைந்துள்ளமையை வாய்ச் சொல் ஈண்டு வெளிப்படுத்தியுள்ளது. நஞ்சு அனையான் எனத் தன்னை நச்சிய நெஞ்சனை அஞ்சி அலமந்திருக்கிருள்.

உண்மையான உத்தம பத்தினிகள் பிறர் நெஞ்சு புகார் என்னும் இந்தக் கட்டளைக் கல்லில் சீதையின் கற்பை உரைத்து நோக்கினால் இங்கே மாற்றுக் குறைந்து படுகிறது; இங்ஙனம் குறைபாடு உள்ளவளை உயர்ந்த நிறையுடையாள் என்று உலகம் புகழ்ந்து போற்றி வருவது பிழை அல்லவா? என்னும் கேள்வி ஈண்டு எதிர்ந்து வருகிறது

நெருப்பைத் தொட்டவுடனே அது சுட்டு விடுகிறது; அது போல் சீதையை எடுத்த பொழுது இராவணன் ஏன் எரிந்து போகவில்லை? இப்படிப் பல வாதங்கள் வளர்ந்து வருகின்றன.

அவதாரங்களின் மருமங்களையும், வந்துள்ள பாத்திரங்களுடைய சூத்திரங்களையும் முன்னும் பின்னும் உய்த்து நோக்கி உண்மை நிலைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

உலக நோக்கு, கலை நோக்கு, தெய்வ நோக்கு என நோக்கங்கள் நிலவியுள்ளன. ஒன்றினும்ஒன்று நுணுகிய நிலையது. எண்ணம நுண்மைகளில் உண்மைகள் ஊடுருவி யுள்ளன.

கற்பு அற்புத நிலையுடையது. அதனை இந்நாடு பெரு மகிமையாக யாண்டும் பேணி வந்துள்ளது. மழையும் அதன்வழி ஒழுகும்; தேவரும் அதற்கு ஏவல் செய்வர் என்றதனால் அதன் மாட்சியும் காட்சியும் நன்கு காணலாகும்.

"So dear to heaven is saintly chastity,
That, when a soul is found sincerely so,
A thousand liveried angels lacky her,
Driving far off each thing of sin and guilt." (Comus)

"புனிதமான கற்பு பரமபதத்திற்கு இனிமை ஆகிறது; தூய கற்புடையாளுக்குத் தேவர் யாவரும் ஆவலோடு ஏவல் புரிகின்றனர்; பாவத் தீமைகள் யாவும் அவள் எதிரே பறந்து போகின்றன" என மில்ட்டன் Milton என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிருர். கற்பு யாண்டும் அற்புத நிலையது.

பத்தினிகளை எந்த நாடுகளும் பாராட்டி வருகின்றன.

கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வர்ஊர்
இருந்தவள் இவள்என ஏச நிற்பெனே?

உலகப் பழியை நினைந்து இங்ஙனம் உள்ளம் பதைத்திருக்கிறாள். கருந்தனிமுகில் எனத் தனது அருமைக் கணவனை இவ்வாறு உரிமையோடு நினைந்து உருகி மறுகினாள். பசிய கோலத் திருமேனியனாகிய அந்த அதிசய அழகனைப் பிரிந்து போய்க் கொடியவர் குடியிருப்பில் கெடிது தங்கியிருந்தவள் எனக் குலமகளிர் எல்லாரும் வைது பழிக்க நான் உயிர் வாழ்ந்திருக்கிறேனே! எனத் துயரில் ஆழ்ந்து துழங்கியுள்ளாள். உள்ளக் கவலைகள் கொள்ளித் தீயைப் போல் துள்ளித் துடிக்க உயிரை வாட்டி யிருக்கின்றன.

அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
விற்பணி கொண்டு அருஞ்சிறையின் மீட்டநாள்

பின்னை விளைவதை இன்னவாறு முன்னதாக எண்ணியுள்ளாள். அரக்கர் குலத்தை அடியோடு அழித்துத் தன்னை இராமபிரான் சிறைமீட்டி யருளுவான் என்று சீதை உள்ளத்தில் கருதியுள்ளமை இவ்வுரையால் தெரிய வருகிறது. இராமனை இங்கே அற்புதன் என்றது அவனது அதிசய மகிமைகளை நினைந்து.

கொடிய சிறையிலிருந்து என்னை மீட்டினாலும் எம்பெருமான் அயோத்திக்கு உடன் கூட்டிக் கொண்டு போகார்; "பத்து மாத காலமாக அரக்கன் ஊரில் இருந்தவள் ஆதலால் என் வீட்டில் புகலாகாது; எங்கேயாவது போய்விடு" என்று இகழ்ந்து தள்ளவும் கூடும்; அவ்வாறு அவ்வள்ளல் எள்ளித் தள்ளினால் "நான் மகா பதிவிரதை; உத்தம பத்தினி" என என் கற்பு நிலையை அவ்வுத்தமர் கண்டு தெளிய நான் எப்படி வெளியே தெளிவாகக் காட்ட முடியும்? என்று இப்படி எண்ணி உள்ளம் உடைந்து கலங்கியிருக்கிறாள். உறுவதை ஓர்ந்து பருவர லுழந்துள்ளாள்

சானகி இங்குக் கருதியபடியே பின்பு மீட்சிப் படலத்தில் நிகழப் போகிறது. "உன்னை மீட்டும் பொருட்டு நான் இலங்கை வரவில்லை; கொண்ட மனைவியைப் பறி கொடுத்து விட்டுப் பேடித்தனமாய்ப் பேசாதிருந்தான்" என்னும் அந்தப் பழியிலிருந்து என்னை மீட்டிக் கொள்ளும் பொருட்டே நான் இங்கு வந்து

போராடி அரக்கர் வருக்கத்தை நீறுக்கி வென்றேன்; நீ வேறாய் வெளியே போகலாம்" என்று உலக சோதனையின் பொருட்டு இவ்வாறு இராமன் இறுதியில் சீறிச் சினந்து தனது அருமை மனைவியை நோக்கிக் கூறுவது ஈண்டு எதிரறிந்து கொள்ள வந்தது.

சிறந்த விவேகி ஆதலால் பின்னல் நிகழ்வதை முன்னல் யூகித்துக் கொண்டு சோகித்து நொந்தாள். கொண்டான் குணம் அறிவாள் பெண்டாட்டி என்றபடி தன் நாயகனுடைய நீர்மை சீர் மைகளைக் கூர்மையாக நன்கு தெரிந்திருக்கிருள். மானச தத்து வங்கள் காவியச் சுவையோடு கலந்து ஓவிய வுருவங்களாய் ஒளி மிகுந்து சீவிய சுபாவங்களை விளக்கி ஈண்டு வெளி வந்துள்ளன.

## இறந்து போகத் துணிந்தது.

முடிவில் இவ்வாறு எண்ணினவள் தனக்கு எவ்வகையிலும் விடிவு கிடையாது; இனி இருந்து வருந்துவதால் பயன் இல்லை; விரைந்து இறந்து போக வேண்டும் என்று முடிவு செய்து அயலே நோக்கினாள். அரக்கிகள் யாவரும் அயர்ந்து உறங்கினர்.

சாதல் காப்பவரும் என் தவத்தில் சாம்பினுர்
ஈதலாது வேறு இடமும் இல்லை.

தன்னுடைய உயிரை மாய்த்துக் கொள்வதற்கு உரிய சமை யம் வாய்த்துள்ளதை எண்ணிச் சீதை இவ்வண்ணம் உவந்து எழு ந்தாள். அரக்கியர் விழித்திருந்தால் தான் கருதியதைச் செய்ய முடியாது ஆதலால் அவர் தூங்கிக் கிடப்பது தனது தவத்தின் பயன் என்று மகிழ்ச்சியடைந்தாள். தான் இறப்பதில் கொண்டு ள்ள வேகத்தை இவ்வுரை வெளிப்படுத்தி யுள்ளது. துயரத்தைப் பொறுத்திருக்க முடியாமையால் உயிரை வெறுத்து விட நேர்ந் தாள். தற்கொலையாய்ச் சாகத் துணிவதில் ஆண்களை விடப் பெண்கள் வேகித்து நிற்கின்றனர். மெல்லிய நெஞ்சினர் ஆதலால் அல்லல்களை ஆற்றி யிருக்க முடியாமல் ஆருயிரை நீத்து விடு கின்றனர். எல்லை மீறிய துன்பங்களுக்கு இறப்பு ஒருவகை ஆறு தலாகின்றது. ஆகவே சோகம் மீதூர்ந்து நின்ற தோகை இங்கே சாக நேர்ந்தாள்.

## அனுமான் காத்தது.

ஆவியை நீக்கத் துணிந்த தேவி மெல்ல எழுந்து யாரும்

அறியாவண்ணம் மெதுவாய் நடந்து அயலிருந்த மாச் செறிவுக்குள் புகுந்தாள். ஒரு தருவின் கிளையில் வல்லிக்கொடியை வரிந்து கட்டித் தன் கழுத்தில் மாட்டினாள். மாட்டவே, நீட்டிய கைகளோடு அனுமான் அதி வேகமாய் உள்ளே பாய்ந்து "அம்மா! நான் இராமதூதன்; இராமதூதன்" என்று அலறி எதிரே நின்றான். சீதை திடுக்கிட்டு நாணினாள்; கழுத்தில் பூட்டியிருந்த சுருக்கை நீக்கி விட்டு உள்ளம் கூசி வியப்பும் வெறுப்பும் கொண்டு வெருண்டு நின்றாள். அந்த அலமரல் நிலையில் மாருதி தேறுதலாக இனிது மொழிந்தான்.

அடைந்தனென் அடியனேன் இராமன் ஆணையால்
குடைந்துலக னைத்தையும் நாடுங் கொட்பினால்
மிடைந்தவர் உலப்பிலர் தவத்தை மேவலான்
மடந்தைநின் சேவடி வந்து நோக்கினேன். (1)

ஈண்டுநீ இருந்ததை இடரின் வைகுறும்
ஆண்டகை அறிந்திலன்; அதற்குக் காரணம்
வேண்டுமே அரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில; ஈதலால் மாறு வேறுண்டோ? (2)

ஐயுறல்! உளது அடையாளம்; ஆரியன்
மெய்யுற உணர்த்திய உரையும் வேறுள:
கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால்
நெய்யுறு விளக்கனாய் நினையல் வேறென்றான். (3)

(உருக்காட்டுப் படலம், 23-25)

துயரமாய் உயிரை நீக்கும் சமையத்தில் அதி துரிதமாய் உயர இருந்து தாவி நேரே தொழுத கையனாய் உழுவலன்போடு உருகி நின்று சீதையை நோக்கி இம் மேதை பேசியுள்ளது ஓதி யுணர வுரியது. வேக விவேகங்கள் ஏகமா யிணைந்துள்ளன.

தன்னை இன்னான் எனச் சுருக்கமாக நெஞ்சம் தெளிய வுரைத்தான். இராம நாமத்தைச் சொல்லிக் கொண்டே துள்ளித் தோன்றியது, சீதை உள்ளம் உவந்து உயிர் பேணி நிற்க வேண்டியேயாம். சாவதிலிருந்து விலகி தேவி ஆவி அலமந்து நிற்கவே, சீவிய அமுதமாய் இம் மதிமான் வாயிலிருந்து மொழிகள் வெளி வரலாயின. ஒவ்வொரு சொல்லும் பிராட்டியின் உயிர்க்கு உறுதியாய்த் தெளிவூட்டி ஒளி நீட்டி உரிமை சார்ந்து மிளிர்கின்றது.

உள்ளத்தைத் தேற்றி உணர்வை ஒளியுறுத்தி மொழிகள் உவகையூட்டி வருகின்றன. செவிக்கு இனிமையாய் மதுரமான வாக்கியங்கள் மதி நலம் தோய்ந்து வந்தமையால் தேவி மிகவும் ஆவலோடு வியந்து கேட்டு நயந்து நின்றாள்.

"தாங்கள் இங்கு இருப்பது எம்பெருமானுக்குத் தெரியாது; தெரியவில்லை என்பதற்கு அடையாளம் யாது? எனின், அரக்கர் குலம் அடியோடு அழியாமல் உயிர் வாழ்ந்திருப்பதேயாம்; அறிந்திருந்தால் இதற்குள் அரக்கர் வருக்கம் முழுதும் அழிந்து போயிருக்கும்; நீங்களும் பிரிவுத் துன்பம் நீங்கிப் பேரின்பத்தை அடைந்திருப்பீர்கள்" என அனுமான் இங்ஙனம் பேசத் தொடங்கினான். பேச்சு அறிவு சுரந்து அன்பு கனிந்து எழுந்தது.

தன் நாயகன் இவ்வளவு நாள் வரையும் இங்கு வரவில்லை ஆதலால் தன்னைக் கவனியாமல் கைவிட்டுப் போயிருப்பார் என்று பிராட்டி கருதியிருக்கக் கூடும் என இவ்வாறு உறுதி நிலையை உரிமையோடு கூறினான். உள்ளத்தைத் தெள்ளத் தெளிந்து பேசி வருவது மதியூகத்தின் அதிசய ஒளியை வெளி வீசி வருகிறது.

அரக்கருள் எவனோ ஒருவன் வஞ்சமாக வந்துள்ளான் என்று தன்னைச் சந்தேகிக்கவும் கூடும் ஆதலால் ஐயுறல் அடையாளம் உளது என மெய்யுறத் தேற்றினான்.

மாய மானால் வஞ்சிக்கப்பட்டுத் தீய துன்பங்களை அனுபவித்து வருகிறவளுடைய நெஞ்சின் நிலைமையை நேரறிந்து நீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து குறிப்போடு கூற நேர்ந்தான்.

நெய்யுறு விளக்கு அனாய்!

சீதையை இங்ஙனம் அனுமான் இங்கே விளித்திருக்கிறான். செவ்விய திருமேனியின் திவ்விய தேசு நோக்கி இவ்வாறு கூறியிருப்பினும் வேறு ஒரு குறிப்பும் இதில் ஊறியுள்ளது.

வெயிலிடைத் தந்த விளக்கு என முன்பு நம் கவி நாயகன் குறித்தார். அஞ்சன வண்ணனைப் பிரிந்து நெஞ்சு உடைந்து ஒளி சிதைந்த மெய்யளாய் அழி துயரில் அலமந்திருக்கும் நிலைமையை அங்ஙனம் விழி தெரிய விளக்கினார்.

நெய்யுறு விளக்கு என இங்கே இக் கவி நாயகன் கூறியுள்ளான் ஆவி தீர்ந்து போகும் அமையத்தில் விரைந்து இராமநாம

ந்தைக் கூறித் தேவியை உயிர்ப்பித்துச் சீவ ஒளியை விளக்கி யிருக்கிறான். அவ் ஒளி விளக்கம் மொழியில் விளங்கியது.

அணைந்துபடும் சமயத்தில் நெய்வார்த்த விளக்கு மீண்டும் நீண்டு விளங்குதல் போல் மாண்டுபட நேர்ந்த சீதை இராம நாமத்தால் மீண்டு தெளிந்து உயிர் வாழ்ந்து ஒளி மிகுந்து நிற்கின்றாள் ஆதலால் நெய் உறு விளக்கு என மெய் தெரிய நின்றாள்.

இராம நாமம் ஆகிய அமுதம் செவி வழியே பாய்ந்து உள்ளத் தகழியில் தோய்ந்தவுடனே உயிர் தெளிந்து ஒளி வீசியுள்ளது. இந்த மெய் விளக்கத்தை வையம் தெளிய விளக்குதற்கு நெய் விளக்கு என நேரே பேசிட்டு அழைத்தான்.

அதிசய மேதையினுடைய வாய்மொழிகள் அதிமதி நுட்பமாய் அரிய சுவைகள் சுரந்து யாண்டும் இனிமையாய் வெளி வருகின்றன. சொல்லின் குறிப்புகள் உள்ளியுணருந்தோறும் உவகை புரிந்து வருதலால் சொல்லின் செல்வன் என எல்லா வுலகமும் தொழுதேத்த யாண்டும் இக் கவி நாயகன் இசை மீதூர்ந்து உயர் குல மேதையாய் ஒளி வீசி உலாவுகின்றான்.

## சீதை தெளிந்து நின்றது.

உயிர் நீங்கும் தருணத்தில் இடர் என்று நேரே வந்து கணவன் பேரைச் சொல்லிக் கைதொழுது கண்ணீரும் கம்பலையுமாய் நிற்கின்ற இந்தப் புண்ணிய வுருவினைக் கண்டதும் சீதை நெடுந் திகிலோடு திகைத்து நேரே நோக்கினாள். நிலைமையைக் கூர்மையாகக் கூர்ந்து ஓர்ந்தாள். தேர்ந்து பேச நேர்ந்தாள்.

என்றவன் இறைஞ்ச நோக்கி இரக்கமும் முனிவும் எய்தி
நின்றவன் நிருதன் அல்லன்: நெறிநின்று பொறிகள் ஐந்தும்
வென்றவன்: அல்லனாகில் விண்ணவன் ஆகவேண்டும்
நன்றுணர் வுடையன்: தூயன்; நவையிலன்; போலும் என்னா. (1)

அரக்கனே ஆக; வேறுஓர் அமரனே ஆக; அன்றிக்
குரக்கினத் தலைவனே தான் ஆகுக; கொடுமை யாக
இரக்கமே ஆக; வந்திங்கு எம்பிரான் நாமம் சொல்லி
உருக்கினன் உணர்வைத் தந்தான் உயிரிதின் உதவியுண்டோ?

எனாநினைந்து எய்தநோக்கி இரங்குமென் உள்ளம்; கள்ள
மனனகத் துடையராய வஞ்சகர் மாற்றம் அல்லன்;

நினைவுடைச் சொற்கள் கண்ணீர் நிலம்புகப் புலம்பா நின்றான்
வினவுதற்கு உரியன் என்னு வீர! நீ யாவன்? என்றாள். (3)

அனுமானைக் கண்ட பொழுது சீதை வெருண்டு நின்ற நிலையையும் தெருண்டு தேர்ந்து வினவியதையும் இங்கே கூர்ந்து காண்கின்றோம். நிகழ்ச்சிகள் நேரிய காட்சிகளாய் நிலாவி நிற்கின்றன. அறிவும் பரிவும் பெருகி ஒளிர்கின்றன.

தன் எதிரே வந்து தோன்றியுள்ளவனது உருவத்தை நோக்கி உள்ளக் கிடக்கைகளையும் உணர்வு நிலைகளையும் குண சீலங்களையும் இக் குலமகள் யூகமாய் ஊன்றியுணர்ந்துள்ளமை அதிசய விவேகமாய் விளங்கியுள்ளது.

நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன்;
நன்று உணர்வுரையன்; தூயன்; நவை இலன்.

என அனுமானை இங்ஙனம் சானகி கருதித் தெளிந்திருக்கிறாள். குறிப்புகள் கூர்ந்த சிந்தனைகளில் தோய்ந்து வந்திருக்கின்றன. பொறி வாயில் ஐந்து அவித்தான் (குறள், 6) என இறைவனை வள்ளுவப் பெருந்தகை குறித்திருப்பது இங்கே சிந்திக்க வுரியது. அந்த அரிய நிலையில் மாருதி மருவியுள்ளமை அறிய வந்தது.

எவரையும் வெறியராக்கி வருகிற பொறிகளை நெறி நின்று வென்றிருத்தலால் இவனது நிலைமையும் தலைமையும் பெரிய தவ யோகிகளாலும் வியந்து போற்றப் பட்டுள்ளன. ஐந்து புலன்களையும் அடக்கியுள்ளமையால் ஜிதேந்திரியன் என இந்திராதி தேவர்களும் இவனைப் புகழ்ந்து வருகின்றனர். அரனையும் வென்றவன் என வீறு கொண்டு நிற்கின்ற காமனை இவன் வென்றிருக்கிறான்.

பொறிகளை வென்றிருத்தலோடு அறிவிலும் ஆற்றலிலும் உயர்ந்து நிற்றலால் இவனது உயர்ச்சி அதிசய நிலையில் யாண்டும் யாவராலும் துதி செய்யப் படுகின்றது.

"He was perfect master of the senses and wonderfully sagacious" (Vivekananda)

"அவன் ஐம்புலன்களையும் அடியோடு வென்ற பரிசுத்த வீரன்; அதிசய மேதை" என அனுமானைக் குறித்து விவேகானந்தர் இவ்வாறு உரிமையோடு உவந்து கூறியிருக்கிறார்.

உருவத்தைப் பார்த்தவுடனே இவன் சித்த சுத்தி யுடைய வன்; உத்தம சீலன் என்று சீதை உறுதி செய்து கொண்டாள்.

அவன் வாய் திறந்து பேசிய வார்த்தைகள் பொருள் நிறைந்து இனிமை சுரந்து உணர்வு நலம் கனிந்து வந்தமையால் உணர்வு உரையன் என உவந்து புகழ்ந்தாள். சில மொழிகள் பேசு முன்னரே அவனுடைய நிலைமைகள் பலவகையிலும் பிராட்டியின் உள்ளத்தில் பெரு மதிப்பை விளைத்திருக்கின்றன.

கண்ணீர் நிலம் புகப் புலம்பா நின்றான்.

சீதையைக் கண்டு பேசும்பொழுது அனுமான் நின்ற நிலையை இது நேரே காட்டியுள்ளது. உள்ளத்தில் மண்டியுள்ள பரிவைக் கண்ணீர் வெள்ளம் வெளிப்படுத்தி யிருக்கிறது.

தன் ஆண்டவனுடைய தருமபத்தினி தனியே பிரிந்து அவலச் சிறையிலிருந்து துயரம் தாங்க மாட்டாமல் முடிவில் உயிரை விட நேர்ந்ததை நினைந்து நினைந்து மறுகி நெஞ்சம் உருகி யிருக்கிறான். சிறிதுநேரம் தாழ்ந்தால் கதி என்னும்? என்று கண் கலங்கி யுள்ளமையைக் கண்ணீர் காட்டி நின்றது.

கடல் கடந்து வந்து இலங்கை முழுவதும் தேடிப் படாத பாடுகள் பட்டும் யாண்டும் காணாமையால் மாண்டு போக மூண்டு நின்றவன் முடிவில் ஒரு வகையாய் கண்டு அடைந்து சீதை மாண்டு போகும் சமயத்தில் நேரே பாய்ந்து தடுத்து உயிரைக் காத்திருப்பது துயரக் காட்சியோடு உயர்ந்த சுவையும் சுரந்து நிற்கிறது. இராம சரித்திரத்திற்கு அனுமான் ஒரு சீவிய சஞ்சீவியாய் அமைந்துள்ளமையை இக்காவியம் முழுவதிலும் கண்டு வருகிறோம். அரிய வீரசரிதம் இனியநீர்மைகள் சுரந்து திகழ்கின்றன.

அந்த உத்தமன் சொல்லைக் கேட்டு வியந்த சீதை உள்ளம் கரைந்தாள். அரக்கன் தான் இப்படிக் கள்ள வஞ்சமாய் வந்துள்ளானோ? என்று சிந்தை திகைத்தவள் அவனுடைய வாய்மொழியைக் கேட்டதும் தூயவன் எனத் தெளிந்து களித்தாள்.

எம்பிரான் நாமம் சொல்லி உணர்வை உருக்கினன்; உயிர் தந்தான் என உருகி உரைத்திருத்தலால் சீதை அதுபொழுது அடைந்துள்ள ஆனந்தத்தையும், அதிசய ஆர்வத்தையும் அறிந்து கொள்ளலாம். தன் நாயகன்பால் கொண்டுள்ள பேரன்பின் நிலை

யை உரை ஓராளவு ஈண்டு உணர்த்தியுள்ளது.

உருக்கினன் என்ற சொல் அந்த உள்ளமும் உணர்வும் உயிரும் அவ்வமையம் உருகி நின்ற நிலைமையை உலகம் உணரச் செய்தது. பிராணநாயகன் பேர் பேரமிர்தமாயது.

இராமதூதன் எனத் தன்னை அனுமான் அறிவித்தபோது அந்த உரை சீவ அமுதமாய்த் தேவியின் உள்ளத்தில் பாய்ந்திருக்கிறது. ஆவி தழைக்க அருள்மொழி மேவியது.

மாண்டு போக நேர்ந்த உயிர் மீண்டு வந்தமையால் உயிர் தந்தான் என்றாள். ஈண்டு அனுமானுடைய ஆருயிர் உதவி பாரறிய வந்தது. தன்னைப் பெற்ற சனகன் என இந்த அனகனை இங்கே சனகி கருதியிருக்கிறாள். உற்ற உதவி உயர் மகிமையாயது.

## வினவி அறிந்தது.

தன் எதிரே வந்து இனிது மொழிந்து இன்னுயிர் உதவிக் கண்ணீர் மல்கி நின்ற அந்தப் புண்ணிய நீரனை இந்தப் பெண்ணரசி உவந்து நோக்கி "நீ யார் அப்பா!" என்று பேரும் பிறவும் தெரிய ஆர்வமுடன் வினவினாள்.

வீர! நீ யாவன்?

அனுமானைப் பார்த்துச் சானகி இவ்வாறு வினவியிருக்கிறாள். வீர என்று விளித்தது நிலைமைகளை நினைந்து.

எமனும் எட்டிப் பார்க்க அஞ்சுகின்ற இலங்கையுள் புகுந்து கட்டும் காவல்கள் எல்லாம் கடந்து துணிந்து வந்து தன் எதிரே நிற்கிற அந்நிலை அதிசய பராக்கிரமமாகத் தோன்றியுள்ளமையால் அதனைத் துதி செய்ய நேர்ந்தாள்.

பொறிகளை வென்றவன் என முன்னம் பெரு மகிமைகளைக் கருதி யுரைத்தாள். அகப் பகைகளை அங்ஙனம் அடங்க வென்றதோடு புறப்பகைகளையும் ஒருங்கே வெல்ல வல்லவன் என்பதை இங்ஙனம் சொல்லியருளினாள்.

முன்னது தரும வீரம்; பின்னது கரும வீரம் எனக இவ்வாறு இருவகை வீரமும் ஒருவனிடம் ஒருசேர அமைவது அதிசயமாம். அந்த அற்புத நிலைகளில் தலை சிறந்து நிற்றலால் மகா வீரன் என அனுமானை வானும் வையமும் வாழ்த்தி வருகின்றன.

'Make the character of Mahavira your ideal.
Build your life on this great ideal of personal service''

''மகா வீரனை அனுமானுடைய நீர்மையை நீங்கள் பின் பற்றுங்கள்; புனிதமான இந்தப் பெரிய கரும வீரனைப் போல் உங்கள் உயிர் வாழ்வை உயர்வாகப் பண்படுத்திக் கொள்ளுங்கள்'' என உலக மக்களை நோக்கி விவேகானந்தர் இவ்வாறு போதித்துள்ளார். மனித சமுதாயத்திற்கு அனுமான் இனிய நீரனாய் நிலவுகின்றான்.

உள்ளத் தூய்மை உறுதி ஊக்கம் உதவி நிலை தரும நீதி முதலிய அருமை நீர்மைகள் யாவும் மருவிக் கரும வீரனாய் உயர்ந்துள்ளமையால் அனுமானை எவரும் வியந்து புகழ்ந்து உவந்து துதிக்கின்றனர். தெய்வமாக வழிபட்டு வருகின்றனர்.

## அனுமான் பதில் உரைத்தது.

நீர் யார்? என்று பேர் ஊர் முதலியன தெரியும்படி பிராட்டி வினவவே அனுமான் அதி விநயமாக இனிது பதில் மொழிந்தான். இராமன் பன்னசாலையை விட்டுப் பிரிந்தது முதல் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை எல்லாம் நன்னயமாகச் சுருக்கி யுரைத்தான்.

சுக்கிரீவனோடு நட்புக் கொண்டது, வாலியைக் கொன்றது, நண்பனை அரசனாக்கி வைத்தது, அவனுடைய அதிகார ஆணைகளால் சேனைகள் வந்தது, போராற்றல்களுடைய அந்த வானர வீரர்கள் இராமபிரானுக்கு ஏவல் செய்வதில் ஆவல் பூண்டு நிற்கும் நிலை நான்கு திசைகளிலும் படைகள் தேடச் சென்றிருக்கும் திறம் முதலியவற்றைத் தெளிவாகச் சொல்லினான். சானகி உள்ளம் தெளிந்து உறுதி கொண்டு உவந்து கொள்ளும்படி உரைகள் உரிமையோடு மருவி வந்துள்ளன.

எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன; உலகம் எல்லாம்
தழுவிநின் றெடுப்ப; வேலை தனித்தனி கடக்கும் தாள;
குழுவின உங் கோன் செய்யக் குறித்தது குறிப்பின் உன்னி
வழுவில செய்தற்கு ஒத்த வானரம் வானின் நீண்ட. (1)

துப்புறு பரவை ஏழும் சூழ்ந்தபார் ஏழும் ஆழ்ந்த
ஒப்புறு நாகர் நாடும் உம்பரின் இம்பர் காறும்
இப்புறம் தேடி நின்னை எதிர்ந்தில என்னின் அண்டத்து
அப்புறம் போயும் தேட அவதியின் அமைந்து போன. (2)

புன்தொழில் அரக்கன் கொண்டுபோந்தநாள் பொதிந்து தூசின்
குன்றின்எம் மருங்கின் இட்ட அணிகலக் குறிப்பினாலே
வென்றியான் அடியன் தன்னை வேறுகொண்டிருந்து கூறித்
தென்திசை சேறி என்றான் அவனருள் சிதைவதாமோ? (3)

கொற்றவற்கு ஆண்டுக் காட்டிக் கொடுத்தபோது அடுத்ததன்மை
பெற்றியின் உணர்தற் பாற்றோ உயிர்நிலை பிறிதும் உண்டோ?
இற்றைநாள் அளவும் அன்றே அன்று நீ இழித்து நீத்த
மற்றைநல்லணிகள் காண் உன் மங்கலம் காத்த மன்னோ! (4)

சீதையிடம் அநுமான் இங்ஙனம் உரைத்திருக்கிறான். உரைக் குறிப்புகள் உணர்ச்சி நலங்களை யூட்டி வருகின்றன. பிராட்டியின் உள்ளத்திற்கு ஆறுதலாக யாவும் தேறுதல் செய்து திகழ்கின்றன. உவகை யுணர்ச்சிகள் ஊறி மிளிர்கின்றன.

தான் பிரிந்த பின்பு தன் நாதனுக்கு நேர்ந்துள்ள ஆதரவுகளும், தன்பால் அவ் வீரன் கொண்டு நிற்கும் அன்புரிமைகளும், ஆர்வ நிலைகளும் தேவி தெரிந்து மகிழும்படி தெளிவாக வெளி வந்துள்ளன. மொழிகள் அளிகள் ததும்பி அமுதத் துளிகளாய் ஒளிர்கின்றன.

எழுபது வெள்ளம் சேனைகள் சேர்ந்திருக்கின்றன; அளவிடலரிய ஆற்றல்களையுடையன; ஊழிவலன் போடு ஊழியம் புரிவன; அண்டங்கள் எங்கணும் சென்று வர வல்லன; அந்தத் திரளில் நான் ஒரு சிறியவன்; என்னினும் பெரியவர் பலருளர்; என்னை மட்டும் தனியே அழைத்து எம்பிரான் தென் திசைக்கு அனுப்பியருளினார்; அந்த ஆண்டவனுடைய திருவருளினால் அடியேன் ஈண்டு வந்துள்ளேன்; நான் பண்டு செய்த புண்ணியங்களால் அம்மையை இங்கே கண்டு கொண்டேன்; கருதிய பலன் கைகூடியது என உறுதி நிலைகளை உள்ளம் தெளிய உணர்த்தினான்.

இராவணன் ஆகாய மார்க்கமாய் விமானத்தில் உங்களை எடுத்துச் செல்லும் பொழுது நீங்கள் கழித்து எறிந்த ஆபரண முடிப்பு மதங்கமலைச் சாரலில் விழுந்தது; அதனை நாங்கள் எடுத்து வைத்திருந்தோம்; எம்பெருமானைக் கண்டபோது கொடுத்தோம்; அந்த அணிகலன்களைப் பார்த்த பொழுது அம்மூர்த்தி அடைந்த நிலைகளை வார்த்தைகளால் சொல்ல முடியா; உங்கள் பால் அவ் வீர வள்ளல் கொண்டிருக்கும் அன்புரிமையை உரைகளால் எவரும் உணர்த்த இயலாது. அது என்ன பரிவு! என்ன பிரியம்!

என்ன காதல்! என்ன ஆர்வம்! என்ன உருக்கம்! அம்மா! அதைப் பன்னிப் பேசுவது பழுதாம். உன்னி உணரினும் உணர முடியாத அரிய உயிரின் கிழமையை அன்று கண் எதிரே கண்டு மகிழ்ந்தோம். கண்ணீர் சொரிந்தோம்.

மற்றை நல் அணிகள்காண் உன்மங்கலம் காத்த.

இந்த வாக்கியத்தைக் கண் ஊன்றி நோக்குங்கள். என்ன நோக்கோடு இவ்வண்ணம் ஈண்டு இது வந்துள்ளது? கருதிய கருத்துக்களைத் தெளிவான மொழிகளில் எளிதாக இனிது உணர்த்தி வருகிற விழுமிய கலைஞானி இங்கேஇங்ஙனம் உரைத்திருக்கிறார்.

தன் நாயகன் தன்னைக் கவனியாமல் மறந்து கைவிட்டிருப்பாரோ? என நினைந்து நெஞ்சு உடைந்துள்ள சீதைக்கு இந்த மொழி சிறந்த சீவ சஞ்சீவியாய்த் தெளிவு தர வந்தது.

உங்கள் மெய்யில் அணிந்திருந்த அணிகளை அன்று எங்கள் ஐயன் கையில் எடுத்துக் கண்ணில் ஒற்றி மார்பில் அணைத்து நெடும் பொழுது பார்த்து நெட்டுயிர்ப்புற்று அவசமாய்த் தெளிந்து ஆனந்த பரவசராய் ஆர்வ மீதூர்ந்து நின்றார்.

அந்த ஆபரணங்களைக் கண்டதினாலேதான் அவ் வீரவள்ளல் ஆறுதலடைந்து உயிர் வாழ்ந்து வருகிறார்; காணவில்லையாயின் இதற்குள் மனம் உடைந்து மாண்டு போயிருப்பார்; அவர் பிழைத்திருக்கும்படி இழைத்தருளினமையால் இழைகள் எனத் தமக்கு இசைந்துள்ள இனிய பேருக்கு அவை தனியுரிமையாயின

பிரிவுத் துயரால் மறுகி வருந்தி வேண்டாம் என்று வெறுத்து வீசிய அந்த அணிகள்தான் உங்களை இங்ஙனம் மங்களமாக மகிமைப் படுத்தி வைத்துள்ளன என்பான் அணிகள் உன் மங்கலம் காத்த என்றான். தன் தாலி நிலைத்திருக்கும் நிலையைத் தேவிக்கு இங்ஙனம் நினைவுறுத்தினான். இட்டுக் கழித்த அணி கட்டுக் கழுத்தியாய்த் தன்னைக் காத்து வைத்துள்ளது என்று குறித்தது, கணவனது காட்சியைக் கண்டு தெளிய வந்தது.

தனது அருமை மனைவியின் திருமேனியில் மருவியிருந்த அணிகள் இராமனுக்கு உரிமைத் துணைகளாய் உள்ளம் தேற்றி உதவி புரிந்து வருகின்றன; அதனால் அக் குலமகன் உயிர் தரித்து வருகிறான் என்பதை இங்கே ஓர்ந்து கொள்கிறோம்.

சீதைபால் இராமன் பூண்டிருக்கும் அன்புரிமையையும் ஆவலையும் ஈண்டு இனிது விளக்கியிருக்கும் நிலை இன்பம் சுரந்து திகழ்கிறது. அரிய காதலரது இனிய நீர்மைகள் கனிவு மிகுந்துள்ளன.

தன் நாயகனைக் காண வேண்டும் என்று சானகி கருதி யுருகியிருப்பதினும் இராமன் உருகி மறுகியுள்ளமை பெரிதாம் என்பதைத் தெளிவாக வெளிப்படுத்தி அப் பதிவிரதையின் உள்ளத்தைத் தேற்றி உவகையை யூட்டியிருக்கிறான். சொல்லியிருக்கும் உரைகளில் சுவைகள் துள்ளியிருக்கின்றன.

அன்னா! என்று அழைத்தது தாயே! என்னும் அன்புரிமையும் அருமையும் மரியாதையும் தெரிய. அன்னை என்னும் பெயர் விளியில் ஆ உருபு ஏற்று அன்னா என வந்தது.

"ஐயிறு பொதுப் பெயர்க்கு ஆயும் ஆவும்
உருபாம்; அல்லவற்று ஆயும் ஆகும்." (நன்னூல்)

இந்த இயல் விதி இங்கே அறிய வுரியது.

சரித நிகழ்வுகள் அரிய பண்பாடுகளோடு மருவி வருகின்றன. அதி சாதுரியமாய் இவ்வாறு இனிய மதுர மொழிகளை அனுமான் கூறவே சீதை பெரு மகிழ்ச்சியடைந்து வள்ளலை நினைந்து உள்ளம் உருகினாள். உரிமையுணர்வு உயிரை உருக்கி உவகைப்பெருக்காயது.

உய்தல் வந்து உற்றதோ என்று அருவிநீர் ஒழுகு கண்ணாள்.

அனுமான் வாய் மொழிகளைக் கேட்ட பொழுது பிராட்டி நின்ற நிலையை இது காட்டியுள்ளது. கண்ணிலிருந்து அருவி நீர் போல் பெருகி வழிந்துள்ள வெள்ளம் அவ்வுள்ளத்தின் பரிவுகளை வெளியறிய விளக்கி நின்றது.

இறந்து பட நேர்ந்த தனக்கு இருந்து வாழும்படியான உய்தி நிலை கிடைத்ததோ? என்று வெய்துயிர்த்து உள்ளம் உருகியிருக்கிறாள். அருவி நீர் ஒழுகு கண்ணாள் என அந்தப் பதிவிரதையின் உருவ நிலையை நம் கண் எதிரே காட்டி யிருக்கும் காட்சி கனிவு மிக வுடையது. விழுமிய பரிவு விழி தெரிய நின்றது.

உயிருக்குக் கொடிய அபாயம் நேர்ந்த பொழுது உடனே பிழைக்கும் படியான இனிய உபாயம் வாய்ந்தால் அந்தச் சீவன் அதிசய பரவசமாய் உருகி விழி நீர் சொரியும் ஆதலால் பரிவு மிகுந்த அம் மெய்ப்பாடு இங்கே மெய்யாகக் காண வந்தது.

மனித சுபாவங்களையும் மானச மருமங்களையும் கதை நிகழ்ச்சியோடு கவி சுவையாக வெளிப்படுத்தி வருவது உவகைக் காட்சியாய் உணர்வு சுரந்து வருகிறது.

நுணுகி நோக்க வுரிய நுண்மையான உண்மைகள் காவியத்தில் எண்மையாக எங்கணும் எழுந்து நிகழ்கின்றன.

தன் அருமைக் கணவனைக் கண்டு கொள்ளலாம் என்னும் காதல் மண்டிப் பரிவு கொண்டு உருகி நின்ற தேவி மீண்டும் அநுமானை நோக்கி ஒன்று வினவ நேர்ந்தாள்.

ஐய சொல்! ஐயன் மேனி எப்படிக்கு அறிதி!

சீதை இப்படிக் கேட்டிருக்கிறாள். இந்தக் கேள்வி எதை நோக்கி எழுந்தது? இராமனிடமிருந்து இவன் வந்துள்ளதாகச் சொல்லுகின்றானே! அந்தச் சுந்தரனுடைய பருவம் உருவம் முதலிய திருமேனியின் அடையாளங்களைச் சரியாகக் கூறுகின்றானா? வேறு மாறாகப் பேசுகின்றானா? பார்ப்போம் என்று சோதித்து அறியக் கேட்டது போல் இந்த வாக்கியம் ஈண்டு விளைந்துள்ளது.

சந்தேகம் கொண்டு கேட்டதாக அநுமான் சிந்தையில் எண்ணுதபடி அதி சாதுரியமாக இனிது வினவியிருக்கிறாள்.

ஐய! என்று உரிமையுடன் மரியாதையும் தோன்ற விளித்துள்ளாள். அன்னா! என்று முன்னம் அவன் ஆர்வமீதூர்ந்து சொன்னான். ஐயா! என்று பின்னர் இவள் அன்பு கூர்ந்து பேசினாள்.

மரியாதை மரியாதையை விளைத்தருளுகிறது.

பிரியம் பிரியத்தைப் பெருக்கித் தருகிறது.

இனியன பேசுவோர் எவர்க்கும் இனியராய் இன்பம் மிகப் பெறுகிறார். பெரிய உள்ளங்கள் அரிய பண்பாடுகளோடு மருவியுள்ளன. வாயுரைகள் உயிர்களின் தூய்மைகளை உலகறியச் செய்கின்றன. புனித நீர்மைகள் மனிதரை மகிமைப் படுத்துகின்றன.

துயரில் சாக நேர்ந்த உயிரை உதவியுள்ளவன் ஆதலால் ஐயா! என்று ஆவலோடு பேச நேர்ந்தாள். தனது அருமைத் தந்தையாக அநுமானை இக்குலமகள் கருதியுள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்கிறோம். சனகன் மகளுக்கு அநுமான் இங்கே சனகன் என நேர்ந்தான். சனகன் = பிதா.

## இராம சவுந்தரியம்.

சானகி வினவிய குறிப்பை அனுமான் நன்கு தெரிந்து கொண்டான். "எப்படி அறிதி?" என்ற அந்தத் தொடரையே பிடித்துக் கொண்டு தொடர்ந்து பேச நேர்ந்தான்.

படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்து அன்று

என முதலில் அவையடக்கமாக இப்படி வடித்துச் சொல்லினான். அந்த அழகனுடைய திருமேனிக்கு ஒப்பு ஆக ஒன்றை எடுத்துக் காட்டி உரைக்க முடியாது. ஒப்பற்ற திவ்விய எழிலை எவ்வகையில் செவ்வையாக நான் விளக்கிச் சொல்வேன் அம்மா! என்னால் தெளிவாகச் சொல்ல முடியாது தாயே! ஆயினும் தெளிந்த அளவு சொல்லுகிறேன்; நேரே கண்டு மகிழ்ந்த நீங்கள் கருதிக் கொள்ளுங்கள் என இங்ஙனம் பணிவோடு கூறிப் பாதத்திலிருந்து தொடங்கித் தலை வரையும் அழகாகச் சொல்லியருளினான்.

இராமனுடைய ஒவ்வொரு உறுப்பையும் சிறப்பான மொழிகளால் உருக்கமாக உரைத்திருக்கிறான். இருபத்தொரு கவிகள் அந்த உருவ அழகைப் பருகி யிருக்கின்றன. அனுமானுடைய வாய் மொழிகளைச் செவி வாயாகச் சீதை பருகி உளம் உருகி உயிர் பரவசமாயினாள். அழகு மொழிகள் விழுமிய சுவைகளாய் உள்ளன. சில அயலே வருகின்றன. நாமும் பருகி மகிழ்வோம்.

வாய்.

ஆரமும் அகிலும் நீவி அகன்றதோள் அமலன் செவ்வாய்
நாரம் உண்டலர்ந்த செங்கேழ் நளினம் என்று உரைக்க நாணும்
ஈரம் உண்டு அமுதம் ஊறும் இன்னுரை இயம்பா தேனும்
மூரல்வெண் முறுவல் பூவாப் பவளமோ மொழியற் பாற்றே.

வாயின் சிறப்பை இது வடித்துக் காட்டியுள்ளது. பதினாறு கலைகளையுடைய பூரண சந்திரனைக் காட்டிலும் பொலிவு மிகவுடையது என இராமச் சந்திரனுடைய திருமுகச் செவ்வியைச் சொல்லிவிட்டு அதன்பின் வாய் அழகை இவ்வாறு வருணித்தருளினான்.

நீரில் வளர்ந்து செழித்துள்ள சிவந்த தாமரை மலரை உவமை கூறின் அதுவும் இழிவாம்; அந்தச் செவ்வாய்க்கு ஒவ்வாமையால் நளினமும் நாணும்; 'இளிவான உவமை கூறினனே!' என அந்த இனிய வாயும் துனியோடு நாண நேரும் என்பான் உரைக்க நாணும் என இரண்டையும் நேரே காண வைத்தான்

பவளத்தை ஒப்புச் சொல்லலாம் என்றால் அதுவும் தப்பாம். சிவப்பாய் இருப்பதால் ஓரளவு உவமையாயினும் நீர்மையை நினைந்து நோக்கின், அதுவும் நேர் ஆகாமல் நிலைகுலைந்து இழிந்து போம். நிறத்தில் சிறிது ஒத்திருப்பினும் ஈரமுடைய இனிய மதுர மொழிகளை இயம்பாமையோடு புதிய முறுவலும் பூவாது ஆதலால் பவளம் எவ்வகையிலும் அச் செவ்வாய்க்கு ஒவ்வாது என்றான். ஒப்பு அற்றது எனத் துப்போடு துலக்கியருளினான்.

சிவந்த அதரங்களையுடைய இராமனது திருவாய் செந்தாமரையினும் சிறந்தது; செம் பவளத்தினும் உயர்ந்தது; அருள் கனிந்த இனிய மொழிகளை என்றும் பேசுவது; நன்னயமான புன்னகையுடையது; அரிய முறுவல் பூத்து, யாண்டும் இன்சொல் மிழற்றுகிற அச் செவ்வாயின் திவ்விய நீர்மையை என் வாயால் விளக்கிச் சொல்ல முடியாது என இங்ஙனம் விளக்கியிருக்கிறான்.

அமுதம் ஊறும் இன் உரை என்றதனால் இராமனது சொல் இனிமையில் அவன் உள்ளம் பறிபோயுள்ளமை யுணர வந்தது. அந்த வாய் அமுதத்தை இருவகையிலும் இனிது பருகியுள்ளவள் செவியில் இங்ஙனம் சுவையாகச் சொல்லமுதத்தை வார்த்திருக்கிறான். வார்த்தைகளில் தோய்ந்திருக்கிற சுவைகள் ஆய்ந்து அநுபவிக்க நேர்ந்தன. யாவும் உய்த்துணர்வுடையனவாய் உதயமாய் வருகின்றன.

பல்.

முத்தம்கொல்லோ? முழுநிலவின்
முறியின் திறனோ? முறைஅமுதச்
சொத்தின் துள்ளி வெள்ளியினம்
தொடுத்த கொல்லோ? துறை அறத்தின்
வித்து முளைத்த அங்குரம் கொல்?
வேறே சில கொல்? மெய்ம் முகிழ்த்த
தொத்தின் தொகை கொல்? யாதென்று
பல்லுக்கு உவமை சொல்லுகேன்.

இது பல்லைக் குறித்து வந்துள்ளது. முத்துக்கள், சந்திர துண்டங்கள், அமுதத் துளிகள், தரும வித்துகள், சத்திய முளைகள் என்னும் உத்தமப் பொருள்களைத் தொகையாகச் சுட்டிக் காட்டிப் பல் வரிசைகளை விளக்கியிருக்கும் அழகை வியந்து பார்க்கிறோம். கவியின் காட்சியும் கதி வேகமும் மதிநலம் சுரந்து வரு

கின்றன. முப்பத்திரண்டு தருமங்களும் சிறிய உருவங்களாய் மருவி இராமனுடைய திருவாயில் பல்லுகளாய்ப் பதிந்துள்ளன என்று சொல்லியிருப்பதில் எவ்வளவு சுவை துள்ளி நிற்கிறது!

புண்ணிய உருவன் என்பதை இங்ஙனம் கண்ணியமாக் காட்டினான். அந்த அழகனுடைய பல் அழகையும், அனுமானுடைய சொல் அழகையும் நாம் ஒருங்கே கண்டு உவந்து வருகிறோம். பல்லுக்கு உவமை சொல்ல முடியாது என்பவன் இவ்வாறு சொல்லி நின்றான். சொல்லில் உள்ள சுவை அள்ளி நுகரவுரியது.

மூக்கு.

எள்ளாநிலத் திந்திர நீலத் தெழுந்தகொழுந்தும் மரகதத்தின்
விள்ளா முழுமா நிழற்பிழம்பும் வேண்ட வேண்டு மேனியதோ
தள்ளா ஓதி கோபத்தைக் கவ்வ வந்து சார்ந்ததூஉம்
கொள்ளா வள்ளல் திருமூக்கிற்குவமை பின்னுங்குணிப்பாமோ?

நெற்றி.

வருநாள் தோன்றும் தனிமறுவும் வளர்வும் தேய்வும் வாளரவம்
ஒருநாட் கவ்வும உறுகோளும் இறப்பும் பிறப்பும் ஒழிவுற்றால்
இருநாற் பகலின் இலங்குமதி அலங்கலிருளின் எழில்நிழற்கீழ்ப்
பெருநாள் நிற்பின் அவன் நெற்றிப்பெற்றித்தாகப் பெறுமன்றே?

மூக்கும் நெற்றியும் இங்ஙனம் நோக்க வந்துள்ளன.

இந்திர நீல ரத்தினமும், மரகத மணியும் போல் பசிய ஒளி வீசியுள்ள மூக்கு சிவந்த இதழ் அருகே நிவந்து நிற்பது, பச்சை ஓந்தி இந்திர கோபம் என்னும் பட்டுப் பூச்சியைக் கவ்வ வந்து சார்ந்தது போல் நேர்ந்துள்ளது என்றான். ஓதி=ஓந்தி.

கிரக பீடை நேராமலும், யாதும் தேயாமலும், களங்கம் இல்லாமலும் என்றும் ஒளி வீசியுள்ள ஒரு அட்டமி சந்திரன் இருந்தால் அது இராமச்சந்திரனுடைய நெற்றிக்கு ஒப்பாம் என்று உரைத்தருளினான். அலங்கல் இருளின் எழில் நிழல் கீழ் இலங்குமதி என்றது கரிய அழகிய மயிர் முடியின் கீழ் ஒளிரும் நெற்றியைச் சுட்டியது. நெற்றியிலிருந்து சிகையை நேரே வளர்த்திருக்கிறான் என்று தெரிகிறது. அடர்ந்த குஞ்சியின் அயலே எழில் ஒளி வீசிப் பாதிமதி போல் நுதல் நிலவியுள்ளமை நுவல வந்தது வெற்றி வீரனுடைய நெற்றி எழில் விழுமிய நிலையது.

தலைமயிர்.

நீண்டு குழன்று நெய்த் திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம்
பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையும் நறும் பூவும்
வேண்டு மல்ல வெனத்தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி
ஈண்டுசடையாயினதென்றால் மழைஎன் றுரைத்தல்இழிபன்றோ?

குஞ்சி அழகைக் குறித்து வந்துள்ள இந்தக் கவி அழகை நெஞ்சம் வியந்து பார்க்கிறோம். நெடிது சிந்திக்கிறோம். அந்த அழகிய சிகையின் விழுமிய நிலையை உழுவலன்போடு விளக்கியிருக்கிறார். பத்து வகை இலக்கணங்கள் படிந்துள்ளது எனத் தொகை குறித்திருப்பது உய்த்துணர வுரியது. நீண்டு, குழன்று, நெய்த்து இருண்டு நெறிந்து, செறிந்து, நீலம் பூண்டு புரிந்து, சரிந்து, கடைசுருண்டு என்னும் நீர்மைகளைக் கூர்மையாக நோக்கிச் சீர்மைகளைத் தெளிந்து கொள்ளவேண்டும். நெடிது வளர்ந்து இனிது கிளர்ந்து வழுவழுப்பாய் இருண்டு அடர்ந்து படர்ந்து நீலமணி போல் ஒளி வீசிச் சுருள்படிந்து தாழ்ந்து நுனி வளைந்து மேலும் மேலும் வளர்ச்சியுடையதாய்ச் செழித்துத் தழைத்திருந்ததை இங்ஙனம் இழைத்துக் காட்டினார். சிகையின் உருவ நிலையை முதலில் வகை செய்து கூறினார். பின்பு அதன் இயல்பினை விளக்கினார். அகில் முதலிய வாசனைப் புகைகள் ஊட்டாமலும், மலர் மாலைகள் சூட்டாமலும் இயற்கையாகவே இனிய பரிமளம் கமழ்ந்து அது எழில் மிகுந்திருந்தது வெறி = வாசனை.

சில அரச குமாரர்களுக்கு நல்ல மயிர் முடி வாய்த்திருந்தாலும் அதில் ஈநம் பேணும் நாறுமே அன்றி இனிய மணம வருாந; இந்த அழகன் குழல் அதிசய எழிலும் அரிய பரிமளமும் மருவி எவரும் துதி செய்ய நின்றது.

"நெய்த்துக் கருகி நெறித்து விடும் பூமாலை
வைத்துக் கடைகுழன்று வார்ந்தொழுகி—மொய்த்தளிகள்
சூழ்ந்து வடிம்பலம்பித் துஞ்சுடைத்தா யூட்டுபுகை
வாழ்ந்து தகரங்கமழு மால்." (இரத்தினச் சுருக்கம்)

"நெறிந்து கடைகுழன்று நெய்த்திருண்டு நீண்டு
செறிந்து பெருமுருகு தேக்கி—நறுந்துணர்
வார்ந்து கொழுந்தெழுந்த வல்லியாய் மாந்தளிர்
சோர்ந்து மிசையசைந்த சோலையாய்ச்—சேர்ந்து
திருவிருந்த தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணும் குழலாள்." (விக்கிரமசோழனுலா)

லுவை ஈண்டு எண்ணத் தக்கன. நம் கவியின் கவின்மொழி கள் இக் கவிகளில் வெளி வந்துள்ளன, கருதிக் காண்க.

இராமனது மயிர் அழகைக் குறித்துக் கூறும்பொழுது உயிர் பரவசமாய்க் கவி உரைத்திருக்கிறார்.

தெய்வ வெறியே கமழும் நறும் குஞ்சி என அதனை முகர்ந்து நுகர்ந்து உவந்து உள்ளம் களித்துச் சொல்லியுள்ளமையை உணர்ந்து களிக்கின்றோம். உழுவலன்புகளை வியந்து திளைக்கின்றோம்.

கதா நாயகனுடைய மயிரையும் சுவைத்துச் சுவைத்து உயிர் உருகச் சுவையாகப் பாடியிருத்தலால் கவியினுடைய பத்தியின் பரவச நிலையை நாடி அறிந்து கொள்ளலாம்.

இந்த நெடிய மயிர் முடி அழகு இக்காலத்தவர்க்குப் புதுமையாய்த் தோன்றும். பெரும்பாலும் மொட்டைகளாய் முடிகளை வெட்டித் தறிதலைகளாய் இருத்தலால் பண்டைக்காலத்து நெடிய முடி நிலைகளை அறிதல் அரிதாம். கால வேற்றுமையால் எல்லாம் மாறுகின்றன. மாறினும் நாட்டின் பழமையைப் பாட்டில் கண்டாவது உவந்து புகழ்ந்து கொள்ள வேண்டும். தங்கள் தலைகளைத் தடவிக் கொண்டு எங்கள் நிலைகளை இகழ்ந்து தள்ளலாகாது.

மயிர் நீப்பின் உயிர் நீப்பர் மானிகள் என்று தேவர் கூறியுள்ளார். தலை முடி மனிதனுக்கு ஒரு தனி மகிமையாய் நிலவியுளது.

"Fair tresses man's imperial race insnare,
And beauty draws us with a single hair." (Pope)

"அழகிய மயிர் முடி மனிதனுடைய உயர் நிலையை உணர்த்துகிறது; அதன் அழகு ஒரு மயிரால் நம்மை வசப்படுத்துகிறது" என போப் என்னும் ஆங்கிலக்கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

மணி முடியிழந்துள்ள இராமனது மயிர்முடி அனுமான் வாயால் ஈண்டு இனிது துதி செய்யப் பட்டுள்ளது. தெய்வ மணம் கமழ்கின்ற அந்த அழகிய நறுங்குஞ்சி இதுபொழுது சடையாயுள்ளதே! என்று உள்ளம் உருகியிருக்கிறான்.

"தொடையமை நெடுமழைத் தொங்கலாமெனக்
கடைகுழன்று இடைநெறி கரிய குஞ்சியைச்
சடைஎனப் புனைந்திலன் என்னின் தையலார்
உடை உயிர் யாவையும் உடையும்."

எனச் சூர்ப்பநகை முன்னம் கூறியிருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது. எழில் மிகுந்த அம் மயிர் முடியில் உள்ளமும் உயிரும் பறிபோய்க் கள்ளமின்றி அவள் உளையாடி யுள்ளாள்.

தைலம் முதலியன தடவாமல் தவ வேடம் பூண்டு யாதும் பேணாது சடை படிந்துள்ள மயிர் முடியே உடையையும் உயிரையும் உடையும்படி செய்யுமானால் பேணி அலங்கரிக்கப்படின் அதனைக் காணுவார் கதி என்னை? கருதியுணர வேண்டும்.

இராமபிரானுடைய உரோமபந்தி அதிசய எழிலுடையதாய் அமைந்திருப்பதைப் பலரும் வியந்து பாராட்டியுள்ளனர்.

நடை.

புல்லல் ஏற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவிஏழும்
எல்லை ஏற்ற நெடுஞ்செல்வம் எதிர்ந்த ஞான்றும் அஃதின்றி
அல்லல் ஏற்ற கானகத்தும் அழியா நடையை இழிவான
மல்லல் ஏற்றின் உளதுஎன்றால் மத்த யானை வருந்தாதோ?

இராமனது நடையின் கம்பீர நிலையை இது காட்டியுள்ளது. மதயானையும், மால்விடையும் பெருமித நடைக்குப் பேர் பெற்றன. இராச கம்பீரமான இராமன் நடையோடு எடை தூக்கி நோக்கும் பொழுது அவையும் கடையாய் இழிந்து படுகின்றன.

மலர் மகளும் நில மகளும் உளம் மகிழ்ந்து குலாவ அரசு பதவியை அடைந்த பொழுதும், அதனை உடனே துறந்து காட்டுக்குச் சென்ற போதும் ஒரே நிலையில் நிறை ஒத்திருந்த அந்த அற்புதமான கம்பீர நடைக்கு அற்பமான பிராணிகள் நடையை ஒப்புக் கூறல் தப்பாம் என்று செப்பி நின்றான்.

துன்பத்தில் தளர்வதும், இன்பத்தில் கிளர்வதும் எவர்பாலும் இயல்பாய் நிகழ்வன. அந்த இருவகை நிலையிலும் ஒரு படியாய் இராமனிடம் பெருமித நடை மருவியிருந்தமையை இங்கே உரிமையுடன் உணர்ந்து மகிழ்கின்றோம்.

அங்கங்களின் அமைதி, சமுதாய சோபை, உருவ எழில் முதலிய சவுந்தரிய நிலைகளைப் பாதம் முதல் கேசம் வரையும் அதிசய உவமைகளோடு அதி சாதுரியமாக அனுமான் ஓதியருளினான். பாதாதி கேசமாகச் சொல்லி வந்தது அவனது பத்தி நிலையையும் வித்தக விநயத்தையும் உய்த்துணர வந்தது.

இராமனுடைய திவ்விய சவுந்தரியங்களை நெடுங்காலம் உடனிருந்து கண்டு களித்து வந்த சீதை இடையே பிரிந்து பரிதாபமாய் ஏங்கியிருந்தாள். இன்று அனுமான் வாய்மொழிகளால் அந்த அழகு அமுதத்தை மாந்தி ஆனந்த மீதூர்ந்தாள். செவி இன்பம் அவி இன்பமாயது. மூயங்கிச் சுகித்தவள் மயங்கிக் களித்தாள்.

கணையாழி கண்டது.

உருவ எழிலை இவ்வாறு கூறி வந்தவன் இராமன் குறித்து அனுப்பிய சில அடையாளங்களையும் உரைத்து விட்டு முடிவில் கணையாழியைக் கையில் எடுத்தான். அதனைக் கண்டதும் சீதை அதிசய பரவசமாய் ஆவலோடு வாங்கினாள். அந்தமோதிரத்தைப் பெற்றபொழுது இக் குலமகள் அடைந்த பரவச நிலைகள் அளவிடலரியன. அந்த உள்ளத்தின் உவகைக் களிப்புகளைக் கவி வரைந்து காட்டியிருக்கும் காட்சி சுவை சுரந்து மிளிர்கின்றது.

மீட்டும் உரை வேண்டுவன இல்லைஎன மெய்ப் பேர்
தீட்டியது; தீட்டரிய செய்கையது: செவ்வே
நீட்டிதென நேர்ந்தனன் எனா நெடிய கையால்
காட்டினன்ஓர் ஆழி அது வாணுதலி கண்டாள். (1)

இறந்தனர் பிறந்தபயன் எய்தினர்கொல் என்கோ?
மறந்தனர் அறிந்துணர்வு வந்தனர்கொல் என்கோ?
துறந்த வுயிர் வந்திடை தொடர்ந்தது கொல் என்கோ?
திறந்தெரிவது என்னைகொல் இந்நன்னுதலி செய்கை! (2)

இழந்தமணி புற்றரவு எதிர்ந்தது எனலானாள்;
பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்;
குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்;
உழந்துவிழி பெற்றதொர் உயிர்ப் பொறையும் ஒத்தாள்.

வாங்கினள் முலைக்குவையில் வைத்தனள்: சிரத்தால்
தாங்கினள்; மலர்க்கண் மிசை ஒத்தினள்; தடந்தோள்
வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு
ஏங்கினள்; உயிர்த்தனள்; இது இன்னது எனலாமே! (4)

மோக்கும்; முலைவைத்து முயங்கும்; ஒளிர் நன்னீர்
நீக்கி நிறை கண்ணிணை ததும்ப நெடுநீள
நோக்கும்; நுவலக் கருதும்; ஒன்றும் நுவல்கில்லாள்;
மேக்கு நிமிர் விம்மலள்; விழுங்கலுறுகின்றாள். (5)

நீண்டவிழி நேரிழைதன் மின்னின் நிறமெல்லாம்
பூண்ட தொளிர் பொன்னனைய பொம்மல் நிறம் மெய்யே.
ஆண்டகைதன் மோதிரம் அடுத்த பொருள் எல்லாம்
தீண்டளவில் வேதிகை செய் தெய்வமணி கொல்லோ? (6)

இருந்து பசியால் இடருழந்தவர்கள் எய்தும்
அருந்தும்அமு தாகியது; அறத்தவரை அண்மும்
விருந்தும் எனல் ஆகியது; வீயுமுயர் மீளும்
மருந்தும் எனல் ஆகியது வாழிமணி ஆழி. (7)

(உருக்காட்டு படலம், 63 69)

கணையாழியைக் கண்டபொழுது சானகி கொண்ட ஆனந்த நிலைகளை இங்கே கண்டு வியந்து கருதி மகிழ்கிறோம்.

வாழ்க்கையில் நிகழ்ந்த சில குறிப்புகளைக் கூறி முடித்து "இந்த மோதிரத்தைக் கொடு" என்று எம்பெருமான் கொடுத்தனுப்பினர் என அனுமான் அதனைக் கையில் எடுத்தவுடனே சீதை பேரானந்தமுடையளாய் உள்ளம் பூரித்து உணர்வு துள்ளி உயிர் தளிர்த்து ஒளி மிகப் பெற்றாள். அந்த உவகை நிலையை உலகம் ஓர்ந்து உணர்ந்து கொள்ளும்படி பல உவமைகளால் கவி சுவையாக விளக்கியிருக்கிறார்.

இறந்தனர் பிறந்த பயன் எய்தியது.
மறந்தனர் அறிந்து உணர்வு வந்தது.
துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்தது.
இழந்தமணி புற்று அரவு எதிர்ந்தது.
பழந்தனம் இழந்தன படைத்தது.
குழந்தையை உயிர்த்த மலடி.
உழந்து விழி பெற்றது.

இந்த ஏழும் உவமைகளாய் ஈண்டு இணைந்து வந்திருக்கின்றன. உரிய பொருள் நிலைகளைக் கருதி ஓர்ந்து கொள்ள வேண்டும்.

மன வுணர்ச்சிகளும் மகிழ்ச்சி நிலைகளும் இனிது தெளிய வந்துள்ளன. தனது அருமைக் கணவனுடைய கைவிரலில் அணிந்திருந்தது ஆதலால் அந்த மோதிரம் இவ்வளவு ஆர்வத்தையும் மகிழ்ச்சிகளையும் இந்தப் பதிவிரதைக்கு விளைத்தருளியது.

மெய்ப் பேர் தீட்டியது என்றதனால் இராமனுடைய பெயர் அதில் எழுதியுள்ளமை தெளிய வந்தது. அந்த முத்திரை மோதிரம் அதிசய நிலையது; விசித்திர வேலைப்பாடுகளுடையது.

தீட்டு அரிய செய்கையது என்றது சித்திரத்திலும் வரைந்து காட்ட முடியாதது என அதன் திவ்விய நிலைமையை இங்ஙனம் காட்டியருளினர். தீட்டுதல்—எழுதல், செய்தல்.

இராமநாமம் மருவியுள்ள அந்தக் கணையாழியை இந்தக்குல மகள் காணவே ஆனந்த பரவசமாயினள். பரிசித்து வந்ததைத் தரிசித்து உவந்தாள். உவகை நிலை உரையிடலரியதாயது.

ஆழி கண்டபோது போன உயிர் மீண்டது போல் சானகி தழைத்து நீண்டாள். இழந்த மணியை அரவு எய்தியது என விழைந்து கொண்டாள். அரியபுதையல் கண்டதாய் ஆனந்தமடைந்தாள் புற்று அரவு என்றது சிறைக்குள் இருக்கும் நிலைமைதெரிய.

நீண்ட காலம் பிள்ளை இல்லாமல் மலடியாய் இருந்தவள் ஆண்டவன் அருளால் அருமையாக ஓர் அழகிய மகவைப் பெற்றால் அந்தத் தாய் உள்ளம் எவ்வளவு இன்ப நிலையை எய்துமோ, அவ்வளவினும் அதிகமான ஆனந்தக் களிப்பை அடைந்தாள் என்பார் மலடிக்கு உவமை கொண்டாள் என்றார். அன்பின் உருக்கத்தை நன்கு அறிய ஆர்வக் குழந்தை பார்வைக்கு வந்தது.

கண் ஒளி இழந்தவன் மீண்டும் அதனை நண்ணியது என எண்ணம் தளிர்த்து இன்பம் மீதூர்ந்தாள். நாதன் இருக்கும்வழி தெரிந்து கழிபேரின்பம் பூண்டமையால் விழி பெற்றது கண்டு வெளியாயது. துன்ப இருள் நீங்கி இன்ப ஒளி ஓங்கியது.

முத்தி, உணர்வு, உயிர், மணி, பொன் மகன் கண் என இன்னவாறு எதிர் குறித்தது கணையாழியின் அருமை பெருமைகளை இனிது தெரிய. ஆன்ம வுரிமைகள் பான்மை சுரந்து மேன்மை நிறைந்து மிளிர்கின்றன.

அனுமானிடமிருந்து ஆழியைக் கையில் வாங்கிய தேவி ஆனி பரவசமாய் மேவிச் செய்த செயல்கள் உழுவலன்பின் கெழுதகைமைகளை உலகம் அறியச் செய்துள்ளன. அந்த நிலைகளை மொழிகளால் விளக்க முடியாது எனக் கவி விளக்கியிருக்கும் வித்தகம் விநயமிக வுடையது. புறத்தே நிகழ்ந்த குறிப்புகள் அகத்தை விரித்து விளக்கியிருக்கின்றன.

வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு
ஏங்கினள்; உயிர்த்தனள்; இது இன்னது! எனலாமே?

பிராட்டியிடம் அப்பொழுது நிகழ்ந்த சில மெய்ப்பாடுகளை இப்படிச் சுட்டிக் காட்டி அந்த உயிரின் பரவச நிலையை உய்த்துணர்ந்து ஓர்ந்து கொள்ளும்படி உணர்வை ஊக்கி விடுத்துள்ளார், உரைக் குறிப்புகள் உணர்ச்சிகளை விளக்கியருளுகின்றன.

மோதிரத்தைக் கையில் வாங்கவும் மெய்யில் ஒரு திவ்விய சிவ ஒளி மேனி மிளிர்ந்தது; வாடி மெலிந்திருந்த அந்த அழகிய திருமேனி பூரித்து விம்மியது; உடனே மாறி மெலிந்தது; பின்பு குளிர்ந்தது; வெதும்பியது; அதன் பின் ஏங்கிப் பெருமூச்சு விட்டுச் சிறிது நேரம் பேசாதிருந்தாள். பேசாத மவுனமாய்ப் பெருகி எழுந்துள்ள இந்த ஆன்ம வுணர்ச்சிகளை நான் எப்படிப் பேசி விளக்குவேன்? என உலகை நோக்கிக் கவி இப்படிப் பேசியிருக்கிறார்.

இது இன்னது எனல் ஆமே?

கவி அடைந்துள்ள வியப்பை இது இனிது காட்டியுள்ளது. மதி நிலை கடந்து அதிசய நிலையில் மருவியிருத்தலால் அதனை எட்ட நின்று சுட்டிச் சொல்லி இங்ஙனம் துதி செய்ய நேர்ந்தார். இராமன் கையில் அணிந்திருந்த மோதிரம் ஆதலால் அது தன் மெய்யில் தோய்ந்தவுடன் தேவி ஆவி அவசமாயது; உள்ளமும் உணர்வும் துள்ளி ஆனந்த வெள்ளத்தில் மிதந்துள்ளன. அதனை மூக்கில் வைத்து முகர்ந்தாள்; நுகர்ந்தாள்; உச்சியில் இருத்தி உவந்தாள்; முலை முகட்டில் அழுத்தி மூயங்கி மயங்கினாள்; நெடு நேரம் எதிரே நீட்டிக் கண்டு கண்டு களித்தாள்; காணும் போது பெருகி வருகிற ஆனந்தக் கண்ணீர் அதனை நன்கு காண ஒட்டாமல் மறைத்தது; அந் நீரைத் துடைத்துக் கொண்டு மீண்டும் மீண்டும் நோக்கி உவகைக் களிப்பில் நீண்டாள்; அதனோடு பேச முயன்றாள்; யாதும் பேசமுடியாமல் மோனமாயிருந்தாள்; தொண்டை விம்மியது; உமிழ் நீரை விழுங்கிக் கொண்டு உயிர்த்து நின்றாள்; அமிழ்தம் உண்டவர்போல் ஆவி தழைத்து ஆனந்தம் மீதூர்ந்தாள்; போன வுயிரை மீட்டித் தந்த சீவ சஞ்சீவியாய்த் தேவி கையில் அது மேனி மிளிர்ந்தது. மெய்யின்பம் தந்தது.

கருதி மகிழ்ந்தது

அந்த ஆழி கையில் வந்தது இராமனை நேரே மெய்தோய்ந்து முயங்கியதாய் உயிர் உவகைக் கடலில் ஆழ்ந்திருக்கிறது. தனது

அருமைக் காதலனோடு வாழ்ந்து சுகித்த சுக போகங்கள் பல அதனோடு நினைவுக்கு வந்துள்ளன. ஒரு நாள் இரவு பள்ளியறையில் ஊடல் நிகழ்ந்தது. கலவி ஆசை நிலை மீறி நின்றாலும் இருவரும் ஊடலில் ஒரு நிகராய் ஊக்கியிருந்தார். யார் மூந்துகிறாரோ அவர் தோல்வி அடைந்தவராய்க் கேலி செய்யப் படுவர் ஆதலால் அந்த நாணத்தால் நைந்து கிடந்தார். சிறிது நேரம் கழிந்தது; அமளியில் தனியே படுத்திருந்த இராமன் தனது விரலில் அணிந்திருந்த இந்த மோதிரத்தை அவிழ்த்துக் கீழே மெல்ல உருட்டினான்; சீதை விரைந்து எழுந்து போய் அதனை எடுத்தாள்; "கள்ளி அகப்பட்டாள்" என்று இராமன் துள்ளி எழுந்து அந்தக் கையைப் பிடித்தான; கள்ளனுக்கு ஏற்ற நல்ல கள்ளி என்று சானகி சொல்லிச் சிரித்தாள். அவன் அள்ளி அணைத்தான்; இருவரும் உள்ளம் களித்து உவகையில் திளைத்தார்.

இவ்வாறு அன்று கூட்டி வைத்து ஆனந்த ஆழியில் ஆழ்த்திய அமுத சஞ்சீவி ஆதலால் அதனை இன்று கண்டபோது யாவும் எண்ணித் தேவி இங்கே இன்பக் களிப்பில் மூழ்கினாள்.

அருமைக் காதலருடைய உரிமைப் பாசங்கள் உரையிடலரியனவாய் உழுவலன்போடு செழுமியுள்ளன.

வாழ்க்கையில் நிகழ்ந்த பல அடையாளங்களைச் சொல்லி முடிவில் இந்த மோதிரத்தைத் தந்து அனுமான் இங்ஙனம் ஆருயிர் உதவி அம்மையை ஆதரித்து நின்றான். அரிய இந்த ஆதரவு நிலையை ஆழ்வார்கள் உவந்து பாராட்டியுள்ளனர்.

சீதைக்கு அனுமான் தெரிவித்த அடையாளம் என்ற தலைப்பில் பெரியாழ்வார் ஒரு பதிகம் பாடியிருக்கிறார். பத்தி நிலைகள் பாவியுள்ளன. சில பாசுரங்கள் அயலே வருகின்றன.

அல்லியம்பூ மலர்க்கோதாய்! அடிபணிந்தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே!
எல்லியம்போ தினிதிருத்தல் இருந்ததோர் இடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டு அங்கு ஆர்த்ததும் ஓர் அடையாளம்.

மின்னொத்த நுண்ணிடையாய்! மெய்யடியேன் விண்ணப்பம்
பொன்னொத்த மானொன்று புகுந்து இனிது விளையாட
நின் அன்பின் வழிநின்று சிலைபிடித்து எம்பிரான் ஏக
பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததும் ஓர் அடையாளம். (2)

மைத்தகுமா மலர்க்குழலாய்! வைதேவி விண்ணப்பம்
ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத்தேட
அத்தகுசீர் அயோத்தியர்கோன் அடையாளம் இவைமொழிந்தான்
இத்தகையால் அடையாளம் ஈது அவன் கைம்மோதிரமே. (3)

திக்குநிறை புகழாளன் தீவேள்விச் சென்ற நாள்
மிக்கபெருஞ் சபை நடுவே வில்லிறுத்தான் மோதிரம் கண்டு
ஒக்குமால் அடையாளம் அனுமான்! என்று உச்சிமேல்
வைத்துக் கொண்டு உகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே.

(திருமொழி. 3-10)

இராம தூதனாய் அனுமான் இலங்கை புகுந்து சீதையைக் கண்டு அடையாளங்கள் கூறிக் கணையாழி தந்த இந்த அதிசய வரலாறுகளை முன்னோர்கள் இவ்வாறு துதி செய்துள்ளனர்.

சானகி இராமர்களுடைய அன்புரிமைகளும் இன்ப வாழ்வுகளும் தலைமையான நிலையில் பண்பு சுரந்துள்ளமையால் உலக வுயிர்களுக்கு அவை உவகை நிலையங்களாய் ஒளி புரிந்து வருகின்றன. எண்ணியுணருந்தோறும் எவ்வழியும் இனிய சுவைகள் பெருகி அரிய வுணர்வு நலங்களை உதவியருளுகின்றன.

தனது கணவனுடைய கணையாழியைக் கையில் வாங்கி இவ்வாறு ஆனந்த பரவசமடைந்தவள் அனுமானை உவந்து நோக்கி நன்றியறிவோடு புகழ்ந்து போற்றினாள். வெளியில் வந்த மொழிகள் அந்த உள்ளத்தின் பரிவுகளை உலகம் அறிய உணர்த்தியுள்ளன.

மும்மையாம் உலகம தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர் தந்தாய்க்குச் செயல்எனால் எளியதுண்டே?
அம்மையாய் அத்தனாய அப்பனே! அருளின் வாழ்வே!
இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோடு என்றாள். (1)

பாழிய பணைத்தோள் வீர! துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறுவிலா மனத்தேன் என்னின்
ஊழிஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள். (2)

கற்பரசி வாயிலிருந்து இவ்வாறு அற்புத வுரைகள் வந்திருக்கின்றன. அரிய கரும வீரனை உரிமையோடு வாழ்த்தியிருப்பது உவகைப் பெருக்காய் ஓங்கி நிற்கிறது.

உயிர் தந்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?

என உள்ளம் உருகி உரைத்திருத்தலால் அவனது உதவி நிலையின் உயர்வு புலனும். செய்த உபகாரத்தை நினைந்து நெஞ்சம் கரைந்திருக்கிறது. நன்றியறிவோடு ஒன்ருய் உருகியுள்ளமையான் உரைகள் உருக்கமாய்ப் பெருகி எழுந்தன.

அம்மையாய் அத்தன் ஆய அப்பனே!

அனுமானைப் பார்த்து இந்த அம்மை இப்படி ஆர்வம் மீதூர்ந்து விளித்திருக்கிருள். சாவில் மூண்டு நின்ற தனது ஆவியை மீட்டித் தன்னை இன்னவுருவில் மன்னியிருக்கச் செய்தவன் ஆகலால் அன்னையும் பிதாவும் என அவனை உன்னியுருகி உரிமை மீக்கூர்ந்தாள். அன்புரிமையில் தந்தையினும் தாய் சிறந்தவள் ஆதலால் முன்னதாக அம்மை என்ருள்.

தாயும் தந்தையும் குருவும் தெய்வமும் நீயே என்பாள் அம்மை, அத்தன், அப்பன் என இன்னவாறு உருகிய அன்புடன் உரிமை கூர்ந்து உரையாட நேர்ந்தாள்.

முன்னம் சனக மன்னன் மகளாயிருந்தாள்; இப்பொழுது அனுமானுடைய அருமைப் புதல்வியாயினுள். அவன் உருவ நோக்கில் பெற்ற தந்தை; இவன் உயிர் நோக்கில் உற்ற தந்தை.

அருளின் வாழ்வே! என்றது கருணைக் கடலே எனக் கருதியுரைத்தமை காண வந்தது. கொடியவன் ஊரில் ஒரு நாதியும் இல்லாமல் உயிர் போகும் தருணத்தில் உரிமையாய் வந்து உதவி புரிந்தான் ஆதலால் அது தண்ணளி நிறைந்த கண்ணோட்டமாய்க் கண்டு எண்ண வந்தது. நாதியற்ற எளிய பிராணிகளை இரங்கிக் காப்பது பெரிய கிருபையாம். அத்தகைய அருள் நீர்மை பெருகியுள்ளமையால் மாருதியை இங்ஙனம் பொருள் பொதிந்த மொழிகளால் போற்றியுருகினுள்.

அருளாழியம்மான் எனத் திருமாலை நம்மாழ்வார் உருகிப் பாடியுள்ளது போல் அனுமானைச் சீதை இங்கே அன்புரிமையோடு கூறியுள்ளாள். உரைக்கும் மொழிகள் உள்ளத்தின் உருக்கத்தையும் உணர்வின் பெருக்கத்தையும் வெளிப்படுத்தி விடுகின்றன. உதவியுள்ள உபகாரங்கள் உயிரை உருக்கியுள்ளமையால் உரைகள் அன்புரிமைகளாய்ப் பொங்கி வருகின்றன.

இம்மையே மறுமைதானும் நல்கினை இசையோடு.

தனக்கு அனுமான் அருளியுள்ள பேறுகளைப் பிராட்டி இங்ஙனம் விளக்கியிருக்கிருள். இகலோகத்திலும் பரலோகத்திலும் பெரு மகிமையுடன் பேரின்பங்களை நுகர்ந்து வாழும்படி மாருதி பேருதவி செய்துள்ளதாகக் கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. உற்ற பழியை நீக்கி உயர் புகழ் ஆக்கிப் பெற்ற பிறவியைப் பேரானந்தமாகப் பேணியருளினுன் என உள்ளம் உருகியுள்ளமை உரையில் அறிய வந்தது.

தான் இறந்திருந்தால் தற்கொலை செய்த பாவம் தன்னைத் தொடர்ந்திருக்கும்; அன்னியன் ஊரில் அநாதையாய்ச் செத்தாள் என்ற பழியும் பற்றும்; உற்றகணவனுக்கும் ஒழியாத வசையாம்; இத்தகைய பழி பாவங்கள் பற்ருதபடி தன் உயிரைக் காத்துத் தனது பிறப்பைப் புனிதமாக்கி யுள்ளமையால் இம்மையும் மறுமையும் தனக்கு நன்மையை நல்கினுன் என உண்மையை உவந்து கூறினுள். செய்துள்ள உதவியின் உய்தி நிலைகள் உணர வந்தன.

தனது அருமை நாயகனேடு கூடி மீண்டும் இனிது வாழுமாறு இன்ப நலன்களை நல்கியருளிய பரம உபகாரி என அனுமானை அன்பு மீதூர்ந்து கருதிப் புகழ்ந்தாள். தனக்கு உயிர் உதவி புரிந்தமையால் அந்த உதவியாளன் நெடிது வாழ வேண்டும் என்று நெஞ்சம் உருகிப் பல்லாண்டு கூறினுள்.

## சிரஞ்சீவி நிலை.

பிறந்தவர் எவரும் இறந்து மறைதல் உலக இயல்பு. அந்த இயற்கை நியதியைக் கடந்து நிற்பது அதிசய நிலையாம். தோன்றிய உருவம் மாறி மீண்டும் பிறவாமல் ஆண்டவன் அருளைப் பெற்று என்றும் அவன் அருகே நிற்பவர் நித்திய முத்தர்கள் என நிலவியுள்ளனர். உற்ற உடலோடு ஊழியும் அழியாமல் ஒளி செய்து உள்ளவர் சிரஞ்சீவிகள் என நின்ருர்.

"சாகா வரத் தலைவரில் திலகம்" (கடல்தாவு, 85)

என அனுமானை இன்னவாறு முன்னம் குறித்துள்ளார்.

அற்புதமான இந்த நித்திய நிலையைக் கற்பாசி இங்கே அனுமானுக்குத் தனி உரிமையாக இனிது அருளி யுள்ளாள்.

யான் மறுவிலா மனத்தேன் என்னின்,

என்றது புனிதமான தனது பதிவிரதத் தன்மையை உலகம் காண எடுத்துக் காட்டி ஆணையிட்டுக் கூறிய படியாம். உள்ளத்தின் தூய்மையைத் தெய்வ சாட்சியாகத் தெளிய வைத்தாள்.

நான் உத்தம பத்தினி என்பது உண்மையானால் நீ என்றும் நித்திய சிரஞ்சீவியாய் நெடிது வாழ வேண்டும் என வாழ்த்தி நின்றாள். மனத்தைச் சுட்டிக் காட்டியது நுனித்து நோக்கத் தக்கது. உள்ளத்தில் யாதொரு மாசும் இல்லாதிருந்த நிலை உத்தம நிலையாம் என்பது உய்த்துணர வந்தது. மனத்தில் மறு இல்லையானால் அது அரிய பல மகிமைகளை விளைத்தருளுகின்றது. மறு = குற்றம். தனது நாயகனைத் தவிர வேறு எவரையும் யாதும் கருதியறியாத புண்ணியமுடையது என அம்மனம் ஈண்டு எண்ணியறிய நின்றது. மாசற்ற மனம் ஈசன் நிலையமா யுள்ளது.

நீ என்றும் சிரஞ்சீவியாய் இருப்பாய் என ஆசீர்வாத முறையில் தன் முனைப்போடு கூறுமல் கற்பின் தலைமேல் வைத்துக் காப்பு அளித்திருப்பது அரிய பண்பாடாய் மருவி மிளிர்கின்றது.

ஊழி ஓர் பகல் என்றது பிரம கற்பத்தை.

கலியுகம், நாலு லட்சத்து முப்பத்தீராயிரம் வருடங்களுடையது. துவாபரயுகம், எட்டு லட்சத்து அறுபத்து நாலாயிரம் வருடங்களுடையது. திரேதாயுகம், பன்னிரண்டுலட்சத்துத் தொண்ணூற்றாறாயிரம்வருடங்களுடையது. கிரேதாயுகம், பதினேழுலட்சத்து இருபத்தெண்ணாயிரம் வருடங்களுடையது. இவ்வாறு சதுர்யுகங்கள் ஆயிரம் கழிந்தால் பிரமாவுக்கு ஒரு பகல் ஆம்.

ஈண்டும் ஓர் இருபான் ஆயிரம் தலையிட்டு
 இயன்ம நாற்பத்து மூன்றிலக்க
யாண்டெனப்படுவ நான்கு உகத்தளவை;
 இம்முறை ஆயிரம் இறந்தால்
காண்டகும் அயனுக்கு ஒரு பகல்; அதுவே
 கற்பமாம்; இரவும் அத்துணைத்தவ
ஆண்டகைக்கு அந்நாள் முப்பதோர் திங்கள்;
 அஃதொரு பன்னிரண்டாண்டே. (காஞ்சிப் புராணம்)

பிரமாவினுடைய கால நிலை இங்ஙனம் குறிக்கப்பட்டுளது

ஆயிரம் சதுர்யுகங்கள் முடிந்த பொழுது பிரமாவுக்கு ஒரு பகல் முடிகிறது. அந்த நாள் முடிவில் ஒரு பிரளயம் தோன்றும்;

அதில் உலகங்கள் பல அழிந்து போம். அந்த அழிவுகாலம் ஊழி என வந்தது. அவ்வாறு பல்லாயிரம் ஊழிகள் பிரமன் ஆயுளில் கழிகின்றன. அவ் ஊழிகள் எல்லாம் நாழிகைகளாய்க் கழிய அனுமானுக்கு வாழி பாடினள்.

கற்பகோடி காலங்கள் அனுமான் இனிது வாழ வேண்டும் என்று பிராட்டி பேராவலோடு வாழ்த்தியுள்ளாள். அடுத்து வருகிற பிரமபட்டம் அனுமான் உடையது எனப் புராணங்கள் முறையிட்டுள்ளன. அரிய நிலைமையும் பெரிய தலைமையும் அறிய வந்தன.

## தலைவன் நிலை தெரிந்தது.

உரிமையுடன் அனுமானை இவ்வாறு உவந்து வாழ்த்தியபின் இராமனுடைய இருப்பை விவரமாக அறிந்து கொள்ள விரும்பி வினவினள்: "என் நம்பியும் தம்பியும் இப்பொழுது எங்கே இருக்கின்றனர்? நான் இங்கே இருப்பதை அவர்க்கு யார் சொன்னார்? உன்னை அவர் எப்படிக் கண்டார்? எவ்வாறு ஈண்டு அனுப்பினர்? என்ன சொல்லி விடுத்தார்?" என இன்னவாறு ஆவலோடு பிராட்டி அனுமானிடம் கேட்டாள். அவன் யாவும் தெளிவாகச் சொன்னான்.

மாயமானைத் தொடர்ந்து போனதிலிருந்து பின்பு நடந்தவைகளை எல்லாம் விவரமாக இனிது கூறிய முறை அன்பு நலம் சுரந்து அரிய சுவைகள் நிரம்பியுள்ளது. தன் அம்பு பாய்ந்து கீழே விழும் பொழுது மாரீசன் கூவிய மாயக் குரலைக் கேட்டு ஏதோ மோசம்! என்று ஆண்டவன் விரைந்து மீண்டு வருங்கால் இடையே தம்பியைக் கண்டதும், நெஞ்சம் கலங்கியதும், வேகமாய் ஓடிவந்து பன்னசாலையைப் பார்த்ததும், அங்கே தேவியைக் காணாமையால் ஆவி அலமந்து தவித்ததும், அலமந்துழந்து துடித்துத் தென்திசை நோக்கிக் கடுத்து வந்ததும், அங்கே சடாயுவைக் கண்டதும், கண் கலங்கி நின்றதும், அப் பறவைவேந்தன் பரிந்து இறந்ததும், உருகி அழுது கருமம் புரிந்ததும், மறுகி வந்து கிட்கிந்தையை அடைந்ததும், தன்னைக் கண்டதும், சுக்கிரீவனை நட்புக் கொண்டதும், பக்கபலம் சேர்ந்ததும் ஆகிய வரலாறுகளை வரன்முறையே மாருதி உரைத்தருளினன்.

தன்பால் தன் நாயகன் கொண்டுள்ள அன்புருக்கத்தைச் சீதைக்கு நன்கு அறிவுறுத்தினன். குடிசையில் உங்களைக் காணா

மையால் உயிரே போய்ப் பரிதவிக்கும் உடலே போல் காடும் மலையும் கடுகியலைந்து மறுகி யுழன்றுள்ள அந்த உயிர்த் துடிப்புகளை வெறும் உரைகளால் உரைக்க இயலாது எனச் சுருக்கி முடித்தான். ஆண்டவன் காணாமல் அலமந்து உருகி நிற்கும் திருவுருவை அடியேன் கண்டேன்; முடிவுகளை முடிவாக அறிந்தேன் என்று நெடிது மொழிந்தான்.

தேண்டிநேர் கண்டேன் வாழி தீநிலன் எங்கோன் ஆகம்
பூண்டமெய் உயிரே போகப் பொய்உயிர் போல நின்ற
ஆண்டகை நெஞ்சில் நின்றும் அகன்றிலை அழிவுண்டாமோ
ஈண்டுநீ இருந்தாய் ஆண்டு அங்கு எவ் வுயிர் விடும் இராமன்?

துணை பிரிந்த பின் இராமன் இருந்துள்ள நிலைமையைச் சீதையிடம் அனுமான் இங்ஙனம் கூறியுள்ளான்; இந்த அழகு மொழிகளை விழி களிப்ப நோக்கி வியந்து சிந்திக்கின்றோம். உழுவலன்புடைய தனது நாயகனது உயிர்க் கிழமையை மொழிகள் தோறும் தெளிவாக்கி வருகின்றான். எவ்வகையிலும் பிராட்டி உய்வகை தெரிந்து உவந்துகொள்ள உரைகள் விளைந்து வருகின்றன.

சீதை என்னும் பெயரோடு வேறு ஒரு உருவமாக மருவியிருப்பினும் அது இராமனுடைய உயிரே என உணர்த்தியிருக்கின்றான். உரிமையுவகைகளை விளைத்து மொழிகள் விழுமிய நிலைகளில் ஒளி செய்து மிளிர்கின்றன.

தன்னைப் பிரிந்தபின் உயிர் பிரிந்த உடல்போல் தனது நாயகன் துயருழந்துள்ளதை உளம் தெளிய வெளி செய்தான். “பூண்ட மெய் உயிரே போகப் பொய் உயிர் போல நின்ற ஆண்டகை” என இராமனை ஈண்டுக் காட்டியிருக்கும் காட்சியைக் கண் ஊன்றிக் காணுகின்றோம். இந்தத் தேவியைப் பிரிந்த பின் அந்த ஓவிய அழகன் உருக்குலைந்து உழன்று வருவதை இடங்கள் தோறும் உணர்ந்து வருகிறோம். அரிய அன்புருவங்கள் தெரியநின்றன.

அருமை மனைவியின் பிரிவு பரிதாப நிலையில் பெருகியுள்ளமையை உருவகமாக்கி விளக்கினான். ஆவியும் தேவியும் பாவனைக்கு வந்தன. ஈருடலுள் ஓருயிர் நேர் மருவியுளது.

பிரிவுத் துயரம் மரண வேதனையினும் கொடியது அதனை நெடிது சகித்திருக்க முடியாது. தேவி பிரிந்தாள் என்ற போதே ஆவி பிரிந்து போயிருக்கும்; அங்ஙனம் போகாமல் இதுவரை

உயிர் உடலில் நிலைத்திருத்தற்குக் காரணம் என்னை? எனக் கருதி வினவுவார்க்கு இறுதி அடியில் உறுதியாக விடை வந்துளது.

ஈண்டு நீ இருந்தாய்! ஆண்டு இராமன் எவ்வுயிர் விடும்?

சீதையிடம் அநுமான் இப்படி வித்தக விநயமாய் வினவியிருக்கிறான். உரையாடுந்திறம் உணர்வு சுரந்து திகழ்கின்றது.

இராமனுடைய உயிராகிய நீங்கள் இங்கே இருக்கும் பொழுது அவர் அங்கே எந்த உயிரை விடுவார்? அம்மா! என்ற இந்த நனின வாசகம் சீதையின் உள்ளத்திற்கு எவ்வளவு இன்பத்தை விளைத்திருக்கும்! துன்பத்தில் துவண்டு கிடந்த பதிவிரதைக்குச் சீவ அமுதங்களாய் இராம தூதன் மொழிகள் ஈண்டு வெளி வந்துள்ளன. உளம் உவந்து தெளிய ஓர்ந்து பேசுகிறான்

தன் பிராண நாயகனுடைய பிராணன் என்று தன்னை வரைந்து காட்டியிருக்கும் காட்சியை மானசக் கண்ணால் நோக்கி நோக்கிப் பெண்ணரசி பேரானந்தம் அடைந்திருக்க வேண்டும்.

தன்னைக் கருதி வாராமல் கைவிட்டுப் போய் விடுவாரோ என்று மறுகியுழலுகின்ற உள்ளத்திற்குத் தெள்ளமுதமாக உரைகளை ஊட்டியருளினான். பிரிவிலுள்ள இரண்டு புனித உயிர்களையும் ஒருங்கே சேர்த்துக் காண்பதே தனது பிறவிப் பயனுக அநுமான் கருதியுள்ளமையைக் கருமங்கள் காட்டி வருகின்றன.

தன்பால் அன்பு மண்டி இராமன் தன்புழந்திருக்கும் நிலைகளை எல்லாம் நன்கு சொல்லி முடித்தான். உள்ளத்திலிருந்த சோகங்கள் எல்லாம் ஏகமாய் ஒழிந்தன; பிராட்டி பெரு மகிழ்ச்சி அடைந்தாள். தன்னுடைய இன்னுயிரை இனிது உதவிய அந்தப் புண்ணிய வீரனை உவந்து நோக்கினாள். நாயகனுடைய உரிமையை நினைந்து இத் தூயவள் உருகினாள்.

என்புற உருகினள்; இரங்கி ஏங்கினள்;
துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்,

தன் அருமைக் கணவன் பிரிவுத் துயரில் மறுகியுள்ளமையை அநுமான் வாய்மொழியால் அறிந்த பொழுது சீதை இவ்வாறு பரிதபித்திருக்கிறாள். உருக்கம், ஏக்கம், துன்பம், உவகை என்னும் இவ் வுள்ளுணர்ச்சிகளை ஒருங்கே நோக்கி உயிர் நிலையை உணர்ந்து கொள்ளுகின்றோம். நாயகனை எப்பொழுது காண்போம்

என்ற ஏக்கமும், எப்படியும் வந்தருளுவார் என்ற உவகையும் ஒருங்கே பொங்கியிருக்கின்றன. சுமந்த என்றது எண்ணங்களின் பாரங்களைக் கண் எதிரே காட்டிக் கதி நிலையை விளக்கியது.

## உருவம் காட்டியது.

ஆருயிர்த் துணையின் பேர் எதிர் உரைத்துப் பேருதவி புரிந்த மாருதியைச் சானகி உரிமையுடன் உவந்து நோக்கி "நெடிய கடலை எப்படிக் கடந்து இங்கே வந்தாய்?" என்று இப்படி வியந்து கேட்டாள். இந்தக் கேள்விக்கு அனுமான் சொன்ன பதில் என்ன? அயலே வருகின்றது.

கருங்கிடை! உன் ஒரு துணைவன் தூயதாள்
ஒருங்குடை உணர்வினோர் ஓய்வில் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்
கருங்கடல் கடந்தனென் காலினால் என்றான்.

சிறிய உருவினையுடைய நீ அரிய பெரிய கடலை எவ்வாறு கடந்து வந்தாய்? என்று தேவி வியப்போடு வினவியதற்கு மாருதி இவ்வாறு விடை கூறியுள்ளான்.

இராமனுடைய திருவடியை நினைந்தவர் பிறவிக் கடலைக் கடந்து பேரின்பமுத்தி காண்பதுபோல் நான் இந்த அலைகடலைக் கடந்து ஈண்டு வந்து அம்மையைக் கண்டேன் என அமைதியாகப் பதில் உரைத்திருக்கிறான். உரை உள்ளத்தை உணர்த்துகிறது.

தூயதாள் என்றது தன்னை உண்மையோடு கருதினவரைப் பரிசுத்தராக்கியருளும் பான்மை கருதி தூய்மையை மேவிய்ந்து நின்றவன் ஆதலால் அந்த வாய்மை ஈண்டு வந்தது.

அனுமானுடைய இராம பத்தியைக் காவியம் முழுவதும் கண்டு வருகிறோம். இதில் காட்டியுள்ள காட்சியைக் கருதியுணர்கிறோம். இராமசிந்தனை சீவ கோடிகளுக்குத் தேவ அமுதமாய்த் திவ்விய மகிமைகளை விளைத்து வருகிறது; அவ்வாறினை மருவினவர் பரம பாக்கியவான்களாகின்றனர்; மருவாதவர் பரிதாப நிலைகளில் மறுகியுழலுகின்றனர் என்னும் உறுதி யுண்மைகள் உணர வந்தன. பிறவி நீங்கிப் பேரின்பம் பெற உறவு கூறினான்.

பரிசுத்தமான பரம்பொருளே இராமன் என உருவம் கொண்டு ஈண்டு வந்துள்ளதாக உருகிய அன்புடன் அனுமான் கருதியுள்ளமையை உரைகளில் தெளிந்து கொள்கின்றோம்.

அதிசய வீரனை அனுமான் பரமபக்தனாய் நின்று காவிய நாயகனை யாண்டும் துதி செய்து வருகிறான். தூய தெய்வ சிந்தனை செய்து மாய மோகங்களைக் கடந்து உய்தி பெறுங்கள் என உலகத்தவர்க்கு உறுதி நலங்களை விநயமாகப் போதித்தருளுகிறான்.

தான் கருங்கடல் கடந்து வந்தது தன்னுடைய ஆற்றலினால் அன்று; இராமபிரானுடைய திருவருளினால் என்றது எவ்வளவு பொருள் பொதிந்த மொழி! எத்துணை அடக்கம்! எத்தகைய பணிவு! தத்துவ வித்தகம் உய்த்துணர வுற்றது.

"He mentally went to Lanka."

"அவன் மனோ வேகமாய் இலங்கைக்குச் சென்றான்" என அனுமான் கடல் தாவிப் போனதைக் குறித்து மேல்நாட்டுத் தத்துவ அறிஞரும் இங்ஙனம் கூறியிருக்கின்றார். மனதை அடக்கி ஆன்ம சித்தி பெற்றிருப்பவர் எதையும் எளிதாகச் செய்து விடுவர் என்பது இங்கே தெளிவாய் நின்றது. உள்ளம் புனிதமாய் உயரின் உயர் நலங்கள் வெள்ளமாய் வருகின்றன. ஆத்தும சத்தி அற்புத சித்தியாய் அதிசயங்களைச் செய்கிறது.

இராம நாம மகிமையால் கடல் தாவி வந்தேன் என அனுமான் இவ்வாறு கூறியும் சீதை தேறாமல் திகைத்தாள். இவ்வளவு சிறிய வடிவினையுடையவன் அவ்வளவு பெரிய கடலை எவ்வாறு தாண்டி வர முடியும்? என இவ்வாறு ஐயமும் வியப்பும் மீறி நின்றன.

"இத்துணைச் சிறியது ஓர் எண்ணில் யாக்கையை
தத்தினை கடல் அது தவத்தின் பாலதோ?
சித்தியின் இயன்றதோ? செப்புவாய்!"

என இப்படிக் கேட்டாள் கேட்கவே அனுமான் விசுவ உருவம் கொண்டு நேரே நின்றான். வானுற ஓங்கிநின்ற அந்த அற்புத வடிவத்தைக் கண்டதும் சானகி அச்சமும் திகிலும் கொண்டு அதிசயித்து நின்றாள். "அடங்கியருள் ஐயனே" என்று ஆவலோடு வேண்டினாள். அவன் ஒடுங்கி நின்றான். பிராட்டி புகழ்ந்து மகிழ்ந்தாள்.

இடந்தாய் உலகை மலையோடும் எடுத்தாய்
  விசும்பை இவை சுமக்கும்
படந்தாழ் அரவை ஒரு கரத்தால் பறித்தாய்
  எனினும் பயன் இன்றால்

நடந்தாய் இடையே என்றாலும் நாணும்
    நினக்கு நளிர் கடலைக்
கடந்தாய் என்றால் என்னாகும்
    காற்றேயன்ன கடுமையோய்! (1)

ஆழி நெடுங்கை ஆண்டகை தன்
    அருளும் புகழும் அழிவின்றி
ஊழி பலவும் நிலை நிறுத்தற்கு
    ஒருவன் நீயே உளையானாய்
பாழி நெடுந்தோள் வீரா! நின்
    பெருமைக்கு ஏற்பப் பகை இலங்கை
ஏழு கடற்கும் அப்புறத்த தாகா
    திருந்தது இழிபு அன்றோ? (2)

அறிவும் ஈதே! உருவும் ஈதே!
    ஆற்றல் ஈதே! அரும்புலத்தின்
செறிவும் ஈதே! செயலும் ஈதே!
    தேற்றம் ஈதே! தேற்றத்தின்
நெறியும் ஈதே! நினைவும் ஈதே!
    நீதி ஈதே! நினக்கு என்றால்
வெறியர் அன்றோ குணங்களால்
    விரிஞ்சன் முதலா மேலானோர் (3)

மின்னேர் எயிற்று வல்லரக்கர்
    வீக்கம் நோக்கி வீரற்குப்
பின்னே பிறந்தான் அல்லதோர்
    துணையில்லாத பிழை நோக்கி
உன்னை நினைறே உடைகின்றேன்
    ஒழிந்தேன் ஐயம் உயிர் உய்ந்தேன்;
என்னை நிருதர் என்னுவார் இவனை
    எங்கோன் துணை என்றால (4)

மாண்டேன் எனினும் பழுதன்றே
    இன்றே மாயச் சிறை நின்றும்
மீண்டேன்; என்னை ஒறுத்தாரைக்
    குலங்களோடும் வேர் அறுத்தேன்;
பூண்டேன் எங்கோன் பொலன் கழலும்
    புகழே அன்றிப் புன்பழியும்
தீண்டேன் என்று மன மகிழ்ந்தான்
    திருவின் முகத்துத் திருவன்னான். (5)

(உருக்காட்டு படலம், 109-113)

அனுமானுடைய திவ்விய நிலைமையைக் கண்டபின்பு சீதை இவ்வாறு உள்ளம் களித்து உவந்து பேசியுள்ளாள். அந்த உள்ளத்தில் எண்ணியிருந்த எண்ணங்கள் சில இவ் வுரைகளில் வெளியாகியுள்ளன. சமையம் நேரும் போது எவையும் தெரிய வருகின்றன. நினைவுகள் நிலைமைகளை விளக்கியுள்ளன.

பேச்சளவில் அனுமானைப் பார்த்து நின்றவள் செயல் நிலை தெரியவே வியப்பும் விம்மிதமும் மிகுந்து விளைவுகளை விழைந்து புகழ்ந்தாள். அரிய காட்சி பெரிய மாட்சிகளைத் தெரியச்செய்தது.

வானர வடிவில் வந்துள்ளவன் வானவர் எவரினும் மேலானவன்; எதையும் செய்ய வல்லவன்; அரிய கரும வீரன்; அறிவு ஆற்றல் அடக்கம் அமைதி அன்பு ஞானம் சீலம் வீரம் முதலிய குணகணங்கள் எல்லாம் இவனிடம் குடி புகுந்துள்ளன. பிரம தேவனும் பிரமை கொள்ளும்படி பெருமித நீர்மைகள் பெருகி நிற்கின்றன. இந்தப் பேராண்மையாளன் எனது பிராணநாயகனுக்கு இனிய துணையாய் அமைந்துள்ளான். கொடிய அரக்கர் திரள்கள் நெடிது பெருகியுள்ளனவே; அளவிடலரிய படைகளோடு எதிரி நிற்கின்றானே; நெடிய கடல் இடையே தடையாய்க் கிடக்கின்றதே; உரிமைத் தம்பியைத் தவிர என் நம்பிக்கு வேறு துணை யாரும் இல்லையே! என இன்னவாறு இன்னலுழந்து இரங்கி யிருந்தேன். இன்று உன்னைக் கண்டேன்; என் கவலைகள் எல்லாம் அடியோடு குடிவாங்கிப் போயின. பிரமாண்டங்களுக்கு அப்பால் கொண்டு போய் என்னைச் சிறை வைத்திருந்தாலும் உன்னைத் துணையாப் பெற்ற என் நாயகன் எனை எளிதே மீட்டுக் கொள்ளுவான். நான் உயிர் பிழைத்தேன்; பழி நீங்கிப்புகழ் ஓங்கினேன்; ஐயோ! துன்பம் தாங்க மாட்டாமல் நெஞ்சம் உடைந்து கொஞ்ச நேரத்திற்கு முன் செத்துப் போகப் பார்த்தேனே! தற்கொலையாய் நான் இறந்திருந்தால் என்கதி என்னும்? என் நாயகனைக் கண்டு மகிழ்ந்து அந்தப் புண்ணிய மூர்த்தியோடு கூடிவாழும் படியான பெரிய பாக்கியத்தை எனக்கு நீ அருளியிருக்கிறாய்! புகழும் புண்ணியமும் நல்கி உயிரை உதவியுள்ள உன்னை நான் என்ன சொல்லிப் புகழுவேன்? என இங்ஙனம் உவகை மீதூர்ந்து கூறி உள்ளம் பூரித்து நின்றாள்.

தன் நாயகனுக்கு உரிமைத் துணையாய் வாய்த்துள்ள அருமையாளனைச் சீதை கருதி மகிழ்ந்துள்ள காட்சிகளை உரைகளில் கண்டு உவகை மீக்கூர்கின்றோம். புனிதமான மெல்லிய உள்ளம் இனிது உருகி உரிமை பாராட்டியிருப்பது தனி மகிமையாய்த் தழைத்து நிற்கிறது.

இராமன் புகழை ஊழி காலமும் அழியாமல் நிலை நிறுத்துவதற்கு இவன் ஒருவனே போதும் எனப் பெருமகிழ்ச்சி கூர்ந்து அருமை மாட்சிகளை அன்பு மீதூர்ந்து கூறினாள்.

பாழி நெடுந்தோள் வீரா!

என்று அனுமானை ஆர்வத்தோடு ஈண்டு விளித்தது அவனது அற்புத நிலைகளை மீண்டு மீண்டு கண்டு வியப்பு மீதூர்ந்து வந்தது. சிலர் கலைஞானியாயிருப்பர்; போர் முறைகளில் யாதும் இயலாதவராய் அயல் ஒதுங்கி நிற்பர். பேச்சிலும் செயலிலும் குணத்திலும் அறிவிலும் பண்பிலும் அன்பிலும் யாதும் எல்லை காண முடியாதபடி உன்னத நிலையில் உயர்ந்து நிற்கிறான். கருமவீரன், தருமவீரன், கல்விவீரன், சொல்வீரன், தானவீரன், தயவீரன், மானவீரன், ஞானவீரன், போர்வீரன் என இவ்வாறு எல்லாவகையிலும் பேர்பெற்று நிற்றலை வீரா! என்னும் ஒரு மொழியால் நுணுகியுணர்ந்து பெரிதும் உவந்து கொள்ளுகின்றோம்.

அரிய ஒரு திவ்விய புருடன் எம்பெருமானுக்கு உரிய துணையாய்க் கிடைத்துள்ளான் என உள்ளம் பூரித்து உவகை பரித்து உறுதி யூக்கங்கள் பெருகியுள்ளன.

என்னே நிருதர் என்னுவார்?
இவனே எங்கோன் துணை என்றால்!

அனுமான் துணை கிடைத்துள்ளமையால் அரக்கர் குலத்தை இராமன் எளிதே அழித்து விடுவான் என்று பிராட்டி உள்ளம் களித்துள்ளமையை இது உணர்த்தியுள்ளது.

அஞ்சா நெஞ்சமும் அடலாண்மையும் வஞ்சக வினைகளும் வலிய போர் முறைகளும் நன்கு பழகி எங்கும் வெற்றியாளராய் வீறுகொண்டு வாழ்ந்து வருபவர் ஆதலால் அரக்கர்களைக் குறித்து இடையிடையே சீதை சிறிது அஞ்சியிருந்தாள். அந்த அச்சம் அனுமானைக் கண்டபின் இன்று அடியோடு நீங்கியது.

இராம விரோதியான இராவணனும், அவனுடைய குலமும் இனி உலகில் இராவண்ணம் செய்ய இவன் ஒருவனே போதும் என உறுதி பூண்டு ஊக்கமடைந்தாள். நெடிய சலக் கடலைக் கடந்து வந்தவன் கொடிய குலக் கடலையும் அடியோடு தொலைத்து விடுவான் எனக் குதூகலித்தது பகைத் துயர்களின் மிகைகளை வகையாய் விளக்கி நின்றது.

பொல்லாத இனம் பொன்றி மடியும் என்று நல்லாள் மனம் ஒன்றி உவந்தது. அல்லலுழந்து அழிதுயர்களில் அழுந்தி இருந்தவள் ஆதலால் நல்ல ஆதரவைக் கண்டவுடன் உள்ளம் களித்தது. உவகை பொங்கி எழுந்தது. அம்மகிழ்ச்சி நிரைகள் ஓரளவு உரைகளில் வெளி வந்தன.

மாயச் சிறைநின்றும் இன்றே மீண்டேன்;
எங்கோன் பொலன் கழலும் பூண்டேன்.

சீதை கருதி மகிழ்ந்துள்ள உறுதிநிலைகள் இங்ஙனம் பெருகி வந்துள்ளன. அப்பொழுதே தனக்கு விடுதலை கிடைத்து விட்டதாக நெடிது களித்துள்ளாள். சூரியனைக் கண்ட பொழுது இருள் ஒழிந்து போதல் போல் அனுமானைக் கண்டவுடனே துன்ப இருள் நீங்கி இன்பஒளி ஓங்கி இனியகாட்சிகள் பெருகி நின்றன.

சிறை மீண்டேன்; எங்கோன் கழல் பூண்டேன் என்ற இந்த வாசகம் அந்த உள்ளத்தின் ஆசைத் தேக்கத்தையும் ஏக்கத்தையும் அயலறியச் செய்தது. சிறைப்பட்ட நீர் அணை உடைந்தவுடன் அதி வேகமாய்க் கடலை அடைந்து கொள்ளுகிறது; அதுபோல் சிறையில் அகப்பட்டுள்ள சீதை தடை நீங்கியதும் குணக் கடலாகிய இராமனை அடைந்து கொள்ளலாம் என்று உள்ளம் விரைந்து நிற்கின்றாள். நதி நீர்க்குக் கடல்போல் இச் சதிக்கு இராமனே கதியாம்; கழல் என்றது வீரக் கழல் புனைந்துள்ள அந்தத் திருவடியின் நீர்மையைக் கூர்மையாக உணர்ந்து கொள்ள வந்தது. பதியின் பால் கொண்டுள்ள பாசம் தெய்வ பத்தியாய்த் தேசு மிகுந்துள்ளது. உயர்ந்த குலக் காதல் உள்ளன்பு சுரந்து பெருந்தன்மை நிறைந்து திருந்தியபண்போடு சிறந்து திகழ்கிறது.

அன்பும் அறமும் எனச் சீதையும் இராமனும் பண்பும் பயனும் படிந்து இசைபட அமர்ந்துள்ளமையால் உலகிலுள்ள சதிபதிகளுக்கெல்லாம் தலைமை அதிபதிகளாய் நிலவியுள்ளனர்.

மீளும் முன்னரே மீண்டேன் என்றது உறுதியும் தெளிவும் தெரிய வந்தது. துயரில் ஆழ்ந்து உயிர் சோர்ந்திருந்தவள் உள்ளம் தெளிந்து பேரின்ப வெள்ளமாய்த் துள்ளியிருக்கிறாள். மாருதி வரவு ஆருயிர்க்கு அமிர்தமாய் அருள் புரிந்துள்ளமையால் அவலக் கவலைகள் எல்லாம் நீங்கி ஆனந்தம் ஓங்கியுள்ளது.

வேலா யுதன்தந்தை ஆரூரர் வீதி விடங்கர் வெற்பில்
கோலார்நறுந்தழைகைக்கொண்டுஎன் ஆருயிர்கொண்டிருந்தேன்
பாலாழி தந்த மலர்ச்சீதை அஞ்சனை பாலன்தந்த
மாலாழி கைக்கொண்டு மாலாழி கைவிட்ட வாறென்னவே.

(திருவாரூர்க் கோவை)

இது பிரிவில் தேறியிருந்த ஒரு தலைவி கூறியது. அனுமான் தந்த கணையாழியைக் கண்டு சீதை கவலை தீர்ந்து தெளிந்தது போல் காதலன் உதவிய தழையைக் கொண்டு துயர் நீங்கி யிருந்தேன் எனத் தன் பாங்கியிடம் காதலி இவ்வாறு கூறி யுள்ளாள். மால்ஆழி இரண்டனுள் முன்னது இராமனது மோதிரத்தையும், பின்னது மயக்கமாகிய கடலையும் குறித்தது. துயரக் கடலைக் கடந்து சுகக் கடலில் திளைக்கும்படி தன் காதலன் மோதிரத்தைக் காட்டிச் சீதைக்கு அனுமான் ஆதரவு அருளியுள்ளமையைக் காதலர் உலகமும் இங்ஙனம் கருதிப் புகழ்ந்துள்ளது.

தன் இன்னுயிரை இனிது உதவிய புண்ணிய வீரனை அனுமானை இப் பெண்ணரசி பெரிதும் வியந்து புகழ்ந்து கூறவே அப் பெருந்தகை உள்ளம் நாணி உரிமையோடு வணங்கி நின்றான்.

## படைத் துணையை விளக்கியது.

தன்னைக் குறித்து உறுதி கொண்டு உவகை மண்டி நிற்றலைக் கண்டதும் அனுமான் மேலும் சானகிக்கு ஆறுதலும் தேறுதலும் கூறினான். 'அம்மா! என்னைப் பெரிதாக நினைந்து புகழ்கிறீர்கள்; நான் மிகவும் சிறியவன்; என்னைக் காட்டிலும் எவ்வளவோ பெரியவர்கள் திரண்டிருக்கிறார்கள். அந்தச் சேனைத் திரளில் நான் ஒரு சின்ன ஊழியன்; எம்பெருமானுடைய குறிப்பறிந்து காரியம் புரியும் வானர வீரர்களை நீங்கள் நேரே பார்த்தால் பேரானந்தம் அடைவீர்கள்; எண்ணரிய படைத் துணைகள் கிடைத்திருக்கின்றன" என்று அப்பெண்ணரசி எண்ணி மகிழும்படி கண்ணியமாக எடுத்துக் கூறினான்.

அண்ணற் பெரியோன் அடி வணங்கி
அறிய உரைப்பான் அருந்ததியே!
வண்ணக் கடலின் இடைக்கிடந்த
மணலிற் பலரால் வானரத்தின்
எண்ணற் கரிய படைத்தலைவர்
இராமற்கு அடியார்; யான் அவர்தம்
பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன்
ஏவக் கடவ பணி செய்வேன்.

வெள்ளம் எழுபத்துளதால் வீரன் சேனை இவ்வேலைப்
பள்ளம் ஒருகை நீரள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ?
கள்ள அரக்கர் கடி இலங்கை காணாது ஒழிந்ததால் அன்றோ
உள்ள துணையும் உளதாவது; அறிந்த பின்னும் உளதாமோ?

பிராட்டி உள்ளம் தெளிந்து உவகையுறும்படி பலவகை நிலைகளையும் நளினமாக விளக்கி அனுமான் இனிது பேசி வருகிறான். உரைகள் எல்லாம் உறுதி நலங்களை உரிமையாக உணர்த்தி வருகின்றன. அதிமேதையினுடைய உள்ளக் குறிப்புகள் சொல்லின் வழியே சுவை சுரந்து துள்ளுகின்றன.

கடல்மணலினும் பலர் என்றது படைகளின் மிகுதி தெரிய

சேனைத் தலைவர்கள் யாவரும் இராமனுக்குக் குடி அடிமைகள் என்றது அவர்களுடைய அன்புரிமைகளையும் ஆதரவுகளையும் நன்கு தெரிய. அந்தக் கூட்டத்தில் நான் மிகவும் கடைப்பட்டவன் எனத் தன்னை இன்னவாறு மாருதி குறைத்துச் சொன்னது தேவி தேறுதலாய் ஆறுதலடைய.

ஏவக் கடவ பணி செய்வேன்.

என்றது எவ்வளவு பணிமொழி! "எளிய பணியை மாத்திரம் செய்கிற சிறிய ஏவல்வழியன் நான்; ஏவாமலே குறிப்பறிந்து எம்பெருமானுக்கு அரிய காரியங்களை முடிக்க வல்ல பெரியோர்கள் பலர் இருக்கின்றனர். உள்ளவர்களில் கடையனான என்னைத் தொழிலில் ஊக்கி ஆண்டவன் அளி புரிந்துள்ளார்" எனப் பணிவும் பண்பும் சூழில் செய்து திகழ இனிது மொழிந்தான். தன்னை இன்னனம் தாழ்த்திச் சொன்னது அன்னையின் உள்ளம் உறுதி கொண்டு உரிமை கண்டு உயர்ந்து கொள்ள என்க

கள்ள அரக்கர் உளதாவது காணாது ஒழிந்ததால்.

இலங்கை இன்ன இடத்தில் இருக்கிறது என்று என் குல வீரர்களுக்குத் தெளிவாகத் தெரியாமையினாலேதான் இது வரையும் அரக்கர் குலம் உயிர் வாழ்ந்துள்ளது தெரிந்திருந்தால் இதற்கு முன் அடியோடு அழிந்து போயிருக்கும்

அறிந்த பின்னும் உளதாமோ?

என இனிது வினவியது நிலைமைகளை எதிர் நினைந்து தெளிய.

ஓகாரம் எதிர்மறையாய் உறுதியை உணர்த்தியது. இலங்கை உள்ள இடத்தை வானரர்கள் அறிந்தபொழுதே அது பாழாய் அழிந்தது என்று தெரிந்து கொள்ளுங்கள் எனத் தெளிவுறுத்தினன். நான் மீண்டு போய்ச் சொல்ல வேண்டியதுதான் தாமதம்; அரக்கர் குலம் மாண்டு தொலைந்தது என்று பிராட்டியின் மனம் தெளிய இந்த ஆண்டகை இன்னணம் ஆதரவு கூறினன்

தீயவர்களுடைய அழிவு நிலையில் இத் தூயவன் உள்ளம் துடித்து நிற்றலை உரை ஒலிகளால் நுனிந்து உணர்ந்து கொள்கிறோம். சீதையைத் தேடிக் கண்டு செய்திகளைச் சொல்ல வந்தவன் உய்தி நிலைகள் பலவும் கூறுகின்றான். அரக்கர் குலத்தைக் கருவறுக்க இராமன் அவதரித்து வந்துள்ளது போல அனுமானும் உதவியாய் வந்திருக்கலால் அந்த இனத்தின் மீது தன்னை அறியாமலே சினமும் சீற்றமும் பெருகி எழுந்து சீறுகின்றன. பெரிய காரியங்களை முடிக்க வந்திருத்தலால் அந்த வாசனைகள் உள்ளத்தில் பதிந்து உரைகள் மூலம் வெளியே ஒளி வீசி வருகின்றன. கரும சாரங்கள் மருமங்களாயுள்ளன

எந்தக் காரியத்தை முடிக்க வந்திருக்கிறானோ அந்தக் காரியத்திலேயே எப்பொழுதும் ஒருவனுடைய சிந்தனை ஓடிக் கொண்டிருப்பது மானச மருமமாய் மருவியுள்ளது. பெரிய உள்ளங்கள் பெரிய காரியங்களையே உள்ளித் துள்ளுகின்றன.

"From a great heart secret magnetisms flow incessantly to draw great events." (Emerson)

"பெரிய இருதயம் அரிய காரியங்களை முடிக்க அதி ரகசியமாய் ஓயாமல் ஓடிக் கொண்டிருக்கிறது" என்னும் இது இங்கே நாடி அறிய வுரியது. கரும நாட்டம் கரும நீட்டமாயுள்ளது.

தன் உள்ளத்தில் பதிந்துள்ள எண்ணங்கள் அனுமானுடைய வாய்மொழிகளால் இங்கே வையம் காண வந்துள்ளன.

பிராட்டியின் உள்ளத்தைத் தேற்றி உறுதியை ஊட்ட உரையாடி வந்தாலும், தன்னுடைய உள்ளக் கிடக்கைகள் துள்ளி முன் வருகின்றன. எண்ணங்கள் எல்லாம் தரும நலம் தழுவிக் கரும நிலைகளாக கதுவி மிளிர்கின்றன.

கொடியவர்கள் அழிந்து படுவர்; பகை இலங்கை பாழாம்; சிறை நீங்கி நீங்கள் இறைவனை விரைந்து அடைந்து கொள்ளலாம் என்னும் குறிப்போடு உரையாடி வந்தவன் முடிவில் வேறுஒன்று துணிந்தான் உள்ளம் துணிந்ததை உரிமையோடு சொல்லினன்.

கொண்டு போகக் குறித்தது.

தூதனாய்க் கண்டு போக வந்தவன் கண்ட பின் கொண்டு போக எண்ணினான். அவலச் சிறையில கவலையோடு பேதுறும் பிராட்டி இருப்பதை அநுமான் சகிக்கவில்லை. எப்படியாவது கையோடு கொண்டு போய்விட வேண்டும் என்று கருதித் துணிந்தான். தன் கருத்தை உரைத்தான். தான் கருதிய உறுதியைச் சீதையிடம் இப்போதை கூறிய பொழுது வீர நீர்மைகள் வீறு கொண்டு வீசியுள்ளன. பெண்ணரசி யாதும் கலங்காமல் உள்ளம் தேறி விரைந்து இசைந்தருள உரைகள் விளைந்து வந்தன.

பொன்திணி பொலன்கொடி! எனமென்மயிர் பொருந்தித்
துன்றிய புயத்து இனிதிருக்க துயர்விட்டாய்
இன்துயில் விளக்கஓர் இமைப்பின் இறைவைகும்
குன்றிடை யுனைக்கொடு குதிப்பென் இடைகொள்ளேன்

அறிந்திடை அரக்கர் தொடர்வார்கள் உளராமேல்
முறிந்துதிர நூறி எதிர் என்சினம முடிப்பேன்;
நெறிந்த குழலை நின்னிலைமை கண்டு நெடியோன்பால்
வெறுங்கை பெயரேன் ஒருவராலும் விளியாதேன். (2)

இலங்கையொடும் ஏகுதிகொல் என்னினும் இடந்துஎன்
வலங்கொள்ஒரு கைத்தலையில் வைத்துஎதிர் தடுப்பான்
விலங்கினரை நூறி வரிவெஞ்சிலையினோர்தம
பொலன்கொள்கழல் தாழ்குவென் இதுஅன்ன பொருளன்றால்.

அருந்ததி உரைதி அழகற்கு அருகு சென்று உன்
மருந்தனைய தேவிநெடு வஞ்சர்சிறை வைப்பில்
பெருந்துயரினோடுமொரு வீடுபெறல் இல்லாது
இருந்தனள் எனப்பகரின் என்அடிமை என்னும்? (4)

இருக்குமதில் சூழ்கடி இலங்கையை இமைப்பின்
உருக்கி எரியா இகலரக்கரையும் ஒன்று
முருக்கி நிருதக்குலம முடித்து வினைமுற்றிப்
பொருக்க அகலகென்னினும அது இன்று புரிகின்றேன்,

இந்துநுதல் நின்னெடிவண் எய்தி இகல் வீரன்
சிந்தையுறு வெந்துயர் தவிர்ந்து தெளிவோடும்
அந்தமில அரக்கர் குலம அற்றவிய நூறி
நந்தலில புவிக்கணிடா பிறகளைதல் நன்றால். (6)

வேறினி விளம்பவுள தன்று விதியாலிப்
பேறுபெற என்கண அருள் தந்தருளு பின்போய்
ஆறுதுயர்; அஞ்சொலிள வஞ்சி, அடியன் தோள்
ஏறுகடிது என்று தொழுது இன்னடி பணிந்தான். (7)

(சூளாமணிப்படலம், 3-10)

வீர மாருதியினுடைய சீர்மை நீர்மைகளையும் ஆர்வ நிலைகளையும இங்கே விழைந்து நோக்கி வியந்து நிற்கின்றோம். சிறையிலிருந்து சீதையை விரைவில் கொண்டு போய் இராமனிடம் சேர்த்துவிட வேண்டும் என்று இவ் வீரன் வீறு கொண்டுள்ளமையை உரைகள் தேசுற காட்டியுள்ளன. விரைந்து இசைந்தருளும்படி பேரன்போடு பிராட்டியை வேண்டியிருக்கிறான். உள்ளத் துணிவுகளை தெளளத் தெளிய விளக்கி உறுதியூக்கங்களை விளைத்திருப்பது கருதியுணர வுரியது.

"அம்மா! அடிமை ஒரு வேண்டுகோள் புரிகிறேன்; அருள் புரிந்து இசையுங்கள்: தங்களை எடுத்துக் கொண்டு போய் எம் பெருமானிடம் சேர்க்க விருமபியுளளேன்; நீங்கள் யாதும் கவலாமல் என் பிடர் மீதமர்ந்து சிறிது பொழுது கண்மூடி யிருங்கள்; மதங்க மலையில இராமபிரானிடம் சேர்த்து விடுகிறேன்; இடையே அரக்கர் திரள்கள் மூண்டு எதிர்க்குமாயின காற்றில் எதிர்ப்பட்ட செத்தைகள் போல அத்தனை பேரும் செத்துக் கடலில் உதிர்ந்து படுவர்; என் உடலில் யாதொரு ஊறும் நேராது; இலங்கையை அடியோடு பெயர்த்து எடுத்துக் கொண்டு போ என்றாலும் அவ்வாறே செய்கிறேன்; இராட்சச சக்கரவர்த்தியான இராவணன் முதல் அரக்கர் குலத்தையெல்லாம் ஒருங்கே கொன்று தொலைத்து நகரைப் பெயர்த்துக் கடலில் எறிந்து விட்டு அப்புறம செல் எனினும் அப்படியே ஆற்றுகிறேன்; அன்னையே!

—உங்களை இன்னமும் இங்குத் தனியே விட்டு நான் வெறுங் கையோடு போய் அப் பெருந்தகையிடம் செய்திகளை மட்டும் சொல்லி நிற்பது மிகவும் சிறுமையாம்; நீங்கள் அந்த வீர மூர்த்தியை அடைந்தபின் மீண்டு படை எடுத்து வந்து இலங்கையை எளிதே அழித்து விடலாம்; எப்படியும் இப்பொழுது போய் விடுவதே நல்லது; அடியேன் தோளில் எழுந்தருளி யிருங்கள்" என இவ்வாறு கூறித் தலை வணங்கி நின்றான்.

அனுமானுடைய அன்புரிமை, அறிவு நலம், ஆற்றல் நிலை, கரும வீரம் முதலியன இங்கே அதிசய நிலையில் பெருகி மிளிர்கின்றன. எவரும் கருதி மருளத் தக்க அற்புத காரியங்களை அதி சுலபமாகச் செய்து முடிக்க இவ் வீரன் துடித்து நிற்பது விசித்திர வியப்பாய் விரிந்து நிற்கிறது. ஆண்டவனுடைய தேவியை மீண்டு கையோடு கொண்டு போய்விட வேண்டும் என்னும் ஆவல் இவன் உள்ளத்தில் நீண்டுள்ளமையால் அதற்கு வேண்டிய வகையில் விநய மொழிகள் விளைந்து வந்தன.

இன் துயில் விளைக்கஓர் இமைப்பின் இறைவைகும்
குன்றிடை உனைக்கொடு குதிப்பென்; இடைகொள்ளேன்.

சானகியை நோக்கி மாருதி இங்ஙனம் கூறியிருக்கிறான்.

இறை வைகும் குன்று என்றது இராமபிரான் தங்கியிருக்கிற மதங்க மலையை. என் தோளில் அமர்ந்து கொஞ்ச நேரம் சுகமாய்த் தூங்கிக் கொண்டிருங்கள் என்று வேண்டியிருக்கிறான். மென் மயிர் பொருந்தி என்றது மெல்லிய பஞ்சு மெத்தை போல் மிருதுவாய் இருக்கும் என்பதைத் தெரியப் படுத்தினன். கடலைத் தாவி ஆகாய மார்க்கமாய் விரைந்து செல்லும் பொழுது வேகத்தைக் கண்டு மனம் கலங்காமல் இருக்கும் பொருட்டுக் கண்ணை மூடிக் கொள்ள வேண்டினன். கண் மூடித் திறக்கு முன் கொண்டு போய்ச் சேர்த்து விடுவேன் என்பான் இமைப்பின் குதிப்பென் என்றான். கதி வேகம் மதி வேகம் கடந்தது.

ஒரு மணிக்கு ஆயிர மைல் வேகத்தில் செல்லத் தக்க ஆகாய விமானமும் மாருதி எதிரே மானமிழந்து இழிந்து நிற்கும் என்பதை வான வூர்தியாளர் எவரும் ஈண்டு நாணம் மீதூர்ந்து காண்பர். இந்த யோக சித்தனுடைய வேக சத்திகள் வெறுமை யூகங்களால் அளந்து காண முடியா. திவ்விய மகிமைகள் யாவும் எவ்

வழியும் இவனிடம் செவ்வையாய் விளங்குகின்றன. பிரமசிருட்டி போலவே தான் கருதியபடியெல்லாம் இக் கவி சிருட்டித்துக் காட்டுகிறான். இந்தக் கருமவீரனுடைய அற்புத ஆற்றல்களை மானச வுலகமும் மனித வுலகமும் வியந்து போற்றி வருகின்றன.

நூறு யோசனை தூரத்தையும் கண்ணை மூடித் திறக்கு முன்னரே சானகியைச் சுமந்து கொண்டு வான வீதி வழியே கடந்து போய்விடுவதாக இவன் மொழிந்திருப்பது வியந்து சிந்திக்கத் தக்கது. ஆத்தும சத்தியின் அற்புத நிலைகள் அளவிடலரியன. எல்லை காண முடியாத அதிசய ஆற்றல்கள் கதி வேகங்களோடு கலந்து விதி முறைகளாய் இவனிடம் விளங்கி நிற்கின்றன.

ஏதோ இந்திர சாலமான மாய வேலை செய்வது போல் மாருதி மொழிகள் இங்கே வெளி வந்துள்ளன. அரிய மகானுடைய உரைகளை உரிய பொருள்களோடு ஊகித்து உணர வேண்டும். வடிவில் வானரன் ஆயினும் வானவர் எவரினும் மேலான ஞான சீலங்களை மருவியுள்ளான். பஞ்ச பூதங்களில் ஒன்றான வாயுவின் அமிசம் ஆதலால் வான வீதியில் வாயு வேகமாய்ப் பாய்ந்து போகும் நீர்மை இம் மான வீரனுக்கு இயல்பாக வாய்ந்திருக்கிறது. பிறவி வாசனை பேச்சில் பெருகி வீசுகின்றது.

ககன மார்க்கமாய்த் தான் தாவிப் போகும் பொழுது இடையே எதிர்ந்து அரக்கர்கள் தடுத்தால் அவர் நீறுபட்டு அழிவர் என்று கூறியிருப்பதில் வீர ஒளி வீறு கொண்டுள்ளது.

அரக்கர்களுடைய அடலாண்மைகளையும் ஆற்றல்களையும் இவன் யாதும் மதிக்கவேயில்லை. அவர்களைத் திரணமாகவே கருதியிருக்கிறான். யாண்டும் கலங்காத நெஞ்சனாய் இவன் துலங்கி நிற்கிறான். அரக்கர் குலங்களோடு இலங்கை நகர முழுவதையும் அகழ்ந்தெடுத்துக் கொண்டு போய் இராமபிரான் முன்னிலையில் வைப்பேன் என்று தன்னிலையை விளக்கினான்.

அன்னை! இது பொருள் அன்று.

மேலே குறித்த காரியங்களைச் செய்வது எனக்கு ஒரு பொருள் அன்று; மிகவும் எளிதாம் எனத் தனது அதிசய ஆற்றலைத் தேவி தெரிந்து கொள்ள இங்ஙனம் மொழிந்தருளினான்.

பெற்ற தாயிடம் பிள்ளை பேசுவது போல் உள்ளம் உருகிப் பேசி வருகின்றான் ஆதலால் அன்னை! என ஆர்வமீதூர்ந்து மரி

யாதையோடு விளித்தான். தன்னை நம்பித் தான் சொன்னபடி இசைந்தருளவேண்டும் என வணங்கி வழிமொழி கூறிவருகிருன்.

ஆண்டவன் தேவியை மீண்டு கொண்டு போய் விடுவதே அடிமைக்குஅழகாம் என முடிவு செய்து இவன் நெடிது வணங்கிக் கடிது விரைந்தான். தாயின் முன்னிய கன்று அனையான் என இவ் வென்றி வீரனைக் கவி இங்கே குறித்திருப்பது சுவை சுரந்து மிளிர்கின்றது. பண்புகள் இன்ப நீர்மைகளாய் இலங்குகின்றன.

இவனது அன்புரிமைகளையும்அதிசயஆற்றல்களையும் வியந்து மகிழ்ந்த சீதை விநயமாய் நயந்து மொழிந்தாள். பேசியுள்ள மொழிகள் உள்ளத்தின் வாசனைகளாய் வெளி வந்துள்ளன.

அரியதன்று நின் ஆற்றலுக்கு ஏற்றதே
தெரிய எண்ணினை செய்வதும் செய்தியே
உரிய தன்றென ஓர்கின்றது உண்டதென்
பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால். (1)

வேலையின் இடையே வந்து வெய்யவர்
கோலி வெஞ்சரம் நின்ஞெடும் கோத்தபோது
ஆலம் அன்னவர்க்கு அல்லை எற்கல்லையால்
சாலவும் தடுமாறும் தனிமையோய்! (2)

அன்றியும் பிறிதுள்ள தொன்று ஆரியன்
வென்றி வெஞ்சிலை மாசுறும் வேறினி
நன்றி என்பதம் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ? (3)

கொண்ட போரின் நும் கொற்றவன் வில்தொழில்
அண்டர் ஏவரும் நோக்கஎன் ஆக்கையைக்
கண்ட போரரக்கன் விழி காகங்கள்
உண்ட போதன்றி யானுளென் ஆவனோ. (4)

வெற்றி நாணுடை வில்லியர் வில்தொழில்
முற்ற நாணில் அரக்கியர் மூக்கொடும்
அற்ற நாணினராயின போதன்றிப்
பெற்ற நாணமும் பெற்றியது ஆகுமோ? (5)

பொற்பிறங்கல் இலங்கை பொருந்தலர்
எற்பு மால்வரை யாகில தேளனின்
இற்பிறப்பும் ஒழுக்கும் இழுக்கமில்
கற்பும் யான்பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன். (6)

அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும என்
சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன். (7)

வேறும் உண்டுரை கேளது மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனி யல்லால் இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் ஆண் எனக்
கூறும் இவ் வுருத் தீண்டுதல் கூடுமோ? (8)

தீண்டு வானெனின் இத்தனை சேண்பகல்
ஈண்டுமோ உயிர் மெய்யின் இமைப்பின்முன்
மாண்டு தீர்வன் எனறே நிலம் வன்மையால்
கீண்டு கொண்டெ ழுந்தேகினன் கீழ்மையான். (9)

ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்து கொண்டு
ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய
நீண்ட சாலை யொடுநிலை நின்றது
காண்டி ஐயநின் மெய்யுணர் கண்களால். (10)

தீர்விலேன் இது ஒரு பகலும் சிலை
வீரன் மேனியை மானுமிவ் வீங்கு நீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவென்
சோரும் ஆருயிர் காக்கும் துணிவினால். (11)

ஆதலான் அது காரியம் அன்று ஐய!
வேத நாயகன் பாலினி மீண்டனை
போதல் காரியம் என்றனள் பூவை; அக்
கோதி லானும் இனையன கூறினான். (12)

(சூளாமணிப் படலம்)

இந்தப் பாசுரங்களை ஊன்றி நோக்குகின்றவர் பல உண்மைகளை ஓர்ந்து கொள்ளுகின்றனர். தன்னை எடுத்துக் கொண்டு போவதாக உரிமையுடன் துணிந்து நின்ற அனுமானுக்கு இனிய பதில் மொழிகளைப் பிராட்டி இங்கே இசைத்திருக்கிறாள்.

## பிராட்டி பேசியது.

"அனும! நீ எண்ணியபடியே எதையும் செய்ய வல்லவன்; உன்னுடைய ஆற்றலுக்குத் தகுந்தவாறே கருதியுள்ளாய்! என்னைக் கொண்டு போய் எமபெருமானிடம் விரைந்து சேர்த்து விட

வேண்டும் என்று மூண்டு நிற்கின்ற உனது ஆண்டகைமையும், அன்புரிமையும் எனக்குப் பேரின்பம் தந்துள்ளன; சொல்லியதை எளிதே செய்து விடுவாய் என்று நான் தெளிவாக அறிந்துள்ளேன்; ஆயினும் என் பெண்புத்தியினால் உன்னுடைய புத்தி போதனைகளுக்கு உடனே இசையாமல் சில தடைகளைக் கூற நேர்ந்தேன்: என்னை எடுத்துச் செல்லுங்கால் இடையே அரக்கர்கள் எதிர்ந்து கடுத்துத் தடுப்பர்; கடலிடையே நின்று கொடிய அவர்களோடு நீ அடுபோர் செய்ய நேரும்; அப்பொழுது என்னைச் சுமந்து கொண்டு இன்னல் பல அடைவாய்; இதனை கண்டு நீ உன்னி உணர வேண்டும். அதுவும் தவிர வேறு ஒரு தடையும் உளது; மிகவும் கருதியுணர வுரியது. என்னை நீ இப்பொழுது இவ்வகையில் கொண்டு போய் விடுவாயாயின் எம்பெருமானுடைய வீரப் பிரதாபத்துக்குப் பெரிய மாசு ஆம். அந்தக் கோதண்ட வீரன் வந்து பகைவரை வென்று என்னை மீட்டியருளுவதே மிகவும் மேன்மையாம். அந்த வீரனுடைய உத்தம பத்தினிக்கு ஊறு செய்தவர் நீறுபட்டழிந்தார் என்னும் பேரும் கீர்த்தியும் அப்பெருமான் பெறும்படி நீ பெருமை செய்தருள வேண்டும்; கள்ளத்தனமாய் வந்து இராவணன் கரந்து செய்தது போல் நீயும் செய்ய நேர்வது எள்ளத்தக்கதாம். என்னை இச்சித்து நோக்கிய அந்த நீசனுடைய கண்களைக் காகங்கள் கொத்திப் பிடுங்க வேண்டும்; இல்லையானால் நான் நல்ல பத்தினியாவேனா? எனக்கு அல்லல் புரிந்த அரக்கர் குலம் குடியோடு அழிந்து அடியோடு நாசம் அடையும்படி எனது நாயகன் வில் ஓசை புரிந்த போதுதான் மாசு நீங்கி நான் தேசு அடைந்தவளாவேன்; விசய கோதண்டன் நேரே வந்து சீரோடு செய்ய வுரியதை நீ மாறாகச் செய்ய நினைவது மாண்பாகாது அந்த உத்தம வீரனுடைய உரிமைக்குப் பெருமையாய் எவ்வழியும் ஓர்ந்து ஒழுகி வருவதே தேர்ந்த கடமையாம். என்னுடைய ஒரு சொல்லினால் உலகங்களை எல்லாம் ஒருங்கே சுட்டு எரித்து விடுவேன்; அவ்வாறு செய்யாமல் ஏன் பொறுத்திருக்கின்றேன் தெரியுமா? அவ் வில் வீரனுடைய வெற்றிக்கு ஒரு குற்றம் ஆகுமே! என்று உற்றுணர்ந்து ஒடுங்கியுள்ளேன்; இறுதியாக ஒன்று நீ கண்டு அறிந்து கொள்ள வேண்டும். அந்த அஞ்சன வண்ணன் திருமேனியைத் தவிர வேறு ஆடவர் எவரையும் யாண்டும் எவ்வகையிலும் யான் தீண்டுதல் கூடாது. யாரும்

தீண்ட முடியாதென்று தெரிந்தே குடிசையோடு பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்து இராவணன் ஈண்டு வைத்திருக்கிறான். மனம்இசையாத மங்கையரைத்தொட்டால் தன் தலை வெடித்துப் போம் எனப் பிரமானுடைய சாபம் ஒன்று உள்ளமையான் அக் காம வெறியன் கருதியடங்கியுள்ளான். அந்தப் பிரம சாபம் இருப்பதைத் திரிசடை உரிமையோடு என்னிடம் உரைத்தருளி னாள். விதி கோலிச் செய்துள்ள அவ் வேலியே என் உயிரை இது வரை பரிபாலித்து வைத்துள்ளது. எனது அருமை நாயகன் எப்படியும் வந்து என்னை மீட்டிக் கொண்டு போய் விடுவார் என்னும் உறுதியினால் ஊழ்வினையை நினைந்து உயிர் வாழ்ந்து வருகிறேன், கோதாவரி நதி தீரத்தில் இளவல் கட்டிய அதே பன்னசாலை இதோ இருக்கிறது; பார்த்தருள்; இந்த இடத்தை விட்டு நான் எங்கும் போவதில்லை; சில சமயங்களில் அதோ உள்ள அந்தத் தாமரைத் தடாகத்திற்கு நீர் பருகப் போவேன்; என் உயிர் வாழ்வு இது; ஆவித் துணையைக் காண ஆவி அலமந்துள்ளது; பாவியேன் என்று காண்பேனோ? கோசலையீன்ற அக் குலக் கொழுந்தைக் கண்டபொழுதுதான் ஈசன் அருளை நான் எய்தினவளாவேன்; மாருதி! ஈண்டு நின்று மீண்டு போய் ஆண்டவனைக் கண்டு யாவும் சொல்லி வேண்டியதை விரைந்து செய்தருள்" என உய்தி நாடிச் சீதை இங்ஙனம் உரையாடியுள்ளாள்.

இக் குல மகளுடைய உள்ளக் கிடக்கைகள் பல ஈண்டு வெளி வந்துள்ளன. மகா மேதையாகிய அனுமான் குறித்த வேண்டுகோளை அதி விநயமாக மறுத்து மதி நலம் கனியப் பேசியிருப்பது பேச்சுத் திறத்தைக் காட்சிப் படுத்தியுள்ளது.

பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மை.

எனப் பணிவும் பண்பும் கனியப் பேச்சைத் தொடங்கியிருக்கிறாள். பெண்மை இயல்பை நுண்மையாக நோக்கிக் காணும்படி உண்மை நிலையை உணர்த்தியுள்ளாள்.

சிறந்த அறிவு நிறைந்திருந்தாலும் யாதும் அறியாதவராய் அடங்கியிருப்பது மெல்லியலாரின் நல்லியல்பாயுளது.

"பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்."

எனத் தன் இனத்தவரைக் குறித்து ஔவையார் இவ்வாறு செவ்வையாகச் சொல்லியிருக்கிறார். சபலமுடையவர் ஆதலால்

திணிவும் துடுக்குமின்றி அமைதியுடன் அபலைகளாய் உள்ளனர். பெண்மையும் பேதைமையும் பேருறவாய்ப் பெருகியிருக்கின்றன.

பேதைமை பெரிது; மதி சிறிது; எனத் தன்னுடைய பெண்மை நீர்மையை அலங்கரித்துச் சொல்லியுள்ளதை உளம் களித்து நோக்குகின்றோம். சின்மதி என்றது மூன் மதியை எண்ணி வந்தது. மாயமானை மதித்து மதி மோசம் போனமையால் தன் மதியை இன்னவாறு தனக்குள்ளேயே உன்னி உளைந்திருக்கிறாள். அவ் வுண்மை உரைவழியே வெளி தெரிய வந்தது.

பெரிய மதிமான் ஆன அனுமானது உரையைத் துணிந்து மறுக்காமல் இதமாய் எதிர் பேசுகின்றாள் ஆதலால் உரைகள் இவ்வாறு பதமாய் வந்துள்ளன. பேச்சில் பெருஞ்சமர்த்தி என்பதை இடங்கள்தோறும் உணர்ந்து வருகிறோம். அரிய பண்பாடுகளை உரைகள் கண்காணச் செய்கின்றன.

தன் நாயகனைப் பிரிந்து பரிதாபமாய்ப் பரிதவித்திருக்கின்றாள்; அவனை எப்பொழுது காண்போம்? என்று இரவும் பகலும் ஏங்கித் தவித்துள்ளாள். இந்த நிலையில் உள்ளவள் அனுமான் எடுத்துக் கொண்டு போவதாகச் சொன்னவுடனே உள்ளம் களித்து உவந்து துள்ளியிருக்க வேண்டும். அங்ஙனம் இசைந்து கொள்ளாமல் எதிர் மறுத்திருப்பது அதி வியப்பாயுள்ளது.

தன்னை ஆகாய மார்க்கமாய் அனுமான் எடுத்துச் செல்லும் பொழுது இடையே கடல் நடுவே ஏதேனும் ஆபத்து நேருமோ? என்று சீதை அஞ்சியிருக்கலாம்; அவ்வாறு அச்சம் இருப்பதாக யாதும் தெரிய வில்லை; அனுமானுடைய ஆற்றலிலும் பாதுகாப்பிலும் பூரணமான நம்பிக்கையுள்ளது; இருந்தும், செல்ல மறுத்தது, அந்த உள்ளத்தின் சீர்மை நீர்மைகளைத் தெளிவுபடுத்தியது.

ஆரியன் வென்றி வெஞ்சிலை மாசுணும்.

தன்னை எடுத்துச் செல்வதால் விளையும் குற்றங்களை அனுமானுக்குப் படிப்படியாய் இப்படி எடுத்துச் சொல்லி வருகிறாள். அனுமான் சொல்லியபடி இசைந்தால் இராமனுடைய வில்லுக்கு வேலையில்லாமல் போய் விடும் என்று சீதை கருதி யிருக்கிறாள்.

வென்றி வெம் சிலை என்றது கோதண்டத்தின் வெற்றி நிலையை உய்த்துணர வந்தது. தனக்கு அல்லல் இழைத்துள்ளவன்

குலத்தை அடியோடு அழித்தொழிக்க வல்லது என உறுதியாக முடிவு செய்துள்ளாள். அந்த உள்ளக் கருத்து ஊக்கத்தை விளைத்துள்ளது.

தன் நாயகன் நேரில் வந்து பகைவனைப் போரில் வென்று அதன்பின் தன்னை மீட்டுக் கொண்டு போவதே மேன்மை என்று கருதியிருத்தலால் பிராட்டியின் பான்மையை இங்கே காட்டி அருளினாள்.

உரிய மனைவியை உற்ற கணவன் உரிமையுடன் மீட்டுவதே மீட்சி என்று உறுதி செய்துள்ளமையைப் பொறுதியாக வுணர்த்தினாள். மானமும் மரியாதையும் வீரமும் ஞானமும் விரவி மிளிர்கின்றன. யாண்டும் நேர்மையாக நடந்து கொள்வதே சீர்மையாம் எனப் போதித்திருக்கிறாள்.

நன்றி என்பதும் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ?

அனுமான் உபாயக் கருதியது மிகவும் தவறு என்பதை இவ்வாறு அழுத்தமாகக் குறித்தாள். தீயவனான இராவணன் கள்ள மாய்த் தன்னைக் கவர்ந்து வந்தது போல் நீயும் எண்ணியது எள்ளலான பெரிய இழிவு அல்லவா? எனப் பழி நிலையை விழி தெரிய விளக்கினாள்

வஞ்சித்த நாய் என இராவணனைச் சுட்டிச் சொல்லியிருப்பது அவன் மேலுள்ள வெறுப்பையும் சினத்தையும் வெளிப்படுத்தியுள்ளது. நாய்கள் எனப் பன்மையில் குறித்தது அந்தத் திருட்டுத் தொழிலுக்குத் துணையாய் நின்ற மாரீசனையும் தழுவி வந்தது.

சோற்றுப் பானையை நாய் தூக்கிப் போனது என்பது இந் நாட்டில் வழங்கி வரும் பழமொழி. ஒருவனுக்கு நியமித்திருந்த பருவ மங்கையை அயலே ஒருவன் களவாய்க் கவர்ந்து போன தூர்த்தத்தனத்தைக் குறித்து இவ் வார்த்தை வந்துள்ளது. இந்த முது மொழியை நினைந்து வந்தது போல் இது இங்கே நிலவியது.

கள்ளநாய் செய்த வேலையை உள்ளம் தூய நீயும் செய்யலாமா? என நிலைமையை நினைவுறுத்தி யருளினாள்.

நீயும் என்றதில் உம்மை அனுமானது தூய்மையையும் மேன்மையையும் துலக்கி நின்றது. நேர்மையான பரிசுத்த வீரன் கீழ்மையான வழியில் இழியலாகாது என மொழிகள் தெளிவுறுத்தியுள்ளன. உள்ளக் குறிப்புகள் உயர் நிலையில் ஒளிர்கின்றன.

தன் நாயகனுடைய வீர மீட்சியையே இத் தீரநாயகி கருதியிருக்கிறாள். இராமத் துரோகியாய்த் தனக்கு அல்லல் இழைத்துள்ள இராவணன் மீது எல்லை மீறிய சினமும் சீற்றமும் இக் குலமகள் உள்ளத்தில் குடி கொண்டுள்ளன. தன்னை இச்சித்து நோக்கிய அரக்கனுடைய கண்களைக் காகங்கள் கொத்தித் தின்ன வேண்டும் என்று குறித்திருத்தலால் அந்த உள்ளத்தின் கொதிப்பு நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

இராவணனோடு அமையாமல் அவன் குலத்தவர் எல்லார் மீதும் கொதிப்பு மூண்டுள்ளது. "அரக்கிகளுடைய தாலிகள் யாவும் அறுபட்டு அமங்கலிகளாய் அவர் அழுது புரண்டபொழுது தான் நான் விழுமிய பெண்மைக் குடியில் உண்மையாகப் பிறந்தவளாவேன்" என வீறோடு சபதம் செய்துள்ளமையால் நெஞ்சக் கொதிப்புகள் நேரே தெரிய வந்தன.

"பொன் மயமான அழகிய இந்த இலங்கை மாநகரம் முழுவதும் இழவொலிகள் மண்டி யாண்டும் பிண மலைகள் குவிந்துபடவில்லையானால் குணமுடைய குல மகளாய் நான் பிறந்து வந்தவளாகேன்" எனப் பேசியிருக்கிறாள். கற்புடைய ஒருத்திக்குப் பிழை புரிந்தவன் குலத்தோடு அழிந்தான் என உலகம் தெரிந்து கொள்ள வேண்டும் என இக் குலமகள் துணிந்திருத்தலை இவ்வுரை உணர்த்தி நிற்கிறது.

இராவணன் ஒருவன் தீமை செய்ய அவனுடைய குலத்தவர் எல்லாரும் நாசம் அடையும்படி சீதை சினந்து சொல்லியிருப்பது நினைந்து சிந்திக்கத் தக்கது. அவன் செய்த தவ பலத்தால் அவன் குலத்தவர் பலவகையிலும் உயர்ந்து சிறந்துள்ளனர்; ஆகவே அவனுடைய பாவச் செயலால் யாவரும் நாசம் அடைய நேர்ந்தனர். அரக்கர் குலம் இராவணனால் உயர்வடைந்து வந்தது; மீண்டும் அவனால் அழிந்துபட மூண்டது.

உத்தமமான பதிவிரதை ஆகலால் இவளுடைய உள்ளக் கொதிப்பு ஊழித் தீப்போல் ஒரு குலத்தை நாசம் செய்ய நேர்ந்தது. கற்புத் தீ உலகத் தீயினும் அற்புத ஆற்றலுடையது.

எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசுஎன்று வீசினேன்.

சீதையின் உண்மை நிலையை இச் சொல்லால் ஊன்றி உணர்ந்து கொள்கின்றோம். இலங்கை மட்டும் அன்று அகில உலகங்களையும் தனது ஒரு சொல்லால் அழித்து ஒழிப்பதாகச் சீதை இங்கே தெளித்திருப்பது வியப்பை விளைத்து நிற்கிறது.

உண்மையான ஆத்தும சத்தி ஈண்டு உய்த்துணர வந்தது.

நல்ல சீலம் தோய்ந்த பொழுது அவ்வுயிர் எல்லாம் வல்ல இறைவன் அருளை மருவுகின்றது. மருவவே அரிய ஆற்றல்கள் பல அதனிடம் பெருகி வருகின்றன. அந்த மகாத்துமா அற்புத சித்திகளைச் செய்கின்றது. அரிய தவசிகளினும், பெரிய ஞானிகளினும் பதி விரதைகள் பெருமகிமையுடையராய் அதிசயங்களைப் புரிகின்றனர். யாவரும் அவர்க்கு ஏவல் செய்ய நேர்கின்றனர்.

மழை பெய் எனப் பெய்யும் எனக் கற்புடையவரது அற்புத நிலையைத் தேவர் காட்டியிருக்கிறார். நளாயினி, அநசூயை, சாவித்திரி முதலிய பத்தினிப் பெண்கள் செய்துள்ள வித்தகச் செயல்கள் வியந்து சிந்திக்கத் தக்கன.

தன் வாய்ச் சொல்லால் கண்ணகி மதுரையைச் சுட்டு எரித்தாள். அதனை எண்ணியுணரின், எல்லா உலகங்களையும் சொல்லால் சுடுவேன் எனச் சீதை சொல்லியுள்ள நிலைமை இங்கு நன்கு தெளிந்து கொள்ளலாம். திருவின் அவதாரம் என்று கருதாமலே தன் கற்பின் பெருமிதத்தினாலேயே இங்ஙனம் பேசியிருக்கிறாள். உள்ளத்தில் உண்மையும் தூய்மையும் உள்ள பொழுது அங்கே எல்லையில்லாத உறுதியும் ஊக்கமும் பெருகி நிற்கின்றன.

இத்தகைய அற்புத ஆற்றல் அமைந்திருந்தும் அடங்கியிருப்பது அதிசயமாயது. பொறுமையும் கருமமும் மருவி நின்றபோது அரிய வன்மைகள் மேலும் பெரு மகிமை பெறுகின்றன.

தன் சொல்லால் பகைவரை அழிக்கவில்லை; அது தனது நாயகன் பெருமைக்கு இழுக்காம் எனச் சானகி பொறுத்திருப்பது அரிய பண்பாடாய்ப் பெருகியுளது. தன்னைக் கொண்ட கணவனுக்கு எவ்வழியும் மதிப்பையும் மாட்சியையும் கொடுத்து வருவதே

நல்ல குலமகளுக்கு அழகாம் என்பதை இங்கே உலகம் காண உணர்த்தியருளினுள்.

இராமனுடைய உரிமைப் பொருள் ஆதலால் தனக்குத் தனியே சுதந்திரம் இல்லை; தன் மூப்பாக எதையும் செய்யலாகாது என இச் செய்யவள் உறுதி செய்துள்ளமை நுணுகியுணர வந்தது. நிறையும் பொறையும் நீர்மையோடு நிலாவுகின்றன.

தன் உடைமையை மீட்ட வேண்டியது இராமனது கடமையே; அந்தக் கட்டுப்பாட்டில் இடையே ஏதேனும் துணிந்து செயின் அது மடமையாம் எனத் தேவி மதித்திருக்கிருள்.

வீர ராமன் நேரே போர் புரிந்து வெற்றித் திருவோடு தன்னைச் சிறை மீட்ட வேண்டும் என்றே இவ் வுத்தமி உறுதி செய்திருத்தலை உரைகள் தெரியச் செய்தன. வீரக் குலமகள் ஆதலால் வீர மீட்சியை விழைந்து வீறோடு நின்ருள்.

எல்லா வுலகங்களையும் ஒரு சொல்லால் வெல்ல வல்ல சத்தி தன்பால் உள்ளது என அநுமானிடம் அன்பாகச் சொல்லி அதனோடு நாயகன்மேல் வைத்துள்ள பத்தியையும் இத் தூயவள் அதிவிநயமாய் உணர்த்தி நின்ருள்.

சீதையின் சொல்வலியும் இராமனது வில்வலியும் காட்சிக்கு வந்தன. அருந்திறலமைதிகளை இவ்வாறு அறிவுறுத்தி அதன்பின் ஓர் அரிய உறுதியைப் பெருந்தகவோடு தெரியப் படுத்தினுள்.

அநுமன்! நீ மகாஞானி; பொறிகளை வென்றவன்; பிள்ளைமை அன்போடு என்பால் உள்ளம் உருகி நிற்கிருய்; ஆயினும் நீ ஆடவன் ஆதலால் என்னைத் தீண்டலாகாது. தீண்டினுல் மாண்டு படுவேன் என்று கருதியே பூமியோடு தோண்டி எடுத்து இராவணன் ஈண்டு இவ்வாறு கொண்டு வந்து வைத்திருக்கிருன்; மனம் இசையாத மாதரைத் தொடின் உன் தலை வெடித்துப் போம்" எனப் பிரமா இட்ட சாபம் ஒன்று இருத்தலினுலேதான் கிட்ட நெருங்காமல் அவன் கட்டுப்பட்டு நிற்கிருன்.

மேவு சிந்தைஇல் மாதரை மெய்தொடின்
தேவு வன்தலை சிந்துக ஈது எனப்
பூவில் வந்த புராதனனே புகல்
சாவம் உண்டு எனது ஆருயிர் தந்ததால்.

தான் உயிர் வாழ்ந்திருத்தற்கு உரிய காரணத்தை இங்ஙனம் உணர்த்தியிருக்கிறாள். கொடிய காமியாயிருந்தும் வலிந்து தீண்டாமல் இராவணன் அஞ்சி நிற்பது அயன் சாபத்தால் என்பது அறிய வந்தது. இப்படி ஒரு சாபம் இருத்தலை அறிந்துதான் சடாயுவும் சாகுந்தருணத்தில் * ஆறுதலடைந்தான். அவன் அங்கே கருதி மாண்டது இங்கே அறிய நீண்டது.

இந்தச் சாபத்தின் இரகசியத்தைத் திரிசடை அறிவுறுத்தித் தன்னைத் தேற்றியருளினாள் என அத் தலைமகளை இக் குலமகள் போற்றியிருக்கிறாள். அந்தக் கொடிய இனத்தில் இனிய ஒரு பெண்மகள் இப பெண்ணரசிக்குத் துணை கிடைத்திருப்பது புண்ணிய விளைவாய்ப் பொலிந்து கண்ணியம் கனிந்துள்ளது.

தன் நாயகனைத் தவிர வேறு ஆடவரது மெய்ப் பரிசம் தன் மேல் படலாகாது என்று பிராட்டி இங்கே பேசியிருப்பது கற்பின் புனிதத் தன்மையை வெளிப்படுத்தியுளது. பயிர்ப்பு என்பது உயர்ந்த பெண்மைக் குணத்துள் ஒன்று. பிறர் அருகு நெருங்கின் மறுகி யுழல்வது பயிர்ப்பு என வந்தது. அயலாரைத் தொடுவதில் கூச்சமும் அருவருப்பும் இயல்பாகவே பெண்மைக்கு அமைந்திருக்கிறது. அந் நீர்மை உயர்வாக இங்கே போற்றப்பட்டுள்ளது.

தீய அரக்கன் மாய வஞ்சமாய்க் கவர்ந்து வந்தாலும் தன் தூய்மை சிதையாதுள்ளமையைச் சீதையின் வாய்மை இங்ஙனம் விளக்கி நின்றது. பரிசுத்த நிலையைத் தரிசித்து மகிழ்கிறோம்.

தன் அருமைக் கொழுந்தன் அழகிய கைகளால் வனத்தில் கட்டிய தழைக் குடிசையை அனுமானுக்குச் சுட்டிக் காட்டியிருக்கும் காட்சி அரிய ஒரு சாட்சியாய்ப் பெரிய மாட்சிகளை விளைத்துள்ளது.

இளவல் இயற்றிய நீண்ட சாலை.

என அந்தப் பன்னசாலையை இன்னவாறு குறித்திருக்கிறாள். தன் அண்ணனும் அண்ணியும் சுகமாய் அமர்ந்திருத்தற்கு இதமாகவும் விசாலமாகவும் தம்பி அன்புரிமையோடு செய்து வைத்துள்ளமை என்புருக ஈண்டு எண்ண வந்தது.

அந்தக் குடிசையிலேயே தவவாசமாய்த் தங்கியிருந்துளாள்.

* இந் நூல் பக்கம் 2052, வரி 26 பார்க்க.

தவசிகள் மலைக் குகையில் மருவியிருத்தல்போல் இப் பதிவிரதை இலைக் குடிலில் அமர்ந்திருக்கிறாள். கடவுள் சிந்தனையோடு தவ யோகிகள் அடங்கியுள்ளனர்; இராம சிந்தனையோடு சீதை ஒடுங்கி யுள்ளாள், உடல் அயலிருப்பினும் உயிர் பதியிடம் பதிந்துளது.

நீர் பருகும் பொருட்டுச் சில சமயங்களில் அருகே உள்ள பொய்கைக்குப் போய் வருவதைத் தவிர வேறு யாதும் இடம் பெயர்ந்தது இல்லை என்று சொல்லியிருத்தலால் அந்த இருப்பின் நிலைமையை உள்ளி உணர்ந்து கொள்ளுகிறோம்.

வீரன் மேனியை மானும்இவ் வீங்குநீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்.

அந்தத் தடாகத்தை நாம் மனக் கண்ணால் கருதிக் காணும் படி இங்ஙனம் ஆர்வத்தோடு காட்டியிருக்கிறாள். சிலை வீரன் என இராமனை இங்கே சுட்டிச்சொல்லியது மூதண்டங்களையும் வெல்ல வல்ல அந்தக் கோதண்ட வீரனுடைய குல பத்தினி நாதியற்றவ ளாய் நைந்திருக்கும் நிலையை நோக்கு கூறிய படியாம்.

செந்தாமரை செவ்வல்லி முதலிய மலர்கள் பல பூத்து நறு மணம் கமழ்ந்து எழில் பொலிந்திருந்தமையால் அந்நீர் நிலை இராமன மேனியை ஒத்திருந்தது என்றாள். மானும்=ஒக்கும். ஒத்த என்னாது மானும் என்றது அந்த அழகிய திருமேனிக்கு ஓரளவு உவமானமாக நவமாகியுள்ளமை தெரிய.

கரிய நீர் மேனிக்கும், மலர்கள் அவயவங்களுக்கும் உவமை யாயின. கண்கள், கைகள் முதலியன செந்தாமரை மலர்கள்போல் பொலிந்திருத்தலால் இராமனது உருவச் செவ்வி தாமரைத்தடம் என வந்தது.

மாயக் கூத்தா! வாமனா! வினையேன் கண்ணா! கண் கைகால்
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதா,
சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா, தாமரை நீள்
வாசத்தடம்போல் வருவானே! ஒரு நாள் காண வாராயே!
(திருவாய்மொழி, 8-5)

இந்தப் பாசுரம் இங்கே சிந்திக்கத்தக்கது. திவ்விய அழகை மானச நோக்கால் ஞான சீலர்கள் கண்டு களித்து வருகின்றனர். நேரே கண்டு சுகித்தஎழிலைச் சானகி இங்கே கொண்டுகுறித்தாள்.

தாக விடாய் தீர நீர் பருகப் போவதுபோல் போய் அந்தத் தாமரைத் தடாகத்தை நெடுநேரம் பார்த்துப் பார்த்து ஆர்த்தி மீதூர்ந்து ஆறுதலடைந்துள்ளாள் என்று தெரிகின்றது.

தன் நாயகனுடைய உருவ நிலையை ஒத்திருந்தமையால் அப் பொய்கை இக் குலமகளுக்கு ஓர் உவமை நிலையமாய் உதவி புரிந்துளது. அவ் வுண்மையை உரைகளிலிருந்து உணர்ந்து கொள்கிறோம். கணவனையே கருதி யுருகியுள்ளமை கருத வந்தது.

இராம சிந்தனையே எப்பொழுதும் தன் உள்ளத்தில் உருவேறி யுள்ளமையால் வெளியே கண்ட இடங்களில் எல்லாம் அக் காட்சி இப் பதிவிரதைக்கு எதிர் தோன்றியுள்ளது.

உரிய பாவனையில் உள்ளம் பதிந்து உணர்வு அழுந்தி உயிர் கலந்துள்ளமையைத் தேவியின் வாய்மொழி தெளிவுபடுத்தியது.

இன்னுயிரினும் இனியனாக இராமனை இப் பெண்ணரசி எண்ணி யிருக்கிறாள். தன் உயிரையே யாவரும் பிரியமாகக்கருதி யிருப்பர். இயல்பான இந்த உலக நிலையைக் கடந்து இக் குலமகள் நிலை தலைமையாயுள்ளது.

தனது உண்மைநிலைகளை இவ்வண்ணம் துலக்கிச் சொல்லி அநுமானைத் தனியே மீண்டு போகும்படி வேண்டி நின்றாள்.

### மாருதி மகிழ்ந்தது.

அன்புரிமையால் பிராட்டியை எடுத்துச் செல்வதாகச் சொல்லிய அநுமான் சீதையின் வாய்மொழிகளைக் கேட்டதும் உவகை மீதூர்ந்து உள்ளம் களித்தான். அயல் ஆடவர் எவராயினும் எவ்வகையிலும் தொடலாகாது என்ற அந்தத் தூய்மையை வியந்து தொழுது நயந்து புகழ்ந்தான்.

நன்று நன்று இவ் வுலகுடை நாயகன்
தன் துணைப் பெருந் தேவி தவத் தொழில்
என்று சிந்தை களித்து உவந்து ஏத்தினன்
நின்ற சங்கை இடரொடு நீங்கினான்.

எடுத்துச் செல்லக் கருதிய தன் கருத்தை மறுத்துப் பிராட்டி உரைத்த மொழிகள் அநுமானுக்கு மிகவும் உவகையை விளைத்துள்ளன. புனிதமான உள்ளப் பான்மைகளை இனிது

தெளியவே அவன் வியப்பும் விம்மிதமுமடைந்து மகிழ்ந்து துதித்தான். அரிய நிலைமை பெரிய மகிமை ஆயது.

தேவி தவத் தொழில் நன்று! நன்று! என உள்ளம் களித்து அவன் உரையாடி யுள்ளமை உயர் வியப்பாய் நிறை ஓடி நின்றது. அதிசய வியப்பையும் உவகைக் களிப்பையும் அடுக்குகள் உணர்த்தின. நிலைமை நீர்மைகளை நேரே தெரியவே நெஞ்சம் பேருவகையாய்ப் பெருகி நின்றது. களித்தல் உவத்தல் ஏத்தல்கள் அவனுடைய உணர்ச்சிகளை வெளிப் படுத்தின.

தான் தேடி வந்தது திவ்விய மகிமையாய் நீடி நின்றுள்ளது; நிலையான பலனை நேரே பெறலாம் என அப் பேரன்பாளன் பேரின்பமுடையனாய்ப் பெருகி நின்றுள்ளான்.

நின்ற சங்கை இடர் ஓடு நீங்கினான்.

அனுமான் அகத்தில் ஒரு சந்தேகம் சிறிது படிந்திருந்தது; அது இப்பொழுது அடியோடு ஒழிந்து போயது என இது உணர்த்தியுளது. நின்ற சங்கை என்றது நெஞ்சில் நேர்ந்து நின்ற அதன் நிலைமை தெரிய வந்தது. ஐயம் எள் அத்தனையாயினும் உள்ளத்தை அது உறுத்தி நின்றுளது.

எடுத்து வந்த இராவணன் துடுக்காக ஏதேனும் பிராட்டியைத் தொட்டிருப்பானோ? என்று ஒரு சிறிய சந்தேகம் அனுமான் உள்ளத்தில் ஒட்டியிருந்தது. ஆண் உருவம் எதுவாயினும் தன்னைத் தீண்டலாகாது; தீண்டினால் மாண்டுபடும் என்று ஈண்டு அவள் சொல்லவே அந்த ஐயம் அடியோடு நீங்கியது.

உத்தம பத்தினியின் பரிசுத்த நிலையை உணர்ந்து தெளியவே உள்ளத்தில் உவகை வெள்ளம் எனப் பொங்கியது.

இராவணனால் அல்லலடைந்து இருள் மூடியுள்ள உலகம் இனி நிலையில் விடிந்து ஒளி மிகப் பெறும் எனக் களி மிகுந்து மீண்டு போகத் துணிந்து பிராட்டியிடம் விடை வேண்டி நின்றான். "அம்மா! அடியேன் போய் வருகிறேன்; ஆண்டவனிடம் என்ன சொல்ல வேண்டும்? சொல்லியருளுங்கள்!" என்று அனுமான் வேண்டவே சீதை சில சொலை நேர்ந்தாள். அந்த உள்ளத்தின் பரிவும் பண்பும் உரைகளில் ஒளி வீசி வந்தன.

## சானகியின் பரிவுரைகள்.

இன்னும் ஈண்டுஒரு திங்கள் இருப்பல்யான்
நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்!
பின்னை ஆவி பிடிக்கின்றிலேன் அந்த
மன்னன் ஆணை இதனை மனக்கொள் நீ! (1)

ஆரம்தாழ்திரு மார்பற்கு அமைந்தது ஓர்
தாரம் தானலள் ஏனும் தயா வெனும்
ஈரம்தான் அகத்து இல்லை என்றாலும்தன்
வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டினாள். (2)

ஏத்தும் வென்றி இளையவற்கு ஈதொரு
வார்த்தை கூறுதி மன்னருளால் என்னைக்
காத்திருந்தவற்கே கடன் என்றிடை
கோத்த வெஞ்சிறை வீடென்று கூறுவாய்! (3)

திங்கள் ஒன்றில்என் செய்தவம் தீர்ந்ததால்
இங்கு வந்திலனே எனின் யாணர் நீர்க்
கங்கை யாற்றங் கரை அடியேற்குத் தன்
செங்கையால் கடன் செய்கென்று செப்புவாய்! (4)

சிறக்கும் மாமியர் மூவர்க்கும் சீதை ஆண்டு
இறக்கின்றாள் தொழுதாள் எனும் இன்னசொல்
அறத்தின் நாயகன்பால் அருள் இன்மையால்
மறக்கு மாயினும் நீ மறவேல் ஐயா! (5)

வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தை யாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய். (6)

ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினாள் தொழுது என்று விளம்புவாய்! (7)

அரசு வீற்றிருந்து ஆளவும் ஆய்மணிப்
புரசை யானையின் வீதியில் போகவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரை செய்து என்னை? என் ஊழ்வினை யுன்னுவேன். (8)

தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும் பரதன் அங்காற்றுறும்
இன்னல் நோய்க்குமங் கேகுவ தன்றியே
என்னை நோக்கி இங்கு எங்ஙனம் எய்துமோ? (9)

எந்தையாய் முதலிய கிளைஞர் யார்க்குமென்
வந்தனை விளம்புதி கவியின் மன்னனைச்
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தமில் நெடுநகர்க்கு அரசன் ஆக்கென்பாய். (10)

(சூளாமணிப் படலம், 29-38)

இந்தப் பகுதியை ஊன்றிப் படிக்கிறோம்; உள்ளப் பரிவுகளை ஓர்ந்து துடிக்கிறோம். கவிகளைக் கருதி உணரும் அளவு சுவைகள் தெரிகின்றன. அரிய பிரிவில் மறுகியுள்ள பிரிய நாயகி உரிய நாயகனைக் காண அவாவி மானமீதூர்ந்து மயங்கி நிற்பதை உணர்ந்து கவல்கின்றோம். உள்ளக் கவலைகள் பெண்மை இயல்போடு பெருகி வந்துள்ளன. உண்மை நிலையை உரிமையுடன் ஊன்றி நோக்குபவர் எவரும் கண்ணீர் சொரிந்து கரைந்து நிற்கும்படி உரைகள் நிறைந்து நிற்கின்றன.

“அனும! இன்னும் ஒரு மாத காலம்தான் நான் இங்கு உயிர் வாழ்ந்திருப்பேன்; அதன்பின் இரேன்; இது உண்மை; எம்பெருமான் மேல் ஆணையாக இதனைச் சொல்லுகிறேன்; அந்த வீர வள்ளலுக்குத் தகுதியான மனைவி நான் இல்லை ஆயினும் கருணையினாலாவது என்னைச் சிறைமீட்டும்படி சொல்லு; அருளை மறந்தாலும் தன் குல வீரத்தை நினைந்தாவது நலம் புரியும்படி கூறு; இளைய பெருமாளுக்கு ஒரு வார்த்தை: என்னைச் சிறை மீட்டியருள வேண்டிய பொறுப்பு முழுவதும் அவரைச் சார்ந்ததே; அவரிடமே அடைக்கலமாக நாயகன் என்னை நல்கிப் போனார்; அவருடைய பாது காவலில் தீது நேர்ந்தது; ஆதலால் காத்து நின்ற அவரே என்னை மீட்டி உடையவனிடம் சேர்க்க வேண்டும்; இந்தக் கடமையை அவரிடம் தனியே நீ வலியுறுத்த வேண்டும்; அண்ணனும் தம்பியும் என்ன செய்வார்களோ? இந்த ஏழைக்கு இரங்கியருளுவார்கள் என்று தெளிவாகத் தெரியவில்லை; அன்பனே! ஒரு மாதத்திற்குள் இங்கு வர வில்லையானால் கங்கை ஆற்றிலே அடியாளுக்கு அவருடைய செங்கையால் நீர்க்கடன் செய்யும்படி சொல்லி விடு; இலங்கைச் சிறையில் உங்கள் மரு

மகள் சாகும்பொழுது உங்களைத் திசை நோக்கித் தொழுதாள் என்று என் மாமிமார் மூவரிடமும் நீ ஞாபகமாய் நவின்றருள்; என் நாயகன் என்னைக் கைப்பிடித்த அன்று இரவு மறு மாதரை மனத்திலும் கருதேன் என்று தனியே என்னிடம் உறுதி கூறியுள்ளார்; அந்த உண்மையை அவருக்கு நினைவூட்டு; ஈண்டு நான் மாண்டு போனாலும் மீண்டு பிறந்து வந்து அந்த ஆண்டகையைத் தீண்டி மகிழும்படியான வரம் ஒன்று வேண்டினேன் என்று வேண்டு; அரியாசனத்தில் வீற்றிருந்து ஆட்சி புரியும் அந்த மாட்சியை இனி என்று காண்பேன்? யானை மீதும் சிவிகைகளிலும் அரச கோலத்தோடு பவனி வருகிற விழுமிய காட்சிகளைக் காணாது இழந்தேனே; இரத்தின ஆரங்களும் முத்து மாலைகளும் மார்பில் தவழ்ந்து திகழ விளங்கி நிற்கும் அந்தப் பசிய கோலத் திருமேனியை விழி களிப்பக் காண்பது என்றோ! அந்தோ! வீணே பேசிப் பயன் என்ன? பாழான என் ஊழ்வினையை உன்னி உன்னி உளைகின்றேன்; தன்னை நோக்கித் தவித்து நிற்கும் உலகத்தைக் காத்தருள அங்கே செல்வாரே அன்றி என்னை நோக்கி இங்கே வருவார் என்று நான் எண்ணியிருப்பது ஏழைமையாம்; பெற்ற தாயும் உற்ற தம்பியும் உருகியிருப்பதைக் கருதி அயோத்திக்குப் போவாரே அல்லாமல் இந்தப் பாவியை நாடி இலங்கைக்கு வந்தருளுவாரா? ஐயோ! என் நிலைமை என்னே! மாருதி! நீ கொஞ்சம் தயவுசெய்து மிதிலைக்கும் போகவேண்டும்; என் அருமைத் தந்தை தாய் தங்கையர்களிடம் என் வணக்கத்தைத் தெரியப்படுத்துக; நான் பிறந்த குடியும் புகுந்த குலமும் பெருமகிமையோடு சேமமாய் இருக்கட்டும்; உங்கள் அரசனாகிய சுக்கிரீவனிடம் எனது வேண்டுகோள் ஒன்றை உரிமையோடு நீ உரைக்க வேண்டும்; அந்தக் கவியரசன் எம் கோமகனை அயோத்திக்கு அழைத்துப் போய் மணிமுடி சூட்டி அரசாளும்படி செய்ய வேண்டும் என்று நான் பணிவுடன் வேண்டினதாகச் சொல்; அவ்வீர மூர்த்தி சீரும் சிறப்பும் எய்திச் சுகமாக வாழ வேண்டும்; என் கதி எவ்வாறாயினும் சரி; விதியின் விளைவை மீற வல்லவர் யார்? என் தலையில் போட்டுள்ள புள்ளியின்படி நடக்கட்டும்; நீ போ!'' என இவ்வாறு அனுமானை நோக்கிச் சீதை பரிவோடு பேசியுள்ளாள். அந்த உள்ளத்தில் உறைந்துள்ள ஏக்கங்களையும் குடும்பபாசங்களையும் பரிதாபங்களையும் உரைகள் தெளிவாக்கியுள்ளன. அரிய பண்பாடுகள் புண்பாடுகளாய்ப் பொங்கி நிற்கின்றன.

பெண்களுக்கு இயல்பான ஓரங்கல்மொழிகள் கண்கள் காணக் கனிந்து வந்திருக்கின்றன. சஞ்சலங்கள் நிறைந்துள்ளமை யால் அந்த நெஞ்சத்தின் சபலங்கள் நேரே தோன்றி நின்றன.

இன்னும் ஒரு திங்கள்தான் உயிர் வைத்து இருப்பேன் என்றது அதற்குள்ளாக இராமன் அங்கே வந்தருள வேண்டும் என்பதை வலியுறுத்தியது. காலம் கடத்தி நிற்கலாகாது; அங்ஙனம் நின்றால் சாலவும் பிழை நேர்ந்து விடும் என எச்சரிக்கை செய்திருக்கிறாள். எங்கே தாமதமாய் நின்று விடுவாரோ? என்ற அவலமும் ஆவலும் இவ்வுரையில் உலாவி நிற்கின்றன. ஒரு மாதம் தவணை குறித்தது, வந்துள்ள தூதன் மீண்டுபோய் வருதற்கு உரிய கால அளவைக் கருதி. விரைந்து வந்து சேர வேண்டும் என விதி நியமமாய்க் கட்டளையிடாமல் நெஞ்சில் ஓர் அச்சத்தை ஊட்டி உச்ச நிலையில் உரையாடியுள்ளாள்.

பின்னை ஆவி பிடிக்கின்றிலேன்.

அந்த உயிர் உடலில் இருக்கும் நிலையை இதனால் உணர்ந்து கொள்கிறோம். ஆவியைத் தன் கையில் வைத்திருப்பதாகத் தேவி இங்ஙனம் தெளித்தருளினாள். தன்னுடைய ஆவித்துணையை ஒரு மாசத்துள் காணவில்லை ஆயின் இந்த ஆவி போய் விடும் என்று வாய் விட்டுள்ளாள். வாழ்வும் சாவும் சூழ்விலேயே தோய்ந்துள்ளமை ஆய்ந்து கொள்ள வந்தது

மன்னன் ஆணை என்றது தான் சொன்னதை உறுதியாக அறுதியிட்டு ஓர்ந்து கொள்ள. சத்திய சீலனான இராமன் மீது சத்தியம் செய்துள்ளாள். இன்னுயிரினும் இனியனான கணவன் மேல் ஆணையிட்டுத் தன்னுயிர் நிலையை இங்ஙனம் பன்னியருளினாள். அநுமான் உன்னியுணர்ந்து உறுவதை விரைந்து செய்ய இது ஊக்கி வந்தது.

தன்னுடைய மனைவி என்னும் அன்புரிமையாலும், அபிமானத்தாலும் சீதையை இராமன் சிறைமீட்ட வேண்டும்; அந்தச் சக்கரவர்த்தித் திருமகனுடைய பெருமிதத்திற்குத் தக்க தாரமாய்த் தான் இல்லாது போயினும் அநாதையான ஏழைக்கு இரங்கியருளும் முறையிலாவது கிருபைசெய்து துயரை நீக்கவேண்டும் என்பாள் தயையையும் ஈரத்தையும் நேரே எடுத்துக் காட்டினாள்.

எளிய பிராணிகளிடம் அளி புரிவது தயை.

உள்ளம் உருகி உதவி செய்வது ஈரம்.

தயா எனும் ஈரம் எனப் பொருள் விரித்துச் சொன்னது அந்தக் குண நீர்மையில் கருத்தைச் செலுத்திக் கருணை புரிய. நல்ல நீர்மைகள் உள்ளியுணர வந்தன.

இயல்பாகவே தண்ணளி நிறைந்த புண்ணிய மூர்த்தி என்று தன் கணவனை எண்ணி ஏத்தி யாண்டும் போற்றி வருகிற பெண்ணரசி இங்கே கண்ணழிந்து கரைந்திருக்கிறாள். பிரிவுத் துயரம் பெரிதாயுள்ளமையால் இங்ஙனம் மறுகிப் பேசச் செய்தது.

கொண்ட மனைவி என்ற அன்பு இருந்தாலும், எளிய பெண் என்ற அருள் இருந்தாலும் இதுவரை என்னை இவ்வாறு இன்னலில் அவர் விட்டிருக்க மாட்டார் என்று இப் பத்தினி பரிந்திருக்கிறாள். கண்ணோட்டமின்றிக் கைவிட்டிருத்தலால் அந்த இரு வகை நிலைகளிலும் ஐயம் உண்டாயது; ஆகவே சோகமுடன் வேகமாய்ச் சொல்ல நேர்ந்தாள்.

அன்பு தயை இரக்கம் என்னளவில் இல்லையாயினும் தன்னளவில் என்றும் நிலையாயுள்ள ஒன்றினாலாவது உறுதி நலனைக் கருதிச் செய்ய வேண்டுக என இறுதியாக வேண்டினாள்.

வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய்!

தன் தாரம் காத்தலை இராமன் உறுதியாகச் செய்ய வேண்டும் என்னும் உணர்ச்சியை இங்ஙனம் ஊட்டியுள்ளாள்.

தன் இல்லாளைச் சிறை மீட்டிக் காக்கவில்லையானால் வீரம் இல்லாதவன் என இராமன் சிபழிய நேரும். "பெரிய வில்லாளி, அரிய போர் வீரன் என்று யாண்டும் பேர் பெற்றுள்ள இராமன் தன தாரத்தைக் கைவிட்டுத் தாழ்ந்து நின்றான்; கவர்ந்து கொண்டு போனவன் பெரிய சூரன் ஆதலால் அவனிடம் நெருங்க அஞ்சி ஒதுங்கிச் சென்றான்" என இன்னவாறு பலவும் கூறி உலகம் பழிக்கும்; அந்தப் பழி நிலைக்கு ஆளாகாமல் விரைந்து தொழில் புரிந்து விழுமிய நிலையில் வாழ வேண்டும் எனக் கெழுதகை அன்போடு வேண்டியுள்ளாள்.

தன்னைக் காத்தருளும்படி நேரே வேண்டாமல் தன் நாயக

னுடைய வீரத்தைக் காத்துக் கொள்ளும்படி சீதை ஈண்டு வேண்டியிருக்கும் வித்தகம் வினயம் மிக வுடையது.

வீரம் இராமனுக்கு உயிர் நிலையம் ஆதலால் அதனை இங்ஙனம் நினைவுறுத்தினள். தன் தாரத்தைக் காட்டிலும் வீரத்தை அவன் பேணியருளுவான் என இத்தாரம் எண்ணியுள்ளது நம் கண் எதிரே காண வந்தது. தன் நாயகன் யாண்டும் வீரநாயகனுய் விளங்க வேண்டும் என இத் தீர நாயகி விளக்கியிருக்கிறுள்.

தான் கொண்ட மனைவியை வஞ்சமாய்க் கவர்ந்து கொண்டு போனவனை குலத்தோடு அழித்து மீட்டிக் கொண்டு வந்தான் என வையமும் வானமும் கொண்டாடி வரக் கோதண்ட வீரன் புகழோடு பொலிந்து வாழ வேண்டும் என விழைந்து வேண்டியுள்ளாள். வீர வாழ்வும் வெற்றி நிலையும் வெளியறிய வந்தன.

தன்னைச் சிறை மீட்டிக் காத்தபோது தான் இராமன் வீரத்தையும் மானதையும் புகழையும் புண்ணியத்தையும் காத்தவனுவான் என இப் பெண்ணரசி கண்ணியமாய்ப் பேசியிருப்பது எண்ணியுணர வுரியது.

மான வுணர்ச்சியும் வீர வுணர்ச்சியும் வீறு கொண்டு வரச் சானகி பேசி வருவது ஞான மணம் கமழ்ந்து வருகிறது.

தன் தாரத்தை மீட்டாமல் காலம் தாழ்த்தி நிற்பது அவன் வீரத்தை வீட்டிய படியாம் எனக் காட்டியிருக்கும் காட்சி மாட்சி மிகுந்துள்ளது. உரிய பதிக்கு அரிய மதியை யூட்டுகிறுள்.

கொண்ட பெண்டாட்டி கொடிய ஒருவன் கையில் சிக்கித் திண்டாடித் தவிக்க விட்டிருப்பது அந்தக் குல வீரனுக்கு எவ்வளவு பழியாம்! என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறுள். உள்ளப் பரிவைத் தெள்ளத் தெளிய விளக்கி உரிமை கனிந்து உரைகள் வெளி வந்துள்ளன.

அக் கோமகன் விரும்பி வந்து பாதுகாத்தற்குரிய தகுதி என்பால் இல்லை ஆயினும் தன்பாலுள்ள தகுதியை யாதும் நழுவாமல் பாதுகாத்துக்கொள்ளவேண்டும்என்று ஓதியுணர்த்தினுள்.

தாரம் காத்தலை வேண்டுஎன்று வேண்டாமல் வீரம்காத்தலை வேண்டு என்று வேண்டியிருப்பது எவ்வளவு விநயம்! எத்துணை வித்தகம்! சுத்தவீரனுக்குப் புத்துணர்ச்சி யுண்டாகும்படி போதித்திருக்கிறுள். மானச தத்துவம் இதில் மருவி மிளிர்கிறது.

பேசுவதில் அதிமேதையான அனுமானும் இந்தப் பேச்சைக் கேட்டு வியந்து மகிழ்ந்திருப்பான் என்பதை நாம் உணர்ந்து கொள்கிறோம். சோகம் சூழ்ந்திருப்பினும் சொல்லில் வீரம் விரிந்து நிற்கிறது. கற்பின் திண்மை காட்சி புரிகின்றது.

மறுமை நோக்கோடு மருவியுள்ள ஞானக் குடியில் பிறந்திருந்தாலும் இப் பத்தினியிடம் சத்திரிய வீறு தலை நிமிர்ந்துள்ளது. பிறப்பு வாசனை எவரிடமும் மறப்பின்றி வருகிறது

அசகாய சூரனை அந்த ஆண்டகைக்கு இந்தப் பெண்ணரசி இவ்வாறு வீர போதனை செய்து நீர்மை தெரிய விடுத்துள்ளாள்.

ஆரம்தாழ் திரு மார்பு என அந்த எழில் உருவைக் கருதி உருகியிருக்கிறாள். மருவி மகிழ்ந்தது பரிவு மிகத் தந்தது.

## இளையவன் கடமை.

சீராமன் சீரழியாமல் வீரம் காக்க வேண்டு என அனுமானை வேண்டினவள் பின்பு இலக்குவன்பால் தூண்டினாள்.

ஏத்தும் வென்றி இளையவன் எனத் தன் கொழுந்தனை இக் குலமகள் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. யாவரும் வியந்து கொண்டாடி உவந்து போற்றத் தக்க வெற்றி வீரன் என்று கொற்ற நீர்மையை உய்த்துணர வுரைத்துள்ளாள்.

அரசுரிமையை இழந்து அண்ணன் அடவி புக நேர்ந்தான் என்றதைக் கேட்டபோது இத்தம்பி சீறிச் சினந்த வீரப் பாடுகள் வியத்தகு நிலையன. தன் ஆற்றல் எல்லாம் அண்ணனைப் போற்றவும் அறத்தைக் காக்கவுமே ஆக்கியிருத்தலால் "ஏத்தும் வென்றி" என இவனது வெற்றி நிலை ஏற்றம் பெற்றது. இந்த வெற்றிவீரன் நின்றால் செத்து வீழுவோம் என்று கருதியே இராவணன் வஞ்சச் சூழ்ச்சி செய்து வழி நீக்கிப் போக்கித் தூயவனிடம் மாய வேலை செய்தான். வீர இளவல் நீங்கியது வெந்துயராய் ஓங்கியது.

தன் காவலில் களவு போயுள்ளமையால் அந்த உளவினை உள்ளம் தெளிய உணர்த்தி உரிமையோடு உறுதி நாடினாள்.

என்னைக் காத்து நின்றவற்கே கடன்.

தன்னைச் சிறையிலிருந்து விடுவித்துத் தன் கணவனிடம் சேர்க்க வேண்டிய கடமை இலட்சுமணனுடையதே எனச் சீதை

இவ்வாறு வாதமுறையில் வழக்குத்தொடுத்திருக்கிருள். ஏகாரம் பிரிநிலை. தமையனை நீக்கித் தம்பியையே வலியுறுத்தியுள்ளாள். தன் கையில் ஒப்பித்த பொருளைக் களவு போகவிட்டுப் பேசாமல் நிற்பது பெருமையாகாது; உரிமையை உணர்ந்து ஊக்கி முயன்று கடனைத் தீர்த்துவிட வேண்டும் என்று காட்டியிருக்கிருள்.

தன்னைக் கட்டிக் காத்து நின்ற இளவலை அநியாயமாய்த் திட்டி நீக்கி விட்டுத் தீமையில் அகப்பட்டுத் தவிக்கின்றவள் இப்பொழுது இப்படி நியாய முறைகளைச் சுட்டிக் காட்டிப் பேசியிருப்பது ஒட்டிய கிழமையாய் உவகை சுரந்துள்ளது.

தன் பிழையை நன்கு உணர்ந்திருந்தாலும் அன்புரிமையால் இங்ஙனம் ஆதரவு நாடிச் சாதனையுடன் போதனை கூறியுள்ளாள்.

தன்னைச் சிறை மீட்டிக் காக்க வேண்டிய பொறுப்பு இளையவனுக்கே உரியது எனச் சீதை சொல்லியுள்ள இந்த வார்த்தையை இலக்குவன் கேட்டால் எவ்வளவு இன்பத்தை அடைவான்? அதனை அளவிட வல்லார் யார்? உறவுரிமையும் உள்ளப் பாசமும் துறைகள் தோறும் தோய்ந்து உவகை சுரந்து திகழ்கின்றன.

ஈன்ற தாயினும் ஆன்ற அன்புரிமையோடு அண்ணியை எண்ணி ஒழுகும் புண்ணியத் தம்பிக்குக் கண்ணியமான கடமையைப் பெண்ணரசி ஈண்டுச் சுமத்தியிருக்கிருள். இளவலை அளவளாவி வந்துள்ள இந்த வாசகம் இங்கே அளவிடலரிய அன்பின் சுவையாய்ப் பொங்கியுள்ளது. அரிய பண்பாடுகள் காவிய சீவியங்களாய் யாண்டும் பெருகி வருகின்றன.

நம்பியை நினைந்து உருகுகிருள்; தம்பியை நினைந்து மறுகுகிருள். தனக்கு நேர்ந்துள்ள அவலச் சிறையிலிருந்து அழுங்கி அலமந்து உய்தி நாடி இக் குலமகள் உளைந்து தவிக்கின்ருள். தவிப்பெல்லாம் தாமரைக் கண்ணனைக் காண விழைந்து வேணவாவோடு வெய்துயிர்த்து விரிகின்றன.

## நீர்க் கடன்.

மாருதி போய்க் கூறியவுடனே இராமன் விரைந்து வந்தருளுவாரா? என்று சீதை உளைந்து ஏங்கினுள். உறுதி நிலையை அறுதியிட்டு வலியுறுத்தினுள். மூப்பது நாள் வரையும் பொறுத்திருப்பேன்; அதற்கு மேல் இருப்பதில்லை என்று குறிப்பித்தாள்.

திங்கள் ஒன்று முடியுமுன் இங்கு ஆள் வரவில்லையானால் தன் வாழ்வு முடிந்தது என்று முடிவுகூறியது விடிவினை விரைந்து காண வந்தது. குறித்த தவணை கடந்தால் பின்பு இலங்கைக்கு யாரும் வரவேண்டியதில்லை; அங்கிருந்தபடியே மீண்டு அயோத்திக்குப் போய்விடலாம் என்று வாய் மொழிந்துளாள். உள்ளப் பரிவுகள் உரைகளில் ஒளிர்கின்றன. உரிமை யன்புகள் பொங்கி மிளிர்கின்றன.

*கங்கை யாற்றங்கரை அடியேற்குத் தன்*
*செங்கையால் கடன் செய்கென்று செப்புவாய்!*

ஒரு மாதத்திற்கு மேல் நான் உயிர் வைத்திரேன்; உறுதியாய் இறந்து போவேன் என்பதை இங்ஙனம் உரைத்திருக்கிறாள். மூப்பத்தோராவது நாள் காலையில் அடியாளுக்குச் செய்ய வேண்டிய சரம கிரியைகளைக் கங்கைக் கரையில் செய்தருளும்படி எம் பெருமானுக்குச் சொல்லியருள் என்று அனுமானிடம் சொன்னாள்.

நீர்க் கடன் என்றது இறந்து போனவரை நினைந்து செய்யும் அந்திம கருமங்களை. தந்தை தாயர் இறந்தால் மைந்தனும், மனைவி இறந்தால் கணவனும் கருமம் செய்ய வுரியவர் ஆதலால் அந்த உரிமை இங்கு மருவி வந்தது. இறந்த சீவன் நல்ல கதியை அடைய வேண்டும் என்று எண்ணி இரண்டு கைகளாலும் தண்ணீரை அள்ளி உரிய நாமங்களைச் சொல்லி எள்ளோடு நேரே விடுவர் ஆதலால் அது நீர்க் கடன் என வந்தது. தர்ப்பணம்; ஜலாஞ்சலி என வடமொழியாளர் இதனை வழங்கி வருகின்றனர்.

தன் செங்கையால் என இராமனுடைய கைகளை இங்ஙனம் ஆவலோடு குறித்தாள். அந்த அழகிய கைகளால் தனக்கு நீர்க் கடன் செய்வதை விழுமிய பேறாக விழைந்திருக்கிறாள் தன்னை உயிரோடு காத்தருள வேண்டிய கை அது செய்யாது போயினும் செத்த பின்பாவது இது செய்ய வேண்டும் என வேண்டியுள்ளாள். அரிய பதிவிரதை உரிய பதியை நாடி உருகி மொழிகிறாள்.

புண்ணிய நதியாகிய கங்கையிலேதான் தனக்கு உத்தரகிரியை செய்யவேண்டும் என்பாள் கங்கையின் கரை என்றாள். இறந்து போனவர்களுடைய எலும்பு சாம்பல்களைக் கொண்டுபோய்க் கங்கையில் சேர்ப்பது பண்டு தொட்டே இந்நாட்டில் வழக்கமாயுள்ளது. நாட்டு வழக்கங்களை இக் காவியம் இடங்கள் தோறும் காட்டி வருகிறது. பழமையும் புதுமையும் கிழமை தழுவியுள்ளன

மாமிகளை வணங்கியது.

தனது உரிமையான வணக்கங்களைத் தன் மாமிமார் மூவருக்கும் தெரியப் படுத்தும்படி பிரியப்பட்டுள்ளாள். மாமியர் மூவர்க்கும் என யாவரையும் ஒருங்கே வரைந்து குறித்தது இவளது பெருந்தன்மையை விளக்கி நிற்கிறது. தன் அருமைக் கணவனைப் பெற்றருளிய கோசலை போலவே கைகேசியையும் சுமித்திரையையும் இக் குலமகள் கருதி வருவது இங்கு அறிய வந்தது. இடரிழைத்துள்ள கொடிய கைகேசியிடமும் யாதொரு மாறுபாடும் கொள்ளாமல் பிரியம் கொண்டாடியிருப்பது அதிசயமான அரிய தகைமையாய்ப் பெருகி மிளிர்கிறது.

மருமகள் உலகிற்கு இத் திருமகள் ஒருமகளாய் ஒளிபுரிந்து வருவதை உலகம் விழி திறந்து வியந்து மகிழ்கிறது

சீதை இறக்கின்றாள் தொழுதாள்.

என்ற இது எவ்வளவு பரிதாபமான மொழி? நாதியின்றி இலங்கைச் சிறையில் சீதை சாகும்பொழுது திருவயோத்தியில் உள்ள தன் மாமிமார் மூவரையும் திசை நோக்கித் தொழுது கொண்டே செத்தாள் என்னும் இந்த வார்த்தை எந்த உள்ளத்தைத் தான் உருக்காது? மருமகள் என உரிமை முறை கூறாமல் சீதை எனப் பிறந்த இடத்துப் பெயரையே குறித்தாள்; மண்ணோடு பிறந்தேன்; மண்ணோடு மடிந்தேன் எனப் புண்ணோடு பொங்கி மொழிந்த படியிது. சாக நேரும் போதும் மாமிகளிடம் மரியாதை வணக்கங்களைச் செலுத்தியிருக்கிறாள்

மாதா பிதாக்களைத் தெய்வமாக மதித்து வழிபடும் குலமகனைக் கொழுநனாகப் பெற்றுள்ளமையால் இத்தலைமகளிடம் கிழமையான விழுமிய குணங்கள் யாவும் விழைந்து குடி புகுந்துள்ளன.

இறந்து படுவதாகத் தன் முடிவை முடிவு செய்து நெடிது துணிந்துள்ளமையை மொழிகள் தெளிந்து கொள்ள நேர்ந்தன

நான் மாமிகளுக்குச் செய்த வணக்கத்தை என் சாமியிடம் மாத்திரம் சொல்லி நின்று விடாதே; அவர் என்பால் அருள் இல்லாமையால் அங்கே போய்ச் சொல்லாமல் மறந்து விடினும் விடுவர்; நீயே நேரே போய் என் மாமிகளிடம் எனது தொழுகைகளை ஞாபகமாய்ச் சொல்லி விட வேண்டும் என வேண்டியிருக்கிறாள்.

என மிதிலை வாசிகள் இப்படிப் பேசியிருக்கிறார்.

சலப் பிரளயமாய் உலகங்கள் யாவும் அழிந்து போகும்படி ஆங்காரத்தோடு ஆர்த்து வந்த ஆகாய கங்கையைத் தன் சடையிலுள்ள ஒரு மயிர் நுனியில் அடக்கியருளிய சிவபெருமான் எடுத்தாண்ட வில்லை இந்தப் பிள்ளையை வளைக்கச் சொல்லுவது பெரிய பிழை என இராமன் மீதுள்ள பிரியத்தினால் பொது மக்கள் இப்படி உருகியுரையாடி யுள்ளனர்.

வெள்ளம் அணைத்தவன் என்னும் இந்த அருமைப் பதத்தின் பெருமையை யுணராமல் "வெள்ளை மனத்தவன்" என்று திருத்தியிருக்கின்றனர். வெள்ளை மனத்தவன் ஆன சனகன் என அதற்குப் பொருளும் கூறுகின்றனர். வில்லின் மகிமையை விளக்கியுள்ள நல்ல அடைமொழியைச் சிதைத்து, மகாஞானியான சனக மன்னனை மதிகேடன் ஆக்கித் தங்கள் மதி கேட்டை உலகம் காணக் காட்டியிருக்கின்றனர்.

உயர்ந்த நூலில் உள்ள சிறந்த கவிகளைத் தம் மனம் போனபடி துணிந்து திருத்துவதும் மாறான பொருள் கூறி விபரீதமாய் வேறுபாடுகளை விளைப்பதும் இழிந்த செயல்கள்; மிகுந்த பாவம்.

"கலந்தவர் தமைப்பிரித்துக் கலகம் கண்டிடவல்லானும்,
புலந்தரு நூலின் இல்லாப் பொருளினைக் கூறு வானும்,
நலந்தனை அழுக்கா றெய்தி நகைத்துஇகழ்கிற்போன் தானும்
மெலிந்தவர் இடத்து மிக்க வெகுளியைப் பெருக்குவானும்"

(பிரபுலிங்க லீலை)

இழிந்த பாவிகள் என இது இகழ்ந்துள்ளது. நரக துயரங்களுக்கு ஏதுவான பழி பாவங்களைக் குறித்துக் கூறிவரும் பொழுது ஒரு தவ முதுமகள் இவ்வாறு உரைத்திருக்கிறாள். முன்னோர் மொழிகளைப் பிழைப் படுத்துவது கொடிய பிழையாம்.

புலம் தரு நூலின் இல்லாப் பொருளினைக் கூறுவான்.

பாவி என்றதனால் அந்தப் பிழை பாட்டின் தீமை தெளிவாம்.

இராம காவியத்துள் பல பாடல்களைப் பிழையாக மாற்றித் தனியே பதிப்பித்திருக்கின்றனர். அதனைப் பிழைப் பதிப்பு என்று சொன்னால் பொருத்துக் கொள்ளலாம். அதுதான் திருத்தமான பதிப்பு என்னும் பேரால்தான் வருத்தமாகின்றது. வயிறும் எரி

கிறது. "கலைத்தாயே! இங்கே நீதியில்லையா? நெறி இல்லையா? அறிவின் சுவை இந்நாட்டில் அடியோடு நாசமாய்ப் போயிற்றா? புனிதமான கலையுலகில் போலிகள் புகுந்து புலையாடல்கள் புரிவது கொடிய கொலைகள் அல்லவா?" என்று குலை துடிக்கின்றது.

அதிகார நிலைகளிலோ, பத்திரிகைகளிலோ தங்களுக்குக் கிடைத்துள்ள செல்வாக்கை நெறிகேடான முறையில் பாழாகப் பயன்படுத்துவது கொடிய பழியாம்; தேசத்திற்கு அது பெரிய துரோகமாகும். பிறரை வீணாகப் புகழ்ந்து பேசுபவர் தம்மைக் காணாமல் காட்டி வருகின்றனர். பிழைகள் கோடிகளாய்ப்பெருகி எழுகின்றன; கேடுகள் கிளைக்கின்றன; நாடுவிழிப்படையவேண்டும்.

தமிழ்மொழி எவ்வளவு கலை நலங்களையுடையது! அது எவ்வாறு பரிதாப நிலையில் மறுகி யுழல்கிறது. சிறந்த கல்வியறிவும் திருந்திய உள்ளப் பண்பும் நல்ல சீலமும் நயத்தகு நீர்மையும் மக்களிடம் மருவிய பொழுதுதான் நாடும் மொழியும் நலம் பல பெற்றுப் பீடும் பெருமையும் பெருகி விளங்கும்.

கலை ஞானத்திலும் கவி நிலையிலும் இந்நாடு எந்நாட்டினும் தலை சிறந்துள்ளது. இருந்தும் அறிவின் சுவையை உண்மையாக அனுபவிப்பவர் அருகியுள்ளனர். அதனாலேதான் தகுதி காண முடியாமல் மிகுதியும் போலிகள் மேவி விடுகின்றன. அவற்றின் போக்கும் நோக்கும் புலையாட்டமும் யாண்டும் ஆக்கக் கேடுகளாய் நீண்டு நிற்கின்றன. அவல நிலைகள் கவலைகளாய்க் கலித்து வருகின்றன; கலையுலகின் நிலை பல வகையிலும் பரிதாபமா யுளது.

உலகமகா கவிகளெலாம் தலை வணங்க
ஒளிர்கின்ற உதய ஞான
திலகமெனும் கம்பனை முன் திருவயிறு
வாய்த்திருந்த தேசம இன்று
கலகமிடும் சிலுகுரைகள் கவிகளென
வெளிவருதல் கண்டு நொந்து
பலமுறையும் அழுகின்ற பரிதாப
நிலைவிண்டு பகர லாமோ? (1)

கம்பனடித் துகள்நிலையும் காணாத
கழிமடங்கள் கம்பன் பாட்டின்
செம்பொருளும் நுண்பொருளும் தெளிபொருளும்
தெரிந்தவர்போல் செருக்கு மீறி
உம்பர்அமு தங்கள்என ஒளிமிகுந்த

கவிகளிலே ஊனம் செய்து
வம்புகளை மிக வளர்த்து வசைவளர
வளர்கின்றார் வளர்வ தென்னோ? (2)

கலையுணர்வின் சுவைகனிந்த கம்பனுயர்
காவியமும் கருதுந்தோறும்
தலையுணர்வு தழைத்துவரும் தருமநூல்
முதலாய தகைமை வாய்ந்த
விலைவரம்பில் நூல்களையும் விளைத்துவந்த
தமிழ் இன்று வெறுமையான
புலையுணர்வின் புகைமண்டிப் பொலிவிழந்து
போயுளதே புன்மை என்னே! (3)

பண்டிருந்த கொடை எங்கே? படையிருந்த
நிலை எங்கே? பரிந்து நீதி
கண்டிருந்த அரசெங்கே? கலை எங்கே?
கவி எங்கே? கற்பு வாய்மை
கொண்டிருந்த குலம எங்கே? குணம் எங்கே?
நலம் எங்கே? கொற்றம் எங்கே?
உண்டிருந்த நலமெல்லாம் ஒளிந்தோடிப்
போனவகை உரையாய் அம்மா! (4)

பொல்லாதார் நல்லரெனப் புல்லரெலாம்
வல்லரெனப் புனிதம் யாதும்
இல்லாதார் பெரியரென் இனியாதார்
இனியரென இயல்கள் ஏதும்
கல்லாதார் கலைஞரெனக் காணாதார்
கண்ணரெனக் கடமை ஓர்ந்து
நில்லாதார் நிலையரென நெடியராய்
நிலவுகின்றார் நிலைஎன் அம்மா! (5)

(இந்தியத் தாய் நிலை)

உலக மாதாவை நோக்கி இப்படிப் புலம்ப நேர்ந்துள்ளது.

உள்ளம் திருந்தி நல்ல நீர்மைகள் தோய்ந்து நாட்டுக்கும் மொழிக்கும் நலம் பல சூழ்ந்து எல்லாரும் இனிது வாழ எம் பெருமான் அருள் புரிய வேண்டும். கலை நிலை சீவகோடிகளுக்குத் தேவ அமுதம். அதனை அரசாங்கமும் அறிஞர்களும் கண்ணூன்றிப் பேணிவரின் பல உயிர்களுக்கும் அரிய உதவிகள் செய்த பெரிய புண்ணியமாம். புலையான புன்மைகள் பொன்றியொழிந்து நிலையான நன்மைகள் என்று பெருகி வருமோ அன்றுதான் திருவும் அறிவும் திறலும் தேசும் தேசமெங்கும் வாசமாய் ஒளிவீசும்

உறுதி யுணர்த்தியது.

ஈசன் கைலையை எடுத்தேன்; தேவர்களைவென்றேன்; திக்கு யானைகளை அடக்கினேன்; யாவரும் எனக்கு அடங்கி யுள்ளனர்; என்னை வெல்ல வல்லார் எவரும் இல்லை என்று இன்னவாறு தன்னை வியந்து தருக்கியுள்ள அவனது செருக்குகளுக்குச் செருப்படி கொடுப்பது போல் நெருப்படி வீசப் பிராட்டி பின்பு பேச நேர்ந்தாள்.

மலைஎடுத்து எண்திசை காக்கு மாக்களை
நிலைகெடுத் தேன்என மாற்றம் நேருநீ
சிலைஎடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை
தலைஎடுத்து இன்னமும் மகளின் தாழ்தியோ? (1)

ஏழையின் ஒளித்துறை இன்ன தாமென
வாழிஎம் கோமகன் அறிய வந்தநாள்
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமோ
ஊழியும் தீயும் உன்னுயிரொடு ஓயுமோ? (2)

வெஞ்சின அரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சும் என்று
அஞ்சுகின்றேன் இதற்கு அறனும் சான்றரோ. (3)

அங்கண்மா ஞாலமும் விசும்பும் அஞ்சவாழ்
வெங்கணாய் புன்தொழில் விலக்கி மேற்கொளாய்
செங்கண்மால் நான்முகன் சிவன்என்றே கொலாம்
எங்கள் நாயகனையும் நினைந்தது ஏழை நீ. (4)

இருவர்என்று இகழ்ந்தனை என்னின் யாண்டெல்லை
ஒருவனன்றே உலகழிக்கும் ஊழியான்
செருவருங் காலை என் மெய்ம்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந்து அநாயம் பொன்றுவாய். (5)

திருவின் வாய்மொழிகள் இவ்வுருவில் வந்துள. உரைகளில் மருவியுள்ள வேகங்களையும் விவேகங்களையும் யூகமாய் ஓர்ந்து கொள்பவர் உவகை மீதூர்ந்து துள்ளுகிறார். உள்ளம் காணி உளைய அவனது கள்ளங்களை எடுத்துக் காட்டி இடித்து அறிவுறுத்தி யிருப்பது இனிமை சுரந்து திகழ்கிறது.

சிலை எடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை.

மலை எடுத்தேன்; மாக்களை நிலை கெடுத்தேன் என்று தலை எடுத்து வந்து தன் முன் புலை எடுத்து நிற்கிறவனை நோக்கிச் சீதை இப்படிச் சொல்லம்பு தொடுத்திருக்கிருள். இன்று பெரிய போர் வீரன் போல் என் முன் வந்து பிதற்றுகின்ருய்! அன்று அங்கே பன்னசாலை முன் வில்லும் கையுமாய் நின்ற அந்தப்பிள்ளை எதிரே வர உள்ளம் பதறி ஒளித்துக் கள்ளம் புரிந்து கபடஞ் செய்தாயே! நீயும் ஒரு ஆண்மையாளனாய் மேன்மை காட்டிப் பான்மை நீட்டிப் பேசுவது மிகவும் ஈனமாம்.

சிலையை எடுத்து நின்ற அவன் உன் தலையை எடுத்து விடுவான் என்று அஞ்சியே புலையெடுத்துப் போக்கிப் போலி வேடம் பூண்டு காலித்தனம் செய்தாய் என அவனைக் கடுத்து வைதுளாள். இளையவனுக்கே அவ்வாறு அஞ்சிய நீ மூத்தவனைக் கண்டால் எவ்வாறு அஞ்சுவாய்? இவ்வாறு கேட்கும் கேள்வி இவ் வாக்கியத்துள் மறைந்துள்ளமையை நோக்கி அறிக.

தன்னைக் காத்து நின்ற இலக்குவனது நிலையும், தான் அவனை நிட்டூரமாகத் திட்டி நீக்கிய புலையும் சீதையின் உள்ளத்தை வாட்டி வருகின்றன. அவ் வரவு நிலைகளை உரியஇடங்களில் பரிதாபமாய்க் கண்டு வருகிறோம். புனிதமான அப்பிள்ளையின் உள்ளம் கொதிக்கச் சொல்லிய பாவமே இப்பொழுது தான் அனுபவிக்கிற துயரங்களுக்கு மூல காரணம் என்று சாலவும் மறுகி யிருக்கிருள்.

பரிவு கொண்டது.

இளவலுக்கு அஞ்சிக் களவு செய்தவன் என அவனை இகழ்ந்து சொல்லி அதன்பின் ஏந்தல் நிலையினை ஓர்ந்துணர வுரைத்தாள்.

என்னைக் கவர்ந்து கொண்டு வந்துள்ள நீ இங்கே உறைந்திருப்பதை அறிந்தால் எம்பெருமான் உடனே விரைந்து வருவார்; அந்த வீர நாயகன் வந்தால் இந்த இலங்கை பாழாய் அழிந்து போம்; அரக்கர் குலம் அடியோடு நாசமாம்; நீயும் குடியோடு அழிவாய்; அந்தக் கோதண்டவீரன் சினந்தால் மூதண்டங்களும் சிதைந்து படுமே! என்று என் உள்ளம் பரிந்து பதறுகிறது; நீ ஒருவன் தீமை செய்ய உலக வுயிர்கள் பலவும் அழிய நேர்ந்துள்ளனவே! நிலைமை தெரிய வில்லையே! என்னும் பரிதாபம் இரவும் பகலும் என் நெஞ்சை வருத்தி வருகிறது.

எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சும் என்று
அஞ்சுகின்றேன்; இதற்கு அறனும் சான்று.

இராம பிரானுடைய கோபத்தால் உலகமெல்லாம் நிலைகுலைந்து சிதையுமே! என்று சீதை உள்ளம் கருதி மறுகியுள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்கிறோம்.

மடமையாய் நீ ஒருவன் இழைத்துள்ள கொடுமையால் பல கோடி உயிர்கள் பாழாகும்படி மூண்டுள்ளனவே பாவி! என்று தேவி ஆவி துடித்திருக்கிறாள். இதனால் இவளது கண்ணோட்டமும் கருணையும் பொறுமையும் பெருமையும் நன்கு தெரியவந்தன.

அஞ்சுகின்றேன் இதற்கு அறனும் சான்று என்றது அக் கொடியவன் நெஞ்சம் தெளிந்து நிலைமையை உணர்ந்து பிழை நீங்கி உய்ய வேண்டும் என்னும் பரிவினால் ஆயது.

பல கொலைகள் விழும்; நீயும் குலத்தோடு அழிந்து போவாய்; இலங்கை நாசமாம்; உலகமெல்லாம் துயரமடையும்; இராம கோபத்தால் இவ்வாறான அழிவுகள் நேராமல் நீ இப்பொழுதே வழி தேடிப் பிழைத்துக் கொள்! என்பது குறிப்பு.

இவன் ஒருவனால் அரக்கர் குலம் அழியப்போகிறதே என்று பிராட்டி இரக்கம் மீதூர்ந்திருத்தலால் அந்த உள்ளப் பண்பை நினைந்து நாம் உருகி மகிழ்கிறோம். அரிய பெரியோர்களுக்கு அருள் நீர்மை தனியுரிமையாயுளது. அறம் சாட்சி என்றதனால் தருமம் துணை காத்து அருகிருக்கும் மருமம் தெரிய வந்தது.

மண்ணுலகமும் விண்ணுலகமும் அஞ்சி நடுங்கும்படியாக வெஞ் செயல்கள் புரிந்து வருகிற உனது கொடுமைக்கு முடிவு காலம் வந்துள்ளது; தேவர் யாவரும் ஏவல் செய்கின்றனர்; அகிலத்தையும் அடக்கி ஆளுகின்றோம் என்னும் உள்ளக் களிப்பினால் எம்பெருமானுடைய மகிமையை நீ அறிய மாட்டாமல் மதிகேடு மண்டி அவலமாயிருக்கின்றாய்.

செங்கண்மால் நான்முகன் சிவன் என்றேகொலாம்
எங்கள் நாயகனையும் நினைந்தது ஏழை நீ.

இங்ஙனம் பேசியிருப்பது வியப்பாயிருக்கிறது.

தேவர்களை ஏவல் கொண்டு திரிமூர்த்திகளையும் மதியாமல் இராவணன் மதம் மீறியிருத்தலால் அவன் வியந்து சிந்தனை

செய்து தெளிந்து கொள்ளும்படி இந்த வாசகம் இங்கே வந்துளது.

திருமால், பிரமன், சிவன் என்றே என் நாயகனை நீ நினைக்கிருய்; அங்ஙனம் நினையாதே! என நினைவுறுத்தியுள்ளாள். ஏ அறிவிலியே! என்பாள் ஏழை நீ என்ருள். தனக்கும் தன் குலத்துக்கும் அழிவைத் தேடிக் கொள்ளுகிற முழு மடையன் என்பதை இம் மொழி விளர்க்குள்ளது.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களை யுடைய தேவர்களாலும் தனக்கு அழிவு நேராதபடி வரம்பெற்று வந்துள்ளமையான் அம் மூவர்பாலும் அச்சமின்றி எவர்பாலும் எங்கும் அதிகாரங்களை வரம்பின்றிச் செலுத்தி உச்ச நிலையில் இராவணன் உரம் பெற்று நிற்கின்ருன். அந்நிலை குலைந்து தலை குனிந்து அஞ்சும்படி இவ் வார்த்தைகள் ஈண்டு ஆர்த்து எழுந்து கூர்த்த நோக்கோடு கூடி வந்துள்ளன.

செங்கண்மால் செய்யாத, நான்முகன் நாடாத, சிவன் ஆற் ருத அரிய செயலை இராமன் செய்ய வந்துள்ளான் என்பதை இங்கே மருமமாக அறிந்து கொள்ளுகிருேம்.

தேவ தேவர்களாலும் அழிவில்லை என்னும் களிப்பினுல் எங்கும் அழி துயரங்களைச் செய்து வருகிருன்; அதற்கு முடிவு வந்துள்ளமை இவண் முடிவாய் நின்றது.

ஆதி மூலப் பரம்பொருளே இராமனுய் அவதரித்து வந்துள் ளான் என்னும் அவதார வுண்மை சீதையின் வாக்கு மூலமாக வும் ஈண்டு நன்கு தெரிய வந்தது.

தம் காவிய நாயகனை நம் கவி நாயகன் கருதியுள்ளதைத் தேவியின் வாய்மொழியாகவும் உலகம் அறியச் செய்து உவகை கூர்ந்துள்ளார். உரைகளில் அதிசய மகிமைகள் ஒளி செய்து வருகின்றன. துதி மொழிகள் மதிநலம் கனிந்து மிளிர்கின்றன.

என் நாயகன் என்னுமல் எங்கள் நாயகன் என்றது நல்லோர் பல்லோரையும் தன்னெடு தழுவியுரைத்த தன்மைப்பன்மையாம். இலங்கைச் சிறையில் சீதை தனியே துயருற்றிருந்தாலும் உலகி லுள்ள தரும சீலங்கள் யாவும் அவளுக்கு இனிய துணையாயமைந் துள்ளமை உரையில் நுணுகி உணர வந்தது.

தன்னுடைய அருமைக் கணவனை இக்குலமகள் கருதி யுருகி

யிருக்கும் உரிமையை உணருந்தோறும் எவரும் உள்ளம் உருக நேர்வர். கடவுள்பால் பேரன்பு மண்டி மனம் கரைந்து வருகிற பத்த கோடிகளுடைய சித்த நிலையும், இராமன்பால் சீதை கொண்டுள்ள உத்தம பத்தியும் ஈண்டு ஒரு முகமாய் உய்த்துணர வந்தன. உருகிய அன்பு பெருகி ஓடுகிறது.

நாயகி நாயக நேயம் எனத் தெய்வ பத்திக்கு எடுத்துக்காட்டி வரும் தூய அன்புரிமைக்கு இவர் பண்பாயுள்ளனர்.

தேவதேவனே மனித வுருவில் இராமன் என வந்துள்ளான்; அவனோடு மாறுபட்டு நில்லாதே; நின்றால் நீ நீறுபட்டு அழிவாய் என்று அவன் நெஞ்சம் தெளிய நேரே கூறினாள்.

இருவர் என்று இகழ்ந்தனை என்னின் யாண்டு எல்லை
ஒருவன் அன்றே உலகு அழிக்கும் ஊழியான்.

எதிரியின் எண்ணங்களை எதிர்நோக்கி மொழிகள் வெளி வருகின்றன. வாதமுறை தோய்ந்து போதனை பாய்ந்துள்ளது.

என்னிடம் ஆயிரவெள்ளம் படைகள் உள்ளன; மூன்று உலகங்களையும் அடக்கி ஆளுகின்றேன்; ஒரு மனிதன் வந்து என்னை என்ன செய்ய முடியும்? தன்னுடன் பிறந்த தம்பி மாத்திரம் அவனுக்குத் துணையாயிருக்கிறான்; அந்த இரண்டு பேரின் எளிமையும் திரண்டசேனைகளையுடைய எனது வலிமையும் எதிர் தூக்கி நோக்கின் அணுவும் மேருவும் போல் பெரிதும் இழிவாம் என அவன் களிமீதூர்ந்து நிற்பான் என்று கருதி இவ்வாறு தெளிவூர்ந்து வரப் பேசினாள்.

இருவர் தானே என்று நீ இகழ்வாக எண்ணுவாயானால் அது பெரிய மடமையாம். யுக முடிவில் உலக முழுவதையும் ஒருங்கே அழித்து ஒழிப்பவன் ஒருவனே என்பதை நீ உணர்ந்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் உணர்வாயாயின் இந்த இருவர் நிலையும் உனக்கு எளிது தெளிவாம் என அறிவூட்டியருளினாள்.

யாண்டு எல்லை என்றது யுகாந்த காலத்தை.

ஊழியான் எனச் சங்கார கருத்தாவுக்கு ஒரு பெயர் அமைந்தது. ஊழிக் காலத்தில் யாவும் அழித்து தான் ஒருவனே தனித்து நிற்றலால் அந்தப் பரம்பொருளை ஊழியான் என்றார்.

ஊழியார் ஊழிதோறும் உலகினுக்கு ஒருவராகிப்
பாழியார் பாவம் தீர்க்கும் பராபரர் பரமதாய
ஆழியான் அன்னத்தானும் அன்றவர் அளப்பரிய
பாழியார் பரவி ஏத்தும் பழனத்தெம் பரமனாரே. (தேவாரம்)

ஊழியார் எனச் சிவபெருமானை இதில் குறித்திருத்தலறிக.

யுகாந்த காலத்து உருத்திரமூர்த்தி போல் இராமபிரான் ஒருவனே உன் குலத்தையெல்லாம் அடியோடு அழித்தொழிக்க வல்லான்; அவனோடு தம்பியும் துணை சேர்ந்துள்ளான் ஆதலால் உனது அழிவு நிலையை விழி தெளிந்து கொள்க என விளக்கியுள்ளாள். ஒப்பு நிறுத்திய ஒட்பம் நுட்பம் மிகவுடையது.

செரு வருங்காலை என் மெய்ம்மை தேர்தியால்

தான் சொல்லிய வாய்மொழிகளின் உண்மைகளை அவன் உணருங்காலமும் நேரமும் இங்ஙனம் உரைக்கப்பட்டன.

நான் கூறுகிற உறுதிமொழிகளை இப்பொழுது நீ உணரமாட்டாய்; செருக்கும் களிப்பும் தலைக்கு ஏறியிருத்தலால் யாருடைய புத்தி போதனையும் உனக்கு யாதும் ஏறாது; போர் மூண்டு அந்தக் கோதண்ட வீரனை நேரே கண்டபோது இன்று நான் இங்கே உரைத்தன யாவும் உண்மை என்பதை அன்று அங்கே நீ அனுபவத்தில் நன்கு உணர்ந்து கொள்வாய் என இங்ஙனம் உறுதியாக உணர்த்தியிருக்கிறாள். உணர்வுரை பரிவு மருவி வந்தது.

அரிய அரச செல்வங்களை இழந்து அநியாயமாய் அழிந்து தொலையப் போகின்றாய்; நிலைமையைத் தெளிந்து அழிவு நிலை அடையுமுன்னமே வழுவியுள்ள பிழை நீங்கி இப்பொழுதே பிழைக்கும் வழியைத் தேடிக் கொள்க எனத் தெளித்தருளினாள்.

பொருவரும் திரு என்றது வாளும் வையமும் வணங்க வாழ்ந்து வருகிற அவனது திவ்விய போகங்களையும் செவ்விய இராச்சிய செல்வ நிலைகளையும் கருதி வந்தது. எவரும் பெறலரிய பெருந் திருவினை ஒருங்கே இழந்து நாசமாய்ப் போக நேர்ந்துள்ளாயே! என்று அவனுடைய அழிவு நிலைக்கு இரங்கியிருக்கிறாள். இப் பெண்ணரசியின் அருள் நீர்மை உரைகளில் ஊடுருவி மிளிர்கின்றது. அநாயம் பொன்றுவாய் என்றது அநியாயமாய் மாண்டு படுவதை ஈண்டு விழி எதிரே தெளிவாக உணர்த்தினாள்

நாயம்—நியாயம், நீதி. அதற்கு மாறானது அநாயம் என்க.

வீணே அழிந்து போகாதே என நேர்ந்துள்ள அழிவு நிலைகளை அவன் நினைந்து நோக்கி எவ்வகையிலாவது திருந்தி வாழும்படி பரிந்து பேசுகிறாள். அருள் நீர்மை ஆதரவு புரிகிறது.

## இறுதியில் கூறிய உறுதிகள்.

புத்தி போதனைகள் பலவகையான யுத்திகளோடு கலந்து உலக அனுபவங்களைத் தழுவி உணர்வு நலங்களை வெளி செய்து வருகின்றன. பாவ வழிகளின் பழிதுயரங்களையும் புண்ணிய சீலங்களின் கண்ணிய இன்பங்களையும் கருதிகாணக் காட்சிதருகின்றன.

பூவிலோன் ஆதியாகப் புலன்கள்போம் நெறியிற் போகாத்
தேவரோ அவுணர்தாமோ நிலைநின்று வினையில் தீர்ந்தார்?
ஏவல்எவ் வுலகும்செய்யச் செல்வம்நிற்கு இசைந்த தென்றால்
பாவமோ முன்னிசெய்த தருமமோ தெரியப் பாராய்! (1)

இப்பெருஞ் செல்வம்நின்கண் ஈந்தபே ரீசன் யாண்டும்
அப்பெருஞ் செல்வம் துய்ப்பான் நின்றுமா தவத்தினன்றே
ஒப்பருந் திருவும் நீங்கி உறவொடும் உலக்க வுன்னித்
தப்புதி அறத்தை ஏழாய் தருமத்தைக் காமி யாதே. (2)

மறந்திறம் பாத தோலா வலியின ரெனினும் மாண்டார்
அறந்திறம் பினரு மக்கட் கருள்திறம் பினரு மன்றே.
பிறந்திறந் துழலும் பாசப் பிணக்குடைப் பிணியில் தீர்ந்தார்
துறந்தரும்பகைகள்மூன் றும் துடைத்தவர்பிறர்யார் சொல்லாய்!

தென்தமிழ் உரைத்தோன் முன்னைத் தீதுதீர் முனிவர் யாரும்
புன்தொழில் அரக்கர்க்கு ஆற்றேம் நோற்கிலம் புகுந்த போதே
கொன்றருள் நின்னால் அன்னார் குறைவது சாதம் கோவே!
என்றனர் யானே கேட்டேன் நீ அதற்கு இயைவ செய்தாய்! (4)

உன்னையும் கேட்டு மற்றுன் ஊற்றமும் உடைய நாளும்
பின்னையிவ் அரக்கர் சேனைப் பெருமையும் முனிவர் பேணிச்
சொன்னபின் உங்கை மூக்கும் உம்பியர் தோளும் தாளும்
சின்ன பின்னங்கள் செய்த அதனை நீ சிந்தியாயோ? (5)

ஆயிரம் தடக்கையானின் ஐந்நான்கு கரமும் பற்றி
வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம்
நீயறிந் திலையோ ஏகும் நெறியறிந் திலாத நீசா! (6)

கடிக்கும்வல் லரவும் கேட்கும் மந்திரம் களிக்கின்றோயை
அடுக்குமீ தடாதென் றுன்ற ஏதுவோடு அறிவு காட்டி
இடிக்குநர் இல்லை; உள்ளார் எண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்குநர் என்ற போது முடிவன்றி முடிவது உண்டோ? (7)

(சிந்தனைப்படலம், 53-59)

முடிவில் இவ்வாறு முடிவாகக் கூறியிருக்கிறான்.

"பிரமதேவன் முதலாகத் தேவர் யாவரும் உயர்ந்த இன்ப நிலைகளில் சிறந்து வாழ்ந்து வருதல் தரும நீதிகளினாலேயாம். அவற்றைக் கைவிட்டுப் பாவங்களைத் தழுவி நின்ற அசுரர் எல்லாரும் பாழாய் அழிந்து போயுள்ளனர். தேவர்களும் வணங்கி ஏவல் செய்யும்படி நீ பெற்றுள்ள இந்தப் பெருஞ் செல்வங்கள் பாவத்தினால் வந்தனவா? அல்லது புண்ணியத்தினால் கிடைத்தனவா? இதனைக் கொஞ்சம் சிந்தனை செய்து பார்! பெறலரிய இந்தப் பெரும் பாக்கியங்களை உனக்குத் தந்தருளிய சிவ பெருமானும் தருமத்தினாலேதான் நிலைத்து வருகிறார்; தருமம் நீங்கினால் கடவுளாயினும் வாழ முடியாது; கடையாகவே தாழ்ந்துபட நேரும்; தேவ கோடிகளுக்கும் சீவகோடிகளுக்கும் தருமம் ஆதாரமாயுள்ளது. அதனை எவன் இழந்தானோ அவன் உயிர் அற்ற சவம் ஆகின்றான். அத்தகைய தருமத்தை மறந்து பாவத்தை விழைந்து கொண்டு நீ வாழலாம் என்று எண்ணுவது முழுமூடமேயாம். அரசும் குலமும் அடியோடு அழிய வழி தேடிக் களி மிகுத்து நிற்கின்றாய்! உன் நிலை இழி மடமையானது; பரிதாபமுடையது. உலகை யெல்லாம் வெல்ல வல்ல அதி வீரர் ஆயினும் அறமும் அருளும் அவர்பால் இல்லையாயின் அவர் இழிந்து அழிந்தே போவர். இதனை உண்மையாக நீ தெளிந்து கொள். பிறவி நீங்கிப் பேரின்ப நிலைகளை அடைபவர் எவரும் அறமும் அருளும் உடையவரேயாவர். தரும சீலர்கள் இருமையும் பெருமை பெறுகின்றனர். அருந்தவக்குரிசிலான அகத்தியர் முதலிய மாதவர்கள் என் நாயகனை வனத்தில் கண்டு உன் இனத்தவர்கள் செய்து வருகிற கொடுமைகளை எடுத்துரைத்தனர்; தமக்கு நேர்ந்துள்ள இடர்களை நீக்கித் தம்மைக் காத்தருளும்படி அவர் முறையிட்டு வேண்டினர். அரக்கர் குலம் அழிந்தாலன்றி உலகம் இனிது வாழ முடியாதென்று முனிவர் திரள் கூறவே, தீயோரை அடியோடு அழித்து நல்லோரைக் குடியோடு காத்தருளுவதாக எம்

பெருமான் வாக்களித்தருளினர். அந்த உறுதிமொழியை அன்று நான் அருகு நின்று கேட்டேன். அதற்கு உரிய வழியை உன்னிடம் இன்று காண்கிறேன். பழி புரிந்து பாழாகின்றாய்; விளைவுகளை விழி திறந்து காணாமல் வீணே மடிகின்றாய்; உன்னுடைய அதிகார ஆற்றல்களை நன்கு கேட்டிருந்தும் உன் தங்கையை மூக்கு அறுத்து, கான் முதலிய சேனைத்திரள்களைக் கொன்றழித்துள்ளாரோ அந்த வெற்றி வீரருடைய விசய பராக்கிரமங்களையும், உள்ளக் குறிப்புகளையும் ஒரு சிறிதும் சிந்தனை செய்து பாராமல் நிந்தனையில் நிமிர்ந்து நிற்கின்றாயே! உன் மடமைதான் என்னே! உனக்கு சுய புத்தியுமில்லை; சொல்லுவார் பேச்சையும் கேட்க மாட்டாய்; மாட்டு மதியிலும் கேட்டு மதியனாயுள்ள உனக்குக் கதி காட்டுவார் யார்? கார்த்த வீரியன் என்னும் சீர்த்தி மிகுந்த அரசன் உன்னை இரத்தம் கக்கக் குத்திச் சிறையில் அடைத்து வைத்தான்; அந்த அதிசய வீரனைப் பரசுராமன் கொன்று தொலைத்தான். அரசர் குல காலனை அவனை என் குல நாயகன் வென்று அடக்கினான். உன்னை இழிவாக அடக்கிச் சிறையில் வைத்தவனை எளிதே கொன்றவன் எவ்வளவு வலிமை யுடையவன்! அவனை ஒரு நொடியில் வென்று வீறு கொண்டு நிற்கிற அவ் வீர மூர்த்தியின் சீரையும் சிறப்பையும் எண்ணி உய்யாமல் மண்ணாய் மாண்டு போக மூண்டுள்ளாயே! இழி மடையினிலும் கழி மடையனாய் நீ களித்து நிற்பது வருத்தம் விளைக்கிறது. கொடிய பாம்பு கூட மந்திரத்திற்குக் கட்டுப்படுமே! நீ ஒன்றுக்கும் கட்டுப் படாமல் உள்ளம் களித்துள்ளாயே! நல்லது சொல்லி உன்னைத் திருத்துவார் யாரும் இல்லையே; அருகிலுள்ளவர்கள் எல்லாரும் நீ கருதிய படியே பழி பாவங்களைச் செய்து கொடுத்து உன்னைத் தொழுது வாழ்த்தி வருகிறார்களே! ஐயோ! இழுதையே! நீ அடியோடு அழிந்து போவதைத் தவிர வேறு உய்யும்வழி யாதும் இல்லையே!'' என விழி நீர் ததும்ப அளி மீதூர்ந்து பழி நிலைகளை எடுத்துக் காட்டி வழி தெரிந்து பிழைக்கும்படி பிராட்டி பேசி யுள்ளாள்.

வாய்மொழிகள் அந்தத் தூய உள்ளத்தின் அருள் நீர்மைகளையும் அறிவு நிலைகளையும் தெளிவாக விளக்கியுள்ளன. யாவும் பொருள் பொதிந்த போதனைகளாய்ப் பொலிந்து திகழ்கின்றன.

புலன்கள் போம் நெறியில் போகாதவர் புண்ணிய சீலராய் உயர்ந்து போகிறார்; மனம் போனபடி இழிவழிகளில் அலைந்து

திரிபவர் இழிந்தவராய்க் கழிந்து தாழ்கின்றார் என்றதனால் பொறி களை அடக்கி நெறியே ஒழுகுபவர் நிலையும், அல்லாதவர் புலையும் நேரே தெரிய வந்தன.

செயற்கு அரிய செய்வார் பெரியர்; அங்ஙனம் செய்யாதார் சிறியர் என்ற தேவர் கருத்தும் இங்கே கருதத்தக்கது.

இழிந்த காம இச்சையில் அழுந்தி ஈனனாய் அழிந்து போகாதே என்ன அவன் நிலைமையைத் தெளிந்து தேற முதலில் இங்ஙனம் புலன் அடக்கத்தை மொழிந்தருளினாள்.

ஏவல்லவ் வுலகும் செய்யச் செல்வம் நிற்கு இசைந்த என்றால்
பாவமோ? முன் நீ செய்த தருமமோ? தெரியப் பாராய்!

காமத்தால் கண் குருடு பட்டிருக்கிற இராவணன் கொஞ்சம் கண் திறந்து பார்க்கும்படி கற்பரசி இங்ஙனம் சுட்டிக் காட்டி யிருக்கிறாள். உற்றுள்ள நிலைகளை உணர வுணர்த்தினாள்.

தேவரும் தலை வணங்கி ஏவல் செய்யும்படி மூவுலகவாட்சியை மாட்சிமையாகப் பெற்றிருக்கிறாயே! இந்த அரிய பாக்கியம் நீ செய்த பாவத்தால் வந்ததா? புண்ணியத்தால் கிடைத்ததா? இவ் வுண்மையை எண்ணிப் பார்! அரிய தவத்தையும் அளவிடலரிய புண்ணியங்களையும் செய்த இந்தப் பெரிய செல்வங்களைப் பெற் றிருக்கிறாய்! இனிய தரும பலன்களை அனுபவித்து வருகிற நீ கொடிய பாவத்தைச் செய்யத் துணிந்தது குல நாசத்திற்கு மூல காரணமாய் மூண்டுள்ளது. உடனே உணர்ந்து திருந்துக; இல்லை யானால் அடியோடு அழிந்தே போவாய்!

மறம் திறம்பாத தோலா வலியினர் எனினும்
அறம் திறம் பினரும் மக்கட்கு அருள் திறம்பினரும் மாண்டார்.

எவரையும் வெல்ல வல்ல வெற்றி வீரராயினும் அறமும் அருளும் இலர் எனின் அவர் அழிந்தே தொலைவர் என்னும் இது இங்கு அவன் உணர்ந்து கொள்ள வந்தது. மறம்=வீரம்.

பெரிய வீரன் என்று செருக்கி நிற்கின்ற அவனுக்கு உரிய போதனையாய் ஈண்டு இது உணர்ச்சி யூட்ட எழுந்தது.

தருமமும் கருணையும் இங்கே காட்சிக்கு வந்துள்ளன.

இந்த இரண்டும் உன்னிடம் இல்லை; ஆதலால் நீ எவ்வளவு

பெரிய வெற்றி வீரனாயிருந்தாலும் இழிந்து அழிந்தே போவாய் என நேரே கூறாமல் படர்க்கையில் வைத்துப் பதமாக வுரைத்தாள். மாள்வார் என்னாமல் மாண்டார் என இறந்த காலத்தால் கூறியது விரைந்து அழிவார் என்னும் தெளிவு தோன்ற வந்தது.

அறமும் அருளும் இன்றிக் கொடிய செயல் செய்கின்றவனை இரக்கம் கெட்ட பாவி என்று வையம் வைகின்றது. அதனை அரக்கர் தலைவனுக்கு இங்கே குறித்துக் காட்டினாள்.

தரும சீலனான இராமனுக்குத் துரோகம் செய்து, அவனது தரும பத்தினியைக் கவர்ந்து கொண்டு வந்து அல்லல் புரிகின்றான் ஆதலால் பொல்லாத பாவி என இராவணன் எள்ளலுற நேர்ந்தான். தீயது செய்பவன் தீயனாய் இழிகின்றான்.

அறமும் அருளும் திறம்பி மறமும் மதமும் நிரம்பி அவன் செய்து வந்த கொடுமைகள் யாவற்றினும் இந்தப் பதிவிரதைபால் செய்தது அதி பாதகமாயது; ஆகவே அவன் கொடிய பாவி என்று நெடிய பழி உலகம் முழுவதும் பரவி நின்றது.

பாவத் தீமைகள் எவரையும் நாசப்படுத்தி விடும் ஆதலால் நீசமான அந்த நாச நிலைமையை நேரே எடுத்துக் காட்டினாள்.

"All evil is so much death or nonentity." (Divinity)

"தீமைகள் எல்லாம் பாழான அழிவையே தரும்" என்னும் இது இங்கே அறிய வுரியது. தீமையை எவரும் வெறுத்து இகழ்கின்றனர்; நன்மையை யாண்டும் விழைந்து புகழ்கின்றனர்.

அறமும் அருளும் சீவ அமுதங்கள்; அவற்றையுடைய சீவர்கள் திவ்விய கதிகளை எய்துகின்றன; இழந்தன வெவ்விய துயரங்களை அடைகின்றன என்னும் உறுதி யுண்மை இங்கே கருதியுணர வந்தது. சானகி வாய் மொழிகள் ஞான மணம் கமழ்ந்து நலம் பல சுரந்து அரிய போதனைகள் நிறைந்து இனிது மிளிர்கின்றன.

கொடுமை நஞ்சுபோல் மனிதனை நாசப் படுத்தும்;
கருணை அமுதமாய் ஆனந்தம் அருளும்.

இந்த இனிய போதனை அந்தக் கொடியவனுக்கு ஏதாவது உணர்வு அருளி உதவி புரியாதா எனக் கருணையோடு போதித்திருக்கிறாள். அருளை இழந்தமையால் அடியோடு அழிந்தாய் என்

றது அதனை யுடையனாய் உய்தி பெறுக என்றவாறும்.

"So much benevolence as a man hath, so much life hath he."

"கருணையுள்ள அளவு மனிதன் உயிருடையனாய் ஒளிபெற்று நிற்கின்றான்" என அமெரிக்க மேதை ஆகிய எமர்சன் இங்ஙனம் கூறியிருக்கிறார். அமுத நீர்மையான இனிய பண்புகளை இழந்து கொடுமைகளைச் செய்து படுபாதகர்களாய் மனிதர் இழிந்து அழிந்து போவது பரிதாபமாகிறது.

இங்ஙனம் பலவாறு நீதிநலங்களை உரைத்து வந்தவள் பின்பு அவனது ஆற்றலை அளந்து காட்ட நேர்ந்தாள். பழைய நிகழ்ச்சி ஒன்றை எடுத்துக் காட்டி இகழ்ச்சிக் குறிப்போடு உணர்த்தி யிருப்பது உணர்ச்சி மிகுந்து உவகை சுரந்து திகழ்கின்றது.

## கார்த்த வீரியன்.

இவன் சந்திர குல வேந்தன். கிருத வீரியன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். அரிய வரபலங்களை யுடையவன்; பெரிய போர்வீரன். நல்ல நீதிமான். போரில் வேண்டியபொழுது ஆயிரம் கைகள் தோன்றும்படி வரம் பெற்றுள்ளவன். இவன் ஆட்சிபுரிந்து வருங்கால் ஒருநாள் நருமதை நதி அருகே உலாவி நின்றான். உலகை வென்று உள்ளம் செருக்கிப் படைகளோடு அங்கு இராவணன் வந்தான். இருவருக்கும் போர் மூண்டது. அந்த அமரில் அவன் தோல்வி யடைந்தான். அவனைப் பிடித்துக் கொண்டு போய் மாகியதி என்னும் நகரில் இம் மன்னன் சிறைப் படுத்தினான். பின்பு புலத்திய முனிவர் வந்து வேண்டினமையால் வெளியே விட்டான். அது முதல் இராவண சித்து என்னும் வெற்றிப் பெயரோடு இவ் வேந்தன் சிறந்து விளங்கி நின்றான்.

அந்தச் சரித்திரத்தை இங்கே குறித்துக் காட்டி இராவணனுடைய செருக்கைப் பிராட்டி நளினமாக அடக்கியிருக்கிறாள்.

ஆயிரம் தடக்கையான் எனக் கார்த்த வீரியார்ச்சுனனை இங்ஙனம் குறித்தது அவனது அதிசயமான ஆற்றல் நிலை தெரிய.

நின் ஐந்நான்கு கரமும் பற்றி வாய் வழி குருதி சோரக் குத்தி.

அவனிடம் அகப்பட்டு இவன் அடைந்துள்ள சிறுமையை இப்படிக் குத்திக் காட்டியுள்ளாள். பத்து வாய்களிலுமிருந்து

அன்று இவன் இரத்தம் கக்கியிருப்பதை நம் கண்கள் காண இங்ஙனம் காட்டியிருப்பது பரிதாபக் காட்சியாய்ப் பெருகியுள்ளது.

வான் சிறையில் வைத்த தூயவன்

என்றதனால் அந்த மன்னனை இந்த அம்மை மதித்துள்ளமை வெளியாயது. தீயவன் ஆன இவனைச் செருக்கடக்கிச் சிறையில் அடைத்து வைத்தமையால் அவன் தூயவன் என நேர்ந்தான்.

வலிய வந்து சண்டைக்கு இழுத்து இழிவடைந்தமை தெளிய வந்தது. நிகழ்ச்சிக் குறிப்புகள் இகழ்ச்சிச் சிரிப்புகளோடு இசைந்திருக்கின்றன. உரைகள் உணர்ச்சிகளை ஊட்டி வருகின்றன.

தூயவன் வயிரத்தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம்
நீ அறிந்திலையோ? ஏகும் நெறியறிந் திலாத நீசா!

இந்த வாசகம் எவ்வளவு கொடுமையாய் வந்துள்ளது! உள்ளக் கொதிப்புகள் உரைகளில் துள்ளி எழுகின்றன.

ஈசனோடு வாகி பேச நின்றவன் இங்கே நீசன் என நேர்ந்தான். மன நிலைகுலைந்து பழிவழிகளில் இழிந்தால் எவரும் இழிவடைந்து தாழ்வர் என்பதை இம்மொழி விழிதெரிய விளக்கியது.

தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. (குறள், 964)

உயிரை உயர் நிலையில் பேணி வரும்படி மயிரை உவமை காட்டி உணர்த்தியிருக்கும் இதன் அழகை ஊன்றி நோக்குக. தரும நீர்மை தழுவியுள்ள வரையும் மனிதன் உயர்வாய்ப் பெருமை பெறுகிறான்; நழுவின் இழிவாய்ச் சிறுமையுறுகிறான்.

ஏகும்நெறி என்றது மேலோர்கள் நடந்து சென்றுள்ள நல்வழியை. தரும நீதி தழுவி ஒழுகுபவர் சன்மார்க்கர் என உயர்ந்தார்; அங்ஙனம் ஒழுகாதவர் துன்மார்க்கர் என இழிந்தார். "மூத்தி நெறி அறியாத மூடர்" என்றார் மாணிக்கவாசகர்,

ஏகும் நெறியறிந்து நடப்பவர் ஈசன் அருளை எய்தி இன்பநிலையை அடைகின்றார்; அங்ஙனம் நடவாதவர் நீசராய் இழிந்து நாசமான நரக துன்பங்களில் உழல்கின்றார்.

தனக்கு உரிய மனைவி யிருப்ப அயலான் மனைவியை நச்சி அல் வழியில் இழிந்து அவ கேடனாய் அவன் அழிந்துபட நேர்ந்

துள்ளமையைக் குறிப்பாக இங்ஙனம் இகழ்ந்து கூறினாள்.

உன்னைப் பற்றிப் பிடித்துக் கூர்த்திச் சிறையில் வைத்தான் கார்த்தவீரியன். அந்தப் பெரிய போர் வீரனைப் பரசுராமன் பொருது அழித்தான்; அரிய திறலுடைய அவன் என் நாயகன் எதிரே எளியனாய் இழிந்து தொலைந்தான். இதனைத் தெளிந்துகொள்.

கோதண்ட வீரனுடைய அருந்திறலாண்மையை வானும் வையமும் அறிந்து வியந்து உவந்து புகழ்ந்து வருகின்றன.

நீ அறிந்திலையோ? என்னும் இவ் வினா அவனது அறியாமைக்கு இரங்கிப் பரிந்து வந்தது. இங்ஙனம் பரிவோடு இகழ்ந்து பேசி வந்தவள் இறுதியில் விளித்தது எரி வீசி எழுந்தது.

நெறி அறிந்திலாத நீசா! என இங்ஙனம் துணிந்து கூறியது அவனது நீச நிலைகளை நன்கு தெரிந்து வருதலால் நேர்ந்தது. கள்ளம் புரிந்து தன்னைக் கவர்ந்து கொண்டு வந்து நாளும் உள்ளம் கொதிக்கச் செய்து வருதலால் இக் குலமகளது உரையும் கொதித்து வந்தது. உள்ளக்கொதிப்பு உரைகள் தோறும் ஊடுருவி வருகிறது.

இராவணனை வென்றவனைக் கொன்றவனை வென்றவன் என இராமனை இங்கே எடுத்துக் காட்டியது "அந்தக் குலவீரனுடைய குல பத்தினியைக் குலை துடிக்கச் செய்யாதே புலைமகனே! நிலைமையை உணர்ந்து பிழைத்துக் கொள்" எனத் தலைமை தோன்ற உணர்த்திய படியாம்.

கடிக்கும் வல் அரவும் கேட்கும் மந்திரம்.

தன் பேச்சை முடிக்கும் பொழுது முடிவில் இதை உரைத்தருளினாள். கொடிய நச்சுப் பாம்பினும் கொடியவன் என இராவணனை இடித்துக் கூற இதனை எடுத்துக் காட்டினாள்.

பாம்பும் மந்திரத்திற்குக் கட்டுப்படுமே; நீ ஒன்றுக்கும் கட்டுப்படாமல் உள்ளம் செருக்கி நிற்கின்றாயே! இது எவ்வளவு கொடுமை! உலகிற்கு எவ்வளவு துயரம்! உலகை ஆளுகிற அரசன் நெறியுடையனாய் உயிர்களை இனிது பேணி வர உரியவன்; அவன் தீயவன் ஆனால் பாம்பின் வாய்த் தேரை போல் வையமெல்லாம் வெய்ய துயரால் நொந்து தவிக்கும்; பாம்பின் கடியும் ஒருவாறு நீங்கும்; கொடிய அரசன் தீம்பு அதனினும் தீயது.

பாம்புக்கு மந்திரவாதிகள் போல் அரசனுக்கு மந்திரம் கூறும் மந்திரிகள் உள்ளனர். மந்திரம் = ஆலோசனை.

நல்ல நீதி முறைகளை எடுத்துச் சொல்லிப் புத்திமதிகள் கூறும் அமைச்சர்கள் அரசனுக்கு உயிர்த்துணைகளாய் உதவி புரிந்து வருகின்றனர். அத்தகைய மந்திரிகள் ஒருவரும் உனக்குத் துணையில்லையே என்று அவனுடைய ஆட்சியின் அவல நிலைகளைக் காட்சிப் படுத்தினாள்.

அறிவு காட்டி இடிக்குநர் இல்லை.

இது செய்யலாம்; இது செய்யலாகாது என நன்மை தீமைகளை எடுத்துக் காட்டி உறுதி நலங்களை உணர்த்தத்தக்க உண்மையான மந்திரிகள் உன்னிடம் இலர்; இருப்பவரோ உன் விருப்பின் படியே தீமைகளுக்கே உதவி புரிந்து வருகின்றனர்; ஆகவே நீ எவ்வாறு நன்மை அடையப் போகிறாய்! எவ்வழியும் உனக்கு அழிவுதான்! என இவ்வாறு இரங்கியிருக்கிறாள்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும். (குறள் 448)

இடித்து அறிவு கூறும் நல்ல அமைச்சர்கள் இல்லாத அரசன் கெடுப்பார் இல்லாமலே கெட்டு அழிவான் என்னும் இந்தப் பொய்யா மொழியைப் பொதிந்து இது இங்கே வந்துள்ளது. நாயனார் வாரி வழங்கியுள்ள அரச நீதிகள் உரிய இடங்களில் புதிய உருவங்களோடு பொலிந்து விளங்குகின்றன.

பொல்லாதவர்களே புடை சூழ்ந்துள்ளனர் என்றது மகோதரன் முதலிய மந்திரிகளைச் சுட்டி எழுந்தது. யாதும் நீதி கூறாமல் இராவணனை எண்ணியபடியெல்லாம் அவர் தீது புரிந்து வருதலால் நன்மை கிடையாதென்றாள்.

உள்ளார் உன்னை முடிக்குநர்; முடிவு அன்றி முடிவது உண்டோ?

முடிவில் இப்படிச்சொல்லித் தன்பேச்சைமுடித்திருக்கிறாள்.

உன்னிடம் நீசங்கள் வளர்ந்திருக்கின்றன; ஆதலால் நீ நாசமாய்ப் போவதைத் தவிர யாதும் நன்மை அடையமாட்டாய் எனப் பிராட்டி இங்ஙனம் சொல்லி முடிக்கவே அவன் உள்ளம் கொதித்துத் துள்ளி எழுந்து உருத்துச் சீறினன்.

## இராவணன் சினந்து சீறியது.

தன்னை யாதும் மதியாமல் சீதை பேசிய வார்த்தைகள் இலங்கை வேந்தனுக்கு வேதனைகளை விளைத்து வந்தன. முடிவில் கூறிய மொழிகள் கூரிய அம்புகள் போல் அவன் உள்ளத்தை ஊடுருவிப் பாய்ந்தன; பாயவே கோபம் மூண்டு கொதித்தெழுந்து அவன் ஆங்காரங்கள் செய்தன அதி பயங்கரங்களாய் நீண்டன.

என்றறத்துறை கேட்டலும் இருபது நயனம்
மின்திறப்பன ஒத்தன வெயில்விடு பகுவாய்
குன்றிறத் தெழித்துரப்பினன் குறிப்பதென் காமன்
தன் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை. (1)

வளர்ந்த நாணினன்; மாதிரம் அனைத்தையும் மறைவித்து
அளந்த தோளினன்; அனல்சொரி கண்ணினன்; இவளைப்
பிளந்து தின்பென் என்று உடன்றனன் பெயர்ந்தனன் பெயரான்
கிளர்ந்த சீற்றமும் காதலும் எதிர்எதிர் கிடைப்ப. (2)

அன்ன காலையின் அனுமனும் அருந்ததிக் கற்பின்
என்னை யாளுடைய நாயகன் தேவியை என்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன் முன்துகைத் துழக்கிப்
பின்னை நின்றது செய்குவேன் என்பது பிடித்தான். (3)

தனியின் நின்றனன் தலைபத்தும் கடிதுகத் தாக்கிப்
பனியின் வேலையில் இலங்கையைக் கீழுறப் பாய்ச்சிப்
புனித மாதவத் தணங்கினைச் சுமந்தனன் போவான்
இனிதின் என்பது நினைந்தனன் கரம்பிசைந் திருந்தான். (4)

ஆண்டவாளரக்கன் கனன்று அண்டத்தை அளப்பான்
மூண்ட காலவெந் தீயென முற்றிய சீற்றம்
நீண்ட காதல்நீர் நீத்தத்தின் வீவுறு நிலையின்
மீண்டு நின்றொரு தன்மையால் இவையிவை விளம்பும். (5)

இராவணனுடைய கோப தாபங்களையும், மாருதியின் வீரத் துடிப்புகளையும் ஈண்டு நேரே கண்டு கெடிது திகைத்து முடிவை நோக்குகின்றோம். நிகழ்ச்சிகள் நெடுந்திகில்களாய் நீண்டுநிற்கின்றன.

காம நசையால் கருத்தழிந்து முதலில் காலில் விழுந்து தொழுதவன் பின்பு பிராட்டியைக் கொன்று தின்று விடுவதாகக் கன்றிக் கடுத்தெழுந்து குதித்துக் கொதித்துக் கூத்தாடி நிற்கிறான். அந்தக் கொடியவனுடைய மன நிலைகளையும் கோபக் கொதிப்புகளையும் தாபத் துடிப்புகளையும் கவி வரைந்து காட்டியிருக்கும் காட்சி வியப்பையும் வியனுன அச்சத்தையும் விளைத்து நிற்கிறது.

காமன் தன் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை. இந்த விளக்கம் வியப்பு மிக வுடையது.

தன்னுடைய அரச செல்வங்கள் யாவும் செலுத்தித் தானும் அடிமை என இராவணனை அடி தொழுது கிடக்கச் செய்த காம இச்சை இதுபொழுது மறைந்து போக அவன் உள்ளத்தில் சீற்றம் பொங்கி நிற்கும் ஏற்றத்தைக் கவி தீட்டிக் காட்டியிருக்கும் காட்சி மானச நோக்குகளுக்கு அதிசயமான மகிழ்ச்சியை யூட்டியுளது. அரிய அந்தக் காண நிகழ்ச்சிகளை உலகம் தெரியத் தெளிவாக விளக்குவது மிகவும் அரிய செயலாம். உயிருணர்ச்சிகளை மொழிகளில் பொதிந்து எளிதாக வெளிவீசி வருவது நம் கவிக்கு வித்தக விநோதமாய் விளைந்து வருகிறது.

சீதையின் உள்ளம் யாதும் நோகாதபடி எவ்வழியும் செவ்வி நோக்கி இதமாய் நடந்து வந்தவன் இங்கே அவளைக் கொல்வதாகக் கொதித்து மூண்டுள்ளான். முன்னைய நிலை காமத்தால் அமைந்தது; பின்னையது கோபத்தால் விளைந்தது.

சானகியைத் தலையில் சுமந்து திரியப் பெருகியிருந்த பிரியம் பிரிந்து நிற்கக் கொலை புரிய மூண்டு நின்ற அந் நிலையினைக் கலையின் சுவை கனிய விளக்கியருளினார். என்ன சொன்னாலும் எது செய்தாலும் பொறுத்துப் பொறுத்து ஆசை வயத்தனாய் அலைந்து திரிந்தவன் அந் நிலை திரிந்து கோபம் மீதூர்ந்து நின்றமையால் காமன் திறத்தையும் சீற்றம் கடந்தது என்றார். அதனை யாரும் எளிதில் கடந்து போக முடியாது என்பதை உம்மை உணர்த்தி நின்றது. காமக்கடல் கோபத் தீயால் வற்றியது என்றார்.

இச்சையும் சீற்றமும் நெடுநாளாகப் போராடி வந்துள்ளன; இன்று சீற்றம் மீறி யுள்ளது; ஆயினும் விரைவில் மாறி விடும் என்பது கூறிய குறிப்பில் தெரிய வந்தது.

கொன்று தின்று விடுவதாகக் கோபம் மூண்டு கொதித்து எழுந்த அவன் ஆசை மோகத்தால் அடங்கி வந்து மீண்டும் அலமந்து பிதற்றுவதைப் பின்னே அறியலாகும்.

மாருதி கருதியது.

இராவணன் சீறி எழுந்த பொழுது அயலே மறைவாய் ஒளிந்திருந்த அநுமான் உருத்து நின்றான். பிராட்டியை ஏதேனும்

அத் தீயவன் செய்து விடுவானோ என்று துடித்து மூண்டு கடுத்தான். தன் ஆண்டவனுடைய தேவிபால் அப் பாவி நெருங்கு முன் பாய்ந்து கொன்று அவனுடைய தலைகளைத் திருகி எறிந்து உடலைச் சிதைத்து ஒழிந்து விட வேண்டும் என்று ஊக்கி மூண்டான். வீரத் துடிப்பு விறு கொண்டு நின்றது.

என்னை ஆளுடை நாயகன் தேவியை என்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன்முன் துகைத்து உழக்கி.

என்றதனால் அனுமான் எண்ணி நின்ற நிலையை நாம் கண் எதிரே கண்டு நிற்கிறோம். காட்சிகள் வீரத் துடிப்புகளை விளக்கி நிற்கின்றன. மறைந்து நின்ற அவனை இடையே நாம் மறந்திருந்தோம்; அந்த அருந்திறலாளனைத் திறந்து காட்டி கவி இங்கே வீரச் சுவைகளை யூட்டி யிருக்கிறார். சரித நிகழ்ச்சி இனிய சுவைகளை விளைத்து அரிய உணர்ச்சிகளை வளர்த்து இன்பம் புரிந்து வருதலை இடங்கள் தோறும் அறிந்து வருகிறோம்.

அசோக வனத்தில் வைத்தே இலங்கை வேந்தனைக்கொன்று தொலைத்து இராம பத்தினியை எடுத்துக் கொண்டு போய் விட வேண்டும் என்று துடித்திருத்தலால் அவ் வீரனுடைய உள்ளத் துணிவும் ஊக்கப் பாடும் உரிமை அன்பும் உலகம் அறிய நிலவி நின்றன. காரிய வேகம் வீரிய விவேகமாய் விரிந்து நின்றது.

நினைந்தனன் கரம் பிசைந்திருந்தான் என அவனது நிலைமையை இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார்.

இராவணனது நிலையை எதிர் நோக்கிக் கொலைக் குறிப்போடு அனுமான் அவ்வாறு மூண்டு நிற்க எறிய கோபம் இறங்கினவனாய் மீண்டும் நசையால் தாழ்ந்தான்; ஆசையால் அடங்கி வந்து பிராட்டி எதிரே அவ் வேந்தன் சாந்தமாய்ப் பேச நேர்ந்தான்.

ஊழித் தீபோல் பொங்கி எழுந்த கோபத்தை ஆசைக்கடல் அவித்து நின்றது என்றதனால் அவனது நிலைகளை நன்கு தெரிந்து நீர்மைகளைக் கூர்மையாய் ஓர்ந்து கொள்கிறோம்.

சீதை இகழ்ந்து பேசிய பேச்சுகள் எல்லாம் அவனுடைய நெஞ்சத்தை எரித்து நிலை குலைத்து நின்றன. கூறிய மொழிகளை நினைந்து நினைந்து மானமும் நாணமும் மிகுந்து மறுகி யுளைந்தாலும் அருகு நெருங்கித் தேறுதலாக வேறே மாறு கூறநேர்ந்தான்.

## இராவணனது போலி மறுப்பு.

என் நாயகன் எதிரே வர நீ அஞ்சினதினுலேதான் ஒரு மாய மானை ஏவி அன்று வஞ்சம் புரிந்து தீயது செய்து வந்தாய். என்னைக் காத்துப் பன்னசாலை முன்னே இளையவன் நிற்கும் போது வந்திருந்தால் அன்றே உன்னைக் கொன்று தொலைத்திருப்பான். அந்தக் கொலைக்குத் தப்பித் தந்திரமாய்ப் புலைத்தொழில் புரிந்து விட்டு நிலைத்த போர்வீரன்போல் இன்று என் எதிரே வந்து புலையாடுகின்றாய்; கார்த்த வீரியன் கையால்அடிபட்டுச் சிறையுற்றாய்; என இன்னவாறு இகழ்ந்து இடித்துக் கூறிய உரைகள் அவன் உள்ளத்தை நாணச் செய்தன ஆதலால் அவற்றிற்கு மறுப்பாகப் போலி நியாயங்களைக் கூற நேர்ந்தான்:

"சானகி! என் பெருமையையும் வினைத் திறத்தையும் நீ சரியாகத் தெரிந்து கொள்ளாமையால் பிழைபடப் பேசினாய். நான் யாருக்கும் யாண்டும் அஞ்சுகின்றவனல்லன்; அன்று வஞ்சனை செய்தது உன்பால் வைத்த அன்பாலேயாம்; நான் நேரே வந்திருந்தால் இராமனும் தம்பியும் போருக்கு நேர்ந்து என் கைவாளால் மாண்டு போயிருப்பர். அவர் செத்துத் தொலையாதபடி தந்திரமாக விலக்கி உன்னை எடுத்து வந்தேன்; ஈக்களை ஒதுக்கி இனிய தேனை எடுப்பது போல் அம் மாக்களை அயலே போக்கி உன்மேல் மயலாய் அது செய்தேன். உன்னை உதவியுள்ள நன்றிக்காக அவரை உயிரோடு விட்டிருக்கிறேன்; கார்த்த வீரியனோடு நான் போராடியது முதலியன எல்லாம் உல்லாசமான விளையாடல்களேயாம்; தேவதேவர்களும் என்னோடு எதிர் பேச மாட்டார்களே! மானிடப் பதர்களா இலங்கை வேந்தனோடு மாறு கொள்ள வல்லார்? கைலாச வாசனான ஈசனும் இலங்கை வாசனான இராவணேசுவரனை வியந்து மகிழ்ந்துள்ளான்; நீ பேதைப் பெண் ஆதலால் ஏதமாய் இகழ்ந்து பேச நேர்ந்தாய். உள்ளக் காதலால் அவ்வுரைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டேன். என் உரிமையை உணர்ந்து பெருமையை நினைந்து அருமையை அறிந்து பொறுமையை வியந்து என்பால் அன்பாய் நீ இரங்கியருளுவாய் என்று நம்பியிருக்கிறேன்; துன்பங்களைப் பேசித் துயரங்களை மூட்டாதே; மூட்டினால் இனி உன் உயிருக்கு ஆபத்தேயாம்; என் தாபத்தைத் தீர்த்தருள்; தனிமே யோசனை செய்து பார்; போய் வருகிறேன்"

என்று அப் பேயன் பயங்களைக் காட்டி விட்டு அரண்மனைக்கு மீண்டு போயினான். போகும் பொழுது நல்ல சமர்த்திகளான சில அரக்கிகளைத் தனியே அழைத்து நிறுத்தி, "இவளை எப்படியாவது வசப்படுத்தி இன்னும் ஒரு வாரத்துள் என்னிடம் கொண்டுவந்து சேர்த்து விட வேண்டும்; இல்லையானால் உங்கள் உயிர்கள் உங்களுக்கு இல்லையாம்" எனச் சொல்லி அச்சுறுத்தி அவன் அகன்று போனான். காம வெறியன் போனபின் கடு வெறிகள் கிளர்ந்தன.

## அரக்கிகள் அரற்றியது.

எல்லா அரக்கிகளும் உள்ளம் நடுங்கி உயிர் பதறினர். தங்கள் சக்கரவர்த்தி இட்ட கட்டளையை நிறைவேற்ற வேண்டுமே என்று நெஞ்சம் கலங்கிப் பலவகையான சூழ்ச்சிகளைச் செய்ய நேர்ந்தனர். "குலத்திலும் நலத்திலும் பலத்திலும் தலை சிறந்துள்ள எங்கள் அரசர் பெருமானுக்குத் தேவ மங்கையர் யாவரும் ஏவல் செய்ய ஆவலோடு காத்து நிற்கின்றனர்; நீ ஒன்றும் தெரியாத முழு மூடமாய் மடமை மண்டி மதி கெட்டிருக்கிறாய்; உன்பால் அவர் அன்பு கொள்ள நீ முன்பு எவ்வளவு தவம் செய்துள்ளாயோ! உனக்குக் கிடைத்துள்ள அரிய பாக்கியத்தை எண்ணி இந்திராணியும் ஏங்கி நிற்கிறாள்.

"வையம்தந்த நான்முகன் மைந்தன் மகன்மைந்தன்;
ஐயன்; வேதம் ஆயிரம் வல்லான்; அறிவாளன்;
மெய்யன்பு உன்பால் வைத்துளன் அல்லால் வினைவென்றோன்
செய்யும் புன்மை யாதுகொல் என்றார் சிலர் எல்லாம்."

"உலகங்களைப் படைத்தருளுகின்ற பிரமதேவனுடைய பேரன்; ஆயிரம் வேதங்களையும் கற்றவன்; பெரிய அறிவாளி; அரிய போர் வீரன்; அகிலமும் ஆளுகின்றான்; தேவர் முதல் யாவரும் தொழுது துதிக்கும் திவ்விய மகிமையாளன்; இந்தப் பேரரசனுக்கு நேரரசியாய் நீ வாழ நேர்ந்தால் உனது மகிமை எவ்வளவு மேலானதாம்; எங்கள் போன்ற பெண்பால் ஆதலால் உன்பால் உரிமையன்போடு இதனை உரை செய்கின்றோம்" என இன்னவாறு பலபல பிதற்றி அரக்கிகள் பேதித்தனர். அவர்களுடைய பேதைமைக்கு இரங்கி பிராட்டி யாதும் பேசாதிருந்தாள். தாங்கள் செய்து பார்த்த சாகசங்கள் ஒன்றும் பலியாமல் போகவே தங்கள் உயிர் போய் விடும் என்று அஞ்சி முடிவில் கொடுமையாக

வைய மூண்டனர்: "உள்ளம் இரங்காத பொல்லாத மாயக் கள்ளி இவள்; இவளைக் கொல்லுங்கள்; மெல்லுங்கள்; அடியுங்கள்; பிடியுங்கள்; தலையைத் திருகுங்கள்; குலையைப் பிடுங்குங்கள்; நமக்குக் கொலையை விளைக்க வந்த பழிகாரி" என இவ்வாறு வெவ்வுரைகளாடி வெகுண்டு சூழ்ந்தனர்; சூழவே திரிசடை அனைவரையும் அதட்டி விலக்கினாள். எல்லாரும் ஒதுங்கிப் போயினர். அதன் பின் அக் குலமகள் இத் தலைமகளுக்கு ஆறுதல் பல கூறி ஆற்றியருளினாள். அன்பு மொழிகள் ஆதரவு புரிந்தன.

## பின்பு நிகழ்ந்தது.

இராவணன் வந்து வாதாடிப் போனபின்பு அரக்கிகள் எல்லாரும் அயர்ந்து உறங்கினர். திரிசடையும் கண் அயர்ந்தாள். அனைவரும் அங்ஙனம் மயங்கி உறங்கும்படி அனுமான் ஓர் மந்திரம் புரிந்தான். அவனது விஞ்சை வினையால் யாவரும் துஞ்சினர் போலத் துயில நேர்ந்தனர். சீதை தனியே துனியாய் இருந்தாள். மன வேதனை மிகுந்தது. என்ன பிழைப்பு! என்ன இருப்பு! என எண்ணி எண்ணி நொந்தாள். கண்ணீர் வார்ந்தது; தனது அருமை நாயகனைக் கருதிக் கருதி உள்ளம் உருகி மறுகினாள். அன்று இக் குலமகள் உருகி மறுகிய நிலைகளுள் சில அயலே வருகின்றன.

கருமேகம் நெடுங்கடல் கார் அனையான்
தருமே தனியேன் எனது ஆருயிர்தான்?
உருமே றுறழ் வெஞ்சிலை நாண் ஒலி தான்
வருமே உரையாய் வலியார் வலியே! (1)

கல்லா மதியே! கதிர் வாள் நிலவே!
செல்லா இரவே! சிறுகா இருளே!
எல்லாம் எனையே முனிவீர் நினையா
வில்லாளனை யாதும் விளித்திலிரோ? (2)

தழல்வீச உலாய்வரு வாடை தழீஇ
அழல்வீர் எனதுஆவி அறிந்திலிரோ?
நிழல்வீரை யனாருடன் நீர் நெடுநாள்
உழல்வீர் கொடியீர் உரை யாடிலிரோ? (3)

வாரா தொழியான் எனும் வன்மையினால்
ஓராயிர கோடி இடர்க்கு உடையேன்
தீரா ஒருநாள் வலி சேவகனே
நாராயணனே தனிநாயகனே! (4)

தருவொன்றிய கானடைவாய் தவிர் நீ
வருவென் சிலநாளினில் மாநகர் வாய்
இரு என்றனை இன்னருள் தானிது வேல்
ஒருவென் தனிஆவியை உண்ணுதியோ? (5)

பேணும் உணர்வே உயிரே பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநாயகனைக்
காணும் துணையும் கழிவீரலிர் நான்
பூணும் பழியோடு பொருந்துவதோ? (6)

முடியா முடி மன்னன் முடிந்திடவும்
படிஏழும் நெடுந்துயர் பாவிடவும்
மடியா நெறி வந்து வனம் புகுதும்
கொடியார் வரும்என்று குலாவுவதோ? (7)

என்றென்றுயிர் விம்மி இருந்தழிவாள்
மின்றுன்னு மருங்குல் விளங்கிழையாள்
ஒன்றென் னுயிர் உண்டெனின் உண்டிடர் யான்
பொன்றும் பொழுதே புகழ்பூணும் என. (8)

(உருக்காட்டு படலம், 3-10)

சீதை அடைந்துள்ள துயர நிலைகளை இவ் வுரைகளில் கண்டு உள்ளம் வருந்துகிறோம். இராமனை நினைந்து உருகி மறுகியிருப்பன பரிதாபங்களாய்ப் பெருகி நிற்கின்றன. பிரிவுத் துயரம் உரைகள் தோறும் உருவிப் பாய்ந்துள்ளது.

நாயகன் உடனிருந்த காலத்தில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் எண்ணி எண்ணிக் கண்ணீர் சொரிந்திருக்கிறாள். உள்ளப் பண்புகளும் செயல்களும் உயிரை உருக்கித் துயரைப் பெருக்கியிருக்கின்றன. பசுமை ஒளி தவழ்ந்து எழில் கனிந்துள்ள அந்த உருவத் தோற்றம் மனக் கண் முன் இரவும் பகலும் தோன்றி இன்பத்துன்பங்களை இழைத்து வருகின்றது. உழுவலன்பு எவ்வழியும் பொங்கி விழி நீராய் வெளியே பாய்கின்றது. எப்படியும் தன்னை வந்து மீட்டியருளுவார் என்று தனது ஆருயிர் நாதனை நம்பி ஆறுதலடைந்து தேறுதல் கொண்டாலும் மாறி மாறி மனம் கரைந்து இக் குலமகள் குலை துடித்துள்ளது பெரியபரிதாபமாய்ப் பெருகி யிருக்கிறது.

கருமேகம் அனையான் எனது ஆருயிர் தருமே!

இராமபிரானை எண்ணி இளைந்து சீதாதேவி கண்ணீர் சொரிந்துள்ளமையை இது காட்டியுள்ளது. தன்னுடைய உயிர் இன்னார் கையில் இன்னவகையில் நிலைத்திருக்கிறது என்பதை இப் பெண்ணரசி அதி விநயமாக விளக்கியிருக்கிறாள். அஞ்சன வண்ணன் வந்து என் ஆருயிரைத் தந்தருளுமா? என்றது அவன் விரைவில் வராவழி இப் பதிவிரதையின் உயிர் இராது என்பதை வெளியாக்கி நின்றது. தனது நாயகன் வரவை எதிர்நோக்கி இத் தேவி உயிர் பதைத்துள்ளமையை உரைகள் உணர்த்துகின்றன.

சிலை நாண் ஒலிதான் வருமே?

எதிர்கால விளைவுகளை எவ்வாறு கருதியுருகியுள்ளாள் என்பதை இம்மொழிகள் விழிகாணச் செய்கின்றன. வீர கோதண்டத்தின் ஒலியை விரைந்து கேட்கலாம்; இராவணனோடு நேரே போராடி வென்று அரக்கர் குலத்தை முழுதும் அழித்து ஒழித்த பின்பே தன்னைச் சிறை மீட்டியருளுவார் என்று தனது மீட்சி நிலையைக் கருதியுள்ள காட்சி இங்கே காண வந்துள்ளது

வலியார் வலியே!

விதியை நோக்கி இவ்வாறு விளித்துப் பேசியிருக்கிறாள். தன் மதியை முதலில் கெடுத்து, அதி மேதையாகிய தனது நாயகன் மதியையும் மயக்கி மான் பின் போகச் செய்து தனக்குக் கொடிய துயரங்களை விளைத்திருத்தலால் விதியின் வலியை வியந்து உள்ளம் நொந்து இங்ஙனம் பேச நேர்ந்தாள்.

மதி வலியால் விதியை வெல்ல முடியாது; எல்லா வலிகளையும் தன்னுள் அடக்கி யாண்டும் அது முன்னேறி மூண்டு நிற்கும் என அதன் நிலைமையை ஈண்டுச் சொல்லால் துலக்கினாள்.

தன்னை இந்த இன்னல் நிலையில் அழுத்தி வைத்துள்ளமையால் ஊழ்வினையை முன்னிலைப் படுத்திப் புண்பாடோடு கண்பாடு கொள்ளாமல் பெண்பால் இயல்பால் பேசியுள்ளாள்.

கார் அனையான் எனது உயிர் தருமா? சிலைநாண் ஒலி வருமா? என ஏங்கிப் புலம்பியிருப்பது உள்ளத்தின் ஏக்கத்தைப் புலப்படுத்தியுளது. கணவன்பாலுள்ள காதலும் உழுவலன்பும் பிரிவுத் துயரங்களாய்ப் பெருகி வருத்துகின்றன. தனக்கு நேர்ந்துள்ள

பழி அவமானங்கள் என்று ஒழியும்? எப்படி உய்தி கிடைக்கும்! என இப்படி வெப்போடு வெய்துயிர்த்து வருகிறாள்.

வாராது ஒழியான் எனும் வண்மையினால்
ஓராயிர கோடி இடர்க்கு உடையேன்

சீராமனைத் தேவி நம்பியிருக்கும் நிலையை இதனால் தெரிந்து கொள்கிறோம். வீர ராகவன் ஈர நெஞ்சுடையவன்; கருணை வள்ளல்; அடைந்தார் எவரையும் ஆதரித்தருளும் அருந்திறலாளன்; பேதைப் பெண் ஆன தன்னை எவ்வகையிலாவது சிறை மீட்டியருளுவார் என்று பிராட்டி பொறை நீட்டியுள்ளமையை உரைகள் உலகறியக் காட்டியுள்ளன.

ஓர் ஆயிர கோடி இடர் என்றது தான் அனுபவித்து வருகின்ற துயரங்களின் எல்லைகளை ஓரளவு வரைந்து சொல்லியபடியாம். மன வேதனைகள் அளவிடலரியன. எல்லையில்லாத துன்பங்களை எல்லாம் பொறுத்துக் கொண்டு தான் உயிர் வாழ்ந்திருத்தற்குக் காரணம் தனது ஆவி நாயகன் கைவிடார்; கருணை புரிந்து மீட்டுவார்; மீண்டும் ஆண்டவனோடு வாழலாம் என்னும் உறுதியேயாம்; ஆகவே தேவியின் உயிர் நிலை தெரிய வந்தது.

பேணும் உணர்வே! உயிரே பெருநாள்
நாண் இன்று உழல்வீர்!

தன்னுடைய உணர்வையும் உயிரையும் எதிர்நோக்கி இன்னவாறு இணைந்து பேசியிருக்கிறாள். நீங்கள் இரண்டு பேரும் இந்த உடம்பை விட்டு ஒழிந்து போகாமல் உறைந்திருக்கிறீர்களே! பழி அவமானங்களைச் சுமந்து நான் வருந்துகின்றேனே! நீங்கள் ஒழிந்து போனால் என் துயரம் மறைந்து போமே! ஒழியாமல் நின்று அழி துயரங்களை ஆற்றி வருகின்றீர்களே! எவ்வளவு நாள் இந்த வெவ்விய இழி பழியில் அழுந்தி யுழல்வேன்? அந்தோ! உணர்வே! ஐயோ உயிரே! என்று அலமந்திருக்கிறாள்.

தனி நாயகனைக் காணும் துணையும் கழிவீரலிர்!

எவரும் தனக்கு நிகரில்லாத அந்த உத்தம நாயகனைக் காணக் கருதி வேணவாவோடு இருந்து வருகிற இருப்பை இதில் றுனித்து உணர்ந்து கொள்கிறோம். சீதையின் உணர்வும் உயிரும் இராமனையே கருதியுருகியுள்ளன. அவ்வுண்மையின் நுண்மையை வாய்மொழிகள் எண்மையாக ஈண்டு வெளிப்படுத்தியிருக்கின்றன.

பிரிவில் மறுகி இவ்வாறு உருகிவரும்பொழுது இடையே வேறு ஒரு சிந்தனையும் வந்தது. தனது அருமைத் தந்தையாகிய சக்கரவர்த்தி மாண்டு முடியவும், உலகம் முழுவதும் கொடிய துயரங்களை அடைந்து வருந்தவும், தான் யாதும் இரங்காமல் மனம் துணிந்து நெடிய கானகம் போன அந்தக் கொடிய வன் கண்மையுடையவர் அநாதையான எனக்கு இரங்கி இங்கே வருவாரென்று எண்ணி எண்ணி ஏங்கி நின்று எதிர் நோக்கி மகிழ்வது இழி மடமையாம் எனக் கண்ணீர் சொரிந்தாள்.

இன்னவாறு பலவும் பன்னி யுளைந்து உன்னி யுருகி யுணர்வு சோர்ந்தாள்; பின்னும் பலபல எண்ண நேர்ந்தாள்; சிறைவாய்ப் பட்டிருக்கிற தனது நிலைமைகளை நினைந்து இக் குலமகள் அலமந்து நொந்து அயர்ந்து கவன்றுள்ளமை பிரிவின் பரிபவங்களாய்ப் பெருகி உயிரை வாட்டி உலக வுள்ளங்களை உருக்கி நிற்கின்றது.

## இறுதியில் மறுகியது.

புனிதமான ஒரு உத்தம உயிர் இழி பழிகளை அஞ்சி அலமருகிற அவலக் காட்சிகளைக் கவி தெளிவாக வரைந்து காட்டியிருக்கிறார். உணர்ச்சி யுருக்கங்கள் உரைகள் எங்கணும் பொங்கி வழிகின்றன. நிறையும் நீர்மையும் நேரே தெரிகின்றன.

பொறையிருந் தாற்றிஎன் உயிரும் போற்றினேன்
அறையிருங் கழலவற் காணும் ஆசையால்
நிறையிரும் பல்பகல் நிருதர் நீணகர்
சிறையிருந் தேனை அப் புனிதன் தீண்டுமோ? (1)

உன்னினர் பிறரென உணர்ந்தும் உய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்
மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
என்னின்வேறு அரக்கியர் யாண்டை யார்கொலோ? (2)

சொற்பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப் புடைமையும் நாணும் நன்றரோ
கற்புடை மடந்தையர் கதையு ளோர்கள்தாம்
இற்பிரிந் துய்ந்தவர் யாவர் யானலால். (3)

பிறர்மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறனல தென்றுயிர்க் கிறைவன் தீர்ந்தனன்;

புறனலர் அவனுறப போது போக்கியான்
அறனலது இயற்றிவேறு என்கொண் டாற்றுகேன். (4)

எப்பொழுது இப்பெரும் பழியின் எய்தினேன்
அப்பொழுதே உயிர் துறக்கும் ஆணையேன்
ஒப்பரும் பெருமறு உலகம் ஓத யான்
துப்பழிந் துய்வது துறக்கம் துன்னவோ? (5)

அன்பழி சிந்தைய ராய ஆடவர்
வன்பழி சுமக்கினும் சுமக்க வானூ
துன்பழி பெரும்புகழ்க் குலத்துள் தோன்றினேன்
என்பழி துடைப்பவர் என்னின் யாவரே? (6)

வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கினன்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயென
நஞ்சனை யான் அகம் புகுந்த நங்கையான்
உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ? (7)

வல்லியல் மறவர்தம் வடுவில் தீர்பவர்
வெல்லினும் வெல்கபோர் விளிந்து வீடுக
இல்லியல் அறத்தையான் இறந்து வாழ்ந்தபின்
சொல்லிய என்பழி அவரைச் சுற்றுமோ? (8)

வருந்தலில் மானமா வனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வனூர்
இருந்தவள் இவளென ஏச நிற்பெனோ. (9)

அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்
இற்புகத் தக்கலை என்னின் யானுடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்? (10)

ஆதலான் இறத்தலே அறத்தின் ஆறெனச்
சாதல்காப் பவருமென் தவத்தில் சாம்பினோர்
ஈதலாது இடமும்வே றில்லை என்றொரு
போதுலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள். (11)

(உருக்காட்டு படலம், 11-21)

நேர்ந்துள்ள பரிதாப நிலைகளை நேரே கண்டு நெஞ்சம் கவல் கின்றோம். கவிகளைக் கண்ணூன்றி நோக்கின் எண்ணங்களின் துடிப்புகளையும் பதைப்புகளையும் எதிரே காணலாகும்.

உத்தமமான உயர்ந்த குலமகள்; சுத்த வீரன் பத்தினி; பெண்மை உலகம் முழுவதும் பெருமையடையத் தக்க பேரழகுடையவள்; நிறையும் பொறையும் நீர்மையும் நிறைந்தவள்; அத்தகைய அரிய பதிவிரதை நெடிய தொலைவிலுள்ள கொடிய ஒரு சிறையில் அகப்பட்டுத் தனது இனிய கணவனை எண்ணி எண்ணி ஏங்கித் தவித்து யாதொரு ஆறுதலும் காணாமல் முடிவில் உயிரை மாய்த்துக்கொள்ள முடிவு செய்து மூண்டுள்ளாள்; அந்தப் பரிதாப நிலையை இங்கே பார்த்து நடுங்கிப் பரிந்து உருகி இரங்கி மறுகுகின்றோம். புனித உள்ளத்தின் துடிப்புகள் மனித வுள்ளங்களை மறுகச் செய்கின்றன.

## வாழ்வினை வெறுத்தது.

தன்து நிலைமையை நினைந்து ஆவி அலமந்து இத்தேவி உளைந்திருப்பன உள்ளத்தின் பண்பாடுகளை வெளிப் படுத்தி யுள்ளன. "எனது பிராண நாயகனைக் காணலாம் என்னும் ஆசையினால் இந்த இழி சிறையில் அழி துயரோடு வாழ்ந்து வருகிறேன். தீயவனுடைய சிறைவாய்ப் பட்டுள்ள என்னை அந்தத் தூயவன் மீண்டுவானோ? அயலான் ஒருவன் மயலாய் விரும்பினான் என்பதை அறிந்தவுடனே நான் இறந்திருக்க வேண்டும்; அங்ஙனம் இறந்து போகாமல் இருந்து வாழுகின்றேன்; என்னைக் காட்டிலும் இழிந்த அரக்கியர் வேறு யார் உளர்? உயர்ந்த குல மகளிர் எவரும் இகழ்ந்து நகைக்கும்படி இழிவான பழிகளைச் சுமந்து நிற்கின்றேன்; பிறர்மனை எய்திய பெண்ணை நல்ல மானிகள் நயந்து கொள்ளார்; சிறந்த குலவீரன் இழிந்த பழிகளை அடைந்து வருந்த அந்தோ! நான் இருந்து வாழ்கின்றேனே! எப்பொழுது இப்பழி நேர்ந்ததோ அப்பொழுதே ஆவியைப் போக்கி விடாமல் பாவி இப்படிப் பழி வாழ்வு கொண்டுள்ளேனே! பெண் குலத்திற்குப் பெரும்பழியாயுள்ள என் பழி இனி எப்படி நீங்கும்? மாயமானைப் பிடித்துத் தரும்படி உரிய கணவனை ஊனமாய்ப் போக்கி, அருகே காத்து நின்ற அருமைக் கொழுந்தனை நிட்டூரமாகத் திட்டி நீக்கிக் கொடிய வஞ்சகனுடைய மனையில் மடமையாய் வந்து புகுந்துள்ள நான் உயிர் வாழ்ந்திருப்பதை உலகம் சகிக்குமா? என் இருப்பு அக் குல வீரர்களுக்கு எவ்வளவு வெறுப்பு! மயிர்நீப்பின் உயிர் வாழாத கவரிமானைப் போல் உயிர் நீத்து மானம் பேணும்

மாட்சிமையுடைய மடந்தையர் எதிரே எவரும் ஏசி இகழ நான் கூசி உயிர் வாழ்வது சீ சீ மிகவும் ஈனம்! அற்புத மூர்த்தியாகிய அந்தக் கோதண்டவீரன் இலங்கை புகுந்து அரக்கர் வருக்கத்தை அடியோடு கருவறுத்துத் தனது வெற்றித் திறத்தைக் காட்ட என்னைச் சிறை மீட்டினும் அயோத்தி அரண்மனையுள் இனி நுழைய விட மாட்டார்; "பிறன் வீட்டில் இருந்த நீ என் வீட்டில் புகாதே" என எள்ளி அயலே தள்ளி விடுவார்; ஐயோ! அப்பொழுது எனது கற்பு நிலையை அந்தச் சத்திய சீலனுக்கு நான் எப்படி விளக்கிக் காட்டுவேன்? நான் உயிர்வாழ்வது எதற்கு? பிறந்த குடிக்கும் புகுந்த குலத்திற்கும் பெரும் பழிகளை விளைத்துக் கொண்டு நான் இருந்து வருந்துவதினும் இறந்து தொலைவது சிறந்த நலமாம்" என இங்ஙனம் இறுதியாக உறுதி பூண்டு இக்குலமகள் உயிரை மாய்த்துக் கொள்ள ஊக்கி எழுந்தாள்.

பிராட்டியின் மனவேதனைகள் ஒன்றன்பின் ஒன்ருய் இங்கே அலைமோதி யிருக்கின்றன. பலபல நினைவுகள் பரிதாப நிலைகளில் பெருகி மானச மருடங்களை மருவி வந்துள்ளன.

உன்னினர் பிறர்என உணர்ந்தும்
மன்னுயிர் காத்து வைகினேன்.

பிறன் ஒருவன் காம நோக்கோடு விருப்பும்படி நேர்ந்ததே! உண்மையான பதிவிரதையானல் அயலான் இவ்வாறு மயலாய் விழைந்திருக்க முடியாதே; ஏதோ என்னிடம் குறையுள்ளது; இல்லையானல் இத் தூர்த்தன் இப்படி இச்சை மண்டி நச்சி வந்து கொச்சை வார்த்தைகளை அச்சமின்றிப் பேசுவான? என இக் குலமகள் உளம்உளைந்து தன்னை இகழ்ந்து வருந்தியுள்ளமையை உரைகளில் உணர்ந்து கொள்கிருேம்.

பிறன் விழைந்த பொழுதே உயிர் ஒழிந்திருக்க வேண்டும்; அங்ஙனம் ஒழியாமல் உறைந்திருப்பது பழி பாவங்களைச் சுமந்து கொள்ள வழியாய் நின்றது என விழிநீர் சிந்தி யுள்ளாள்.

## அற்புதக் கற்பு.

உத்தமமான உயர்ந்த கற்பின் தன்மை தன்னிடம் இல்லையே என்று பிராட்டி இங்கே இரங்கியிருக்கிருள். நிகழ்ந்திருப்பதை நினைந்து தன்னை இகழ்ந்து வெறுத்தாள். இழிந்த காமி ஒருவன்

தன்னை விழைந்து நோக்கும்படி நேர்ந்ததே! என்று உளைந்து தவித்துள்ளாள்.

மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிர் ஆயின் பிறர்நெஞ்சு புகாஅர். (மணிமேகலை, 22)

புனிதமான சிறந்த கற்பிற்கு உயர்ந்த உரைகல்லே இது உணர்த்தியுளது. தன் நாயகனைத் தவிர வேறு எவரையும் காம நோக்கோடு கருதாத நிறையுடையவளைப் பதிவிரதை என்று உலகம் துதிசெய்து வருகிறது. தெய்வமும் தொழாமல் தன் கொழுநனையே உழுவலன்போடு தொழுது வருபவள் பெய் என்றால் மழை பெய்யும் எனப் பொய்யாமொழியும் புகன்றுள்ளது.

மழைதரும் பெண்டிர் என்று பதிவிரதைகளுக்கு இப்படி ஒரு விழுமிய பெயர் கலையுலகில் நிலவி நிற்கிறது.

கற்பில் நின்றன கால மாரியே.

என நம் காவியமும் நாட்டுப் படலத்தில் காட்டியுளது.

தன் கணவனை அன்றிப் பிறரைக் காதலியாதவளே கற்பினள் ஆயினும் வேறு ஆடவர் எவரும் தன்னை இச்சியாதபடி உள்ளம் தூய்மையாய் உச்ச நிலையில் உயர்ந்திருப்பவளே உத்தம பத்தினியாம் என்க. உன்னதமான புனிதம் உன்னியுணர வந்தது.

தன் நெஞ்சுள் பிறர் புகாமையோடு தானும் பிறர் நெஞ்சு புகாதபடி அவ்வளவு திவ்விய நிலையில் சிறந்திருப்பதே செவ்விய கற்பாம். அரிய நிறைக்கு உரிய நிறைகோல் அறிய நின்றது.

காமியும் சாமி எனக் கைதொழும்படி நேமம் நிறைந்து நிலையுயர்ந்திருப்பதே தலைமையான புனிதக்கற்பாம் என்பது குறிப்பு.

இலட்சுமி, சரசுவதி, பார்வதி தேவிகளுடைய எழிலுருவங்களைப் படங்களில் காணும் பொழுது மானிடர் உள்ளங்கள் எவ்வாறு திவ்விய நோக்கோடு பத்தி புரிகின்றனவோ அவ்வாறே உத்தம பத்தினிகளைக் காணுங்கால் ஆடவருடைய சித்தங்கள் பேதியாமல் அச்சமோடு அன்பு தோய்ந்து நிற்கும் என்க.

"தீது இலா வட மீன்" (சிலப்பதிகாரம், 1)

என அருந்ததியை இளங்கோவடிகள் இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார். தீது இன்மையாவது பிறர் நெஞ்சு புகாமை என அடியார்க்கு நல்லார் இவ்வாறு அதற்கு உரை கூறியுள்ளார்.

இத்தகைய உயர்ந்த உத்தமமான பரிசுத்த நிலை தன்பால் இல்லாமல் போயதே; தன்னை ஒரு காமப்பித்தன் இச்சிக்க நேர்ந்தானே! என்று சானகி நெஞ்சம் துடித்து நிலைகுலைந்துள்ளமையை வாய்ச்சொல் ஈண்டு வெளிப்படுத்தியுள்ளது. நஞ்சு அனையான் எனத் தன்னை நச்சிய நெஞ்சனை அஞ்சி அலமந்திருக்கிறாள்.

உண்மையான உத்தம பத்தினிகள் பிறர் நெஞ்சு புகார் என்னும் இந்தக் கட்டளைக் கல்லில் சீதையின் கற்பை உரைத்து நோக்கினால் இங்கே மாற்றுக் குறைந்து படுகிறது; இங்ஙனம் குறைபாடு உள்ளவளை உயர்ந்த நிறையுடையாள் என்று உலகம் புகழ்ந்து போற்றி வருவது பிழை அல்லவா? என்னும் கேள்வி ஈண்டு எதிர்ந்து வருகிறது

நெருப்பைத் தொட்டவுடனே அது சுட்டு விடுகிறது; அது போல் சீதையை எடுத்த பொழுது இராவணன் ஏன் எரிந்து போகவில்லை? இப்படிப் பல வாதங்கள் வளர்ந்து வருகின்றன.

அவதாரங்களின் மருமங்களையும், வந்துள்ள பாத்திரங்களுடைய சூத்திரங்களையும் முன்னும் பின்னும் உய்த்து நோக்கி உண்மை நிலைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

உலக நோக்கு, கலை நோக்கு, தெய்வ நோக்கு என நோக்கங்கள் நிலவியுள்ளன. ஒன்றினும்ஒன்று நுணுகிய நிலையது. நுண்மை நுண்மைகளில் உண்மைகள் ஊடுருவி யுள்ளன.

கற்பு அற்புத நிலையுடையது. அதனை இந்நாடு பெரு மகிமையாக யாண்டும் பேணி வந்துள்ளது. மழையும் அதன்வழி ஒழுகும்; தேவரும் அதற்கு ஏவல் செய்வர் என்றதனால் அதன் மாட்சியும் காட்சியும் நன்கு காணலாகும்.

> "So dear to heaven is saintly chastity,
> That, when a soul is found sincerely so,
> A thousand liveried angels lacky her,
> Driving far off each thing of sin and guilt." (Comus)

"புனிதமான கற்பு பரமபதத்திற்கு இனிமை ஆகிறது; தூய கற்புடையாளுக்குத் தேவர் யாவரும் ஆவலோடு ஏவல் புரிகின்றனர்; பாவத் தீமைகள் யாவும் அவள் எதிரே பறந்து போகின்றன" என மில்ட்டன் Milton என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார். கற்பு யாண்டும் அற்புத நிலையது.

பத்தினிகளை எந்த நாடுகளும் பாராட்டி வருகின்றன

கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வர்ஊர்
இருந்தவள் இவள்என ஏச நிற்பெனோ?

உலகப் பழியை நினைந்து இங்ஙனம் உள்ளம் பதைத்திருக்கிருள். கருந்தனிமுகில் எனத் தனது அருமைக் கணவனை இவ்வாறு உரிமையோடு நினைந்து உருகி மறுகினுள். பசிய கோலத் திருமேனியனுகிய அந்த அதிசய அழகனைப் பிரிந்து போய்க் கொடியவர் குடியிருப்பில் நெடிது தங்கியிருந்தவள் எனக் குலமகளிர் எல்லாரும் வைது பழிக்க நான் உயிர் வாழ்ந்திருக்கிறேனே! எனத் துயரில் ஆழ்ந்து துழங்கியுள்ளாள். உள்ளக் கவலைகள் கொள்ளித் தீயைப் போல் துள்ளித் துடிக்க உயிரை வாட்டி யிருக்கின்றன.

அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
விற்பணி கொண்டு அருஞ்சிறையின் மீட்டநாள்.

பின்னே விளைவதை இன்னவாறு முன்னதாக எண்ணியுள்ளாள். அரக்கர் குலத்தை அடியோடு அழித்துத் தன்னை இராமபிரான் சிறைமீட்டி யருளுவான் என்று சீதை உள்ளத்தில் கருதியுள்ளமை இவ்வுரையால் தெரிய வருகிறது. இராமனை இங்கே அற்புதன் என்றது அவனது அதிசய மகிமைகளை நினைந்து.

கொடிய சிறையிலிருந்து என்னை மீட்டினுலும் எம்பெருமான் அயோத்திக்கு உடன் கூட்டிக் கொண்டு போகார்; "பத்து மாத காலமாக அரக்கன் ஊரில் இருந்தவள் ஆதலால் என் வீட்டில் புகலாகாது; எங்கேயாவது போய்விடு" என்று இகழ்ந்து தள்ளவும் கூடும்; அவ்வாறு அவ்வள்ளல் எள்ளித் தள்ளினுல் "நான் மகா பதிவிரதை; உத்தம பத்தினி" என என் கற்பு நிலையை அவ் வுத்தமர் கண்டு தெளிய நான் எப்படி வெளியே தெளிவாகக் காட்ட முடியும்? என்று இப்படி எண்ணி உள்ளம் உடைந்து கலங்கியிருக்கிருள். உறுவதை ஓர்ந்து பருவர லுழந்துள்ளாள்

சானகி இங்குக் கருதியபடியே பின்பு மீட்சிப் படலத்தில் நிகழப் போகிறது. "உன்னை மீட்டும் பொருட்டு நான் இலங்கை வரவில்லை; கொண்ட மனைவியைப் பறி கொடுத்து விட்டுப் பேடித்தனமாய்ப் பேசாதிருந்தான்" என்னும் அந்தப் பழியிலிருந்து என்னை மீட்டிக் கொள்ளும் பொருட்டே நான் இங்கு வந்து

போராடி அரக்கர் வருக்கத்தை நீறாக்கி வென்றேன்; நீ வெறுப் வெளியே போகலாம்" என்று உலக சோதனையின் பொருட்டு இவ்வாறு இராமன் இறுதியில் சீறிச் சினந்து தனது அருமை மனைவியை நோக்கிக் கூறுவது ஈண்டு எதிரறிந்து கொள்ள வந்தது.

சிறந்த விவேகி ஆதலால் பின்னால் நிகழ்வதை முன்னால் யூகித்துக் கொண்டு சோகித்து நொந்தாள். கொண்டான் குணம் அறிவாள் பெண்டாட்டி என்றபடி தன் நாயகனுடைய நீர்மை சீர் மைகளைக் கூர்மையாக நன்கு தெரிந்திருக்கிறாள். மானச தத்து வங்கள் காவியச் சுவையோடு கலந்து ஓவிய வுருவங்களாய் ஒளி மிகுந்து சீவிய சுபாவங்களை விளக்கி ஈண்டு வெளி வந்துள்ளன.

## இறந்து போகத் துணிந்தது.

முடிவில் இவ்வாறு எண்ணினவள் தனக்கு எவ்வகையிலும் விடிவு கிடையாது; இனி இருந்து வருந்துவதால் பயன் இல்லை; விரைந்து இறந்து போக வேண்டும் என்று முடிவு செய்து அயலே நோக்கினாள். அரக்கிகள் யாவரும் அயர்ந்து உறங்கினர்.

சாதல் காப்பவரும் என் தவத்தில் சாம்பினர்
ஈதலாது வேறு இடமும் இல்லை.

தன்னுடைய உயிரை மாய்த்துக் கொள்வதற்கு உரிய சமை யம் வாய்த்துள்ளதை எண்ணிச் சீதை இவ்வண்ணம் உவந்து எழு ந்தாள். அரக்கியர் விழித்திருந்தால் தான் கருதியதைச் செய்ய முடியாது ஆதலால் அவர் தூங்கிக் கிடப்பது தனது தவத்தின் பயன் என்று மகிழ்ச்சியடைந்தாள். தான் இறப்பதில் கொண்டு ள்ள வேகத்தை இவ்வுரை வெளிப்படுத்தி யுள்ளது. துயரத்தைப் பொறுத்திருக்க முடியாமையால் உயிரை வெறுத்து விட நேர்ந் தாள். தற்கொலையாய்ச் சாகத் துணிவதில் ஆண்களை விடப் பெண்கள் வேகித்து நிற்கின்றனர். மெல்லிய நெஞ்சினர் ஆதலால் அல்லல்களை ஆற்றி யிருக்க முடியாமல் ஆருயிரை நீத்து விடு கின்றனர். எல்லை மீறிய துன்பங்களுக்கு இறப்பு ஒருவகை ஆறு தலாகின்றது. ஆகவே சோகம் மீதூர்ந்து நின்ற தோகை இங்கே சாக நேர்ந்தாள்.

## அனுமான் காத்தது.

ஆவியை நீக்கத் துணிந்த தேவி மெல்ல எழுந்து யாரும்

அறியாவண்ணம் மெதுவாய் நடந்து அயலிருந்த மாச் செறிவுக்குள் புகுந்தாள். ஒரு தருவின் கிளையில் வல்லிக்கொடியை வரிந்து கட்டித் தன் கழுத்தில் மாட்டினாள். மாட்டவே, நீட்டிய கைகளோடு அனுமான் அதி வேகமாய் உள்ளே பாய்ந்து "அம்மா! நான் இராமதூதன்; இராமதூதன்" என்று அலறி எதிரே நின்றான். சீதை திடுக்கிட்டு நாணினாள்; கழுத்தில் பூட்டியிருந்த சுருக்கை நீக்கி விட்டு உள்ளம் கூசி வியப்பும் வெறுப்பும் கொண்டு வெருண்டு நின்றாள். அந்த அலமரல் நிலையில் மாருதி தேறுதலாக இனிது மொழிந்தான்.

அடைந்தனென் அடியனேன் இராமன் ஆணையால்
குடைந்துலகனைத்தையும் நாடுங் கொட்பினால்
மிடைந்தவர் உலப்பிலர் தவத்தை மேவலான்
மடந்தைநின் சேவடி வந்து நோக்கினேன். (1)

ஈண்டுநீ இருந்ததை இடரின் வைகுறும்
ஆண்டகை அறிந்திலன்; அதற்குக் காரணம்
வேண்டுமே அரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில; ஈதலால் மாறு வேறுண்டோ? (2)

ஐயுறல்! உளது அடையாளம்; ஆரியன்
மெய்யுற உணர்த்திய உரையும் வேறுள:
கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால்
செய்யுறு விளக்கனாய் நினையல் வேறென்றான். (3)

(உருக்காட்டுப் படலம், 23-25)

துயரமாய் உயிரை நீக்கும் சமையத்தில் அதி துரிதமாய் உயர இருந்து தாவி நேரே தொழுத கையனாய் உழுவலன்போடு உருகி நின்று சீதையை நோக்கி இம் மேதை பேசியுள்ளது ஓதியுணர வுரியது. வேக விவேகங்கள் ஏகமா யிணைந்துள்ளன.

தன்னை இன்னான் எனச் சுருக்கமாக நெஞ்சம் தெளிய வுரைத்தான். இராம நாமத்தைச் சொல்லிக் கொண்டே துள்ளித் தோன்றியது, சீதை உள்ளம் உவந்து உயிர் பேணி நிற்க வேண்டியேயாம். சாவதினிருந்து விலகி தேவி ஆவி அலமந்து நிற்கவே, சீவிய அமுதமாய் இம் மதிமான் வாயிலிருந்து மொழிகள் வெளிவரலாயின. ஒவ்வொரு சொல்லும் பிராட்டியின் உயிர்க்கு உறுதியாய்த் தெளிவூட்டி ஒளி நீட்டி உரிமை சுரந்து மிளிர்கின்றது.

உள்ளத்தைத் தேற்றி உணர்வை ஒளியுறுத்தி மொழிகள் உவகையூட்டி வருகின்றன. செவிக்கு இனிமையாய் மதுரமான வாக்கியங்கள் மதி நலம் தோய்ந்து வருதலையால் தேவி மிகவும் ஆவலோடு வியந்து கேட்டு நயந்து நின்றாள்.

"தாங்கள் இங்கு இருப்பது எம்பெருமானுக்குத் தெரியாது; தெரியவில்லை என்பதற்கு அடையாளம் யாது? எனின், அரக்கர் குலம் அடியோடு அழியாமல் உயிர் வாழ்ந்திருப்பதேயாம்; அறிந்திருந்தால் இதற்குள் அரக்கர் வருக்கம் முழுதும் அழிந்து போயிருக்கும்; நீங்களும் பிரிவுத் துன்பம் நீங்கிப் பேரின்பத்தை அடைந்திருப்பீர்கள்" என அனுமான் இங்ஙனம் பேசத் தொடங்கினான். பேச்சு அறிவு சுரந்து அன்பு கனிந்து எழுந்தது.

தன் நாயகன் இவ்வளவு நாள் வரையும் இங்கு வரவில்லை ஆதலால் தன்னைக் கவனியாமல் கைவிட்டுப்போயிருப்பார் என்று பிராட்டி கருதியிருக்கக் கூடும் என இவ்வாறு உறுதி நிலையை உரிமையோடு கூறினான். உள்ளத்தைத் தெள்ளத் தெளிந்து பேசி வருவது மதியூகத்தின் அதிசய ஒளியை வெளி வீசி வருகிறது.

அரக்கருள் எவனேனும் ஒருவன் வஞ்சமாக வந்துள்ளான் என்று தன்னைச் சந்தேகிக்கவும் கூடும் ஆதலால் ஐயுறல் அடையாளம் உளது என மெய்யுறத் தேற்றினான்.

மாய மானால் வஞ்சிக்கப்பட்டுத் தீய துன்பங்களை அனுபவித்து வருகிறவளுடைய நெஞ்சின் நிலைமையை நேரறிந்து நீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து குறிப்போடு கூற நேர்ந்தான்.

நெய்யுறு விளக்கு அனாய்!

சீதையை இங்ஙனம் அனுமான் இங்கே விளித்திருக்கிறான். செவ்விய திருமேனியின் திவ்விய தேசு நோக்கி இவ்வாறு கூறியிருப்பினும் வேறு ஒரு குறிப்பும் இதில் ஊறியுள்ளது.

வெயிலிடைத் தந்த விளக்கு என முன்பு நம் கவி நாயகன் குறித்தார். அஞ்சன வண்ணனைப் பிரிந்து நெஞ்சு உடைந்து ஒளி சிதைந்த மெய்யளாய் அழி துயரில் அலமந்திருக்கும் நிலைமையை அங்ஙனம் விழி தெரிய விளக்கினார்.

நெய்யுறு விளக்கு என இங்கே இக் கவி நாயகன் கூறியுள்ளான். ஆவி தீர்ந்து போகும் அமையத்தில் விரைந்து இராமநாம

த்தைக் கூறித் தேவியை உயிர்ப்பித்துச் சீவ ஒளியை விளக்கி யிருக்கிறான். அவ் ஒளி விளக்கம் மொழியில் விளங்கியது.

அணைந்துபடும் சமையத்தில் நெய்வார்த்த விளக்கு மீண்டும் மீண்டு விளங்குதல் போல் மாண்டுபட நேர்ந்த சீதை இராம நாமத்தால் மீண்டு தெளிந்து உயிர் வாழ்ந்து ஒளி மிகுந்து நிற்கின்றாள் ஆதலால் நெய் உறு விளக்கு என மெய் தெரிய நின்றாள்.

இராம நாமம் ஆகிய அமுதம் செவி வழியே பாய்ந்து உள்ளத் தகழியில் தோய்ந்தவுடனே உயிர் தெளிந்து ஒளி வீசியுள்ளது. இந்த மெய் விளக்கத்தை வையம் தெளிய விளக்குதற்கு நெய் விளக்கு என நேரே பேரிட்டு அழைத்தான்.

அதிசய மேதையினுடைய வாய்மொழிகள் அதிமதி நுட்பமாய் அரிய சுவைகள் சுரந்து யாண்டும் இனிமையாய் வெளி வருகின்றன. சொல்லின் குறிப்புகள் உள்ளியுணருந்தோறும் உவகை புரிந்து வருதலால் சொல்லின் செல்வன் என எல்லா வுலகமும் தொழுதேத்த யாண்டும் இக் கவி நாயகன் இசை மீதூர்ந்து உயர் குல மேதையாய் ஒளி வீசி உலாவுகின்றான்.

சீதை தெளிந்து நின்றது.

உயிர் நீங்கும் தருணத்தில் திடீர் என்று நேரே வந்து கணவன் பேரைச் சொல்லிக் கைதொழுது கண்ணீரும் கம்பலையுமாய் நிற்கின்ற இந்தப் புண்ணிய வுருவனைக் கண்டதும் சீதை நெடுந்திகிலோடு திகைத்து நேரே நோக்கினாள். நிலைமையைக் கூர்மையாகக் கூர்ந்து ஓர்ந்தாள். தேர்ந்து பேச நேர்ந்தாள்.

என்றவன் இறைஞ்ச நோக்கி இரக்கமும் முனிவும் எய்தி
நின்றவன் நிருதன் அல்லன்; நெறி நின்று பொறிகள் ஐந்தும்
வென்றவன்; அல்லனாகில் விண்ணவன் ஆகவேண்டும்
நன்றுணர் வுரையன்; தூயன்; நவையிலன்; போலும் என்னா.(1)

அரக்கனே ஆக; வேறுஓர் அமரனே ஆக; அன்றிக்
குரக்கினத் தலைவனேதான் ஆகுக; கொடுமையாக
இரக்கமே ஆக; வந்திங்கு எம்பிரான் நாமம் சொல்லி
உருக்கினன் உணர்வைத் தந்தான் உயிரிதின் உதவியுண்டோ?

எனநினைந்து எய்தநோக்கி இரங்கும்என் உள்ளம்; கள்ள
மனனகத் துடையராய வஞ்சகர் மாற்றம் அல்லன்;

நினைவுடைச் சொற்கள் கண்ணீர் நிலம்புகப் புலம்பா நின்றான்
வினவுதற்கு உரியன் என்னு வீர! நீ யாவன்? என்றாள். (3)

அனுமானைக் கண்ட பொழுது சீதை வெருண்டு நின்ற நிலையையும் தெருண்டு தேர்ந்து வினவியதையும் இங்கே கூர்ந்து காண்கின்றோம். நிகழ்ச்சிகள் நேரிய காட்சிகளாய் நிலாவி நிற்கின்றன. அறிவும் பரிவும் பெருகி ஒளிர்கின்றன.

தன் எதிரே வந்து தோன்றியுள்ளவனது உருவத்தை நோக்கி உள்ளக் கிடக்கைகளையும் உணர்வு நிலைகளையும் குண சீலங்களையும் இக் குலமகள் யூகமாய் ஊன்றியுணர்ந்துள்ளமை அதிசய விவேகமாய் விளங்கியுள்ளது.

நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன்;
நன்று உணர்வுரையன்; தூயன்; நவை இலன்

என அனுமானை இங்ஙனம் சானகி கருதித் தெளிந்திருக்கிறாள். குறிப்புகள் கூர்ந்த சிந்தனைகளில் தோய்ந்து வந்திருக்கின்றன. பொறி வாயில் ஐந்து அவித்தான் (குறள், 6) என இறைவனை வள்ளுவப் பெருந்தகை குறித்திருப்பது இங்கே சிந்திக்க வுரியது. அந்த அரிய நிலையில் மாருதி மருவியுள்ளமை அறிய வந்தது.

எவரையும் வெறியராக்கி வருகிற பொறிகளை நெறி நின்று வென்றிருத்தலால் இவனது நிலைமையும் தலைமையும் பெரிய தவயோகிகளாலும் வியந்து போற்றப் பட்டுள்ளன. ஐந்து புலன்களையும் அடக்கியுள்ளமையால் ஜிதேந்திரியன் என இந்திராதி தேவர்களும் இவனைப் புகழ்ந்து வருகின்றனர். அரனையும் வென்றவன் என விறு கொண்டு நிற்கின்ற காமனை இவன் வென்றிருக்கிறான்.

பொறிகளை வென்றிருத்தலோடு அறிவிலும் ஆற்றலிலும் உயர்ந்து நிற்றலால் இவனது உயர்ச்சி அதிசய நிலையில் யாண்டும் யாவராலும் துதி செய்யப் படுகின்றது.

"He was perfect master of the senses and wonderfully sagacious" (Vivekananda)

"அவன் ஐம் புலன்களையும் அடியோடு வென்ற பரிசுத்த வீரன்; அதிசய மேதை" என அனுமானைக் குறித்து விவேகானந்தர் இவ்வாறு உரிமையோடு உவந்து கூறியிருக்கிறார்.

உருவத்தைப் பார்த்தவுடனே இவன் சித்த சுத்தியுடையவன்; உத்தம சீலன் என்று சீதை உறுதி செய்து கொண்டாள்.

அவன் வாய் திறந்து பேசிய வார்த்தைகள் பொருள் நிறைந்து இனிமை சுரந்து உணர்வு நலம் கனிந்து வந்தமையால் உணர்வு உரையன் என உவந்து புகழ்ந்தாள். சில மொழிகள் பேசு முன்னரே அவனுடைய நிலைமைகள் பலவகையிலும் பிராட்டியின் உள்ளத்தில் பெரு மதிப்பை விளைத்திருக்கின்றன.

கண்ணீர் நிலம் புகப் புலம்பா நின்றான்.

சீதையைக் கண்டு பேசும் பொழுது அனுமான் நின்ற நிலையை இது நேரே காட்டியுள்ளது. உள்ளத்தில் மண்டியுள்ள பரிவைக் கண்ணீர் வெள்ளம் வெளிப்படுத்தி யிருக்கிறது.

தன் ஆண்டவனுடைய தருமபத்தினி தனியே பிரிந்து அவலச் சிறையிலிருந்து துயரம் தாங்க மாட்டாமல் முடிவில் உயிரை விட நேர்ந்ததை நினைந்து நினைந்து மறுகி நெஞ்சம் உருகி யிருக்கிறான். சிறிதுநேரம் தாழ்ந்தால் கதி என்னும்? என்று கண் கலங்கியுள்ளமையைக் கண்ணீர் காட்டி நின்றது.

கடல் கடந்து வந்து இலங்கை முழுவதும் தேடிப் படாத பாடுகள் பட்டும் யாண்டும் காணாமையால் மாண்டு போக மூண்டு நின்றவன் முடிவில் ஒரு வகையாய் ஈண்டு அடைந்து சீதை மாண்டு போகும் சமையத்தில் நேரே பாய்ந்து தடுத்து உயிரைக் காத்திருப்பது தெய்வக் காட்சியோடு உயர்ந்த சுவையும் சுரந்து நிற்கிறது. இராம சரித்திரத்திற்கு அனுமான் ஒரு சீவிய சஞ்சீவியாய் அமைந்துள்ளமையை இக்காவியம் முழுவதிலும் கண்டு வருகிறோம். அரிய வீர சரிதம் இனியநீர்மைகள் சுரந்து திகழ்கின்றன.

அந்த உத்தமன் சொல்லைக் கேட்டு வியந்த சீதை உள்ளம் கரைந்தாள். அரக்கன் தான் இப்படிக் கள்ள வஞ்சமாய் வந்துள்ளானோ? என்று சிந்தை திகைத்தவள் அவனுடைய வாய்மொழியைக் கேட்டதும் தூயவன் எனத் தெளிந்து களித்தாள்.

எம்பிரான் நாமம் சொல்லி உணர்வை உருக்கினன்; உயிர் தந்தனன் என உருகி உரைத்திருத்தலால் சீதை அதுபொழுது அடைந்துள்ள ஆனந்தத்தையும், அதிசய ஆர்வத்தையும் அறிந்து கொள்ளலாம். தன் நாயகன்பால் கொண்டுள்ள பேரன்பின் நிலை

மை உரை ஓராளவு ஈண்டு உணர்த்தியுள்ளது.

உருக்கினன் என்ற சொல் அந்த உள்ளமும் உணர்வும் உயிரும் அவ்வமையம் உருகி நின்ற நிலைமையை உலகம் உணரச் செய்தது. பிராணநாயகன் பேர் பேரமிர்தமாயது.

இராமதூதன் எனத் தன்னை அனுமான் அறிவித்தபோது அந்த உரை சீவ அமுதமாய்த் தேவியின் உள்ளத்தில் பாய்ந்திருக்கிறது. ஆவி தழைக்க அருள்மொழி மேவியது.

மாண்டு போக நேர்ந்த உயிர் மீண்டு வந்தமையால் உயிர் தந்தான் என்றாள். ஈண்டு அனுமானுடைய ஆருயிர் உதவி பாரறிய வந்தது. தன்னைப் பெற்ற சனகன் என இந்த அணங்கினை இங்கே சனகி கருதியிருக்கிறாள். உற்ற உதவி உயர் மகிமையாயது.

## வினவி அறிந்தது.

தன் எதிரே வந்து இனிது மொழிந்து இன்னுயிர் உதவிக் கண்ணீர் மல்கி நின்ற அந்தப் புண்ணிய நீரனை இந்தப் பெண்ணரசி உவந்து நோக்கி "நீ யார் அப்பா!" என்று பேரும் பிறவும் தெரிய ஆர்வமுடன் வினவினாள்.

வீர! நீ யாவன்?

அனுமானைப் பார்த்துச் சானகி இவ்வாறு வினவியிருக்கிறாள். வீர என்று விளித்தது நிலைமைகளை நினைந்து.

காமனும் எட்டிப் பார்க்க அஞ்சுகின்ற இலங்கையுள் புகுந்து கட்டும் காவல்கள் எல்லாம் கடந்து துணிந்து வந்து தன் எதிரே நிற்கிற அந்நிலை அதிசய பாக்கியமாகத் தோன்றியுள்ளமையால் அதனைத் துதி செய்ய நேர்ந்தாள்.

பொறிகளை வென்றவன் என முன்னம் பெரு மகிமைகளைக் கருதியுரைத்தாள். அகப் பகைகளை அங்ஙனம் அடங்க வென்றதோடு புறப்பகைகளையும் ஒருங்கே வெல்ல வல்லவன் என்பதை இங்ஙனம் சொல்லியருளினாள்.

முன்னது தரும வீரம்; பின்னது கரும வீரம் எனக இவ்வாறு இருவகை வீரமும் ஒருவனிடம் ஒருசேர அமைவது அதிசயமாம். அந்த அம்புத நிலைகளில் தலைசிறந்து நிறைதலால் மகா வீரன் என அனுமானை வானும் வையமும் வாழ்த்தி வருகின்றன.

"Make the character of Mahavira your ideal.
Build your life on this great ideal of personal service"

"மகா வீரனை அனுமானுடைய நீர்மையை நீங்கள் பின் பற்றுங்கள்; புனிதமான இந்தப் பெரிய கரும வீரனைப் போல் உங்கள் உயிர் வாழ்வை உயர்வாகப் பண்படுத்திக் கொள்ளுங்கள்" என உலக மக்களை நோக்கி விவேகானந்தர் இவ்வாறு போதித்துள்ளார். மனித சமுதாயத்திற்கு அனுமான் இனிய நீரனாய் நிலவுகின்றான்.

உள்ளத் தூய்மை உறுதி ஊக்கம் உதவி நிலை தரும நீதி முதலிய அருமை நீர்மைகள் யாவும் மருவிக் கரும வீரனாய் உயர்ந்துள்ளமையால் அனுமானை எவரும் வியந்து புகழ்ந்து உவந்து துதிக்கின்றனர். தெய்வமாக வழிபட்டு வருகின்றனர்.

## அனுமான் பதில் உரைத்தது.

நீர் யார்? என்று பேர் ஊர் முதலியன தெரியும்படி பிராட்டி வினவவே அனுமான் அதி விநயமாக இனிது பதில் மொழிந்தான். இராமன் பன்னசாலையை விட்டுப் பிரிந்தது முதல் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை எல்லாம் நன்னயமாகச் சுருக்கி யுரைத்தான்.

சுக்கிரீவனோடு நட்புக் கொண்டது, வாலியைக் கொன்றது, நண்பனை அரசனாக்கி வைத்தது, அவனுடைய அதிகார ஆணைகளால் சேனைகள் வந்தது, போராற்றல்களுடைய அந்த வானர வீரர்கள் இராமபிரானுக்கு ஏவல் செய்வதில் ஆவல் பூண்டு நிற்கும் நிலை நான்கு திசைகளிலும் படைகள் தேடச் சென்றிருக்கும் திறம் முதலியவற்றைத் தெளிவாகச் சொல்லினான். சானகி உள்ளம் தெளிந்து உறுதி கொண்டு உவந்து கொள்ளும்படி உரைகள் உரிமையோடு மருவி வந்துள்ளன.

எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன; உலகம் எல்லாம்
தழுவிநின் றெடுப்ப: வேலை தனித்தனி கடக்கும் தாள;
குழுவின உங்கோன் செய்யக் குறித்தது குறிப்பின் உன்னி
வழுவில செய்தற்கு ஒத்த வானரம் வாலின் நீண்ட. (1)

துப்புறு பரவை ஏழும் சூழ்ந்தபார் ஏழும் ஆழ்ந்த
ஒப்புறு நாகர் நாடும் உம்பரின் இம்பர் காறும்
இப்புறம் தேடி நின்னை எதிர்ந்தில என்னின் அண்டத்து
அப்புறம் போயும் தேட அவதியின் அமைந்து போன. (2)

புன்தொழில் அரக்கன் கொண்டு போந்தநாள் பொதிந்து தூசின்
குன்றின்எம் மருங்கின் இட்ட அணிகலக் குறிப்பினாலே
வென்றியான் அடியன் தன்னை வேறுகொண் டிருந்து கூறித்
தென்திசை சேறி என்றான் அவனருள் சிதைவதாமோ? (3)

கொற்றவற்கு ஆண்டுக் காட்டிக் கொடுத்தபோது அடுத்ததன்மை
பெற்றியின் உணர்தற் பாற்றோ உயிர்நிலை பிறிதும் உண்டோ?
இற்றைநாள் அளவும் அன்றே அன்று நீ இழித்து நீத்த
மற்றை நல்லணிகள் காண் உன் மங்கலம் காத்த மன்னோ! (4)

சீதையிடம் அனுமான் இங்ஙனம் உரைத்திருக்கிறான். உரைக் குறிப்புகள் உணர்ச்சி நலங்களை யூட்டி வருகின்றன. பிராட்டியின் உள்ளத்திற்கு ஆறுதலாக யாவும் தேறுதல் செய்து திகழ்கின்றன. உவகை யுணர்ச்சிகள் ஊறி மிளிர்கின்றன.

தான் பிரிந்த பின்பு தன் நாதனுக்கு நேர்ந்துள்ள ஆதரவுகளும், தன்பால் அவ் வீரன் கொண்டு நிற்கும் அன்புரிமைகளும், ஆர்வ நிலைகளும் தேவி தெரிந்து மகிழும்படி தெளிவாக வெளி வந்துள்ளன. மொழிகள் அளிகள் ததும்பி அமுதத் துளிகளாய் ஒளிர்கின்றன.

எழுபது வெள்ளம் சேனைகள் சேர்ந்திருக்கின்றன; அளவிடலரிய ஆற்றல்களையுடையன; உழுவலன்போடு ஊழியம் புரிவன; அண்டங்கள் எங்கணும் சென்று வர வல்லன; அந்தத் திரளில் நான் ஒரு சிறியவன்; என்னினும் பெரியவர் பலருளர்; என்னை மட்டும் தனியே அழைத்து எம்பிரான் தென் திசைக்கு அனுப்பி யருளினர்; அந்த ஆண்டவனுடைய திருவருளினால் அடியேன் ஈண்டு வந்துள்ளேன்; நான் பண்டு செய்த புண்ணியங்களால் அம்மையை இங்கே கண்டு கொண்டேன்; கருதிய பலன் கைகூடியது என உறுதி நிலைகளை உள்ளம் தெளிய உணர்த்தினான்.

இராவணன் ஆகாய மார்க்கமாய் விமானத்தில் உங்களை எடுத்துச் செல்லும் பொழுது நீங்கள் கழித்து எறிந்த ஆபரண முடிப்பு மதங்கமலைச் சாரலில் விழுந்தது; அதனை நாங்கள் எடுத்து வைத்திருந்தோம்; எம்பெருமானைக் கண்டபோது கொடுத்தோம்; அந்த அணிகலன்களைப் பார்த்த பொழுது அம்மூர்த்தி அடைந்த நிலைகளை வார்த்தைகளால் சொல்ல முடியாது; உங்கள் பால் அவ் வீர வள்ளல் கொண்டிருக்கும் அன்புரிமையை உரைகளால் எவரும் உணர்த்த இயலாது. அது என்ன பரிவு! என்ன பிரியம்!

என்ன காதல்! என்ன ஆர்வம்! என்ன உருக்கம்! அம்மா! அதைப் பன்னிப் பேசுவது பழுதாம். உன்னி உணரினும் உணரமுடியாத அரிய உயிரின் கிழமையை அன்று கண் எதிரே கண்டு மகிழ்ந்தோம். கண்ணீர் சொரிந்தோம்.

மற்றை நல் அணிகள்காண் உன்மங்கலம் காத்த.

இந்த வாக்கியத்தைக் கண் ஊன்றி நோக்குங்கள். என்ன நோக்கோடு இவ்வண்ணம் ஈண்டு இது வந்துள்ளது? கருதிய கருத்துக்களைத் தெளிவான மொழிகளில் எளிதாக இனிது உணர்த்தி வருகிற விழுமிய கலைஞானி இங்கே இங்ஙனம் உரைத்திருக்கிறார்.

தன் நாயகன் தன்னைக் கவனியாமல் மறந்து கைவிட்டிருப்பாரோ? என நினைந்து நெஞ்சு உடைந்துள்ள சீதைக்கு இந்த மொழி சிறந்த சிவ சஞ்சீவியாய்த் தெளிவு தர வந்தது.

உங்கள் மெய்யில் அணிந்திருந்த அணிகளை அன்று எங்கள ஐயன் கையில் எடுத்துக் கண்ணில் ஒற்றி மார்பில் அணைத்து நெடும் பொழுது பார்த்து நெட்டுயிர்ப்புற்று அவசமாய்த் தெளிந்து ஆனந்த பரவசராய் ஆர்வ மீதூர்ந்து நின்றார்.

அந்த ஆபரணங்களைக் கண்டதினாலேதான் அவ் வீரவள்ளல் ஆறுதலடைந்து உயிர் வாழ்ந்து வருகிறார்; காணவில்லையாயின் இதற்குள் மனம் உடைந்து மாண்டு போயிருப்பார்; அவர் பிழைத்திருக்கும்படி இழைத்தருளினமையால் இழைகள் எனத் தமக்கு இசைந்துள்ள இனிய பேருக்கு அவை தனியுரிமையாயின.

பிரிவுத் துயரால் மறுகி வருந்தி வேண்டாம் என்று வெறுத்து வீசிய அந்த அணிகள்தான் உங்களை இங்ஙனம் மங்களமாக மகிமைப் படுத்தி வைத்துள்ளன என்பான் அணிகள் உன் மங்கலம் காத்த என்றான். தன் தாலி நிலைத்திருக்கும் நிலையைத் தேவிக்கு இங்ஙனம் நினைவுறுத்தினான். இட்டுக் கழித்த அணி கட்டுக் கழுத்தியாய்த் தன்னைக் காத்து வைத்துள்ளது என்று குறித்தது, கணவனது காட்சியைக் கண்டு தெளிய வந்தது.

தனது அருமை மனைவியின் திருமேனியில் மருவியிருந்த அணிகள் இராமனுக்கு உரிமைத் துணைகளாய் உள்ளம் தேற்றி உதவி புரிந்து வருகின்றன; அதனால் அக் குலமகன் உயிர் தரித்து வருகிறான் என்பதை இங்கே ஓர்ந்து கொள்கிறோம்.

சீதைபால் இராமன் பூண்டிருக்கும் அன்புரிமையையும் ஆவலையும் ஈண்டு இனிது விளக்கியிருக்கும் நிலை இன்பம் சுரந்து திகழ்கிறது. அரிய காதலாது இனிய நீர்மைகள் கனிவு மிகுந்துள்ளன.

தன் நாயகனைக் காண வேண்டும் என்று சானகி கருதி யுருகியிருப்பதினும் இராமன் உருகி மறுகியுள்ளமை பெரிதாம் என்பதைத் தெளிவாக வெளிப்படுத்தி அப் பதிவிரதையின் உள்ளத்தைத் தேற்றி உவகையை யூட்டியிருக்கிறான். சொல்லியிருக்கும் உரைகளில் சுவைகள் துள்ளியிருக்கின்றன.

அன்னா! என்று அழைத்தது தாயே! என்னும் அன்புரிமையும் அருமையும் மரியாதையும் தெரிய. அன்னை என்னும் பெயர் விளியில் ஆ உருபு ஏற்று அன்னா என வந்தது.

"ஐயிறு பொதுப் பெயர்க்கு ஆயும் ஆவும்
உருபாம்; அல்லவற்று ஆயும் ஆகும்." (நன்னூல்)

இந்த இயல் விதி இங்கே அறிய வுரியது.

சரித நிகழ்வுகள் அரிய பண்பாடுகளோடு மருவி வருகின்றன. அதி சாதுரியமாய் இவ்வாறு இனிய மதுர மொழிகளை அனுமான் கூறவே சீதை பெரு மகிழ்ச்சியடைந்து வள்ளலை நினைந்து உள்ளம் உருகினாள். உரிமையுணர்வு உயிரை உருக்கி உவகைப்பெருக்காயது.

உய்தல் வந்து உற்றதோ என்று அருவிநீர் ஒழுகு கண்ணாள்.

அனுமான் வாய் மொழிகளைக் கேட்ட பொழுது பிராட்டி நின்ற நிலையை இது காட்டியுள்ளது. கண்ணிலிருந்து அருவி நீர் போல் பெருகி வழிந்துள்ள வெள்ளம் அவ்வுள்ளத்தின் பரிவுகளை வெளியறிய விளக்கி நின்றது.

இறந்து பட நேர்ந்த தனக்கு இருந்து வாழும்படியான உய்தி நிலை கிடைத்ததோ? என்று வெய்துயிர்த்து உள்ளம் உருகியிருக்கிறாள். அருவி நீர் ஒழுகு கண்ணாள் என அந்தப் பதிவிரதையின் உருவ நிலையை நம் கண் எதிரே காட்டியிருக்கும் காட்சி கனிவு மிகவுடையது. விழுமிய பரிவு விழி தெரிய நின்றது.

உயிருக்குக் கொடிய அபாயம் நேர்ந்த பொழுது உடனே பிழைக்கும் படியான இனிய உபாயம் வாய்ந்தால் அந்தச் சீவன் அதிசய பரவசமாய் உருகி விழி நீர் சொரியும் ஆதலால் பரிவு மிகுந்த அம் மெய்ப்பாடு இங்கே மெய்யாகக் காண வந்தது.

மனித சுபாவங்களையும் மானச மருமங்களையும் கதை நிகழ்ச்சியோடு கவி சுவையாக வெளிப்படுத்தி வருவது உவகைக் காட்சியாய் உணர்வு சுரந்து வருகிறது.

நுணுகி நோக்க வுரிய நுண்மையான உண்மைகள் காவியத்தில் எண்மையாக எங்கணும் எழுந்து நிகழ்கின்றன.

தன் அருமைக் கணவனைக் கண்டு கொள்ளலாம் என்னும் காதல் மண்டிப் பரிவு கொண்டு உருகி நின்ற தேவி மீண்டும் அனுமானை நோக்கி ஒன்று வினவ நேர்ந்தாள்.

ஐய சொல்! ஐயன் மேனி எப்படிக்கு அறிதி!

சீதை இப்படிக் கேட்டிருக்கிறாள். இந்தக் கேள்வி எதை நோக்கி எழுந்தது? இராமனிடமிருந்து இவன் வந்துள்ளதாகச் சொல்லுகின்றானே! அந்தச் சுந்தரனுடைய பருவம் உருவம் மூதலிய திருமேனியின் அடையாளங்களைச் சரியாகக் கூறுகின்றானா? வேறு மாறாகப் பேசுகின்றானா? பார்ப்போம் என்று சோதித்து அறியக் கேட்டது போல் இந்த வாக்கியம் ஈண்டு விளைந்துள்ளது.

சந்தேகம் கொண்டு கேட்டதாக அனுமான் சிந்தையில் எண்ணுதபடி அதி சாதுரியமாக இனிது வினவியிருக்கிறாள்.

ஐய! என்று உரிமையுடன் மரியாதையும் தோன்ற விளித்துள்ளாள். அன்னா! என்று முன்னம் அவன் ஆர்வமீதூர்ந்து சொன்னான். ஐயா! என்று பின்னர் இவள் அன்பு கூர்ந்து பேசினாள்.

மரியாதை மரியாதையை விளைத்தருளுகிறது.

பிரியம் பிரியத்தைப் பெருக்கித் தருகிறது.

இனியன பேசுவோர் எவர்க்கும் இனியராய் இன்பம் மிகப் பெறுகிறார். பெரிய உள்ளங்கள் அரிய பண்பாடுகளோடு மருவியுள்ளன. வாயுரைகள் உயிர்களின் தூய்மைகளை உலகறியச் செய்கின்றன. புனித நீர்மைகள் மனிதரை மகிமைப் படுத்துகின்றன.

துயரில் சாக நேர்ந்த உயிரை உதவியுள்ளவன் ஆதலால் ஐயா! என்று ஆவலோடு பேச நேர்ந்தாள். தனது அருமைத் தந்தையாக அனுமானை இக்குலமகள் கருதியுள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்கிறோம். சனகன் மகளுக்கு அனுமான் இங்கே சனகன் என நேர்ந்தான். சனகன் = பிதா.

## இராம சவுந்தரியம்.

சானகி வினவிய குறிப்பை அனுமான் நன்கு தெரிந்து கொண்டான். "எப்படி அறிதி?" என்ற அந்தத் தொடரையே பிடித்துக் கொண்டு தொடர்ந்து பேச நேர்ந்தான்.

படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்து அன்று

என முதலில் அவையடக்கமாக இப்படி வடித்துச் சொல்லினன். அந்த அழகனுடைய திருமேனிக்கு ஒப்பு ஆக ஒன்றை எடுத்துக் காட்டி உரைக்க முடியாது. ஒப்பற்ற திவ்விய எழிலை எவ்வகையில் செவ்வையாக நான் விளக்கிச் சொல்வேன் அம்மா! என்னல் தெளிவாகச் சொல்ல முடியாது தாயே! ஆயினும் தெளிந்த அளவு சொல்லுகிறேன்; நேரே கண்டு மகிழ்ந்த நீங்கள் கருதிக் கொள்ளுங்கள் என இங்ஙனம் பணிவோடுகூறிப் பாதத்திலிருந்து தொடங்கித் தலை வரையும் அழகாகச் சொல்லியருளினன்.

இராமனுடைய ஒவ்வொரு உறுப்பையும் சிறப்பான மொழிகளால் உருக்கமாக உரைத்திருக்கிறன். இருபத்தொரு கவிகள் அந்த உருவ அழகைப் பருகி யிருக்கின்றன. அனுமானுடைய வாய்மொழிகளைச் செவி வாயாகச் சீதை பருகி உளம் உருகி உயிர் பரவசமாயினள். அழகு மொழிகள் விழுமிய சுவைகளாய் உள்ளன. சில அயலே வருகின்றன. நாமும் பருகி மகிழ்வோம்.

வாய்.

ஆரமும் அகிலும் நீவி அகன்றதோள் அமலன் செவ்வாய்
நாரம் உண்டலர்ந்த செங்கேழ் நளினம் என்று உரைக்கநாணும்
ஈரம்உண்டு அமுதம்ஊறும் இன்னுரை இபம்பா தேனும்
மூரல்வெண் முறுவல் பூவாப் பவளமோ மொழியற் பாற்றே.

வாயின் சிறப்பை இது வடித்துக் காட்டியுள்ளது. பதினறு கலைகளையுடைய பூரண சந்திரனைக் காட்டிலும் பொலிவு மிகவுடையது என இராமச் சந்திரனுடைய திருமுகச் செவ்வியைச் சொல்லிவிட்டு அதன்பின் வாய் அழகை இவ்வாறு வருணித்தருளினன்.

நீரில் வளர்ந்து செழித்துள்ள சிவந்த தாமரை மலரை உவமை கூறின் அதுவும் இழிவாம்; அந்தச் செவ்வாய்க்கு ஒவ்வாமையால் நளினமும் நாணும்; இளிவான உவமை கூறினனே! என அந்த இனிய வாயும் துனியோடு நாண நேரும் என்பான் உரைக்க நாணும் என இரண்டையும் நேரே காண வைத்தான்

பவளத்தை ஒப்புச் சொல்லலாம் என்றால் அதுவும் தப்பாம். சிவப்பாய் இருப்பதால் ஓரளவு உவமையாயினும் நீர்மையை நினைந்து நோக்கின், அதுவும் நேர் ஆகாமல் நிலைகுலைந்து இழிந்து போம். நிறத்தில் சிறிது ஒத்திருப்பினும் ஈரமுடைய இனிய மதுர மொழிகளை இயம்பாமையோடு புதிய முறுவலும் பூவாது ஆதலால் பவளம் எவ்வகையிலும் அச் செவ்வாய்க்கு ஒவ்வாது என்றான். ஒப்பு அற்றது எனத் துப்போடு துலக்கியருளினான்.

சிவந்த அதரங்களையுடைய இராமனது திருவாய் செந்தாமரையினும் சிறந்தது; செம் பவளத்தினும் உயர்ந்தது; அருள் கனிந்த இனிய மொழிகளை என்றும் பேசுவது; நன்னயமான புன்னகையுடையது; அரிய முறுவல் பூத்து, யாண்டும் இன்சொல் மிழற்றுகிற அச் செவ்வாயின் திவ்விய நீர்மையை என் வாயால் விளக்கிச் சொல்ல முடியாது என இங்ஙனம் விளக்கியிருக்கிறான்.

அமுதம் ஊறும் இன் உரை என்றதனால் இராமனது சொல் வினிமையில் அவன் உள்ளம் பறிபோயுள்ளமை யுணர வந்தது. அந்த வாய் அமுதத்தை இருவகையிலும் இனிது பருகியுள்ளவள் செவியில் இங்ஙனம் சுவையாகச் சொல்லமுதத்தை வார்த்திருக்கிறான். வார்த்தைகளில் தோய்ந்திருக்கிற சுவைகள் ஆய்ந்து அநுபவிக்க நேர்ந்தன. யாவும் உய்த்துணர் வுடையனவாய் உதயமாய் வருகின்றன.

பல்.

முத்தம்கொல்லோ? முழுநிலவின்
 முறியின் திறனோ? முறைஅமுதச்
சொத்தின் துள்ளி வெள்ளியினம
 தொடுத்த கொல்லோ? துறை அறத்தின்
வித்து முளைத்த அங்குரம் கொல்?
 வேறே சில கொல்? மெய்ம் முகிழ்த்த
தொத்தின் தொகை கொல்? யாதென்று
 பல்லுக்கு உவமை சொல்லுகேன்.

இது பல்லைக் குறித்து வந்துள்ளது. முத்துக்கள், சந்திர துண்டங்கள், அமுதத் துளிகள், தரும வித்துகள், சத்திய முளைகள் என்னும் உத்தமப் பொருள்களைத் தொகையாகச் சுட்டிக் காட்டிப் பல் வரிசைகளை விளக்கியிருக்கும் அழகை வியந்து பார்க்கிறோம். கவியின் காட்சியும் கதி வேகமும் மதிநலம் சுரந்து வரு

கின்றன. முப்பத்திரண்டு தருமங்களும் சிறிய உருவங்களாய் மருவி இராமனுடைய திருவாயில் பல்லுகளாய்ப் பதிந்துள்ளன என்று சொல்லியிருப்பதில் எவ்வளவு சுவை துள்ளி நிற்கிறது!

புண்ணிய உருவன் என்பதை இங்ஙனம் கண்ணியமாக் காட்டினான். அந்த அழகனுடைய பல் அழகையும், அனுமானுடைய சொல் அழகையும் நாம் ஒருங்கே கண்டு உவந்து வருகிறோம். பல்லுக்கு உவமை சொல்ல முடியாது என்பவன் இவ்வாறு சொல்லி நின்றான். சொல்லில் உள்ள சுவை அள்ளி நுகரவுரியது.

மூக்கு.

எள்ளா நிலத்து இந்திர நீலத் தெழுந்தகொழுந்தும் மரகதத்தின்
விள்ளா முழுமா நிழற்பிழம்பும் வேண்ட வேண்டு மேனியதோ
தள்ளா ஓதி கோபத்தைக் கவ்வ வந்து சார்ந்ததூவும்
கொள்ளா வள்ளல் திருமூக்கிற்குவமை பின்னும்குணிப்பாமோ?

நெற்றி.

வருநாள் தோன்றும் தனிமறுவும் வளர்வும் தேய்வும் வாளரவம்
ஒருநாட் கவ்வும் உறுகோளும் இறப்பும் பிறப்பும் ஒழிவுற்றால்
இருநாற் பகலின் இலங்குமதி அலங்கலிருளின் எழில்நிழற்கீழ்ப்
பெருநாள் நிற்பின் அவன் நெற்றிப்பெற்றித்தாகப் பெறுமன்றே?

மூக்கும் நெற்றியும் இங்ஙனம் நோக்க வந்துள்ளன.

இந்திர நீல ரத்தினமும், மரகத மணியும் போல் பசிய ஒளி வீசியுள்ள மூக்கு சிவந்த இதழ் அருகே நிவந்து நிற்பது, பச்சை ஓந்தி இந்திர கோபம் என்னும் பட்டுப் பூச்சியைக் கவ்வ வந்து சார்ந்தது போல் நேர்ந்துள்ளது என்றான். ஓதி = ஓந்தி.

கிரக பீடை நேராமலும், யாதும் தேயாமலும், களங்கம் இல்லாமலும் என்றும் ஒளி வீசியுள்ள ஒரு அட்டமி சந்திரன் இருந்தால் அது இராமச்சந்திரனுடைய நெற்றிக்கு ஒப்பாம் என்று உரைத்தருளினான். அலங்கல் இருளின் எழில் நிழல் கீழ் இலங்குமதி என்றது கரிய அழகிய மயிர் முடியின் கீழ் ஒளிரும் நெற்றியைச் சுட்டியது. நெற்றியிலிருந்து சிகையை நேரே வளர்த்திருக்கிறான் என்று தெரிகிறது. அடர்ந்த குஞ்சியின் அயலே எழில் ஒளி வீசிப் பாதிமதி போல் நுதல் நிலவியுள்ளமை நுவல வந்தது வெற்றி வீரனுடைய நெற்றி எழில் விழுமிய நிலையது.

தலைமயிர்.

நீண்டு குழன்று நெய்த் திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம்
பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையும் நறும் பூவும்
வேண்டு மல்ல வெனத்தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி
ஈண்டுசடையாயினதென்றால் மழைஎன் றுரைத்தல்இழிபன்றோ?

குஞ்சி அழகைக் குறித்து வந்துள்ள இந்தக் கவி அழகை நெஞ்சம் வியந்து பார்க்கிறோம். நெடிது சிந்திக்கிறோம். அந்த அழகிய சிகையின் விழுமிய நிலையை உழுவலன்போடு விளக்கியிருக்கிறார். பத்து வகை இலக்கணங்கள் படிந்துள்ளது எனத் தொகை குறித்திருப்பது உய்த்துணர வுரியது. நீண்டு, குழன்று, நெய்த்து இருண்டு நெறிந்து, செறிந்து, நீலம் பூண்டு புரிந்து, சரிந்து, கடைசுருண்டு என்னும் நீர்மைகளைக் கூர்மையாக நோக்கிச் சீர்மைகளைத் தெளிந்து கொள்ளவேண்டும். நெடிது வளர்ந்து இனிது கிளர்ந்து வழுவழுப்பாய் இருண்டு அடர்ந்து படர்ந்து நீலமணி போல் ஒளி வீசிச் சுருள்படிந்து தாழ்ந்து நுனி வளைந்து மேலும் மேலும் வளர்ச்சியுடையதாய்ச் செழித்துத் தழைத்திருந்ததை இங்ஙனம் இழைத்துக் காட்டினார். சிகையின் உருவ நிலையை முதலில் வகை செய்து கூறினார். பின்பு அதன் இயல்பினை விளக்கினார். அகில் முதலிய வாசனைப் புகைகள் ஊட்டாமலும், மலர் மாலைகள் சூட்டாமலும் இயற்கையாகவே இனிய பரிமளம் கமழ்ந்து அது எழில் மிகுந்திருந்தது வெறி = வாசனை.

சில அரச குமாரர்களுக்கு நல்ல மயிர் முடி வாய்த்திருந்தாலும் அதில் ஈ நும் பேனும் நாறுமே அன்றி இனிய மணம் வராது; இந்த அழகன் குழல் அதிசய எழிலும் அரிய பரிமளமும் மருவி எவரும் துதி செய்ய நின்றது.

"நெய்த்துக் கருகி நெறித்து விடும் பூமாலை
வைத்துக் கடைகுழன்று வார்ந்தொழுகி—மொய்த்தளிகள்
சூழ்ந்து வடிம்பலம்பித் துஞ்சுடைத்தா யூட்டுபுகை
வாழ்ந்து தகரங்கமழு மால்." (இரத்தினச் சுருக்கம்)

"நெறிந்து கடைகுழன்று நெய்த்திருண்டு நீண்டு
செறிந்து பெருமுருகு தேக்கி—நறுந்துணர்
வார்ந்து கொழுந்தெழுந்த வல்லியாய் மாந்தளிர்
சோர்ந்து மிசையசைந்த சோலையாய்ச்—சேர்ந்து
திருவிருந்த தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணும் குழலாள்." (விக்கிரமசோழனுலா)

இவை ஈண்டு எண்ணத் தக்கன. நம் கவியின் கவின்மொழி கள் இக் கவிகளில் வெளி வந்துள்ளன, கருதிக் காண்க.

இராமனது மயிர் அழகைக் குறித்துக் கூறும்பொழுது உயிர் பரவசமாய்க் கவி உரைத்திருக்கிறார்.

தெய்வ வெறியே கமழும் நறும் குஞ்சி என அதனை முகர்ந்து நுகர்ந்து உவந்து உள்ளம் களித்துச் சொல்லியுள்ளமையை உணர்ந்து களிக்கின்றோம். உழுவலன்புகளை வியந்து திளைக்கின்றோம்.

கதா நாயகனுடைய மயிரையும் சுவைத்துச் சுவைத்து உயிர் உருகச் சுவையாகப் பாடியிருத்தலால் கவியினுடைய பத்தியின் பரவச நிலையை நாடி அறிந்து கொள்ளலாம்.

இந்த நெடிய மயிர் முடி அழகு இக்காலத்தவர்க்குப் புதுமை யாய்த் தோன்றும். பெரும்பாலும் மொட்டைகளாய் முடிகளை வெட்டித் தறிதலைகளாய் இருத்தலால் பண்டைக்காலத்து நெடிய முடி நிலைகளை அறிதல் அரிதாம். கால வேற்றுமையால் எல்லாம் மாறுகின்றன. மாறினும் நாட்டின் பழமையைப் பாட்டில் கண்டால் அது உவந்து புகழ்ந்து கொள்ள வேண்டும். தங்கள் தலைகளைத் தடவிக் கொண்டு எங்கள் நிலைகளை இகழ்ந்து தள்ளலாகாது.

மயிர் நீப்பின் உயிர் நீப்பர் மானிகள் என்று தேவர் கூறியுள்ளார். தலை முடி மனிதனுக்கு ஒரு தனி மகிமையாய் நிலவியுளது.

"Fair tresses man's imperial race insnare,
And beauty draws us with a single hair." (Pope)

"அழகிய மயிர் முடி மனிதனுடைய உயர் நிலையை உணர்த்துகிறது; அதன் அழகு ஒரு மயிரால் நம்மை வசப்படுத்துகிறது" என போப் என்னும் ஆங்கிலக்கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

மணி முடியிழந்துள்ள இராமனது மயிர்முடி அனுமான் வாயால் ஈண்டு இனிது துதி செய்யப் பட்டுள்ளது. தெய்வ மணம் கமழ்கின்ற அந்த அழகிய நறுங்குஞ்சி இதுபொழுது சடையாயுள்ளதே! என்று உள்ளம் உருகியிருக்கிறான்

"தொடை யமை நெடுமழைத் தொங்கலாமெனக்
கடைகுழன்று இடைநெறி கரிய குஞ்சியைச்
சடைஎனப் புனைந்திலன் என்னின் தையலார்
உடை உயிர் யாவையும் உடையும்."

எனச் சூர்ப்பநகை முன்னம் கூறியிருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது. எழில் மிகுந்த அம் மயிர் முடியில் உள்ளமும் உயிரும் பறிபோய்க் கள்ளமின்றி அவள் உரையாடியுள்ளாள்.

தைலம் முதலியன தடவாமல் தவ வேடம் பூண்டு யாதும் பேணாது சடை படிந்துள்ள மயிர் முடியே உடையையும் உயிரையும் உடையும்படி செய்யுமானால் பேணி அலங்கரிக்கப்படின் அதனைக் காணுவார் கதி என்னும்? கருதியுணர வேண்டும்.

இராமபிரானுடைய உரோமபந்தி அதிசய எழிலுடையதாய் அமைந்திருப்பதைப் பலரும் வியந்து பாராட்டியுள்ளனர்.

நடை

புல்லல் ஏற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவிஏழும்
எல்லை ஏற்ற நெடுஞ்செல்வம் எதிர்ந்த ஞான்றும் அஃதின்றி
அல்லல் ஏற்ற கானகத்தும் அழியா நடையை இழிவான
மல்லல் ஏற்றின் உளதுஎன்றால் மத்த யானை வருந்தாதோ!

இராமனது நடையின் கம்பீர நிலையை இது காட்டியுள்ளது. மதயானையும், மால்விடையும் பெருமித நடைக்குப் பேர் பெற்றன. இராச கம்பீரமான இராமன் நடையோடு எடை தூக்கி நோக்கும் பொழுது அவையும் கடையாய் இழிந்து படுகின்றன.

மலர் மகளும் நில மகளும் உளம் மகிழ்ந்து குலாவ அரச பதவியை அடைந்த பொழுதும், அதனை உடனே துறந்து காட்டுக்குச் சென்ற போதும் ஒரே நிலையில் நிறை ஒத்திருந்த அந்த அற்புதமான கம்பீர நடைக்கு அற்பமான பிராணிகள் நடையை ஒப்புக் கூறல் தப்பாம் என்று செப்பி நின்றான்.

துன்பத்தில் தளர்வதும், இன்பத்தில் கிளர்வதும் எவர்பாலும் இயல்பாய் நிகழ்வன. அந்த இருவகை நிலையிலும் ஒரு படியாய் இராமனிடம் பெருமித நடை மருவியிருந்தமையை இங்கே உரிமையுடன் உணர்ந்து மகிழ்கின்றோம்.

அங்கங்களின் அமைதி, சமுதாய சோபை, உருவ எழில் முதலிய சவுந்தரிய நிலைகளைப் பாதம் முதல் கேசம் வரையும் அதிசய உவமைகளோடு அதி சாதுரியமாக அனுமான் ஓதியருளினான். பாதாதி கேசமாகச் சொல்லி வந்தது அவனது பத்தி நிலையையும் வித்தக விநயத்தையும் உய்த்துணர வந்தது.

இராமனுடைய திவ்விய சவுந்தரியங்களை நெடுங்காலம் உடனிருந்து கண்டு களித்து வந்த சீதை இடையே பிரிந்து பரிதாபமாய் ஏங்கியிருந்தாள். இன்று அனுமான் வாய்மொழிகளால் அந்த அழகு அமுதத்தை மாந்தி ஆனந்த மீதூர்ந்தாள். செவி இன்பம் அவி இன்பமாயது. மயங்கிச் சுகித்தவள் மயங்கிக் களித்தாள்.

## கணையாழி கண்டது.

உருவ எழிலை இவ்வாறு கூறி வந்தவன் இராமன் குறித்து அனுப்பிய சில அடையாளங்களையும் உரைத்து விட்டு முடிவில் கணையாழியைக் கையில் எடுத்தான். அதனைக் கண்டதும் சீதை அதிசய பரவசமாய் ஆவலோடு வாங்கினாள். அந்தமோதிரத்தைப் பெற்றபொழுது இக் குலமகள் அடைந்த பரவச நிலைகள் அளவிடலரியன. அந்த உள்ளத்தின் உவகைக் களிப்புகளைக் கவி வரைந்து காட்டியிருக்கும் காட்சி சுவை சுரந்து மிளிர்கின்றது.

மீட்டும் உரை வேண்டுவன இல்லைஎன மெய்ப் பேர்
தீட்டியது; தீட்டரிய செய்கையது: செவ்வே
நீட்டிதென நேர்ந்தனன் எனு நெடிய கையால
காட்டினன்ஓர் ஆழி அது வாணுதலி கண்டாள். (1)

இறந்தனர் பிறந்தபயன் எய்தினர்கொல் என்கோ?
மறந்தனர் அறிந்துணர்வு வந்தனர்கொல் என்கோ?
துறந்த வுயிர் வந்திடை தொடர்ந்தது கொல் என்கோ?
திறந்தெரிவது என்னைகொல் இந்நன்னுதலி செய்கை! (2)

இழந்தமணி புற்றரவு எதிர்ந்தது எனலானாள்;
பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்;
குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்;
உழந்துவிழி பெற்றதொர் உயிர்ப் பொறையும் ஒததாள்

வாங்கினள் முலைக்குவையில் வைத்தனள்: சிரத்தால்
தாங்கினள்; மலர்க்கண்மிசை ஒத்தினள்; தடந்தோள்
வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு
ஏங்கினள்; உயிர்த்தனள்; இது இன்னது எனலாமே! (4)

மோக்கும்; முலைவைத்து முயங்கும்; ஒளிர் நன்னீர்
தேக்கி நிறை கண்ணிணை ததும்ப நெடுநீள
நோக்கும்; நுவலக் கருதும்; ஒன்றும் நுவல்கில்லாள்;
மேக்கு நிமிர் விம்மலள்; விழுங்கலுறுகின்றாள். (5)

நீண்டவிழி நேரிழைதன் மின்னின் நிறமெல்லாம்
பூண்ட தொளிர் பொன்னனைய பொம்மல் நிறம் மெய்யே.
ஆண்டகைதன் மோதிரம் அடுத்த பொருள் எல்லாம்
தீண்டளவில் வேதிகை செய் தெய்வமணி கொல்லோ? (6)

இருந்து பசியால் இடருழந்தவர்கள் எய்தும்
அருந்தும்அமு தாகியது; அறத்தவரை அண்மும்
விருந்தும் எனல் ஆகியது; வீயுமுயர் மீளும்
மருந்தும் எனல் ஆகியது வாழிமணி ஆழி. (7)

(உருக்காட்டு படலம், 63 69)

கணையாழியைக் கண்டபொழுது சானகி கொண்ட ஆனந்த நிலைகளை இங்கே கண்டு வியந்து கருதி மகிழ்கிறோம்.

வாழ்க்கையில் நிகழ்ந்த சில குறிப்புகளைக் கூறி முடித்து "இந்த மோதிரத்தைக் கொடு" என்று எம்பெருமான் கொடுத்தனுப்பினர் என அனுமான் அதனைக் கையில் எடுத்தவுடனே சீதை பேரானந்தமுடையளாய் உள்ளம் பூரித்து உணர்வு துள்ளி உயிர் தளிர்த்து ஒளி மிகப் பெற்றாள். அந்த உவகை நிலையை உலகம் ஓர்ந்து உணர்ந்து கொள்ளும்படி பல உவமைகளால் கவி சுவையாக விளக்கியிருக்கிறார்.

இறந்தனர் பிறந்த பயன் எய்தியது.
மறந்தனர் அறிந்து உணர்வு வந்தது.
துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்தது
இழந்தமணி புற்று அரவு எதிர்ந்தது.
பழந்தனம் இழந்தன படைத்தது.
குழந்தையை உயிர்த்த மலடி.
உழந்து விழி பெற்றது.

இந்த ஏழும் உவமைகளாய் ஈண்டு இணைந்து வந்திருக்கின்றன. உரிய பொருள் நிலைகளைக் கருதி ஓர்ந்து கொள்ள வேண்டும்.

மன வுணர்ச்சிகளும் மகிழ்ச்சி நிலைகளும் இனிது தெளிய வந்துள்ளன. தனது அருமைக் கணவனுடைய கைவிரலில் அணிந்திருந்தது ஆதலால் அந்த மோதிரம் இவ்வளவு ஆர்வத்தையும் மகிழ்ச்சிகளையும் இந்தப் பதிவிரதைக்கு விளைத்தருளியது.

மெய்ப் பேர் தீட்டியது என்றதனால் இராமனுடைய பெயர் அதில் எழுதியுள்ளமை தெளிய வந்தது. அந்த முத்திரை மோதிரம் அதிசய நிலையது; விசித்திர வேலைப்பாடுகளுடையது.

தீட்டு அரிய செய்கையது என்றது சித்திரத்திலும் வரைந்து காட்ட முடியாதது என அதன் திவ்விய நிலைமையை இங்ஙனம் காட்டியருளினர். தீட்டுதல்=எழுதல், செய்தல்.

இராமநாமம் மருவியுள்ள அந்தக் கணையாழியை இந்தக்குல மகள் காணவே ஆனந்த பரவசமாயினள். பரிசித்து வந்ததைத் தரிசித்து உவந்தாள். உவகை நிலை உரையிடலரியதாயது.

ஆழி கண்டபோது போன உயிர் மீண்டது போல் சானகி தழைத்து நீண்டாள். இழந்த மணியை அரவு எய்தியது என விழைந்து கொண்டாள். அரியபுதையல் கண்ட தாய் ஆனந்தமடைந்தாள், புற்று அரவு என்றது சிறைக்குள் இருக்கும் நிலைமைதெரிய.

நீண்ட காலம் பிள்ளை இல்லாமல் மலடியாய் இருந்தவள் ஆண்டவன் அருளால் அருமையாக ஓர் அழகிய மகவைப் பெற்றால் அந்தத் தாய் உள்ளம் எவ்வளவு இன்ப நிலையை எய்துமோ, அவ்வளவினும் அதிகமான ஆனந்தக் களிப்பை அடைந்தாள் என்பார் மலடிக்கு உவமை கொண்டாள் என்றார். அன்பின் உருக்கத்தை நன்கு அறிய ஆர்வக் குழந்தை பார்வைக்கு வந்தது.

கண் ஒளி இழந்தவன் மீண்டும் அதனை நண்ணியது என எண்ணம் தளிர்த்து இன்பம் மீதூர்ந்தாள். நாதன் இருக்கும்வழி தெரிந்து கழிபேரின்பம் பூண்டமையால் விழி பெற்றது கண்டு வெளியாயது. துன்ப இருள் நீங்கி இன்ப ஒளி ஓங்கியது.

மூத்தி, உணர்வு, உயிர், மணி, பொருள் மகன் கண் என இன்னவாறு எதிர் குறித்தது கணையாழியின் அருமை பெருமைகளை இனிது தெரிய. ஆன்ம வுரிமைகள் பான்மை சார்ந்து மேன்மை நிறைந்து மிளிர்கின்றன.

அனுமானிடமிருந்து ஆழியைக் கையில் வாங்கிய தேவி ஆவி பரவசமாய் மேவிச் செய்த செயல்கள் உழுவலன்பின் செழுந்தகைமைகளை உலகம் அறியச் செய்துள்ளன. அந்த நிலைகளை மொழிகளால் விளக்க முடியாது எனக் கவி விளக்கியிருக்கும் வித்தகம் விநயமிக வுடையது. புறத்தே நிகழ்ந்த குறிப்புகள் அகத்தை விரித்து விளக்கியிருக்கின்றன.

வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு
ஏங்கினள்; உயிர்த்தனள்; இது இன்னது! எனலாமே?

பிராட்டியிடம் அப்பொழுது நிகழ்ந்த சில மெய்ப்பாடுகளை இப்படிச் சுட்டிக் காட்டி அந்த உயிரின் பரவச நிலையை உய்த்துணர்ந்து ஓர்ந்து கொள்ளும்படி உணர்வை ஊக்கி விடுத்துள்ளார், உரைக் குறிப்புகள் உணர்ச்சிகளை விளக்கியருளுகின்றன.

மோதிரத்தைக் கையில் வாங்கவும் மெய்யில் ஒரு திவ்விய சீவ ஒளி மேவி மிளிர்ந்தது; வாடி மெலிந்திருந்த அந்த அழகிய திருமேனி பூரித்து விம்மியது; உடனே மாறி மெலிந்தது; பின்பு குளிர்ந்தது; வெதும்பியது; அதன் பின் ஏங்கிப் பெருமூச்சு விட்டுச் சிறிது நேரம் பேசாதிருந்தாள். பேசாத மவுனமாய்ப் பெருகி எழுந்துள்ள இந்த ஆன்ம வுணர்ச்சிகளை நான் எப்படிப் பேசி விளக்குவேன்? என உலகை நோக்கிக் கவி இப்படிப் பேசியிருக்கிறார்.

இது இன்னது எனல் ஆமே?

கவி அடைந்துள்ள வியப்பை இது இனிது காட்டியுள்ளது. மதி நிலை கடந்து அதிசய நிலையில் மருவியிருத்தலால் அதனை எட்ட நின்று சுட்டிச் சொல்லி இங்ஙனம் துதி செய்ய நேர்ந்தார். இராமன் கையில் அணிந்திருந்த மோதிரம் ஆகலால் அது தன் மெய்யில் தோய்ந்தவுடன் தேவி ஆவி அவசமாயது; உள்ளமும் உணர்வும் துள்ளி ஆனந்த வெள்ளத்தில் மிதந்துள்ளன. அதனை மூக்கில் வைத்து முகர்ந்தாள்; நுகர்ந்தாள்; உச்சியில் இருத்தி உவந்தாள்; முலை முகட்டில் அழுத்தி முயங்கி மயங்கினாள்; நெடு நேரம் எதிரே நீட்டிக் கண்டு கண்டு களித்தாள்; காணும் போது பெருகி வருகிற ஆனந்தக் கண்ணீர் அதனை நன்கு காண ஒட்டாமல் மறைத்தது; அந் நீரைத் துடைத்துக் கொண்டு மீண்டும் மீண்டும் நோக்கி உவகைக் களிப்பில் நீண்டாள்; அதனோடு பேச முயன்றாள்; யாதும் பேசமுடியாமல் மோனமாயிருந்தாள்; தொண்டை விம்மியது; உமிழ் நீரை விழுங்கிக் கொண்டு உயிர்த்து நின்றாள்; அமிழ்தம் உண்டவர்போல் ஆவி தழைத்து ஆனந்தம் மீதூர்ந்தாள்; போன வுயிரை மீட்டித் தந்த சீவ சஞ்சீவியாய்த் தேவி கையில் அது மேவி மிளிர்ந்தது. மெய்யின்பம் தந்தது.

கருதி மகிழ்ந்தது.

அந்த ஆழி கையில் வந்தது இராமனை நேரே மெய்தோய்ந்து முயங்கியதாய் உயிர் உவகைக் கடலில் ஆழ்ந்திருக்கிறது. தனது

அருமைக் காதலனோடு வாழ்ந்து சுகித்த சுக போகங்கள் பல அதனோடு நினைவுக்கு வந்துள்ளன. ஒரு நாள் இரவு பள்ளியறையில் ஊடல் நிகழ்ந்தது. கலவி ஆசை நிலை மீறி நின்றாலும் இருவரும் ஊடலில் ஒரு நிகராய் ஊக்கியிருந்தார். யார் முந்துகிறாரோ அவர் தோல்வி அடைந்தவராய்க் கேலி செய்யப் படுவர் ஆதலால் அந்த நாணத்தால் நைந்து கிடந்தார். சிறிது நேரம் கழிந்தது; அமளியில் தனியே படுத்திருந்த இராமன் தனது விரலில் அணிந்திருந்த இந்த மோதிரத்தை அவிழ்த்துக் கீழே மெல்ல உருட்டினான்; சீதை விரைந்து எழுந்து போய் அதனை எடுத்தாள்; "கள்ளி அகப்பட்டாள்" என்று இராமன் துள்ளி எழுந்து அந்தக் கையைப் பிடித்தான; கள்ளனுக்கு ஏற்ற நல்ல கள்ளி என்று சானகி சொல்லிச் சிரித்தாள். அவன் அள்ளி அணைத்தான்; இருவரும் உள்ளம் களித்து உவகையில் திளைத்தார்.

இவ்வாறு அன்று கூட்டி வைத்து ஆனந்த ஆழியில் ஆழ்த்திய அமுத சஞ்சீவி ஆதலால் அதனை இன்று கண்டபோது யாவும் எண்ணித் தேவி இங்கே இன்பக் களிப்பில் மூழ்கினாள்.

அருமைக் காதலருடைய உரிமைப் பாசங்கள் உரையிடலரியனவாய் உழுவலன்போடு செழுமியுள்ளன.

வாழ்க்கையில் நிகழ்ந்த பல அடையாளங்களைச் சொல்லி முடிவில் இந்த மோதிரத்தைத் தந்து அனுமான் இங்ஙனம் ஆருயிர் உதவி அம்மையை ஆதரித்து நின்றான். அரிய இந்த ஆதரவு நிலையை ஆழ்வார்கள் உவந்து பாராட்டியுள்ளனர்.

சீதைக்கு அனுமான் தெரிவித்த அடையாளம் என்ற தலைப்பில் பெரியாழ்வார் ஒரு பதிகம் பாடியிருக்கிறார் பத்தி நிலைகள் பாவியுள்ளன. சில பாசுரங்கள் அயலே வருகின்றன.

அல்லியம்பூ மலர்க்கோதாய்! அடிபணிந்தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே!
எல்லியம்போ தினிதிருத்தல் இருந்ததோர் இடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டு அங்கு ஆர்த்ததும் ஓர் அடையாளம்.

மின்னொத்த நுண்ணிடையாய்! மெய்யடியேன் விண்ணப்பம்
பொன்னொத்த மானொன்று புகுந்து இனிது விளையாட
நின் அன்பின் வழிநின்று சிலைபிடித்து எம்பிரான் ஏக
பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததும் ஓர் அடையாளம்.(2)

மைத்தகுமா மலர்க்குழலாய்! வைதேவி விண்ணப்பம்
ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைந்தேட
அத்தகுசீர் அயோத்தியர்கோன் அடையாளம் இவைமொழிந்தான்
இத்தகையால் அடையாளம் ஈது அவன் கைமமோதிரமே. (3)

திக்குநிறை புகழாளன் தீவேள்விச் சென்ற நாள்
மிக்கபெருஞ் சபை நடுவே வில்லிறுத்தான் மோதிரம் கண்டு
ஒக்குமால் அடையாளம் அனுமான்! என்று உச்சிமேல்
வைத்துக் கொண்டு உகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே.
(திருமொழி. 3-10)

இராமதூதனாய் அனுமான் இலங்கை புகுந்து சீதையைக் கண்டு அடையாளங்கள் கூறிக் கணையாழி தந்த இந்த அதிசய வரலாறுகளை முன்னோர்கள் இவ்வாறு துதி செய்துள்ளனர்.

சானகி இராமர்களுடைய அன்புரிமைகளும் இன்ப வாழ்வுகளும் தலைமையான நிலையில் பண்பு சுரந்துள்ளமையால் உலக வுயிர்களுக்கு அவை உவகை நிலையங்களாய் ஒளி புரிந்து வருகின்றன. எண்ணியுணருந்தோறும் எவ்வழியும் இனிய சுவைகள் பெருகி அரிய வுணர்வு நலங்களை உதவியருளுகின்றன.

தனது கணவனுடைய கணையாழியைக் கையில் வாங்கி இவ்வாறு ஆனந்த பரவசமடைந்தவள் அனுமானை உவந்து நோக்கி நன்றியறிவோடு புகழ்ந்து போற்றினாள். வெளியில் வந்த மொழிகள் அந்த உள்ளத்தின் பரிவுகளை உலகம் அறிய உணர்த்தியுள்ளன.

மும்மையாம் உலகம் தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர்தந்தாய்க்குச் செயல்எனால் எளியதுண்டே.
அம்மையாய் அத்தனாய அப்பனே! அருளின் வாழ்வே!
இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோடு என்றாள். (1)

பாழிய பணைத்தோள் வீர! துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறுவிலா மனத்தேன் என்னின்
ஊழிஓர் பகலாய் ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள். (2)

கற்பரசி வாயிலிருந்து இவ்வாறு அற்புத வுரைகள் வந்திருக்கின்றன. அரிய கருமவீரனை உரிமையோடு வாழ்த்தியிருப்பது உவகைப் பெருக்காய் ஓங்கி நிற்கிறது.

உயிர் தந்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?

என உள்ளம் உருகி உரைத்திருத்தலால் அவனது உதவி நிலையின் உயர்வு புலனும். செய்த உபகாரத்தை நினைந்து நெஞ்சம் கரைந்திருக்கிறது. நன்றியறிவோடு ஒன்றாய் உருகியுள்ளமையான் உரைகள் உருக்கமாய்ப் பெருகி எழுந்தன.

அம்மையாய் அத்தன் ஆய அப்பனே!

அனுமானைப் பார்த்து இந்த அம்மை இப்படி ஆர்வம் மீதூர்ந்து விளித்திருக்கிறாள். சாவில் மூண்டு நின்ற தனது ஆவியை மீட்டித் தன்னை இன்னவுருவில் மன்னியிருக்கச் செய்தவன் ஆகலால் அன்னையும் பிதாவும் என அவனை உன்னியுருகி உரிமை மீக்கூர்ந்தாள். அன்புரிமையில் தந்தையினும் தாய் சிறந்தவள் ஆதலால் முன்னதாக அம்மை என்றாள்.

தாயும் தந்தையும் குருவும் தெய்வமும் நீயே என்பாள் அம்மை, அத்தன், அப்பன் என இன்னவாறு உருகிய அன்புடன் உரிமை கூர்ந்து உரையாட நேர்ந்தாள்.

முன்னம் சனக மன்னன் மகளாயிருந்தாள்; இப்பொழுது அனுமானுடைய அருமைப் புதல்வியாயினாள். அவன் உருவ நோக்கில் பெற்ற தந்தை; இவன் உயிர் நோக்கில் உற்ற தந்தை.

அருளின் வாழ்வே! என்றது கருணைக் கடலே எனக் கருதியுரைத்தமை காண வந்தது. கொடியவன் ஊரில் ஒரு நாதியும் இல்லாமல் உயிர் போகும் தருணத்தில் உரிமையாய் வந்து உதவி புரிந்தான் ஆதலால் அது தண்ணளி நிறைந்த கண்ணோட்டமாய்க் கண்டு எண்ண வந்தது. நாதியற்ற எளிய பிராணிகளை இரங்கிக் காப்பது பெரிய கிருபையாம். அத்தகைய அருள் நீர்மை பெருகியுள்ளமையால் மாருதியை இங்ஙனம் பொருள் பொதிந்த மொழிகளால் போற்றியுருகினாள்.

அருளாழியம்மான் எனத் திருமாலை நம்மாழ்வார் உருகிப் பாடியுள்ளது போல் அனுமானைச் சீதை இங்கே அன்புரிமையோடு கூறியுள்ளாள். உரைக்கும் மொழிகள் உள்ளத்தின் உருக்கத்தையும் உணர்வின் பெருக்கத்தையும் வெளிப்படுத்தி விடுகின்றன. உதவியுள்ள உபகாரங்கள் உயிரை உருக்கியுள்ளமையால் உரைகள் அன்புரிமைகளாய்ப் பொங்கி வருகின்றன.

இம்மையே மறுமைதானும் நல்கினை இசையோடு.

தனக்கு அனுமான் அருளியுள்ள பேறுகளைப் பிராட்டி இங்ஙனம் விளக்கியிருக்கிறாள். இகலோகத்திலும் பரலோகத்திலும் பெருமகிமையுடன் பேரின்பங்களை நுகர்ந்து வாழும்படி மாருதி பேருதவி செய்துள்ளதாகக் கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. உற்ற பழியை நீக்கி உயர் புகழ் ஆக்கிப் பெற்ற பிறவியைப் பேரானந்தமாகப் பேணியருளினான் என உள்ளம் உருகியுள்ளமை உரையில் அறிய வந்தது.

தான் இறந்திருந்தால் நற்கோலை செய்த பாவம் தன்னைத் தொடர்ந்திருக்கும்; அன்னியன் ஊரில் அநாதையாய்ச் செத்தாள் என்ற பழியும் பற்றும்; உற்றகணவனுக்கும் ஒழியாத வசையாம்; இத்தகைய பழி பாவங்கள் பற்றாதபடி தன் உயிரைக் காத்துத் தனது பிறப்பைப் புனிதமாக்கியுள்ளமையால் இம்மையும் மறுமையும் தனக்கு நன்மையை நல்கினான் என உண்மையை உவந்து கூறினாள். செய்துள்ள உதவியின் உய்தி நிலைகள் உணர வந்தன.

தனது அருமை நாயகனோடு கூடி மீண்டும் இனிது வாழுமாறு இன்ப நலன்களை நல்கியருளிய பரம உபகாரி என அனுமானை அன்பு மீதூர்ந்து கருதிப் புகழ்ந்தாள். தனக்கு உயிர் உதவி புரிந்தமையால் அந்த உதவியாளன் நெடிது வாழ வேண்டும் என்று நெஞ்சம் உருகிப் பல்லாண்டு கூறினாள்.

## சிரஞ்சீவி நிலை.

பிறந்தவர் எவரும் இறந்து மறைதல் உலக இயல்பு. அந்த இயற்கை நியதியைக் கடந்து நிற்பது அதிசய நிலையாம். தோன்றிய உருவம் மாறி மீண்டும் பிறவாமல் ஆண்டவன் அருளைப் பெற்று என்றும் அவன் அருகே நிற்பவர் நித்திய முத்தர்கள் என நிலவியுள்ளனர். உற்ற உடலோடு ஊழியும் அழியாமல் ஒளி செய்து உள்ளவர் சிரஞ்சீவிகள் என நின்றார்.

"சாகா வரத் தலைவரில் திலகம்" (கடல்தாவு, 85)

என அனுமானை இன்னவாறு முன்னம் குறித்துள்ளார்.

அற்புதமான இந்த நித்திய நிலையைக் கற்பரசி இங்கே அனுமானுக்குத் தனி உரிமையாக இனிது அருளியுள்ளாள்.

யான் மறுவிலா மனத்தேன் என்னின்.

என்றது புனிதமான தனது பதி விரதத் தன்மையை உலகம் காண எடுத்துக் காட்டி ஆணையிட்டுக் கூறிய படியாம். உள்ளத்தின் தூய்மையைத் தெய்வ சாட்சியாகத் தெளிய வைத்தாள்.

நான் உத்தம பத்தினி என்பது உண்மையானால் நீ என்றும் நித்திய சிரஞ்சீவியாய்ச் செழித்து வாழ வேண்டும் என வாழ்த்தி நின்றாள். மனதைச் சுட்டிக் காட்டியது நுனித்து நோக்கத் தக்கது. உள்ளத்தில் யாதொரு மாசும் இல்லாதிருந்த நிலை உத்தம நிலையாம் என்பது உய்த்துணர வந்தது. மனத்தில் மறு இல்லையானால் அது அரிய பல மகிமைகளை விளைத்தருளுகின்றது. மறு = குற்றம். தனது நாயகனைத் தவிர வேறு எவரையும் யாதும் கருதியறியாத புண்ணியமுடையது என அம்மனம் ஈண்டு எண்ணியறிய நின்றது. மாசற்ற மனம் ஈசன் நிலையமா யுள்ளது.

நீ என்றும் சிரஞ்சீவியாய் இருப்பாய் என ஆசீர்வாத முறையில் தன் முனைப்போடு கூறாமல் கற்பின் தலை மேல் வைத்துக் காப்பு அளித்திருப்பது அரிய பண்பாடாய் மருவி மிளிர்கின்றது.

ஊழி ஓர் பகல் என்றது பிரம கற்பத்தை.

கலியுகம், நாலு லட்சத்து முப்பத்தீராயிரம் வருடங்களுடையது. துவாபரயுகம், எட்டு லட்சத்து அறுபத்து நாலாயிரம் வருடங்களுடையது. திரேதாயுகம், பன்னிரண்டுலட்சத்துத் தொண்ணூற்றாறாயிரம்வருடங்களுடையது. கிரேதாயுகம், பதினேழுலட்சத்து இருபத்தெண்ணாயிரம் வருடங்களுடையது. இவ்வாறு சதுர்யுகங்கள் ஆயிரம் கழிந்தால் பிரமாவுக்கு ஒரு பகல் ஆம்.

ஈண்டும் ஓர் இருபான் ஆயிரம் தலையிட்டு
இயன்ற நாற்பத்து மூன்றிலக்க
யாண்டெனப்படுவ நான்கு உகத்தளவை;
இம்முறை ஆயிரம் இறந்தால்
காண்டகும் அயனுக்கு ஒரு பகல்; அதுவே
கற்பமாம்; இரவும் அத்துணைத்தவ
ஆண்டகைக்கு அந்நாள் முப்பதோர் திங்கள்;
அஃதொரு பன்னிரண்டாண்டே. (காஞ்சிப் புராணம்)

பிரமாவினுடைய கால நிலை இங்ஙனம் குறிக்கப்பட்டுளது.

ஆயிரம் சதுர்யுகங்கள் முடிந்த பொழுது பிரமாவுக்கு ஒரு பகல் முடிகிறது. அந்த நாள் முடிவில் ஒரு பிரளயம் தோன்றும்;

அதில் உலகங்கள் பல அழிந்து போம். அந்த அழிவுகாலம் ஊழி என வந்தது. அவ்வாறு பல்லாயிரம் ஊழிகள் பிரமன் ஆயுளில் நிகழுகின்றன. அவ் ஊழிகள் எல்லாம் நாழிகைகளாய்க் கழிய அனுமானுக்கு வாழி பாடினள்.

கற்பகோடி காலங்கள் அனுமான் இனிது வாழ வேண்டும் என்று பிராட்டி பேராவலோடு வாழ்த்தியுள்ளாள். அடுத்து வருகிற பிரமபட்டம் அனுமான் உடையது எனப் புராணங்கள் முறையிட்டுள்ளன. அரிய நிலைமையும் பெரிய தலைமையும் அறிய வந்தன.

## தலைவன் நிலை தெரிந்தது.

உரிமையுடன் அனுமானை இவ்வாறு உவந்து வாழ்த்தியபின் இராமனுடைய இருப்பை விவரமாக அறிந்து கொள்ள விருப்போடு வினவினள்: "என் நம்பியும் தம்பியும் இப்பொழுது எங்கே இருக்கின்றனர்? நான் இங்கே இருப்பதை அவர்க்கு யார் சொன்னார்? உன்னை அவர் எப்படிக் கண்டார்? எவ்வாறு ஈண்டு அனுப்பினர்? என்ன சொல்லி விடுத்தார்?" என இன்னவாறு ஆவலோடு பிராட்டி அனுமானிடம் கேட்டாள். அவன் யாவும் தெளிவாகச் சொன்னன்.

மாயமானைத் தொடர்ந்து போனதிலிருந்து பின்பு நடந்தவைகளை எல்லாம் விவரமாக இனிது கூறிய முறை அன்பு நலம் சுரந்து அரிய சுவைகள் நிரம்பியுள்ளது. தன் அம்பு பாய்ந்து கீழே விழும் பொழுது மாரீசன் கூவிய மாயக் குரலைக் கேட்டு ஏதோ மோசம்! என்று ஆண்டவன் விரைந்து மீண்டு வருங்கால் இடையே தம்பியைக் கண்டதும், நெஞ்சம் கலங்கியதும், வேகமாய் ஓடிவந்து பன்னசாலையைப் பார்த்ததும், அங்கே தேவியைக் காணாமையால் ஆவி அலமந்து தவித்ததும், அல்லலுழந்து துடித்துத் தென்திசை நோக்கிக் கடுத்து வந்ததும், அங்கே சடாயுவைக் கண்டதும், கண் கலங்கி நின்றதும், அப் பறவைவேந்தன் பரிந்து இறந்ததும், உருகி அழுது கருமம் புரிந்ததும், மறுகி வந்து கிட்கிந்தையை அடைந்ததும், தன்னைக் கண்டதும், சுக்கிரீவனை நட்புக் கொண்டதும், பக்கபலம் சேர்ந்ததும் ஆகிய வரலாறுகளை வரன்முறையே மாருதி உரைத்தருளினன்.

தன்பால் தன் நாயகன் கொண்டுள்ள அன்புருக்கத்தைச் சீதைக்கு நன்கு அறிவுறுத்தினன். குடிசையில் உங்களைக் காணா

மையால் உயிரே போய்ப் பரதவிக்கும் உடலே போல் காடும் மலையும் கடுகியலைந்து மறுகி யுழன்றுள்ள அந்த உயிர்த் துடிப்புகளை வெறும் உரைகளால் உரைக்க இயலாது எனச் சுருக்கி முடித்தான். ஆண்டவன் காணுமல் அலமந்து உருகி நிற்கும் திருவுருவை அடியேன் கண்டேன்; முடிவுகளை முடிவாக அறிந்தேன் என்று நெடிது மொழிந்தான்.

தேண்டிநேர் கண்டேன் வாழி தீதிலன் எங்கோன் ஆகம்
பூண்டமெய் உயிரே போகப் பொய்உயிர் போல நின்ற
ஆண்டகை நெஞ்சில் நின்றும் அகன்றிலை அழிவுண்டாமோ
ஈண்டுநீ இருந்தாய் ஆண்டு அங்கு எவ்வுயிர் விடும் இராமன்?

துணை பிரிந்த பின் இராமன் இருந்துள்ள நிலைமையைச் சீதையிடம் அனுமான் இங்ஙனம் கூறியுள்ளான்; இந்த அழகு மொழிகளை விழி களிப்ப நோக்கி வியந்து சிந்திக்கின்றோம். உரூ வலன்புடைய தனது நாயகனது உயிர்க் கிழமையை மொழிகள் தோறும் தெளிவாக்கி வருகிறான், எவ்வகையிலும் பிராட்டி உய்வகை தெரிந்து உவந்துகொள்ள உரைகள் விழைந்து வருகின்றன.

சீதை என்னும் பெயரோடு வேறு ஒரு உருவமாக மருவி யிருப்பினும் அது இராமனுடைய உயிரே என உணர்த்தியிருக்கிறான். உரிமையுவகைகளை விளைத்து மொழிகள் விழுமிய நிலைகளில் ஒளி செய்து மிளிர்கின்றன.

தன்னைப் பிரிந்தபின் உயிர் பிரிந்த உடல்போல் தனது நாயகன் துயருழந்துள்ளதை உளம் தெளிய வெளி செய்தான். “பூண்ட மெய் உயிரே போகப் போய் உயிர் போல நின்ற ஆண்டகை” என இராமனை ஈண்டுக் காட்டியிருக்கும் காட்சியைக் கண்ணூன்றிக் காணுகின்றோம்! இந்தத் தேவியைப் பிரிந்த பின் அந்த ஓவிய அழகன் உருக்குலைந்து உழன்று வருவகை இடங்கள் தோறும் உணர்ந்து வருகிறோம். அரிய அன்புருவங்கள் தெரியநின்றன.

அருமை மனைவியின் பிரிவு பரிதாப நிலையில் பெருகியுள்ளமையை உருவகமாக்கி விளக்கினான். ஆவியும் தேவியும் பாவனைக்கு வந்தன. ஈருடலுள் ஓருயிர் நேர் மருவியுளது.

பிரிவுத் துயரம் மரண வேதனையினும் கொடியது. அதனை நெடிது சகித்திருக்க முடியாது. தேவி பிரிந்தாள் என்ற போதே ஆவி பிரிந்து போயிருக்கும்; அங்ஙனம் போகாமல் இதுவரை

உயிர் உடலில் நிலைத்திருத்தற்குக் காரணம் என்னை? எனக் கருதி வினவுவார்க்கு இறுதி அடியில் உறுதியாக விடை வந்துளது.

ஈண்டு நீ இருந்தாய்! ஆண்டு இராமன் எவ்வுயிர் விடும்?

சீதையிடம் அனுமான் இப்படி வித்தக விநோதமாய் வினவியிருக்கிறான். உரையாடுந்திறம் உணர்வு சுரந்து திகழ்கின்றது.

இராமனுடைய உயிராகிய நீங்கள் இங்கே இருக்கும் பொழுது அவர் அங்கே எந்த உயிரை விடுவார்? அம்மா! என்ற இந்த நளின வாசகம் சீதையின் உள்ளத்திற்கு எவ்வளவு இன்பத்தை விளைத்திருக்கும்! துன்பத்தில் துவண்டு கிடந்த பதி விரதைக்குச் சீவ அமுதங்களாய் இராம தூதன் மொழிகள் ஈண்டு வெளி வந்துள்ளன. உள்ளம் உவந்து தெளிய ஓர்ந்து பேசுகிறான்.

தன் பிராண நாயகனுடைய பிராணன் என்று தன்னை வரைந்து காட்டியிருக்கும் காட்சியை மானசக் கண்ணால் நோக்கி நோக்கிப் பெண்ணரசி பேரானந்தம் அடைந்திருக்க வேண்டும்.

தன்னைக் கருதி வாராமல் கைவிட்டுப் போய் விடுவாரோ என்று மறுகியுழலுகின்ற உள்ளத்திற்குத் தெள்ளமுதமாக உரைகளை ஊட்டியருளினான். பிரிவிலுள்ள இரண்டு புனித உயிர்களையும் ஒருங்கே சேர்த்துக் கண்டபோது தனது பிறவிப் பயனை அனுமான் கருதியுள்ளமையைக் கருமங்கள் காட்டி வருகின்றன.

தன்பால் அன்பு மண்டி இராமன் துன்புழந்திருக்கும் நிலைகளை எல்லாம் நன்கு சொல்லி முடித்தான். உள்ளத்திலிருந்த சோகங்கள் எல்லாம் ஏகமாய் ஒழிந்தன; பிராட்டி பெரு மகிழ்ச்சி அடைந்தாள். தன்னுடைய இன்னுயிரை இனிது உதவிய அந்தப் புண்ணிய வீரனை உவந்து நோக்கினாள். நாயகனுடைய உரிமையை நினைந்து இத் தூயவள் உருகினாள்.

என்புற உருகினள்; இரங்கி ஏங்கினள்;
துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்

தன் அருமைக் கணவன் பிரிவுத் துயரில் மறுகியுள்ளமையை அனுமான் வாய்மொழியால் அறிந்த பொழுது சீதை இவ்வாறு பரிதபித்திருக்கிறாள். உருக்கம், ஏக்கம், துன்பம், உவகை என்னும் இவ் வுள்ளுணர்ச்சிகளை ஒருங்கே நோக்கி உயிர் நிலையை உணர்ந்து கொள்ளுகின்றோம். நாயகனை எப்பொழுது காண்போம்

என்ற ஏக்கமும், எப்படியும் வந்தருளுவார் என்ற உவகையும் ஒருங்கே பொங்கியிருக்கின்றன. சுமந்த என்றது எண்ணங்களின் பாரங்களைக் கண் எதிரே காட்டிக் கதி நிலையை விளக்கியது.

## உருவம் காட்டியது.

ஆருயிர்த் துணையின் பேர் எதிர் உரைத்துப் பேருதவி புரிந்த மாருதியைச் சானகி உரிமையுடன் உவந்து நோக்கி "நெடிய கடலை எப்படிக் கடந்து இங்கே வந்தாய்?" என்று இப்படி வியந்து கேட்டாள். இந்தக் கேள்விக்கு அனுமான் சொன்ன பதில் என்ன? அயலே வருகின்றது.

சுருங்கிடை! உன் ஒரு துணைவன் தூயதாள்
ஒருங்குடை உணர்வினோர் ஓய்வில் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயருமா பெற்றிபோல்
கருங்கடல் கடந்தனென் காலினால் என்றான்.

சிறிய உருவினையுடைய நீ அரிய பெரிய கடலை எவ்வாறு கடந்து வந்தாய்? என்று தேவி வியப்போடு வினவியதற்கு மாருதி இவ்வாறு விடை கூறியுள்ளான்.

இராமனுடைய திருவடியை நினைந்தவர் பிறவிக் கடலைக் கடந்து பேரின்பமுத்தி காண்பது போல் நான் இந்த அலைகடலைக் கடந்து ஈண்டு வந்து அம்மையைக் கண்டேன் என அமைதியாகப் பதில் உரைத்திருக்கிறான். உரை உள்ளத்தை உணர்த்துகிறது.

தூயதாள் என்றது தன்னை உண்மையோடு கருதினவரைப் பரிசுத்தராக்கியருளும் பான்மை கருதி. தூய்மையைத் தோய்ந்து கண்டவன் ஆதலால் அந்த வாய்மை ஈண்டு வந்தது.

அனுமானுடைய இராம பத்தியைக் காரியம் முழுவதும் கண்டு வருகிறோம். இதில் காட்டியுள்ள காட்சியைக் கருதியுணர்கிறோம். இராமசிந்தனை சீவ கோடிகளுக்குத் தேவ அமுதமாய்த் திவ்விய மகிமைகளை விளைத்து வருகிறது; அவ்வாறினை மருவினவர் பரம பாக்கியவான்களாகின்றனர்; மருவாதவர் பரிதாப நிலைகளில் மறுகியுழலுகின்றனர் என்னும் உறுதி யுண்மைகள் உணர வந்தன. பிறவி நீங்கிப் பேரின்பம் பெற உறவு கூறினான்.

பரிசுத்தமான பரம்பொருளே இராமன் என உருவம் கொண்டு ஈண்டு வந்துள்ளதாக உருகிய அன்புடன் அனுமான் கருதி புள்ளமையை உரைகளில் தெளிந்து கொள்கின்றோம்.

அதிசய வீரனை அனுமான் பரமபத்தனாய் நின்று காவிய நாயகனை யாண்டும் துதி செய்து வருகிறான். தூய தெய்வ சிந்தனை செய்து மாய மோகங்களைக் கடந்து உய்தி பெறுங்கள் என உலகத்தவர்க்கு உறுதி நலங்களை விநயமாகப் போதித்தருளுகிறான்.

தான் கருங்கடல் கடந்து வந்தது தன்னுடைய ஆற்றலினால் அன்று; இராமபிரானுடைய திருவருளினால் என்றது எவ்வளவு பொருள் பொதிந்த மொழி! எத்துணை அடக்கம்! எத்தகைய பணிவு! தத்துவ வித்தகம் உய்த்துணர வுற்றது.

"He mentally went to Lanka."

"அவன் மனோ வேகமாய் இலங்கைக்குச் சென்றான்" என அனுமான் கடல் தாவிப் போனதைக் குறித்து மேல்நாட்டுத் தத்துவ அறிஞரும் இங்ஙனம் கூறியிருக்கின்றார். மனதை அடக்கி ஆன்ம சித்தி பெற்றிருப்பவர் எதையும் எளிதாகச் செய்து விடுவர் என்பது இங்கே தெளிவாய் நின்றது. உள்ளம் புனிதமாய் உயரின் உயர் நலங்கள் வெள்ளமாய் வருகின்றன. ஆத்தும சத்தி அற்புத சித்தியாய் அதிசயங்களைச் செய்கிறது.

இராம நாம மகிமையால் கடல் தாவி வந்தேன் என அனுமான் இவ்வாறு கூறியும் சீதை தேறாமல் திகைத்தாள். இவ்வளவு சிறிய வடிவினையுடையவன் அவ்வளவு பெரிய கடலை எவ்வாறு தாண்டி வர முடியும்? என இவ்வாறு ஐயமும் வியப்பும் மீறிநின்றன.

"இத்துணைச் சிறியது ஓர் எண்ணில் யாக்கையை
தத்தினை கடல் அது தவத்தின் பாலதோ?
சித்தியின் இயன்றதோ? செப்புவாய்!"

என இப்படிக் கேட்டாள் கேட்கவே அனுமான் விசுவ உருவம் கொண்டு நேரே நின்றான். வானுற ஓங்கிநின்ற அந்த அற்புத வடிவத்தைக் கண்டதும் சானகி அச்சமும் திகிலும் கொண்டு அதிசயித்து நின்றாள். 'அடங்கியருள் ஐயனே" என்று ஆவலோடு வேண்டினாள். அவன் ஒடுங்கி நின்றான். பிராட்டி புகழ்ந்து மகிழ்ந்தாள்.

இடந்தாய் உலகை மலையோடும் எடுத்தாய்
விசும்பை இவை சுமக்கும்
படந்தாழ் அரவை ஒரு கரத்தால் பறித்தாய்
எனினும் பயன் இன்றால்

நடந்தாய் இடையே என்றாலும் நாளும்
நினக்கு நளிர் கடலைக்
கடந்தாய் என்றால் என்னாகும்
காற்றின் மன்ன கடுமையோய்! (1)

ஆழி நெடுங்கை ஆண்டகை தன்
அருளும் புகழும் அழிவின்றி
ஊழி பலவும் நிலை நிறுத்தற்கு
ஒருவன் நீயே உளையானாய்
பாழி நெடுந்தோள் வீரா! நின்
பெருமைக்கு ஏற்பப் பகை இலங்கை
ஏழு கடற்கும் அப்புறத்த தாகா
திருந்தது இழிபு அன்றோ? (2)

அறிவும் ஈதே! உருவு ஈதே!
ஆற்றல் ஈதே! அரும்புலத்தின்
செறிவும் ஈதே! செயல் ஈதே!
தேற்றம் ஈதே! தேற்றத்தின்
நெறியும் ஈதே! நினைவு ஈதே!
நீதி ஈதே! நினக்கு என்றால்
வெறியர் அன்றோ குணங்களால்
விரிஞ்சன் முதலா மேலானோர். (3)

மின்னேர் எயிற்று வல்லரக்கர்
வீக்கம் நோக்கி வீரற்குப்
பின்னே பிறந்தான் அல்லதோர்
துணையில்லாத பிழை நோக்கி
உன்னை நின்றே உடைகின்றேன்
ஒழிந்தேன் ஐயம் உயிர் உய்ந்தேன்
என்னே நிருதர் என்னாவார் இவனே
எங்கோன் துணை என்றால் (4)

மாண்டேன் எனினும் பழுதன்றே
இன்றே மாயச் சிறை நின்றும்
மீண்டேன்; என்னை ஒறுத்தாரைக்
குலங்களோடும் வேர் அறுத்தேன்
பூண்டேன் எங்கோன் பொலன் கழலும்
புகழே அன்றிப் புன்பழியும்
தீண்டேன் என்று மன மகிழ்ந்தாள்
திருவின் முகத்துத் திருவன்னாள். (5)

(உருக்காட்டு படலம், 109-113)

அனுமானுடைய திவ்விய நிலைமையைக் கண்டபின்பு சீதை இவ்வாறு உள்ளம் களித்து உவந்து பேசியுள்ளாள். அந்த உள்ளத்தில் எண்ணியிருந்த எண்ணங்கள் சில இவ் வுரைகளில் வெளியாகியுள்ளன. சமையம் நேரும் போது எவையும் தெரிய வருகின்றன. நினைவுகள் நிலைமைகளை விளக்கியுள்ளன.

பேச்சளவில் அனுமானைப் பார்த்து நின்றவள் செயல் நிலை தெரியவே வியப்பும் விம்மிதமும் மிகுந்து விளைவுகளை விழைந்து புகழ்ந்தாள். அரிய காட்சி பெரிய மாட்சிகளைத் தெரியச்செய்தது.

வானர வடிவில் வந்துள்ளவன் வானவர் எவரினும் மேலானவன்; எதையும் செய்ய வல்லவன்; அரிய கரும வீரன்; அறிவு ஆற்றல் அடக்கம் அமைதி அன்பு ஞானம் சீலம் வீரம் முதலிய குணகணங்கள் எல்லாம் இவனிடம் குடி புகுந்துள்ளன. பிரம தேவனும் பிரமை கொள்ளும்படி பெருமித நீர்மைகள் பெருகி நிற்கின்றன. இந்தப் பேராண்மையாளன் எனது பிராணநாயகனுக்கு இனிய துணையாய் அமைந்துள்ளான். கொடிய அரக்கர் திரள்கள் நெடிது பெருகியுள்ளனவே; அளவிடலரிய படைகளோடு எதிரி நிற்கின்றானே; நெடிய கடல் இடையே தடையாய்க் கிடக்கின்றதே; உரிமைத் தம்பியைத் தவிர என் நம்பிக்கு வேறு துணை யாரும் இல்லையே! என இன்னவாறு இன்னலுழந்து இரங்கி யிருந்தேன். இன்று உன்னைக் கண்டேன்; என் கவலைகள் எல்லாம் அடியோடு குடிவாங்கிப் போயின. பிரமாண்டங்களுக்கு அப்பால் கொண்டு போய் என்னைச் சிறை வைத்திருந்தாலும் உன்னைத் துணையாப் பெற்ற என் நாயகன் எனை எளிதே மீட்டுக் கொள்ளுவான். நான் உயிர் பிழைத்தேன்; பழி நீங்கிப்புகழ் ஓங்கினேன்; ஐயா! துன்பம் தாங்க மாட்டாமல் நெஞ்சம் உடைந்து கொஞ்ச நேரத்திற்கு முன் செத்துப் போகப் பார்த்தேனே! தற்கொலையாய் நான் இறந்திருந்தால் என்கதி என்னும்? என் நாயகனைக் கண்டு மகிழ்ந்து அந்தப் புண்ணிய மூர்த்தியோடு கூடிவாழும் படியான பெரிய பாக்கியத்தை எனக்கு நீ அருளியிருக்கிறாய்! புகழும் புண்ணியமும் நல்கி உயிரை உதவியுள்ள உன்னை நான் என்ன சொல்லிப் புகழுவேன்? என இங்ஙனம் உவகை மீதூர்ந்து கூறி உள்ளம் பூரித்து நின்றாள்.

தன் நாயகனுக்கு உரிமைத் துணையாய் வாய்த்துள்ள அரு மையாளனைச் சீதை கருதி மகிழ்ந்துள்ள காட்சிகளை உரைகளில் கண்டு உவகை மீக்கூர்கின்றோம். புனிதமான மெல்லிய உள்ளம் இனிது உருகி உரிமை பாராட்டியிருப்பது தனி மகிமையாய்த் தழைத்து நிற்கிறது.

இராமன் புகழை ஊழி காலமும் அழியாமல் நிலை நிறுத்து வதற்கு இவன் ஒருவனே போதும் எனப் பெருமகிழ்ச்சி கூர்ந்து அருமை மாட்சிகளை அன்பு மீதூர்ந்து கூறினாள்.

பாழி நெடுந்தோள் வீரா!

என்று அனுமானை ஆர்வத்தோடு கண்டு விளித்தது அவனது அற்புத நிலைகளை மீண்டு மீண்டு கண்டு வியப்பு மீதூர்ந்து வந்தது. சிலர் கலைஞானியாயிருப்பர்; போர் முறைகளில் யாதும் இயலாத வராய் அயல் ஒதுங்கி நிற்பர். பேச்சிலும் செயலிலும் குணத்தி லும் அறிவிலும் பண்பிலும் அன்பிலும் யாதும் எல்லை காண முடியாதபடி உன்னத நிலையில் உயர்ந்து நிற்கிறான். கருமவீரன், தருமவீரன், கல்வி வீரன், சொல் வீரன், தான வீரன், தயை வீரன், மான வீரன், ஞான வீரன், போர் வீரன் என இவ்வாறு எல்லாவகையிலும் பேர் பெற்று நிற்றலை வீரா! என்னும் ஒரு மொழியால் நுணுகியுணர்ந்து பெரிதும் உவந்து கொள்ளுகின்றாள்.

அரிய ஒரு திவ்விய புருடன் எம்பெருமானுக்கு உரிய துணை யாய்க் கிடைத்துள்ளான் என உள்ளம் பூரித்து உவகை பரித்து உறுதி யூக்கங்கள் பெருகியுள்ளன.

என்னே நிருதர் என்னுவார்?
இவனே எங்கோன் துணை என்றால்!

அனுமான் துணை கிடைத்துள்ளமையால் அரக்கர் குலத்தை இராமன் எளிதே அழித்து விடுவான் என்று பிராட்டி உள்ளம் களித்துள்ளமையை இது உணர்த்தியுள்ளது.

அஞ்சா நெஞ்சமும் அடலாண்மையும் வஞ்சக வினைகளும் வலிய போர் முறைகளும் நன்கு பழகி எங்கும் வெற்றியாளராய் விறுகொண்டு வாழ்ந்து வருபவர் ஆதலால் அரக்கர்களைக் குறித்து இடையிடையே சீதை கரிது அஞ்சியிருந்தாள். அந்த அச்சம் அனுமானைக் கண்டபின் இன்று அடியோடு நீங்கியது.

இராம விரோதியான இராவணனும், அவனுடைய குலமும் இனி உலகில் இராவண்ணம் செய்ய இவன் ஒருவனே போதும் என உறுதி பூண்டு ஊக்கமடைந்தாள். நெடிய சலக் கடலைக் கடந்து வந்தவன் கொடிய குலக் கடலையும் அடியோடு தொலைத்து விடுவான் எனக் குதூகலித்தது பகைத் துயர்களின் மிகைகளை வகையாய் விளக்கி நின்றது.

பொல்லாத இனம் பொன்றி மடியும் என்று நல்லாள் மனம் ஒன்றி உவந்தது. அல்லலுழந்து அழி துயர்களில் அழுந்தி இருந்தவள் ஆதலால் நல்ல ஆதரவைக் கண்டவுடன் உள்ளம் களித்தது. உவகை பொங்கி எழுந்தது. அம்மகிழ்ச்சி நிலைகள் ஓரளவு உரைகளில் வெளி வந்தன.

மாயச் சிறைநின்றும் இன்றே மீண்டேன்;
எங்கோன் பொலன் கழலும் பூண்டேன்.

சீதை கருதி மகிழ்ந்துள்ள உறுதிநிலைகள் இங்ஙனம் பெருகி வந்துள்ளன. அப்பொழுதே துயரக்கு விடுதலை கிடைத்து விட்டதாக [illegible] களித்துள்ளாள். சூரியனைக் கண்ட பொழுது இருள் ஒழிந்து போதல் போல் அநுமானைக் கண்டவுடனே துன்ப இருள் நீங்கி இன்பஒளி ஓங்கி இனியகாட்சிகள் பெருகி நின்றன.

சிறை மீண்டேன்; எங்கோன் கழல் பூண்டேன் என்ற இந்த வாசகம் அந்த உள்ளத்தின் ஆசைத் தேக்கத்தையும் ஏக்கத்தையும் அயலறியச் செய்தது. சிறைப்பட்ட நீர் அணை உடைந்தவுடன் அதி வேகமாய்க் கடலை அடைந்து கொள்ளுகிறது; அதுபோல் சிறையில் அகப்பட்டுள்ள சீதை தடை நீங்கியதும் குணக் கடலாகிய இராமனை அடைந்து கொள்ளலாம் என்று உள்ளம் விரைந்து நிற்கின்றாள். நதி நீர்க்குக் கடல்போல் இச் சதிக்கு இராமனே கதியாம்; கழல் என்றது, வீரக் கழல் புனைந்துள்ள அந்தத் திருவடியின் சீர்மையைக் கூர்மையாக உணர்ந்து கொள்ள வந்தது. பதியின் பால் கொண்டுள்ள பாசம் தெய்வ பத்தியாய்த் தேசு மிகுந்துள்ளது. உயர்ந்த குலக் காதல் உள்ளன்பு சுரந்து பெருந்தன்மை நிறைந்து திருந்திய பண்போடு சிறந்து திகழ்கிறது.

அன்பும் அறமும் எனச் சீதையும் இராமனும் பண்பும் பயனும் படிந்து இசையும் சுரந்துள்ளமையால் உலகிலுள்ள சதிபதிகளுக்கெல்லாம் தலைமை அதிபதிகளாய் நிலவியுள்ளனர்.

மீளும் முன்னமே மீண்டேன் என்றது உறுதியும் தெளிவும் தெரிய வந்தது. துயரில் ஆழ்ந்து உயிர் சோர்ந்திருந்தவள் உள்ளம் தெளிந்து பேரின்ப வெள்ளமாய்த் துள்ளியிருக்கிறாள். மாருதி வரவு ஆருயிர்க்கு அமிர்தமாய் அருள் புரிந்துள்ளமையால் அவலக் கவலைகள் எல்லாம் நீங்கி ஆனந்தம் ஓங்கியுள்ளது.

வேலா யுதன்தந்தை ஆரூரர் வீதி விடங்கர் வெற்பில்
கோலார் நறுந்தழைகைக்கொண்டுஎன் ஆருயிர் கொண்டிருந்தேன்
பாலாழி தந்த மலர்ச்சீதை அஞ்சனை பாலன் தந்த
மாலாழி கைக்கொண்டு மாலாழி கைவிட்ட வாறெனவே.

(திருவாரூர்க் கோவை)

இது பிரிவில் தேறியிருந்த ஒரு தலைவி கூறியது. அனுமான் தந்த கணையாழியைக் கண்டு சீதை கவலை தீர்ந்து தெளிந்தது போல் காதலன் உதவிய தழையைக் கொண்டு துயர் நீங்கி யிருந்தேன் எனத் தன் பாங்கியிடம் காதலி இவ்வாறு கூறி யுள்ளாள். மால் ஆழி இரண்டனுள் முன்னது இராமனது மோதிரத்தையும், பின்னது மயக்கமாகிய கடலையும் குறித்தது. துயரக் கடலைக் கடந்து சுகக் கடலில் திளைக்கும்படி தன் காதலன் மோதிரத்தைக் காட்டிச் சீதைக்கு அனுமான் ஆதரவு அருளியுள்ளமையைக் காதலர் உலகமும் இங்ஙனம் கருதிப் புகழ்ந்துள்ளது.

தன் இன்னுயிரை இனிது உதவிய புண்ணிய வீரனை அனுமானை இப் பெண்ணரசி பெரிதும் வியந்து புகழ்ந்து கூறவே அப் பெருந்தகை உள்ளம் நாணி உரிமையோடு வணங்கி நின்றான்.

## படைத் துணையை விளக்கியது.

தன்னைக் குறித்து உறுதி கொண்டு உவகை மண்டி நிற்றலைக் கண்டதும் அனுமான் மேலும் சானகிக்கு ஆறுதலும் தேறுதலும் கூறினான். "அம்மா! என்னைப் பெரிதாக நினைந்து புகழ்கிறீர்கள்; நான் மிகவும் சிறியவன்; என்னைக் காட்டிலும் எவ்வளவோ பெரியவர்கள் இருக்கிறார்கள். அந்தச் சேனைத் திரளில் நான் ஒரு சின்ன ஊழியன்; எம்பெருமானுடைய குறிப்பறிந்து காரியம் புரியும் வானர வீரர்களை நீங்கள் நேரே பார்த்தால் பேரானந்தம் அடைவீர்கள்; எண்ணரிய படைத் துணைகள் கிடைத்திருக்கின்றன" என்று அப்பெண்ணரசி எண்ணி மகிழும்படி கண்ணியமாக எடுத்துக் கூறினான்.

அண்ணற் பெரியோன் அடி வணங்கி
அறிய உரைப்பான் அருந்ததியே!
வண்ணக் கடலின் இடைக்கிடந்த
மணலிற் பலரால் வானரத்தின்
எண்ணற் கரிய படைத்தலைவர்
இராமற்கு அடியார்; யான் அவர்தம்
பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன்
ஏவக் கடவ பணி செய்வேன.

வெள்ளம் ஏழுபத்துளதால் வீரன் சேனை இவ்வேலைப்
பள்ளம் ஒருகை நீரள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ?
கள்ள அரக்கர் கடி இலங்கை காணாது ஒழிந்ததால் அன்றோ
உள்ள துணையும் உளதாவது; அறிந்த பின்னும் உளதாமோ?

பிராட்டி உள்ளம் தெளிந்து உவகையுறும்படி பலவகை நிலைகளையும் நளினமாக விளக்கி அனுமான் இனிது பேசி வருகிறான். உரைகள் எல்லாம் உறுதி நலங்களை உரிமையாக உணர்த்தி வருகின்றன. அதிமேதையினுடைய உள்ளக் குறிப்புகள் சொல்லின் வழியே சுவை சுரந்து துள்ளுகின்றன.

கடல்மணலினும் பலர் என்றது படைகளின் மிகுதி தெரிய

சேனைத் தலைவர்கள் யாவரும் இராமனுக்குக் குடி அடிமைகள் என்றது அவர்களுடைய அன்புரிமைகளையும் ஆதரவுகளையும் நன்கு தெரிய. அந்தக் கூட்டத்தில் நான் மிகவும் கடைப்பட்டவன் எனத் தன்னை இன்னவாறு மாருதி குறைத்துச் சொன்னது தேவி தேறுதலாய் ஆறுதல்டைய.

ஏவக் கடவ பணி செய்வேன்.

என்றது எவ்வளவு பணிமொழி! “எளியை பணியை மாத்திரம் செய்கிற சிறிய ஏவல்ஊழியன் நான்; ஏவாமலே குறிப்பறிந்து எம்பெருமானுக்கு அரிய காரியங்களை முடிக்க வல்ல பெரியோர்கள் பலர் இருக்கின்றனர். உள்ளவர்களில் கடையனான என்னைத் தொழிலில் ஊக்கி ஆண்டவன் அளி புரிந்துள்ளார்” எனப் பணிவும் பண்பும் எழில் செய்து திகழ இனிது மொழிந்தான். தன்னை இங்ஙனம் தாழ்த்திச் சொன்னது அன்னையின் உள்ளம் உவகை கொண்டு உரிமை கண்டு உயர்ந்து கொள்ள என்க

கள்ள அரக்கர் உளதாவது காணாது ஒழிந்ததால்.

இலங்கை இன்ன இடத்தில் இருக்கிறது என்று என் குல வீரர்களுக்குத் தெளிவாகத் தெரியாமையினாலேதான் இது வரையும் அரக்கர் குலம் உயிர் வாழ்ந்துள்ளது; தெரிந்திருந்தால் இதற்கு முன் அடியோடு அழிந்து போயிருக்கும்.

*அறிந்த பின்னும் உளதாமோ?*

என இனிது வினவியது நிலைமைகளை எதிர் நினைந்து தெளிய.

ஓகாரம் எதிர்மறையாய் உறுதியை உணர்த்தியது. இலங்கை உள்ள இடத்தை வானரர்கள் அறிந்தபொழுதே அது பாழாய் அழிந்தது என்று தெரிந்து கொள்ளுங்கள் எனத் தெளிவுறுத்தினான். நான் மீண்டு போய்ச் சொல்ல வேண்டியதுதான் தாமதம்; அரக்கர் குலம் மாண்டு தொலைந்தது என்று பிராட்டியின் மனம் தெளிய இந்த ஆண்டகை இங்ஙனம் ஆதரவு கூறினான்

தீயவர்களுடைய அழிவு நிலையில் இத் தூயவன் உள்ளம் துடித்து நிற்றலை உரை ஒலிகளால் நுனித்து உணர்ந்து கொள்கிறோம். சீதையைத் தேடிக் கண்டு செய்திகளைச் சொல்ல வந்தவன் உய்தி நிலைகள் பலவும் கூறுகின்றான். அரக்கர் குலத்தைக் கருவறுக்க இராமன் அவதரித்து வந்துள்ளது போல அனுமானும் உதவியாய் வந்திருக்கலால் அந்த இனத்தின் மீது தன்னை அறியாமலே சினமும் சீற்றமும் பெருகி எழுந்து பாய்ந்து நிற்கின்றன. பெரிய காரியங்களை முடிக்க வந்திருக்கலால் அந்த வாசனைகள் உள்ளத்தில் பதிந்து உரைகள் மூலம் வெளியே ஒளி வீசி வருகின்றன. கருமசாரங்கள் மருமங்களாயுள்ளன

எந்தக் காரியத்தை முடிக்க வந்திருக்கிறானோ அந்தக் காரியத்திலேயே எப்பொழுதும் ஒருவனுடைய சிந்தனை ஓடிக் கொண்டிருப்பது மானச மருமமாய் மருவியுள்ளது. பெரிய உள்ளங்கள் பெரிய காரியங்களையே உன்னித் துள்ளுகின்றன.

"From a great heart secret magnetisms flow incessantly to draw great events." (Emerson)

'பெரிய இருதயம் அரிய காரியங்களை முடிக்க அதிரகசியமாய் ஓயாமல் ஓடிக் கொண்டிருக்கிறது'' என்னும் இது இங்கே நாடி அறிய வுரியது. கருமநாட்டம் தரும ஈட்டமாயுள்ளது.

தன் உள்ளத்தில் பதிந்துள்ள எண்ணங்கள் அனுமானுடைய வாய்மொழிகளால் இங்கே வையம் காண வந்துள்ளன.

பிராட்டியின் உள்ளத்தைத் தேற்றி உறுதியை ஊட்ட உரையாடி வந்தாலும் தன்னுடைய உள்ளக் கிடக்கைகள் துள்ளி முன் வருகின்றன. எண்ணங்கள் எல்லாம் தருமநலம் தழுவிக் கருமநிலைகளாகக் கதுவி மிளிர்கின்றன.

கொடியவர்கள் அழிந்துபடுவர்; பகை இலங்கை பாழாம்; சிறை நீங்கி நீங்கள் இறைவனை விரைந்து அடைந்து கொள்ளலாம் என்னும் குறிப்போடு உரையாடி வந்தவன் முடிவில் வேறு ஒன்று துணிந்தான்; உள்ளம் துணிந்ததை உரிமையோடு சொல்லினன்.

## கொண்டு போகக் குறித்தது.

தூதனாய்க் கண்டு போக வந்தவன் கண்டபின் கொண்டு போக எண்ணினான். அவலச் சிறையில கவலையோடு பேதுறும் பிராட்டி இருப்பதை அநுமான் சகிக்கவில்லை. எப்படியாவது கையோடு கொண்டு போய்விட வேண்டும் என்று கருதித் துணிந்தான். தன் கருத்தை உரைத்தான். தான் கருதிய உறுதியைச் சீதையிடம் இம்மேதை கூறிய பொழுது வீர சீர்மைகள் வீறு கொண்டு விரிந்துள்ளன. பெண்ணரசியாரும் கலங்காமல் உள்ளம் தேறி விரைந்து இசைந்தருள உரைகள் விளைந்து வந்தன.

பொன்திணி பொலன்கொடி! எனமென்மயிர் பொருந்தித்
துன்றிய புயத்து இனிதிருக்க துயர்விட்டாய்
இன்துயில் விளக்கஓர் இமைப்பின இறைவைகும்
குன்றிடை யுனைக்கொடு குதிப்பென் இடைகொள்ளேன்.

அறிந்திடை அரக்கர் தொடர்வார்கள் உளராமேல்
முறிந்துதிர நூறி எதிர் என்சினம் முடிப்பேன்;
நெறிந்த குழல நின்னிலைமை கண்டு நெடியோன்பால்
வெறுங்கை பெயரேன் ஒருவராலும் விளியாதேன். (2)

இலங்கையொடும் ஏகுதிகொல் என்னினும் இடந்துஎன்
வலங்கொள்ஒரு கைத்தலையில் வைத்துஎதிர் தடுப்பான்
விலங்கினரை நூறி வரிவெஞ்சிலையினோர் தம
பொலன்கொள்கழல் தாழ்குவென் இதுஅன்ன பொருளன்றால்.

அருந்ததி உரைத்தி அழகற்கு அருகு சென்று உன்
மருந்தனைய தேவிநெடு வஞ்சர்சிறை வைப்பில்
பெருந்துயரினோடுமொரு வீடுபெறல் இல்லாது
இருந்தனள் எனப்பகரின் என் அடிமை எனாம்? (4)

இருக்குமதில் சூழகடி இலங்கையை இமைப்பின்
உருக்கி எரியா இகலரக்கரையும் ஒன்று
முருக்கி நிருதக்குலம முடித்து வினைமுற்றிப்
பொருக்க அகலகென்னினும அது இன்று புரிகின்றேன்,

இந்துநுதல் நின்னொடிவண் எய்தி இகல் வீரன்
சிந்தையுறு வெந்துயர் தவிர்ந்து தெளிவோடும்
அந்தமில அரக்கர் குலம அற்றவிய நூறி
நந்தவில புவிக்கணிடா் பிறகளைதல் நன்றால். (6)

வேறினி விளம்பவுள தன்று விதியாலிப்
பேறுபெற என்கண அருள் தந்தருளு பின்போய்
ஆறுதுயர்; அஞ்சொலிள வஞ்சி, அடியன் தோள்
ஏறுகடிது என்று தொழுது இன்னடி பணிந்தான். (7)

(சூளாமணிப்படலம், 3-10)

வீர மாருதியினுடைய சீர்மை நீர்மைகளையும் ஆர்வ நிலைகளையும் இங்கே விழைந்து நோக்கி வியந்து நிற்கின்றோம். சிறையிலிருந்து சீதையை விரைவில் கொண்டுபோய் இராமனிடம் சேர்த்துவிட வேண்டும் என்று இவ் வீரன் வீறு கொண்டுள்ளமையை உரைகள் தேசு காட்டியுள்ளன. விரைந்து இசைந்தருளும்படி பேரன்போடு பிராட்டியை வேண்டியிருக்கிறான். உள்ளத் துணிவுகளைத் தெள்ளத் தெளிய விளக்கி உறுதியூக்கங்களை விளைத்திருப்பது கருதியுணர வுரியது.

"அம்மா! அடிமை ஒரு வேண்டுகோள் புரிகிறேன்; அருள் புரிந்து இசையுங்கள்: தங்களை எடுத்துக் கொண்டுபோய் எம்பெருமானிடம் சேர்க்க விரும்பியுளேன்; நீங்கள் யாதும் கவலாமல் என் பிடர் மீதமர்ந்து சிறிது பொழுது கண்மூடியிருங்கள்; மதங்க மலையில் இராமபிரானிடம் சேர்த்து விடுகிறேன்; இடையே அரக்கர் திரள்கள் மூண்டு எதிர்க்குமாயின காற்றில் எதிர்ப்பட்ட செத்தைகள் போல அத்தனை பேரும் செத்துக் கடலில் உதிர்ந்து படுவர்; என் உடலில் யாதொரு ஊறும் நேராது; இலங்கையை அடியோடு பெயர்த்து எடுத்துக் கொண்டுபோ என்றாலும் அவ்வாறே செய்கிறேன்; இராட்சச சக்கரவர்த்தியான இராவணன் முதல் அரக்கர் குலத்தையெல்லாம் ஒருங்கே கொன்று தொலைத்து நகரைப் பெயர்த்துக் கடலில் எறிந்து விட்டு அப்புறம செல் எனினும அப்படியே ஆற்றுகிறேன்; அன்னையே!

டங்களை இன்னமும் இலங்குக தனையவிட்டு நான் வெறுங் கையோடு போய் அப் பெருந்தகையிடம் செய்திகளை மட்டும் சொல்லி நிற்பது மிகவும் சிறுமையாம்; நீங்கள் அந்த வீர மூர்த்தியை அடைந்தபின் மீண்டு படை எடுத்து வந்து இலங்கையை எளிதே அழித்து விடலாம்; எப்படியும் இப்பொழுது போய் விடுவதே நல்லது; அடியேன் தோளில் எழுந்தருளி யிருங்கள்'' என இவ்வாறு கூறித் தலை வணங்கி நின்றான்.

அனுமானுடைய அன்புரிமை, அறிவு நலம், ஆற்றல் நிலை, கரும வீரம் முதலியன இங்கே அதிசய நிலையில் பெருகி மிளிர்கின்றன. எவரும் கருதி மருளத் தக்க அற்புத காரியங்களை அதி சலபமாகச் செய்து முடிக்க இவ் வீரன் துடித்து நிற்பது விசித்திர வியப்பாய் விரிந்து நிற்கிறது. ஆண்டவனுடைய தேவியை மீண்டு கையோடு கொண்டு போய்விட வேண்டும் என்னும் ஆவல் இவன் உள்ளத்தில் நீண்டுள்ளமையால் அதற்கு வேண்டிய வகையில் விநய மொழிகள் விளைந்து வந்தன.

இன் துயில் விளக்கஓர் இமைப்பின் இறைவைகும்
குன்றிடை உனைக்கொடு குதிப்பென்; இடைகொள்ளேன்.

சானகியை நோக்கி மாருதி இங்ஙனம் கூறியிருக்கிறான்.

இறை வைகும் குன்று என்றது இராமபிரான் தங்கியிருக்கிற மதங்க மலையை. என் தோளில் அமர்ந்து கொஞ்ச நேரம் சுகமாய்த் தூங்கிக் கொண்டிருங்கள் என்று வேண்டி யிருக்கிறான். மென் மயிர் பொருந்தி என்றது மெல்லிய பஞ்சு மெத்தை போல் மிருதுவாய் இருக்கும் என்பதைத் தெரியப் படுத்தினான். கடலைத் தாவி ஆகாய மார்க்கமாய் விரைந்து செல்லும்பொழுது வேகத்தைக் கண்டு மனம் கலங்காமல் இருக்கும் பொருட்டுக் கண்ணை மூடிக் கொள்ள வேண்டினான்; கண் மூடித் திறக்கு முன் கொண்டு போய்ச் சேர்த்து விடுவேன் என்பான் இமைப்பின் குதிப்பேன் என்றான். கதி வேகம் மதி வேகம் கடந்தது.

ஒரு மணிக்கு ஆயிர மைல் வேகத்தில் செல்லத் தக்க ஆகாய விமானமும் மாருதி எதிரே மானமிழந்து இழிந்து நிற்கும் என்பதை வான வூர்தியாளர் எவரும் கண்டு நாணம் மீதூர்ந்து காண்பர். இந்த யோக சித்தனுடைய வேக சக்திகள் வெறும் யூகங்களால் அளந்து காண முடியா. திவ்விய மகிமைகள் யாவும் எவ்

வழியும் இவனிடம் செவ்வையாய் விளங்குகின்றன. பிரமசிருட்டி போலவே தான் கருதியபடியெல்லாம் இக் கவி சிருட்டித்துக் காட்டுகிறான். இந்தக் கரும வீரனுடைய அற்புத ஆற்றல்களை மானச வுலகமும் மனித வுலகமும் வியந்து போற்றி வருகின்றன.

நூறு யோசனை தூரத்தையும் கண்ணை மூடித் திறக்கு முன்னரே சானகியைச் சுமந்து கொண்டு வான வீதி வழியே கடந்து போய் விடுவதாக இவன் மொழிந்திருப்பது வியந்து சிந்திக்கத் தக்கது. ஆத்தும சத்தியின் அற்புத நிலைகள் அளவிடலரியன. எல்லை காணமுடியாத அதிசய ஆற்றல்கள் கதி வேகங்களோடு கலந்து விதி முறைகளாய் இவனிடம் விளங்கி நிற்கின்றன.

ஏதோ இந்திர சாலமான மாய வேலை செய்வது போல் மாருதி மொழிகள் இங்கே வெளி வந்துள்ளன. அரிய மகானுடைய உரைகளை உரிய பொருள்களோடு ஊகித்து உணர வேண்டும். வடிவில் வானரன் ஆயினும் வானவர் எவரினும் மேலான ஞான சீலங்களை மருவியுள்ளான். பஞ்ச பூதங்களில் ஒன்றான வாயுவின் அமிசம் ஆதலால் வான வீதியில் வாயு வேகமாய்ப் பாய்ந்து போகும் நீர்மை இம் மான வீரனுக்கு இயல்பாக வாய்ந்திருக்கிறது. பிறவி வாசனை பேச்சில் பெருகி வீசுகின்றது.

ககன மார்க்கமாய்த் தான் தாவிப் போகும் பொழுது இடையே எதிர்ந்து அரக்கர்கள் தடுத்தால் அவர் நீறுபட்டு அழிவர் என்று கூறியிருப்பதில் வீர ஒளி வீறு கொண்டுள்ளது.

அரக்கர்களுடைய அடலாண்மைகளையும் ஆற்றல்களையும் இவன் யாதும் மதிக்கவே யில்லை. அவர்களைத் திரணமாகவே கருதியிருக்கிறான். யாண்டும் கலங்காத நெஞ்சனாய் இவன் துலங்கி நிற்கிறான். அரக்கர் குலங்களோடு இலங்கை நகர முழுவதையும் அகழ்ந்தெடுத்துக் கொண்டு போய் இராமபிரான் முன்னிலையில் வைப்பேன் என்று தன்னிலையை விளக்கினான்.

அன்னை! இது பொருள் அன்று.

மேலே குறித்த காரியங்களைச் செய்வது எனக்கு ஒரு பொருள் அன்று; மிகவும் எளிதாம் எனத் தனது அதிசய ஆற்றலைத் தேவி தெரிந்து கொள்ள இங்ஙனம் மொழிந்தருளினான்.

பெற்ற தாயிடம் பிள்ளை பேசுவது போல் உள்ளம் உருகிப் பேசி வருகின்றான் ஆதலால் அன்னை! என ஆர்வ மீதூர்ந்து மரி

யாதையோடு விளித்தான். தன்னை நம்பித் தான் சொன்னபடி இசைந்தருளவேண்டும் என வணங்கி வழிமொழி கூறிவருகிறான்.

ஆண்டவன் தேவியை மீண்டு கொண்டு போய் விடுவதே அடிமைக்கு அழகாம் என முடிவு செய்து இவன் நெடிது வணங்கிக் கடிது விரைந்தான். தாயின் முன்னிய கன்று அனையான் என இவ் வென்றி வீரனைக் கவி இங்கே குறித்திருப்பது சுவை சுரந்து மிளிர்கின்றது. பண்புகள் இன்ப நீர்மைகளாய் இலங்குகின்றன

இவனது அன்புரிமைகளையும் அதிசய ஆற்றல்களையும் வியந்து மகிழ்ந்த சீதை விநயமாய் நயந்து மொழிந்தாள். பேசியுள்ள மொழிகள் உள்ளத்தின் வாசனைகளாய் வெளி வந்துள்ளன.

அரியதன்று நின் ஆற்றலுக்கு ஏற்றதே
தெரிய எண்ணினை செய்வதும் செய்தியே
உரிய தன்றென ஓர்கின்றது உண்டதென்
பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால். (1)

வேலையின் இடையே வந்து வெய்யவர்
கோவி வெஞ்சரம் நின்னொடும் கோத்தபோது
ஆலம் அன்னவர்க்கு அல்லை ஏற்கல்லையால்
சாலவும் தடுமாறும் தனிமையோய்! (2)

அன்றியும் பிறிதுள்ள தொன்று ஆரியன்
வென்றி வெஞ்சிலை மாசுனும் வேறினி
நன்றி என்பதம் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ? (3)

கொண்ட போரின் நும் கொற்றவன் வில்தொழில்
அண்டர் ஏவரும் நோக்கஎன் ஆக்கையைக்
கண்ட போரரக்கன் விழி காகங்கள்
உண்ட போதன்றி யானுளென் ஆவெனோ. (4)

வெற்றி நாணுடை வில்லியர் வில்தொழில்
முற்ற நாணில் அரக்கியர் மூக்கொடும்
அற்ற நாணினராயின போதன்றிப்
பெற்ற நாணமும் பெற்றியது ஆகுமோ? (5)

பொற்பிறங்கல் இலங்கை பொருந்தலர்
எற்பு மால்வரை யாகில தேஎனின்
இற்பிறப்பும் ஒழுக்கும் இழுக்கமில்
கற்பும் யான்பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன். (6)

அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும என்
சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன் (7)

வேறும் உண்டுரை கேளது மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனி யல்லால் இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் ஆண் எனக்
கூறும் இவ் வுருத் தீண்டுதல் கூடுமோ? (8)

தீண்டு வானெனின் இத்தனை சேண்பகல்
ஈண்டுமோ உயிர் மெய்யின் இமைப்பின்முன்
மாண்டு தீர்வன் எனறே நிலம் வன்மையால்
கீண்டு கொண்டெ ழுந்தேகினன் கீழ்மையான். (9)

ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்து கொண்டு
ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய
நீண்ட சாலை யொடுநிலை நின்றது
காண்டி ஐயநின் மெய்யுணர் கண்களால். (10)

தீர்விலேன் இது ஒரு பகலும் சிலை
வீரன் மேனியை மானுமிவ் வீங்கு நீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவென்
சோரும் ஆருயிர் காக்கும் துணிவினால். (11)

ஆதலான் அது காரியம் அன்று ஐய!
வேத நாயகன் பாலினி மீண்டனை
போதல் காரியம் என்றனள் பூவை; அக்
கோதி லானும் இனையன கூறினான். (12)

(சூளாமணிப் படலம்)

இந்தப் பாசுரங்களை ஊன்றி நோக்குகின்றவர் பல உண்மைகளை ஓர்ந்து கொள்ளுகின்றனர். தன்னை எடுத்துக் கொண்டு போவதாக உரிமையுடன் துணிந்து நின்ற அநுமானுக்கு இனிய பதில் மொழிகளைப் பிராட்டி இங்கே இசைத்திருக்கிறாள்.

## பிராட்டி பேசியது.

“அநும! நீ எண்ணியபடியே எதையும் செய்ய வல்லவன்; உன்னுடைய ஆற்றலுக்குத் தகுந்தவாறே கருதியுள்ளாய்! என்னைக் கொண்டு போய் எமபெருமானிடம் விரைந்து சேர்த்து விட

வேண்டும் என்று மூண்டு நிற்கின்ற உனது ஆண்டகைமையும், அன்புரிமையும் எனக்குப் பேரின்பம் தந்துள்ளன; சொல்லியதை எளிதாக செய்து விடுவாய் என்று நான் தெளிவாக அறிந்துள்ளேன்; ஆயினும் என் பெண்புத்தியினால் உன்னுடைய புத்தி போதனைகளுக்கு உடனே இசையாமல் சில தடைகளைக் கூற நேர்ந்தேன்: என்னை எடுத்துச் செல்லுங்கால் இடையே அரக்கர்கள் எதிர்ந்து கடுத்துத் தடுப்பர்; கடலிடையே நின்று கொடிய அவர்களோடு நீ அடுபோர் செய்யநேரும்; அப்பொழுது என்னைச் சுமந்து கொண்டு இன்னல் பல அடைவாய்; இதனை ஈண்டு நீ உன்னி உணர வேண்டும். அதுவும் தவிர வேறு ஒரு தடையும் உளது; மிகவும் கருதியுணர வுரியது. என்னை நீ இப்பொழுது இவ்வகையில் கொண்டு போய் விடுவாயாயின் எம் பெருமானுடைய வீரப் பிரதாபத்துக்குப் பெரிய மாசு ஆம். அந்தக் கோதண்ட வீரன் வந்து பகைவரை வென்று என்னை மீட்டியருளுவதே மிகவும் மேன்மையாம். சுத்த வீரனுடைய உத்தம பத்தினிக்கு ஊறு செய்தவர் நீறுபட்டழிந்தார் என்னும் பேரும் கீர்த்தியும் அப்பெருமான் பெறும்படி நீ பெருமை செய்தருள வேண்டும்; கள்ளத்தனமாய் வந்து இராவணன் களவு செய்தது போல் நீயும் செய்ய நேர்வது எள்ளத்தக்கதாம். என்னை இச்சித்து நோக்கிய அந்த நீசனுடைய கண்களைக் காகங்கள் கொத்திப் பிடுங்க வேண்டும்; இல்லையானால் நான் நல்ல பத்தினியாவேனா? எனக்கு அல்லல் புரிந்த அரக்கர் குலம் குடியோடு அழிந்து அடியோடு நாசம் அடையும்படி எனது ஈசன் வில் ஓசை புரிந்த போதுதான் மாசு நீங்கி நான் தேசு அடைந்தவளாவேன்; விசய கோதண்டன் நேரே வந்து சீரோடு செய்ய வுரியதை நீ மாறாகச் செய்ய நினைவது மாண்பாகாது அந்த உத்தம வீரனுடைய உரிமைக்குப் பெருமையாய் எவ்வழியும் ஓர்ந்து ஒழுகி வருவதே தேர்ந்த கடமையாம். என்னுடைய ஒரு சொல்லினால் உலகங்களை எல்லாம் ஒருங்கே சுட்டு எரித்து விடுவேன்; அவ்வாறு செய்யாமல் ஏன் பொறுத்திருக்கின்றேன் தெரியுமா? அவ் வில் வீரனுடைய வெற்றிக்கு ஒரு குற்றம் ஆகுமே! என்று உற்றுணர்ந்து ஒடுங்கியுள்ளேன்; இறுதியாக ஒன்று நீ ஈண்டு அறிந்து கொள்ள வேண்டும். அந்த அஞ்சன வண்ணன் திருமேனியைத் தவிர வேறு ஆடவர் எவரையும் யாண்டும் எவ்வகையிலும் யான் தீண்டுதல் கூடாது. யாரும்

நீண்ட முடியாதென்று தெரிந்தே குடிசையோடு பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்து இராவணன் ஈண்டு வைத்திருக்கிறான் மனம்இசையாத மங்கையரைத்தொட்டால் தன் தலை வெடித்துப் போம் எனப் பிரமானினுடைய சாபம் ஒன்று உள்ளமையான் அக் காம வெறியன் கருதியடங்கியுள்ளான். அந்தப் பிரம சாபம் இருப்பதைத் திரிசடை உரிமையோடு என்னிடம் உரைத்தருளினாள். விதி கோலிச் செய்துள்ள அவ் வேலியே என் உயிரை இது வரை பரிபாலித்து வைத்துள்ளது. எனது அருமை நாயகன் எப்படியும் வந்து என்னை மீட்டிக் கொண்டு போய் விடுவார் என்னும் உறுதியினால் ஊழ்வினையை நினைந்து உயிர் வாழ்ந்து வருகிறேன், கோதாவரி நதி தீரத்தில் இளவல் கட்டிய அதே பன்னசாலை இதோ இருக்கிறது; பார்த்தருள்; இந்த இடத்தை விட்டு நான் எங்கும் போவதில்லை; சில சமயங்களில் அதோ உள்ள அந்தத் தாமரைத் தடாகத்திற்கு நீர் பருகப் போவேன்; என் உயிர் வாழ்வு இது; ஆவித் துணையைக் காண ஆவி அலமந்துள்ளது; பாவியேன் என்று காண்பேனோ? கோசலையீன்ற அக் குலக் கொழுந்தைக் கண்டபொழுதுதான் ஈசன் அருளை நான் எய்தினவளாவேன்; மாருதி! ஈண்டு நின்று மீண்டு போய் ஆண்டவனைக் கண்டு யாவும் சொல்லி வேண்டியதை விரைந்து செய்தருள்" என உய்தி நாடிச் சீதை இங்ஙனம் உரையாடியுள்ளாள்.

இக் குல மகளுடைய உள்ளக் கிடக்கைகள் பல ஈண்டு வெளி வந்துள்ளன. மகா மேதையாகிய அனுமான் குறித்த வேண்டுகோளை அதி விநயமாக மறுத்து மதி நலம் கனியப் பேசியிருப்பது பேச்சுத் திறத்தைக் காட்சிப் படுத்தியுள்ளது.

பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மை.

எனப் பணிவும் பண்பும் கனியப் பேச்சைத் தொடங்கியிருக்கிறாள். பெண்மை இயல்பை நுண்மையாக நோக்கிக் காணும் படி உண்மை நிலையை உணர்த்தியுள்ளாள்.

சிறந்த அறிவு நிறைந்திருந்தாலும் யாதும அறியாதவராய் அடங்கியிருப்பது மெல்லியலாரின் நல்லியல்பாயுள்ளது.

"பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்."

எனத் தன் இனத்தவரைக் குறித்து ஔவையார் இவ்வாறு செவ்வையாகச் சொல்லியிருக்கிறார். சபலமுடையவர் ஆதலால்

துணிவும் துடுக்குமின்றி அமைதியுடன் அபலைகளாய் உள்ளனர். பெண்மையும் பேதைமையும் பெருறவாய்ப் பெருகியிருக்கின்றன.

பேதைமை பெரிது; மதி சிறிது; எனத் தன்னுடைய பெண்மை நீர்மையை அலங்கரித்துச் சொல்லியுள்ளதை உளம் களித்து நோக்குகின்றோம். சின்மதி என்றது மூன் மதியை எண்ணி வந்தது. மாயமானை மதித்து மதி மோசம் போனமையால் தன் மதியை இன்னவாறு தனக்குள்ளேயே உன்னி உளைந்திருக்கிறாள். அவ் வுண்மை உரைவழியே வெளி தெரிய வந்தது.

பெரிய மதிமான் ஆன அனுமானது உரையைத் துணிந்து மறுக்காமல் இதமாய் எதிர் பேசுகின்றாள் ஆதலால் உரைகள் இவ்வாறு பதமாய் வந்துள்ளன. பேச்சில் பெருஞ்சமர்த்தி என்பதை இடங்கள்தோறும் உணர்ந்து வருகிறோம். அரிய பண்பாடுகளை உரைகள் கண்காணச் செய்கின்றன.

தன் நாயகனைப் பிரிந்து பரிதாபமாய்ப் பரிதவித்திருக்கின்றாள்; அவனை எப்பொழுது காண்போம்? என்று இரவும் பகலும் ஏங்கித் தவித்துள்ளாள். இந்த நிலையில் உள்ளவள் அனுமான் எடுத்துக் கொண்டு போவதாகச் சொன்னவுடனே உள்ளம் களித்து உவந்து துள்ளியிருக்க வேண்டும். அங்ஙனம் இசைந்து கொள்ளாமல் எதிர் மறுத்திருப்பது அதி வியப்பாயுள்ளது.

தன்னை ஆகாய மார்க்கமாய் அனுமான் எடுத்துச் செல்லும் பொழுது இடையே கடல் நடுவே ஏதேனும் ஆபத்து நேருமோ? என்று சீதை அஞ்சியிருக்கலாம்; அவ்வாறு அச்சம் இருப்பதாக யாதும் தெரியவில்லை; அனுமானுடைய ஆற்றலிலும் பாதுகாப்பிலும் பூரணமான நம்பிக்கையுள்ளது; இருந்தும், செல்ல மறுத்தது, அந்த உள்ளத்தின் சீர்மை நீர்மைகளைத் தெளிவுபடுத்தியது.

ஆரியன் வென்றி வெஞ்சிலை மாசுணும்.

தன்னை எடுத்துச் செல்வதால் விளையும் குற்றங்களை அனுமானுக்குப் படிப்படியாய் இப்படி எடுத்துச் சொல்லி வருகிறாள். அனுமான் சொல்லியபடி இசைந்தால் இராமனுடைய வில்லுக்கு வேலையில்லாமல் போய் விடும் என்று சீதை கருதி யிருக்கிறாள்.

வென்றி வெம் சிலை என்றது கோதண்டத்தின் வெற்றி நிலையை உய்த்துணர வந்தது. தனக்கு அல்லல் இழைத்துள்ளவன்

குலத்தை அடியோடு அழித்தொழிக்க வல்லது என உறுதியாக முடிவு செய்துள்ளாள். அந்த உள்ளக் கருத்து வாக்கத்தை விளைத்துள்ளது.

தன் நாயகன் நேரில் வந்து பகைவனைப் போரில் வென்று அகன்பின் தன்னை மீட்டிக் கொண்டு போவதே மேன்மை என்று கருதியிருத்தலால் பாட்டியின் பான்மையை இங்கே காட்டி அருளினாள்.

உரிய மனைவியை உற்ற கணவன் உரிமையுடன் மீட்டுவதே மீட்சி என்று உறுதி செய்துள்ளமையைப் பொருதியாக வுணர்த்தினாள். மானமும் மரியாதையும் வீரமும் ஞானமும் விரவி மிளிர்கின்றன. யாண்டும் நேர்மையாக நடந்து கொள்வதே சீர்மையாம் எனப் போதித்திருக்கிறாள்.

நன்றி என்பதும் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ?

அனுமான் செய்யக் கருதியது மிகவும் தவறு என்பதை இவ்வாறு அழுத்தமாகக் குறித்தாள். தீயவனான இராவணன் கள்ளமாய்த் தன்னைக் கவர்ந்து வந்தது போல் நீயும் எண்ணியது எள்ளலான பெரிய இழிவு அல்லவா? எனப் பழி நிலையை விழி தெரிய விளக்கினாள்.

வஞ்சித்த நாய் என இராவணனைச் சுட்டிச் சொல்லியிருப்பது அவன் மேல் உள்ள வெறுப்பையும் சினத்தையும் வெளிப்படுத்தியுள்ளது. நாய்கள் எனப் பன்மையில் குறித்தது அந்தத் திருட்டுத் தொழிலுக்குத் துணையாய் நின்ற மாரீசனையும் தழுவி வந்தது.

சோற்றுப் பானையை நாய் தூக்கிப் போனது என்பது இந்நாட்டில் வழங்கி வரும் பழமொழி. ஒருவனுக்கு நியமித்திருந்த பருவ மங்கையை அயலே ஒருவன் களவாய்க் கவர்ந்து போன தூர்த்தத்தனத்தைக் குறித்து இவ் வார்த்தை வந்துள்ளது. இந்த முதுமொழியை நினைந்து வந்தது போல் இது இங்கே நிலவியது.

கள்ளநாய் செய்த வேலையை உள்ளம் தூய நீயும் செய்யலாமா? என நிலைமையை நினைவுறுத்தி யருளினாள்.

நீயும் என்றதில் உம்மை அனுமானது தூய்மையையும் மேன்மையையும் துலக்கி நின்றது. நேர்மையான பரிசுத்த வீரன் கீழ்மையான வழியில் இழியலாகாது என மொழிகள் தெளிவுறுத்தியுள்ளன. உள்ளக் குறிப்புகள் உயர் நிலையில் ஒளிர்கின்றன.

தன் நாயகனுடைய வீர மீட்சியையே இத் தீரநாயகி கருதியிருக்கிறாள். இராமத் துரோகியாய்த் தனக்கு அல்லல் இழைத்துள்ள இராவணன் மீது எல்லை மீறிய சினமும் சீற்றமும் இக் குலமகள் உள்ளத்தில் குடி கொண்டுள்ளன. தன்னை இச்சித்து நோக்கிய அரக்கனுடைய கண்களைக் காகங்கள் கொத்தித் தின்ன வேண்டும் என்று குறித்திருத்தலால் அந்த உள்ளத்தின் கொதிப்பு நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம்.

இராவணனோடு அமையாமல் அவன் குலத்தவர் எல்லார் மீதும் கொதிப்பு மூண்டுள்ளது. ''அரக்கிகளுடைய தாலிகள் யாவும் அறுபட்டு அமங்கலிகளாய் அவர் அழுது புரண்டபொழுது தான் நான் விழுமிய பெண்மைக் குடியில் உண்மையாகப் பிறந்தவளாவேன்'' என வீறோடு சபதம் செய்துள்ளமையால் நெஞ்சக் கொதிப்புகள் நேரே தெரிய வந்தன.

''பொன் மயமான அழகிய இந்த இலங்கை மா நகரம் முழுவதும் இழவொலிகள் மண்டி யாண்டும் பிண மலைகள் குவிந்துபடவில்லையானால் குணமுடைய குல மகளாய் நான் பிறந்து வந்தவளாகேன்'' எனப் பேசியிருக்கிறாள். கற்புடைய ஒருத்திக்குப் பிழை புரிந்தவன் குலத்தோடு அழிந்தான் என உலகம் தெரிந்து கொள்ள வேண்டும் என இக் குலமகள் துணிந்திருத்தலை இவ்வுரை உணர்த்தி நிற்கிறது.

இராவணன் ஒருவன் தீமை செய்ய அவனுடைய குலத்தவர் எல்லாரும் நாசம் அடையும்படி சீதை சினந்து சொல்லியிருப்பது நினைந்து சிந்திக்கத் தக்கது. அவன் செய்த தவ பலத்தால் அவன் குலத்தவர் பலவகையிலும் உயர்ந்து சிறந்துள்ளனர்; ஆகவே அவனுடைய பாவச் செயலால் யாவரும் நாசம் அடைய நேர்ந்தனர். அரக்கர் குலம் இராவணனால் உயர்வடைந்து வந்தது; மீண்டும் அவனால் அழிந்துபட மூண்டது.

உத்தமமான பதிவிரதை ஆதலால் இவளுடைய உள்ளக் கொதிப்பு ஊழித் தீபோல் ஒரு குலத்தை நாசம் செய்ய நேர்ந்தது. கற்புத் தீ உலகத் தீயினும் அற்புத ஆற்றலுடையது.

எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசுஎன்று வீசினேன்.

சீதையின் உண்மை நிலையை இச் சொல்லால் ஊன்றி உணர்ந்து கொள்கின்றோம். இலங்கை மட்டும் அன்று அகில உலகங்களையும் தனது ஒரு சொல்லால் அழித்து ஒழிப்பதாகச் சீதை இங்கே தெளித்திருப்பது வியப்பை விளைத்து நிற்கிறது.

உண்மையான ஆத்தும சத்தி கண்டு உய்த்துணர வந்தது.

நல்ல சீலம் தோய்ந்த பொழுது அவ்வுயிர் எல்லாம் வல்ல இறைவன் அருளை மருவுகின்றது. மருவவே அரிய ஆற்றல்கள் பல அதனிடம் பெருகி வருகின்றன. அந்த மகாத்துமா அற்புத சித்திகளைச் செய்கின்றது. அரிய தவசிகளினும், பெரிய ஞானிகளினும் பதி விரதைகள் பெருமகிமையுடையராய் அதிசயங்களைப் புரிகின்றனர். யாவரும் அவர்க்கு ஏவல் செய்ய நேர்கின்றனர்.

மழை பெய் எனப் பெய்யும் எனக் கற்புடையவரது அற்புத நிலையைத் தேவர் காட்டியிருக்கிறார். நளாயினி, அநசூயை, சாவித்திரி முதலிய பத்தினிப் பெண்கள் செய்துள்ள வித்தகச் செயல்கள் வியந்து சிந்திக்கத் தக்கன.

தன் வாய்ச் சொல்லால் கண்ணகி மதுரையைச் சுட்டு எரித்தாள். அதனை எண்ணியுணரின், எல்லா வுலகங்களையும் சொல்லால் சுடுவேன் எனச் சீதை சொல்லியுள்ள நிலைமை இங்கு நன்கு தெளிந்து கொள்ளலாம். திருவின் அவதாரம் என்று கருதாமலே தன் கற்பின் பெருமிதத்தினாலேயே இங்ஙனம் பேசியிருக்கிறாள். உள்ளத்தில் உண்மையும் தூய்மையும் உள்ளபொழுது அங்கே எல்லையில்லாத உறுதியும் ஊக்கமும் பெருகி நிற்கின்றன.

இத்தகைய அற்புத ஆற்றல் அமைந்திருந்தும் அடங்கியிருப்பது அதிசயமாயது. பொறுமையும் தருமமும் மருவி நின்றபோது அரிய வன்மைகள் மேலும் பெரு மகிமை பெறுகின்றன.

தன் சொல்லால் பகையை அழித்துவிடின் அது தனது நாயகன் பெருமைக்கு இழுக்காம் எனச் சானகி பொறுத்திருப்பது அரிய பண்பாடாய்ப் பெருகியுளது. தன்னைக் கொண்ட கணவனுக்கு எவ்வழியும் மதிப்பையும் மாட்சியையும் கொடுத்து வருவதே

நல்ல குலமகளுக்கு அழகாம் என்பதை இங்கே உலகம் காண உணர்த்தியருளினாள்.

இராமனுடைய உரிமைப் பொருள் ஆதலால் தனக்குத் தனியே சுதந்திரம் இல்லை; தன் மூப்பாக எதையும் செய்யலாகாது என இச் செய்யவள் உறுதி செய்துள்ளமை நுணுகியுணர வந்தது. நிறையும் பொறையும் நீர்மையோடு நிலாவுகின்றன.

தன் உடைமையை மீட்ட வேண்டியது இராமனது கடமையே; அந்தக் கட்டுப்பாட்டில் இடையே ஏதேனும் நுணிந்து செய்யின் அது மடமையாம் எனத் தேவி மதித்திருக்கிறாள்.

வீர ராமன் நேரே போர் புரிந்து வெற்றித் திருவோடு தன்னைச் சிறை மீட்ட வேண்டும் என்றே இவ் வுத்தமி உறுதி செய்திருந்ததை உரைகள் தெரியச் செய்தன. வீரக் குலமகள் ஆதலால் வீர மீட்சியை விழைந்து விரோடு நின்றாள்.

எல்லா வுலகங்களையும் ஒரு சொல்லால் வெல்ல வல்ல சத்தி தன்பால் உள்ளது என அநுமானிடம் அன்பாகச் சொல்லி அதனோடு நாயகன்மேல் வைத்துள்ள பத்தியையும் இத் தூயவள் அதிவியமாய் உணர்த்தி நின்றாள்.

சீதையின் சொல்வலியும் இராமனது வில்வலியும் காட்சிக்கு வந்தன. அருந்திறலமைதிகளை இவ்வாறு அறிவுறுத்தி அதன்பின் ஓர் அரிய உறுதியைப் பெருந்தகவோடு தெரியப் படுத்தினாள்.

அநும! நீ மகாஞானி; பொறிகளை வென்றவன்; பிள்ளைமை அன்போடு என்பால் உள்ளம் உருகி நிற்கிறாய்; ஆயினும் நீ ஆடவன் ஆதலால் என்னைத் தீண்டலாகாது. தீண்டினால் மாண்டு படுவேன் என்று கருதியே பூமியோடு தோண்டி எடுத்து இராவணன் ஈண்டு இவ்வாறு கொண்டு வந்து வைத்திருக்கிறான்; மனம் இசையாத மாதரைத் தொடின் உன் தலை வெடித்துப் போம்" எனப் பிரமா இட்ட சாபம் ஒன்று இருத்தலினாலேதான் கிட்ட நெருங்காமல் அவன் கட்டுப்பட்டு நிற்கிறான்.

மேவு சிந்தைஇல் மாதரை மெய்தொடின்
தேவு வன்தலை சிந்துக ஈது எனப்
பூவில் வந்த புராதனனே புகல்
சாவம் உண்டு எனது ஆருயிர் தந்ததால்.

தான் உயிர் வாழ்ந்திருத்தற்கு உரிய காரணத்தை இங்ஙனம் உணர்த்தியிருக்கிறாள். கொடிய காமியாயிருந்தும் வலிந்து தீண்டாமல் இராவணன் அஞ்சி நிற்பது அயன் சாபத்தால் என்பது அறிய வந்தது. இப்படி ஒரு சாபம் இருத்தலை அறிந்துதான் சடாயுவும் சாகுந்தருணத்தில் * ஆறுதலடைந்தான். அவன் அங்கே கருதி மாண்டது இங்கே அறிய நீண்டது.

இந்தச் சாபத்தின் இரகசியத்தைத் திரிசடை அறிவுறுத்தித் தன்னைத் தேற்றியருளினாள் என அத் தலைமகளை இக் குலமகள் போற்றியிருக்கிறாள். அந்தக் கொடிய இனத்தில் இனிய ஒரு பெண்மகள் இப பெண்ணரசிக்குத் துணை கிடைத்திருப்பது புண்ணிய வினைவாய்ப் பொலிந்து கண்ணியம் கனிந்துள்ளது.

தன் நாயகனைத் தவிர வேறு ஆடவரது மெய்ப் பரிசம் தன் மேல் படலாகாது என்று பிராட்டி இங்கே பேசியிருப்பது கற்பின் புனிதத் தன்மையை வெளிப்படுத்தியுளது. பயிர்ப்பு என்பது உயர்ந்த பெண்மைக் குணத்துள் ஒன்று. பிறர் அருகு நெருங்கின் மறுகி யுழல்வது பயிர்ப்பு என வந்தது. அயலாரைத் தொடுவதில் கூச்சமும் அருவருப்பும் இயல்பாகவே பெண்மைக்கு அமைந்திருக்கிறது. அந் நீர்மை உயர்வாக இங்கே போற்றப்பட்டுள்ளது.

தீய அரக்கன் மாய வஞ்சமாய்க் கவர்ந்து வந்தாலும் தன் தூய்மை சிதையாதுள்ளமையைச் சீதையின் வாய்மை இங்ஙனம் விளக்கி நின்றது. பரிசுத்த நிலையைத் தரிசித்து மகிழ்கிறோம்.

தன் அருமைக் கொழுந்தன் அழகிய கைகளால் வனத்தில் கட்டிய தழைக் குடிசையை அனுமானுக்குச் சுட்டிக் காட்டியிருக்கும் காட்சி அரிய ஒரு சாட்சியாய்ப் பெரிய மாட்சிகளை விளைத்துள்ளது.

இளவல் இயற்றிய நீண்ட சாலை

என அந்தப் பன்னசாலையை இன்னவாறு குறித்திருக்கிறாள். தன் அண்ணனும் அண்ணியும் சுகமாய் அமர்ந்திருத்தற்கு இதமாகவும் விசாலமாகவும் தம்பி அன்புரிமையோடு செய்து வைத்துள்ளமை என்புருக ஈண்டு எண்ண வந்தது.

அந்தக் குடிசையிலேயே தவவாசமாய்த் தங்கியிருந்துளாள்.

* இந் நூல் பக்கம் 2052, வரி 26 பார்க்க.

தவசிகள் மலைக் குகையில் மருவியிருத்தல்போல் இப் பதிவிரதை இலைக் குடிலில் அமர்ந்திருக்கிறாள். கடவுள் சிந்தனையோடு தவ யோகிகள் அடங்கியுள்ளனர்; இராம சிந்தனையோடு சீதை ஒடுங்கி யுள்ளாள். உடல் அயலிருப்பினும் உயிர் பதியிடம் பதிந்துளது.

நீர் பருகும் பொருட்டுச் சில சமயங்களில் அருகே உள்ள பொய்கைக்குப் போய் வருவதைத் தவிர வேறு யாதும் இடம் பெயர்ந்தது இல்லை என்று சொல்லியிருத்தலால் அந்த இருப்பின் நிலைமையை உள்ளி உணர்ந்து கொள்ளுகிறோம்.

வீரன் மேனியை மானும்இவ் வீங்குநீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்

அந்தத் தடாகத்தை நாம் மனக் கண்ணால் கருதிக் காணும் படி இங்ஙனம் ஆர்வத்தோடு காட்டியிருக்கிறாள். சிலை வீரன் என இராமனை இங்கே சுட்டிச்சொல்லியது மூதண்டங்களையும் வெல்ல வல்ல அந்தக் கோதண்ட வீரனுடைய குல பத்தினி நாதியற்றவ ளாய் நைந்திருக்கும் நிலையை நொந்து கூறிய படியாம்.

செந்தாமரை செவ்வல்லி முதலிய மலர்கள் பல பூத்து நறு மணம் கமழ்ந்து எழில் பொலிந்திருந்தமையால் அந் நீர் நிலை இராமன மேனியை ஒத்திருந்தது என்றாள். மானும்=ஒக்கும். ஒத்த என்னாது மானும் என்றது அந்த அழகிய திருமேனிக்கு ஓரளவு உவமானமாக நவமாகியுள்ளமை தெரிய.

கரிய நீர் மேனிக்கும், மலர்கள் அவயவங்களுக்கும் உவமை யாயின. கண்கள், கைகள் முதலியன செந்தாமரை மலர்கள்போல் பொலிந்திருத்தலால் இராமனது உருவச் செவ்வி தாமரைத்தடம் என வந்தது.

மாயக் கூத்தா! வாமனா! வினையேன் கண்ணா! கண் கைகால்
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதா,
சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா, தாமரை நீள்
வாசத்தடம்போல் வருவானே! ஒரு நாள் காண வாராயே!
(திருவாய் மொழி, 8-5)

இந்தப் பாசுரம் இங்கே சிந்திக்கத்தக்கது. திவ்விய அழகை மானச நோக்கால் ஞான சீலர்கள் கண்டு களித்து வருகின்றனர். நேரே கண்டு சுகித்தஎழிலைச் சானகி இங்கே கொண்டுகுறித்தாள்.

தாகவிடாய் தீர நீர் பருகப் போவதுபோல் போய் அந்தத் தாமரைத் தடாகத்தை நெடுநேரம் பார்த்துப் பார்த்து ஆர்த்தி மீதூர்ந்து ஆறுதலடைந்துள்ளாள் என்று தெரிகின்றது.

தன் நாயகனுடைய உருவ நிலையை ஒத்திருந்தமையால் அப் பொய்கை இக் குலமகளுக்கு ஓர் உவகை நிலையமாய் உதவி புரிந்துளது. அவ் வுண்மையை உரைகளிலிருந்து உணர்ந்து கொள்கிறோம். கணவனையே கருதி யுருகியுள்ளமை கருத வந்தது.

இராம சிந்தனையே எப்பொழுதும் தன் உள்ளத்தில் உருவேறி யுள்ளமையால் வெளியே கண்ட இடங்களில் எல்லாம் அக் காட்சி இப் பதிவிரதைக்கு எதிர் தோன்றியுள்ளது.

உரிய பாவனையில் உள்ளம் பதிந்து உணர்வு அழுந்தி உயிர் கலந்துள்ளமையைத் தேவியின் வாய்மொழி தெளிவுபடுத்தியது.

இன்னுயிரினும் இனியனாக இராமனை இப் பெண்ணரசி எண்ணி யிருக்கிறாள், தன் உயிரையே யாவரும் பிரியமாகக் கருதி யிருப்பர். இயல்பான இந்த உலக நிலையைக் கடந்து இக் குலமகள் நிலை தலைமையாயுள்ளது.

தனது உண்மைநிலைகளை இவ்வண்ணம் துலக்கிச் சொல்லி அநுமானைத் தனியே மீண்டு போகும்படி வேண்டி நின்றாள்.

## மாருதி மகிழ்ந்தது.

அன்புரிமையால் பிராட்டியை எடுத்துச் செல்வதாகச் சொல்லிய அநுமான் சீதையின் வாய்மொழிகளைக் கேட்டதும் உவகை மீதூர்ந்து உள்ளம் களித்தான். அயல் ஆடவர் எவராயினும் எவ்வகையிலும் தொடலாகாது என்ற அந்தத் தூய்மையை வியந்து தொழுது நயந்து புகழ்ந்தான்.

நன்று நன்று இவ் வுலகுடை நாயகன்
தன் துணைப் பெருந் தேவி தவத் தொழில்
என்று சிந்தை களித்து உவந்து ஏத்தினான்
நின்ற சங்கை இடரொடு நீங்கினான்.

எடுத்துச் செல்லக் கருதிய தன் கருத்தை மறுத்துப் பிராட்டி உரைத்த மொழிகள் அநுமானுக்கு மிகவும் உவகையை விளைத்துள்ளன. புனிதமான உள்ளப் பான்மைகளை இனிது

தெளியவே அவன் வியப்பும் விம்மிதமுமடைந்து மகிழ்ந்து துதித்தான். அரிய நிலைமை பெரிய மகிமை ஆயது.

தேவி தவத் தொழில் நன்று! நன்று! என உள்ளம் களித்து அவன் உரையாடியுள்ளமை உயர் வியப்பாய் நிறை ஓடி நின்றது. அதிசய வியப்பையும் உவகைக் களிப்பையும் அடுக்குகள் உணர்த்தின. நிலைமை நீர்மைகளை நேரே தெரியவே நெஞ்சம் பேருவகையாய்ப் பெருகி நின்றது. களித்தல் உவத்தல் ஏத்தல்கள் அவனுடைய உணர்ச்சிகளை வெளிப் படுத்தின.

தான் தேடி வந்தது திவ்விய மகிமையாய் நீடி நின்றுள்ளது; நிலையான பலனை நேரே பெறலாம் என அப் பேரன்பாளன் பேரின்பமுடையனாய்ப் பெருகி நின்றுள்ளான்.

நின்ற சங்கை இடர் ஒடு நீங்கினான்.

அனுமான் அகத்தில் ஒரு சந்தேகம் சிறிது படிந்திருந்தது; அது இப்பொழுது அடியோடு ஒழிந்து போயது என இது உணர்த்தியுளது. நின்ற சங்கை என்றது நெஞ்சில் நேர்ந்து நின்ற அதன் நிலைமை தெரிய வந்தது. ஐயம் எள் அத்தனையாயினும் உள்ளத்தை அது உறுத்தி நின்றுளது.

எடுத்து வந்த இராவணன் துடுக்காக ஏதேனும் பிராட்டியைத் தொட்டிருப்பானோ? என்று ஒரு சிறிய சந்தேகம் அனுமான் உள்ளத்தில் ஒட்டியிருந்தது. ஆண் உருவம் எதுவாயினும் தன்னைத் தீண்டலாகாது; தீண்டினால் மாண்டிடும் என்று ஈண்டு அவள் சொல்லவே அந்த ஐயம் அடியோடு நீங்கியது.

உத்தம பத்தினியின் பரிசுத்த நிலையை உணர்ந்து தெளியவே உள்ளத்தில் உவகை வெள்ளம் எனப் பொங்கியது.

இராவணனால் அல்லலடைந்து இருள் மூடியுள்ள உலகம் இனி விரைவில் விடிந்து ஒளி மிகப் பெறும் எனக் களி மிகுத்து மீண்டு போகத் துணிந்து பிராட்டியிடம் விடை வேண்டி நின்றான். “அம்மா! அடியேன் போய் வருகிறேன்; ஆண்டவனிடம் என்ன சொல்ல வேண்டும்? சொல்லியருளுங்கள்!” என்று அனுமான் வேண்டவே சீதை சில சொல்லை நேர்ந்தாள். அந்த உள்ளத்தின் பரிவும் பண்பும் உரைகளில் ஒளி வீசி வந்தன.

## சானகியின் பரிவுரைகள்.

இன்னும் ஈண்டுஒரு திங்கள் இருப்பல்யான்
நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்!
பின்னை ஆவி பிடிக்கின்றிலேன் அந்த
மன்னன் ஆணை இதனை மனக்கொள் நீ! (1)

ஆரம்தாழ்திரு மார்பற்கு அமைந்தது ஓர்
தாரம் தானலள் ஏனும் தயா வெனும்
ஈரம்தான் அகத்து இல்லை என்றாலும்தன்
வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டினுள் (2)

ஏத்தும் வென்றி இளையவற்கு ஈதொரு
வார்த்தை கூறுதி மன்னருளால் என்னைக்
காத்திருந்தவற்கே கடன் என்றிடை
கோத்த வெஞ்சிறை வீடென்று கூறுவாய்! (3)

திங்கள் ஒன்றில்என் செய்தவம் தீர்ந்ததால்
இங்கு வந்திலனே எனின் யாணர் நீர்க்
கங்கை யாற்றங் கரை அடியேற்குத் தன்
செங்கையால் கடன் செய்கென்று செப்புவாய்! (4)

சிறக்கும் மாமியர் மூவர்க்கும் சீதை ஆண்டு
இறக்கின்றாள் தொழுதாள் எனும் இன்னசொல்
அறத்தின் நாயகன்பால் அருள் இன்மையால்
மறக்கு மாயினும் நீ மறவேல் ஐயா! (5)

வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தை யாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய். (6)

ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்டலாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினாள் தொழுது என்று விளம்புவாய்! (7)

அரசு வீற்றிருந்து ஆளவும் ஆய்மணிப்
புரசை யானையின் வீதியில போகவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரை செய்து என்னை? என் ஊழ்வினை யுன்னுவேன். (8)

தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும் பரதன் அங்காற்றுறும்
இன்னல் நோய்க்குமங் கேகுவ தன்றியே
என்னை நோக்கி இங்கு எங்ஙனம் எய்துமோ? (9)

எந்தையாய் முதலிய கிளைஞர் யார்க்குமென்
வந்தனை விளம்புதி கவியின் மன்னனைச்
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தமில் நெடுநகர்க்கு அரசன் ஆக்கென்பாய். (10)

(சூளாமணிப் படலம், 29-38)

இந்தப் பகுதியை ஊன்றிப் படிக்கிறோம்; உள்ளப் பரிவுகளை ஓர்ந்து துடிக்கிறோம். கவிகளைக் கருதி உணரும் அளவு சுவைகள் தெரிகின்றன. அரிய பிரிவில் மறுகியுள்ள பிரிய நாயகி உரிய நாயகனைக் காண அவாவி மானமீதூர்ந்து மயங்கி நிற்பதை உணர்ந்து கவல்கின்றோம். உள்ளக் கவலைகள் பெண்மை இயல்போடு பெருகி வந்துள்ளன. உண்மை நிலையை உரிமையுடன் ஊன்றி நோக்குபவர் எவரும் கண்ணீர் சொரிந்து கரைந்து நிற்கும்படி உரைகள் நிறைந்து நிற்கின்றன.

"அனுமா! இன்னும் ஒரு மாத காலம்தான் நான் இங்கு உயிர் வாழ்ந்திருப்பேன்; அதன்பின் இரேன்; இது உண்மை; எம்பெருமான் மேல் ஆணையாக இதனைச் சொல்லுகிறேன்; அந்த வீர வள்ளலுக்குத் தகுதியான மனைவி நான் இல்லை ஆயினும் கருணையினாலாவது என்னைச் சிறைமீட்டும்படி சொல்லு; அருளை மறந்தாலும் தன் குல வீரத்தை நினைந்தாவது நலம் புரியும்படி கூறு; இளைய பெருமாளுக்கு ஒரு வார்த்தை: என்னைச் சிறை மீட்டியருள வேண்டிய பொறுப்பு முழுவதும் அவரைச் சார்ந்தது; அவரிடமே அடைக்கலமாக நாயகன் என்னை நல்கிப் போனார்; அவருடைய பாது காவலில் தீது நேர்ந்தது; ஆதலால் காத்து நின்ற அவரே என்னை மீட்டி உடையவனிடம் சேர்க்க வேண்டும்; இந்தக் கடமையை அவரிடம் தனியே நீ வலியுறுத்த வேண்டும்; அண்ணனும் தம்பியும் என்ன செய்வார்களோ? இந்த ஏழைக்கு இரங்கியருளுவார்கள் என்று தெளிவாகத் தெரியவில்லை; அன்பனே! ஒரு மாதத்திற்குள் இங்கு வரவில்லையானல் கங்கை ஆற்றிலே அடியாளுக்கு அவருடைய செங்கையால் நீர்க்கடன் செய்யும்படி சொல்லி விடு; இலங்கைச் சிறையில் உங்கள் மரு

மகள் சாகும்பொழுது உங்களைத் திசை நோக்கித் தொழுதாள் என்று என் மாமிமார் மூவரிடமும் நீ ஞாபகமாய் நவின்றருள்; என் நாயகன் என்னைக் கைப்பிடித்த அன்று இரவு மறு மாதரை மனத்திலும் கருதேன் என்று தனியே என்னிடம் உறுதி கூறியுள்ளார்; அந்த உண்மையை அவருக்கு நினைவூட்டு; ஈண்டு நான் மாண்டு போனாலும் மீண்டு பிறந்து வந்து அந்த ஆண்டகையைத் தீண்டி மகிழும்படியான வரம் ஒன்று வேண்டினேன் என்று வேண்டு; அரியாசனத்தில் வீற்றிருந்து ஆட்சி புரியும் அந்த மாட்சியை இனி என்று காண்பேன்? யானை மீதும் சிவிகைகளிலும் அரச கோலத்தோடு பவனி வருகிற விழுமிய காட்சிகளைக் காணாது இழந்தேனே; இரத்தின ஆரங்களும் முத்து மாலைகளும் மார்பில் தவழ்ந்து திகழ விளங்கி நிற்கும் அந்தப் பசிய கோலத் திருமேனியை விழி களிப்பக் காண்பது என்றோ! அந்தோ! வீணே பேசிப் பயன் என்ன? பாழான என் ஊழ்வினையை உன்னி உன்னி உளைகின்றேன்; தன்னை நோக்கித் தவித்து நிற்கும் உலகத்தைக் காத்தருள அங்கே செல்வாரே அன்றி என்னை நோக்கி இங்கே வருவார் என்று நான் எண்ணியிருப்பது ஏழைமையாம்; பெற்ற தாயும் உற்ற தம்பியும் உருகியிருப்பதைக் கருதி அயோத்திக்குப் போவாரே அல்லாமல் இந்தப் பாவியை நாடி இலங்கைக்கு வந்தருளுவாரா? ஐயோ! என் நிலைமை என்னே! மாருதி! நீ கொஞ்சம் தயவுசெய்து மிதிலைக்கும் போகவேண்டும்; என் அருமைத் தந்தை தாய் தங்கையர்களிடம் என் வணக்கத்தைத் தெரியப் படுத்துக; நான் பிறந்த குடியும் புகுந்த குலமும் பெருமகிமையோடு சேமமாய் இருக்கட்டும்; உங்கள் அரசனாகிய சுக்கிரீவனிடம் எனது வேண்டுகோள் ஒன்றை உரிமையோடு நீ உரைக்க வேண்டும்; அந்தக் கவியரசன் எம் கோமகனை அயோத்திக்கு அழைத்துப்போய் மணிமுடி சூட்டி அரசாளும்படி செய்ய வேண்டும் என்று நான் பணிவுடன் வேண்டினதாகச் சொல்; அவ் வீர மூர்த்தி சீரும் சிறப்பும் எய்திச் சுகமாக வாழ வேண்டும்; என் கதி எவ்வாறாயினும் சரி; விதியின் விளைவை மீற வல்லவர் யார்? என் தலையில் போட்டுள்ள புள்ளியின்படி நடக்கட்டும்; நீ போ!'' என இவ்வாறு அனுமானை நோக்கிச் சீதை பரிவோடு பேசியுள்ளாள். அந்த உள்ளத்தில் உறைந்துள்ள ஏக்கங்களையும் குடும்பபாசங்களையும் பரிதாபங்களையும் உரைகள் தெளிவாக்கியுள்ளன. அரிய பண்பாடுகள் புண்பாடுகளாய்ப் பொங்கி நிற்கின்றன.

பெண்களுக்கு இயல்பான ஓரங்கல் மொழிகள் கண்கள் காணக் கனிந்து வந்திருக்கின்றன. சஞ்சலங்கள் நிறைந்துள்ளமை யால் அந்த நெஞ்சத்தின் சபலங்கள் நேரே தோன்றி நின்றன.

இன்னும் ஒரு திங்கள்தான் உயிர் வைத்து இருப்பேன் என்றது அதற்குள்ளாக இராமன் அங்கே வந்தருள வேண்டும் என்பதை வலியுறுத்தியது. காலம் கடத்தி நிற்கலாகாது; அங்ஙனம் நின்றால் சாலவும் பிழை நேர்ந்து விடும் என எச்சரிக்கை செய்திருக்கிறாள். எங்கே தாமதமாய் நின்று விடுவாரோ? என்ற அவலமும் ஆவலும் இவ்வுரையில் உலாவி நிற்கின்றன. ஒரு மாதம் தவணை குறித்தது, வந்துள்ள தூதன் மீண்டுபோய் வருதற்கு உரிய கால அளவைக் கருதி. விரைந்து வந்து சேர வேண்டும் என விதி நியமமாய்க் கட்டளையிடாமல் நெஞ்சில் ஓர் அச்சத்தை ஊட்டி உச்ச நிலையில் உரையாடி யுள்ளாள்.

பின்னை ஆவி பிடிக்கின்றிலேன்.

அந்த உயிர் உடலில் இருக்கும் நிலைமை இதனால் உணர்ந்து கொள்கிறோம். ஆவியைத் தன் கையில் வைத்திருப்பதாகத் தேவி இங்ஙனம் தெளித்தருளினாள். தன்னுடைய ஆவித்துணையை ஒரு மாசத்துள் காணவில்லை ஆயின் இந்த ஆவி போய் விடும் என்று வாய் விட்டுள்ளாள். வாழ்வும் சாவும் சூழ்வின்மேலே தோய்ந்துள்ளமை ஆய்ந்து கொள்ள வந்தது.

மன்னன் ஆணை என்றது தான் சொன்னதை உறுதியாக அறுதியிட்டு ஓர்ந்து கொள்ள. சத்திய சீலனான இராமன் மீது சத்தியம் செய்துள்ளாள். இன்னுயிரினும் இனியனான கணவன் மேல் ஆணையிட்டுத் தன்னுயிர் நிலைமையை இங்ஙனம் பண்ணியருளினாள். அனுமான் உன்னியுணர்ந்து உறுவதை விரைந்து செய்ய இது ஊக்கி வந்தது.

தன்னுடைய மனைவி என்னும் அன்புரிமையாலும், அபிமானத்தாலும் சீதையை இராமன் சிறைமீட்ட வேண்டும்; அந்தச் சக்கரவர்த்தித் திருமகனுடைய பெருமிதத்திற்குத் தக்க தாரமாய்த் தான் இல்லாது போயினும் அநாதையான ஏழைக்கு இரங்கியருளும் முறையிலாவது கிருபைசெய்து துயரை நீக்கவேண்டும் என்பாள் தயையையும் வீரத்தையும் நேரே எடுத்துக் காட்டினாள்.

எளிய பிராணிகளிடம் அளி புரிவது தயை.

உள்ளம் உருகி உதவி செய்வது ஈரம்.

தயா எனும் ஈரம் எனப் பொருள் விரித்துச் சொன்னது அந்தக் குண நீர்மையில் கருத்தைச் செலுத்திக் கருணை புரிய. நல்ல நீர்மைகள் உள்ளியுணர வந்தன.

இயல்பாகவே தண்ணளி நிறைந்த புண்ணிய மூர்த்தி என்று தன் கணவனை எண்ணி ஏத்தி யாண்டும் போற்றி வருகிற பெண்ணரசி இங்கே கண்ணழிந்து கரைந்திருக்கிறாள். பிரிவுத் துயரம் பெரிதாயுள்ளமையால் இங்ஙனம் மறுகிப் பேசச் செய்தது.

கொண்ட மனைவி என்ற அன்பு இருந்தாலும், எளிய பெண் என்ற அருள் இருந்தாலும் இதுவரை என்னை இவ்வாறு இன்னலில் அவர் விட்டிருக்க மாட்டார் என்று இப் பத்தினி பரிந்திருக்கிறாள். கண்ணோட்டமின்றிக் கைவிட்டிருத்தலால் அந்த இருவகை நிலைகளிலும் ஐயம் உண்டாயது; ஆகவே சோகமுடன் வேகமாய்ச் சொல்ல நேர்ந்தாள்.

அன்பு தயை இரக்கம் என்னளவில் இல்லையாயினும் தன்னளவில் என்றும் நிலையாயுள்ள ஒன்றினாலாவது உறுதி நலனைக் கருதிச் செய்ய வேண்டுக என இறுதியாக வேண்டினாள்.

வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய்!

தன் தாரம் காத்தலை இராமன் உறுதியாகச் செய்ய வேண்டும் என்னும் உணர்ச்சியை இங்ஙனம் ஊட்டியுள்ளாள்.

தன் இல்லாளைச் சிறை மீட்டிக் காக்க வில்லையானால் வீரம் இல்லாதவன் என இராமன் சீரழிய நேரும். “பெரிய வில்லாளி, அரிய போர் வீரன் என்று யாண்டும் பேர் பெற்றுள்ள இராமன் தன தாரத்தைக் கைவிட்டுத் தாழ்ந்து நின்றான்; கவர்ந்து கொண்டு போனவன் பெரிய சூரன் ஆதலால் அவனிடம் நெருங்க அஞ்சி ஒதுங்கிச் சென்றான்” என இன்னவாறு பலவும் கூறி உலகம் பழிக்கும்; அந்தப் பழி நிலைக்கு ஆளாகாமல் விரைந்து தொழில் புரிந்து விழுமிய நிலையில் வாழ வேண்டும் எனக் கெழுதகை அன்போடு வேண்டியுள்ளாள்.

தன்னைக் காத்தருளும்படி நேரே வேண்டாமல் தன் நாயக

னுடைய வீரத்தைக் காத்துக் கொள்ளும்படி சீதை ஈண்டு வேண்டியிருக்கும் வித்தகம் வினயம் மிக வுடையது.

வீரம் இராமனுக்கு உயிர் நிலையம் ஆதலால் அதனை இங்ஙனம் நினைவுறுத்தினள். தன் தாரத்தைக் காட்டிலும் வீரத்தை அவன் பேணியருளுவான் என இத்தாரம் எண்ணியுள்ளது நம் கண் எதிரே காண வந்தது. தன் நாயகன் யாண்டும் வீரநாயகனாய் விளங்க வேண்டும் என இத் தீர நாயகி விளக்கியிருக்கிறாள்.

தான் கொண்ட மனைவியை வஞ்சமாய்க் கவர்ந்து கொண்டு போனவனைக் குலத்தோடு அழித்து மீட்டிக் கொண்டு வந்தான் என வையமும் வானமும் கொண்டாடி வரக் கோதண்ட வீரன் புகழோடு பொலிந்து வாழ வேண்டும் என விழைந்து வேண்டியுள்ளாள். வீர வாழ்வும் வெற்றி நிலையும் வெளியறிய வந்தன.

தன்னைச் சிறை மீட்டிக் காத்தபோது தான் இராமன் வீரத்தையும் மானத்தையும் புகழையும் புண்ணியத்தையும் காத்தவனுவான் என இப் பெண்ணரசி கண்ணியமாய்ப் பேசி யிருப்பது எண்ணியுணர வுரியது.

மான வுணர்ச்சியும் வீர வுணர்ச்சியும் வீறு கொண்டு வரச் சானகி பேசி வருவது ஞான மணம் கமழ்ந்து வருகிறது.

தன் தாரத்தை மீட்டாமல் காலம் தாழ்த்தி நிற்பது அவன் வீரத்தை வீட்டிய படியாம் எனக் காட்டியிருக்கும் காட்சி மாட்சி மிகுந்துள்ளது. உரிய பதிக்கு அரிய மதியை யூட்டுகிறாள்.

கொண்ட பெண்டாட்டி கொடிய ஒருவன் கையில் சிக்கித் திண்டாடித் தவிக்க விட்டிருப்பது அந்தக் குல வீரனுக்கு எவ்வளவு பழியாம்! என்பதை எடுத்துக் காட்டி யிருக்கிறாள். உள்ளப் பரிவைத் தெள்ளத் தெளிய விளக்கி உரிமை கனிந்து உரைகள் வெளி வந்துள்ளன.

அக் கோமகன் விரும்பி வந்து பாதுகாத்தற்குரிய தகுதி என்பால் இல்லை ஆயினும் தன்பாலுள்ள தகுதியை யாதும் நழுவாமல் பாதுகாத்துக்கொள்ளவேண்டும்என்று ஓதியுணர்த்தினள்.

தாரம் காத்தலை வேண்டுஎன்று வேண்டாமல் வீரம்காத்தலை வேண்டு என்று வேண்டியிருப்பது எவ்வளவு விநயம்! எத்துணை வித்தகம்! சுத்தவீரனுக்குப் புத்துணர்ச்சி யுண்டாகும்படி போதித்திருக்கிறாள். மானச தத்துவம் இதில் மருவி மிளிர்கிறது.

பேசுவதில் அதிமேதையான அனுமானும் இந்தப் பேச்சைக் கேட்டு வியந்து மகிழ்ந்திருப்பான் என்பதை நாம் உணர்ந்து கொள்கிறோம். சோகம் சூழ்ந்திருப்பினும் சொல்லில் வீரம் விரிந்து நிற்கிறது. கற்பின் திண்மை காட்சி புரிகின்றது.

மறுமை நோக்கோடு மருவியுள்ள ஞானக் குடியில் பிறந்திருந்தாலும் இப் பத்தினியிடம் சத்திரிய வீறு தலை நிமிர்ந்துள்ளது. பிறப்பு வாசனை எவரிடமும் மறப்பின்றி வருகிறது

அசகாய சூரனை அந்த ஆண்டகைக்கு இந்தப் பெண்ணரசி இவ்வாறு வீர போதனை செய்து நீர்மை தெரிய விடுத்துள்ளாள்.

ஆரம்தாழ் திரு மார்பு என அந்த எழில் உருவைக் கருதி உருகியிருக்கிறாள். மருவி மகிழ்ந்தது பரிவு மிகத் தந்தது.

## இளையவன் கடமை.

சீராமன் சீரழியாமல் வீரம் காக்க வேண்டும் என அனுமானை வேண்டினவள் பின்பு இலக்குவன்பால் தூண்டினாள்.

ஏத்தும் வென்றி இளையவன் எனத் தன் கொழுந்தனை இக் குலமகள் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. யாவரும் வியந்து கொண்டாடி உவந்து போற்றத் தக்க வெற்றி வீரன் என்று கொற்ற நீர்மையை உய்த்துணர வுரைத்துள்ளாள்.

அரசுரிமையை இழந்து அண்ணன் அடவி புக நேர்ந்தான் என்றதைக் கேட்டபோது இத்தம்பி சீறிச் சினந்த வீரப் பாடுகள் வியத்தகு நிலையன. தன் ஆற்றல் எல்லாம் அண்ணனைப் போற்றவும் அறத்தைக் காக்கவுமே ஊக்கியிருத்தலால் "ஏத்தும் வென்றி" என இவனது வெற்றி நிலை ஏற்றம் பெற்றது. இந்த வெற்றிவீரன் நின்றால் செத்து வீழுவோம் என்று கருதியே இராவணன் வஞ்சச் சூழ்ச்சி செய்து வழி நீக்கிப் போக்கித் தூயவளிடம மாய வேலை செய்தான். வீர இளவல் நீங்கியது வெந்துயராய் ஓங்கியது.

தன் காவலில் களவு போயுள்ளமையால் அந்த உளவினை உள்ளம் தெளிய உணர்த்தி உரிமையோடு உறுதி நாடினாள்.

என்னைக் காத்து நின்றவற்கே கடன்.

தன்னைச் சிறையிலிருந்து விடுவித்துத் தன் கணவனிடம் சேர்க்க வேண்டிய கடமை இலட்சுமணனுடையதே எனச் சீதை

இவ்வாறு வாதமுறையில் வழக்குத்தொடுத்திருக்கிருள். ஏகாரம் பிரிநிலை. தமையனை நீக்கித் தம்பியையே வலியுறுத்தியுளாள். தன் கையில் ஒப்பித்த பொருளைக் களவு போகவிட்டுப் பேசாமல் நிற்பது பெருமையாகாது; உரிமையை உணர்ந்து ஊக்கி முயன்று கடனைத் தீர்த்துவிட வேண்டும் என்று காட்டியிருக்கிருள்.

தன்னைக் கட்டிக் காத்து நின்ற இளவலை அநியாயமாய்த் திட்டி நீக்கி விட்டுத் தீமையில் அகப்பட்டுத் தவிக்கின்றவள் இப்பொழுது இப்படி நியாய முறைகளைச் சுட்டிக் காட்டிப் பேசியிருப்பது ஒட்டிய கிழமையாய் உவகை சுரந்துள்ளது.

தன் பிழையை நன்கு உணர்ந்திருந்தாலும் அன்புரிமையால் இங்ஙனம் ஆதரவு நாடிச் சாதனையுடன் போதனை கூறியுள்ளாள்.

தன்னைச் சிறை மீட்டிக் காக்க வேண்டிய பொறுப்பு இளையவனுக்கே உரியது எனச் சீதை சொல்லியுள்ள இந்த வார்த்தையை இலக்குவன் கேட்டால் எவ்வளவு இன்பத்தை அடைவான்? அதனை அளவிட வல்லார் யார்? உறவுரிமையும் உள்ளப் பாசமும் துறைகள்தோறும் தோய்ந்து உவகை சுரந்து திகழ்கின்றன.

ஈன்ற தாயினும் ஆன்ற அன்புரிமையோடு அண்ணியை எண்ணி ஒழுகும் புண்ணியத் தம்பிக்குக் கண்ணியமான கடமையைப் பெண்ணரசி ஈண்டுச் சுமத்தியிருக்கிருள். இளவலை அளவளாவி வந்துள்ள இந்த வாசகம் இங்கே அளவிடலரிய அன்பின் சுவையாய்ப் பொங்கியுள்ளது. அரிய பண்பாடுகள் காவிய ஜீவியங்களாய் யாண்டும் பெருகி வருகின்றன.

நம்பியை நினைந்து உருகுகிருள்; தம்பியை நினைந்து மறுகுகிருள். தனக்கு நேர்ந்துள்ள அவலச் சிறையிலிருந்து அழுங்கி அலமந்து உய்தி நாடி இக் குலமகள் உளைந்து தவிக்கின்ருள். தவிப்பெல்லாம் தாமரைக் கண்ணனைக் காண விழைந்து வேணவாவோடு வெய்துயிர்த்து விரிகின்றன.

## நீர்க் கடன்.

மாருதி போய்க் கூறிய வுடனே இராமன் விரைந்து வந்தருளுவாரா? என்று சீதை உளைந்து ஏங்கினுள். உறுதி நிலையை அறுதியிட்டு வலியுறுத்தினுள். மூப்பது நாள் வரையும் பொறுத்திருப்பேன்; அதற்கு மேல் இருப்பதில்லை என்று குறிப்பித்தாள்.

திங்கள் ஒன்று முடியுமுன் இங்கு ஆள் வரவில்லையானால் தன் வாழ்வு முடிந்தது என்று முடிவுகூறியது விடிவினை விரைந்து காண வந்தது. குறித்த தவணை கடந்தால் பின்பு இலங்கைக்கு யாரும் வரவேண்டியதில்லை; அங்கிருந்தபடியே மீண்டு அயோத்திக்குப் போய்விடலாம் என்று வாய் மொழிந்துளாள். உள்ளப் பரிவுகள் உரைகளில் ஒளிர்கின்றன. உரிமையன்புகள் பொங்கிமிளிர்கின்றன.

கங்கை யாற்றங்கரை அடியேற்குத் தன்
செங்கையால் கடன் செய்கென்று செப்புவாய்!

ஒரு மாதத்திற்கு மேல் நான் உயிர் வைத்திரேன்; உறுதியாய் இறந்து போவேன் என்பதை இங்ஙனம் உரைத்திருக்கிறாள். முப்பத்தோராவது நாள் காலையில் அடியாளுக்குச் செய்ய வேண்டிய சரம கிரியைகளைக் கங்கைக் கரையில் செய்தருளும்படி எம்பெருமானுக்குச் சொல்லியருள் என்று அனுமானிடம் சொன்னாள்.

நீர்க் கடன் என்றது இறந்து போனவரை நினைந்து செய்யும் அந்திம கருமங்களை. தந்தை தாயர் இறந்தால் மைந்தனும், மனைவி இறந்தால் கணவனும் கருமம் செய்ய வுரியவர் ஆதலால் அந்த உரிமை இங்கு மருவி வந்தது. இறந்த சீவன் நல்ல கதியை அடைய வேண்டும் என்று எண்ணி இரண்டு கைகளாலும் தண்ணீரை அள்ளி உரிய நாமங்களைச் சொல்லி எள்ளோடு நேரே விடுவர் ஆதலால் அது நீர்க் கடன் என வந்தது. தர்ப்பணம்; ஜலாஞ்சலி என வடமொழியாளர் இதனை வழங்கி வருகின்றனர்.

தன் செங்கையால் என இராமனுடைய கைகளை இங்ஙனம் ஆவலோடு குறித்தாள். அந்த அழகிய கைகளால் தனக்கு நீர்க் கடன் செய்வதை விழுமிய பேறாக விழைந்திருக்கிறாள். தன்னை உயிரோடு காத்தருள வேண்டிய கை அது செய்யாது போயினும் செத்த பின்பாவது இது செய்ய வேண்டும் என வேண்டியுள்ளாள். அரிய பதிவிரதை உரிய பதியை நாடி உருகி மொழிகிறாள்.

புண்ணிய நதியாகிய கங்கையிலேதான் தனக்கு உத்தரகிரியை செய்யவேண்டும் என்பாள் கங்கையின் கரை என்றாள். இறந்து போனவர்களுடைய எலும்பு சாம்பல்களைக் கொண்டுபோய்க் கங்கையில் சேர்ப்பது பண்டு தொட்டே இந்நாட்டில் வழக்கமாயுள்ளது. நாட்டு வழக்கங்களை இக் காவியம் இடங்கள் தோறும் காட்டி வருகிறது. பழமையும் புதுமையும் கிழமை தழுவியுள்ளன

மாமிகளை வணங்கியது.

தனது உரிமையான வணக்கங்களைத் தன் மாமிமார் மூவருக்கும் தெரியப் படுத்தும்படி பிரியப்பட்டுள்ளாள். மாமியர் மூவர்க்கும் என யாவரையும் ஒருங்கே வரைந்து குறித்தது இவளது பெருந்தன்மையை விளக்கி நிற்கிறது. தன் அருமைக் கணவனைப் பெற்றருளிய கோசலை போலவே கைகேசியையும் சுமித்திரையையும் இக் குலமகள் கருதி வருவது இங்கு அறிய வந்தது. இடரிழைத்துள்ள கொடிய கைகேசியிடமும் யாதொரு மாறுபாடும் கொள்ளாமல் பிரியம் கொண்டாடியிருப்பது அதிசயமான அரிய தகைமையாய்ப் பெருகி மிளிர்கிறது.

மருமகள் உலகிற்கு இத் திருமகள் ஒருமகளாய் ஒளிபுரிந்து வருவதை உலகம் விழி திறந்து வியந்து மகிழ்கிறது

*சீதை இறக்கின்றாள் தொழுதாள்.*

என்ற இது எவ்வளவு பரிதாபமான மொழி? நாதியின்றி இலங்கைச் சிறையில் சீதை சாகும்பொழுது திருவயோத்தியில் உள்ள தன் மாமிமார் மூவரையும் திசை நோக்கித் தொழுது கொண்டே செத்தாள் என்னும் இந்த வார்த்தை எந்த உள்ளத்தைத் தான் உருக்காது? மருமகள் என உரிமை முறை கூறாமல் சீதை எனப் பிறந்த இடத்துப் பெயரையே குறித்தாள்; மண்ணோடு பிறந்தேன்; புண்ணோடு மடிந்தேன் எனப் புண்ணோடு பொங்கி மொழிந்த படியிது. சாக நேரும் போதும் மாமிகளிடம் மரியாதை வணக்கங்களைச் செலுத்தியிருக்கிறாள்.

மாதா பிதாக்களைத் தெய்வமாக மதித்து வழிபடும் குலமகனைக் கொழுநனாகப் பெற்றுள்ளமையால் இத்தலைமகளிடம் கிழமையான விழுமிய குணங்கள் யாவும் விழைந்து குடி புகுந்துள்ளன.

இறந்து படுவதாகத் தன் முடிவை முடிவு செய்து நெடிது துணிந்துள்ளமையை மொழிகள் தெளிந்து கொள்ள நேர்ந்தன

நான் மாமிகளுக்குச் செய்த வணக்கத்தை என் சாமியிடம் மாத்திரம் சொல்லி நின்று விடாதே; அவர் என்பால் அருள் இல்லாமையால் அங்கே போய்ச் சொல்லாமல் மறந்து விடினும் விடுவர்; நீயே நேரே போய் என் மாமிகளிடம் எனது தொழுகைகளை ஞாபகமாய்ச் சொல்லி விட வேண்டும் என வேண்டியிருக்கிறாள்.

## ஏகபத்தினி விரதம்.

தன்னுடைய கணவன் தன்னிடம் அதி ரகசியமாய்ச் சொல்லியுள்ள உறுதிமொழி ஒன்றைச் சீதை அனுமானிடம் இங்கே சொல்லியுள்ளாள். அந்த மறைமொழி அரிய மகிமையுடையது.

இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தையாலும் தொடேன்.

தன் மனைவியிடம் இராமன் இந்தவாறு உறுதி கூறியிருக்கிறான். மிதிலையில் வந்து கலியாணம் செய்தஅன்று பள்ளியறையில் இது நிகழ்ந்துள்ளது என்று தெரிகின்றது. இங்ஙனம் சத்தியம் செய்து தந்தது எதற்கு? தானாகவே சொன்னாரா? சானகி கேட்டாளா? என்பது இதில் மருமமா யுள்ளது. அந்தப்புர ரகசியமா யிருந்த இது ஒரு விழுமிய நீர்மையாய் ஈண்டு உலகறிய வந்தது.

சீதையைத் தவிர வேறு எந்த மகளிரையும் விரும்பியறியாத நெஞ்சம் உடையவன் என இராமனது பரிசுத்த நிலை இங்கே வெளியாய் நின்றது. ஒருமை உள்ளம் தரும நிலையமா யுள்ளது.

இது அரிய பெரிய தவ விரதம். மனித சமூகத்திற்கு ஒரு புனித நிலையை இராமன் இனிது ஒழுகிக் காட்டியிருக்கிறான். நெறி முறையான இந்தச் சீலத்தையுடையவன் ஞாலத்தில் ஒளி சிறந்து உயர்கிறான்.

பெண்ணுக்கு நிறை கற்பாய்ப் பெருமை தருகிறது.

ஆணுக்கு நெறி ஒழுக்கமாய் உயர்வு தருகிறது.

கற்பு இழந்துபடின் பெண்மை புன்மையாய் இழிந்து படுகின்றது. ஒழுக்கம் வழுவி விடின் ஆண்மை கீழ்மையாய் அவலமுறுகின்றது. ஒழுக்கம் உயிரினும் உயர்ந்தது எனத் தேவர் குறித்திருத்தலால் அது இல்லாதவன் உயிரற்ற செத்த சவம் என்பது உய்த்துணர வந்தது. ஒழுக்கம் என்ற சொல் ஒழுங்காக ஒழுகுவது என்னும் பொருளையுடையது. ஆகவே நெறியான இந்தச் சீலத்தையே அது குறியாகக் குறித்துள்ளது. அரிய விரதம் ஆதலால் இதனையுடையவர் பெரிய மனிதராய்ப் பெரு மகிமைகளை அடைகின்றார். எல்லா நன்மைகளும் இவரை எதிர்நோக்கி வருகின்றன. யாவரும் வியந்து புகழ இவர் உயர்ந்து திகழ்கிறார்.

நலக்குரியார் யார்? எனத் திருவள்ளுவப் பெருந்தகை இப்படி ஒரு கேள்வியை அறிவுலகத்தை நோக்கிக் கேட்டிருக்கிறார். கேள்வி அதி விநயமாய் மதிநலம் கனிந்து வந்துள்ளது. உணர்வுடையார் பலரும் உள்ளம் ஊன்றி ஓர்ந்து சிந்தித்து உரிமையான விடையை உரைக்க வேண்டும் என ஊக்கத்தை யூட்டி உண்மையை எதிர்நோக்கிச் சிறிதுபோது மவுனமாய் இருந்துள்ளார்; சரியான விடை வாராமையால் பின்பு தாமே பதில் சொல்ல நேர்ந்தார். சொன்ன பதில் என்ன?

> நலக்குரியார் யார்? எனின்,
> பிறற்கு உரியாள் தோள் தோயாதார். (குறள், 149)

பிறனுடைய மனைவியை நயவாதவனே அறநலங்கள் யாவும் உடையான்; இம்மை மறுமை என்னும் இருமையிலும் நன்மை நிறைந்தவன்; புகழ் புண்ணியங்களில் உயர்ந்து பேரின்பநிலைக்குத் தனி யுரிமையாளனாய் அவன் இனிதமைந்துள்ளான் என இது உணர்த்தி யுள்ளது.

தோள் தோய்தல் எனச் சுட்டியது அத் தோய்வைத் தோய்ந்து காண வந்தது. தனக்குரியாள் தோள் தோயின் மனக்கினிய மக்கட் பேறும் மனைமாண்பும் மருவுகின்றன; பிறற்குரியாள் தோள் தோயின் பிழையும் பீழையும் பெருகிப் பெருங்கேடுகள் விளைகின்றன. பிறன் மனைவியைத் தோய்கின்றவன் அவன் குடியை அடியோடு கெடுத்தவனாகின்றான். கேடு என்ன? என்பதை நாடியறிக. பிறன் குடிக்குக் கேடு நேரவே தன் குடியும் கெட நேர்கின்றது. தன்னை நோக்கித் தனது மனைவியும் மக்களும் பிழைபட நேர்தலால் குடும்பம் இழிவடைந்து தாழ்கின்றது. ஒரு ஈன இச்சையால் பல ஊனங்கள் விளைந்து விடுகின்றன.

இவ்வாறு பல வகையிலும் பழிபாவங்கள் விளைதலால் அயல் மனை விழைவு எவ்வகையிலும் இழிவு என வந்தது.

ஆண்மை பெண்மை என்னும் இருபாலும் புனிதம் உடையனவாய்த் தனி மகிமை பெறுதலால் ஏகதார விரதம் யாவராலும் புகழ்ந்து யாண்டும் வியந்து போற்றப் பட்டுள்ளது.

"I valued myself upon being a strict monogamist,"
(Goldsmith)

"ஏகதாரவிரதனுயிருப்பதை நான் மிகவும் மதித்துள்ளேன்" என்னும் இது இங்கே அறியவுரியது. பலதார விவாகத்தை மேல் நாடும் இகழ்ந்திருப்பதை இதனால் அறிந்து கொள்ளலாம். ஒரு தாரத்தையுடையவன் மறுதாரத்தை மணம் புரியலாகாது என்று அரசாங்கமும் இது பொழுது நம் நாட்டில் சட்டம் செய்ய நேர்ந்துள்ளது. சமுதாயம் நீதியோடு ஒழுகச் சட்டம் ஓதி வருகிறது.

யோக்கியனுக்குத் தன் உள்ளமே சட்டம் ஆதலால் அவன் என்றும் நெறிமுறையே நின்று நீதியாய் ஒழுகி வருகிறான்.

"இரண்டு பெண்டாட்டிக்காரன் திண்டாட்டம்" என்னும் பழமொழியால் இருமனைவிகளை யுடையவன் நிலை தெரியலாம். காதல் பிளவுபடின் அங்கே நோதல் விளைகின்றது.

முதலாவது மனைவிதான் தாரம்.

இரண்டாவது சேரின் அது பாரம்.

மூன்றாவது சேரின் கோரம்.

என உலக வசனங்கள் இவ்வாறு உலாவி வருகின்றன.

பலதார மணத்தால் தன் தந்தை பட்டுள்ள பாட்டை இம் மைந்தன் அறிந்துள்ளமையால் ஏகதார விரதத்தை இந்தவாறு உறுதி செய்து கொண்டான் என யூகம் செய்யலாகாது. இயல்பாகவே நெறியுடையவன்; நிறைந்த சீலம் நேர்ந்து நின்றது.

ஒக மாட்ட;

ஒக பாணமு;

ஒக பத்னி

இராமனிடம் மருவியிருந்த அரிய நீர்மைகள் மூன்று எனத் தெலுங்கில் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளது. ஒரு சொல்லே பேசும் சத்திய சீலன்; ஒரு பாணத்தால் குறி தவறாமல் எதையும் வெல்ல வல்ல வெற்றி வீரன்; ஒரு மனைவியையே மருவி ஒழுகும் உத்தம தீரன் என்பதை இங்ஙனம் உரைத்திருக்கின்றனர்.

இருமாதரைச் சிந்தையாலும் தொடேன் என இராம வாக்காய் வந்துள்ள இந்த வாக்கியம் ஊன்றி உணரவுரியது.

கையால் தொடுதல், கண்ணால் தொடுதல், மெய்யால் தொடுதல், மனத்தால் தொடுதல் எனத் தொடுதல்கள் பலபடிகளாய்த்

தோய்ந்துள்ளன. கிட்ட நெருங்காமலே தொட்டு வருகின்றனர்.

தருண மங்கையரை விழைந்து நோக்கின் அது விழியால் தொட்ட படியாம். கையால் தொடாத விரதியரும் கண்ணால் தொட்டு விடுகின்றனர். பழங் கிழவரும் இளங்குமரிகளை உளங் கூர்ந்து பார்க்கின்றனர். இச்சை நோக்கில் இழிந்து படுகின்றனர்.

"கோட்டியுள் கொம்பர் குவிமுலை நோக்குவோன்
ஓட்டை மனவன் உரமிலி" (பரிபாடல், 12)

கூட்டத்தில் ஒரு மங்கையின் கொங்கையை நச்சி நோக்கினவனை ஓட்டை மனத்தன் என நல்வழுதியார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் உலகம் காணக் காட்டியிருக்கிறார். இப்படி ஓட்டைபடாத உள்ளங்களை ஓர்ந்து நோக்கின் எவ்வளவு தேர்ந்து வரும்? எண்ணிப் பார்க்க வேண்டும்.

"பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சம்
கறந்திடத்தை நாடுதே கண்."

எனப் பட்டினத்தார் இப்படிப் பரிதாபமாய் வருந்தியுள்ளார். ஆண்களுடைய கண்ணும் மனமும் பெண்கள்பால் அவாவி யுழலும் அவல நிலைகளை இதனால் அறிந்து கொள்ளலாம். பிறந்த இடம், கறந்த இடம் எனக் காட்டியிருக்கும் காட்சியைக் கருதிக் காணுக. இத்தகைய புன்மையில் இழியாமல் எவனுடைய உள்ளம் தூய்மையாயுள்ளதோ அவன் உயர் குலமகனாய் ஒளி மிகப் பெறுகின்றான்.

இந்த உத்தம நிலையில் இராமன் உயர்ந்து நிற்கின்றான்.

ஏகபத்தினி விரதனாயுள்ளமையால் இந்த உத்தமனிடம் அரிய பல மகிமைகள் பெருகியுள்ளன. கற்பொழுக்கம் அற்புத நிலைகளை அருளி வருகின்றன. அங்கே அதிசயங்கள் ஒளிர்கின்றன.

## மூன்று அதிசயங்கள்.

சீன தேசத்தில் ஓர் அழகிய கோபுரம் உள்ளது. அதில் மூன்று ஓவியப் பொம்மைகள் உள்ளன. எல்லாரும் எளிதே காணும்படி அவை தெளிவாய் நிற்கின்றன. ஒன்று கண்ணைக் கையால் மூடியுள்ளது; மற்று ஒன்று செவியைப் பொத்தியுளது; வேறு ஒன்று வாயை மறைத்துள்ளது. விசித்திரக் காட்சிகளாய் விளங்கி நிற்கின்ற அவற்றை அயல் நாட்டுப் பெரியார் ஒருவர்

கண்டு வியந்து நின்றார். என்ன கருத்தோடு அவை அன்னவாறு நிற்கின்றன? என்பதை அறிய அவாவினார்; அங்கு ஓர் பெரியவரை வினவினார். "ஒரு மனிதன் உத்தமனாய் உயர வேண்டுமாயின் இத்தகைய நிலையில் இருக்கவேண்டும்" என்பதை அவை உணர்த்தியுள்ளன என அம் முதியவர் உரைத்தருளினார்.

பிறர் மனைவியரை விழைந்து நோக்காதே.

அயலார் இரகசியங்களை ஒட்டிக் கேளாதே.

எவரையும் புறங் கூறிப் பழித்துப் பேசாதே.

என்னும் உண்மைகளை உலகிற்கு உணர்த்தக் கண்ணையும், காதையும், வாயையும் அப் பொம்மைகள் பொத்தி நிற்கின்றன என்று அறியவே அப் பெரியவர் பெரு மகிழ்ச்சியுடையராய்ப் பெயர்ந்து போயினார்; உயிருள்ள மக்களுக்கு உயிரில்லாத பொம்மைகள் உணர்வு நலங்களை ஊட்டியருள்வது உவகை நிலையமாய்க் காட்சி தருகிறது. தருமநெறிகளையுடையன பெருமையுறுகின்றன.

சீன தேசத்தின் இந்த ஓவியக் காட்சியைக் காந்தியடிகள் மிகவும் உவந்து போற்றியுள்ளார். நாளும் ஞாபகப் படுத்திப் பலரிடமும் இதனைப் போதித்திருக்கிறார். இந்தப் போதனையைச் சீனம் தந்தது என்று அவர் சிந்தித்து வந்துள்ளார்.

தமிழ் தந்துள்ளதை இங்கே நாம் சிந்திக்க வேண்டும்.

பிறர் மறையின்கண் செவிடாய்த், திறனறிந்து
ஏதிலார் இற்கண் குருடனாய்த், தீய
புறங்கூற்றில் மூகையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா அவற்கு. (நாலடியார் 158)

இந்தக் கவியின் கருத்தை ஊன்றி நோக்குவார் உள்ளம் உவந்து கொள்ளுவார். உவகைச் சுவை நிரம்பியுள்ளது.

ஏதிலார் = அயலார். இல் = மனைவி.

குருடு செவிடு ஊமை என்பன பரிதாபமான ஊனங்கள். அந்த ஊன நிலைகளை மானவர் உவந்து கொள்ள வேண்டும் என ஞான நலம் கனிய இது உணர்த்தியுள்ளது.

அயலார் மனைவியரை அவாவிப் பாராதே; கோள் கேளாதே; புறங் கூறாதே என்பார் இங்ஙனம் போதித்திருக்கிறார்

இன்ன வகையில் குருடனாய், இன்ன நிலையில் செவிடனாய், இன்ன முறையில் ஊமையாயிரு என்று சொன்னது பொறிகளை அடக்கியாளும் நெறியினை உணர்த்திய படியாம்.

இந்த நெறி முறையில் ஒழுகி வருபவன் தரும சீலனாய்த் தழைத்து வருவன் ஆதலால் அவற்கு அறங் கூற வேண்டா என்றார். புண்ணிய ஒழுக்கத்தைக் கண் எதிரே தொகுத்துக் காட்டியுள்ளார். இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இங்கே இது போதிக்கப் பட்டுள்ளது.

நிற்பானேல் என்றது அந்த நிலையின் அருமை தெரிய வந்தது. பன்மையில் கூறாமல் ஒருமையில் குறித்தது உன்னியுணரவுரியது. ஆயிரத்தில் ஒருவனாவது இப்படி ஒழுகி வருவான் ஆயின் அந் நாடு பீடும் பெருமையும் பெற்று எந்நாடும் புகழ விளங்கும் என்க.

இந்த அரிய நீர்மைகள் யாவும் இராமனிடம் இயல்பாய் நிறைந்திருத்தலால் உலகமெல்லாம் உவந்து போற்ற இக்குல மகன் உயர்ந்து என்றும் தலைமையுடன் நிலவி நிற்கின்றான்.

## தேவியின் சிந்தனை.

தன் தார சீலனாய் ஒழுகிவரும் இவ் வீரன் செவியில் நேரே கூறும்படி அனுமானிடம் சானகி இங்கே கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. உள்ளக்குறிப்புகள் உரைகளில் ஒலிக்கின்றன. தொனிகள் நுணுகி யுணர வுரியன.

தன்னை இகழ்ந்து தள்ளிவிட்டு வேறு ஒருத்தியை எங்கே தன் கணவன் மணந்து கொள்ளுவானோ? என்ற ஐயமும் அச்சமும் இந்தப் பெண்ணரசி யுள்ளத்தில் பைய நுழைந்துள்ளமையை வாய்ச் சொல்லால் உணர்ந்து கொள்ளுகிறோம்.

தன் நாயகன் மறுமாதரை நினையான் என்பதை உறுதியாகத் தெளிந்து கொண்டவள் ஆதலால் இரு மாதரை என அவன் சொன்னபடியே சுட்டிச் சொன்னாள். இரண்டாம் தாரமாக எவளையாவது கட்டிக் கொள்ளுவாரோ? என்ற பயம் இப்படிக் கட்டிக் காக்கச் செய்தது. பள்ளியறையில் முன்னம் தன்னிடம் சொன்னதை ஞாபகப்படுத்தியது, தன்னைத் தவிர வேறு எவளையும் அவ்வீரன் உன்னுதிருக்க வேண்டியே. மறந்து மோசம் போய் விடலாகாதே! என்று பாசம் படிந்து பரிந்து பேசியிருக்கிறாள்.

தனக்கு உரிமையாய் வாய்த்துள்ள அருமை நாயகனை உன்னி யுன்னி யுருகி யுள்ளாள். அன்புருக்கம் என்புருக்கமாய் நின்றது.

உரிய கணவன் அயல் முகம் பார்ப்பதை எவளும் சகியாள்.

பதுமாபதி என்பவள் உதயண மன்னனுடைய அருமை மனைவி. அவன் ஒரு நாள் வேறு நோக்கம் கொண்டதைக் கண்டதும் இவள் சீறிச் சினந்தாள். உள்ளம் கனன்று ஊடிச் சொன்னது நாடியறிய வுரியது. அயலே வருகிறது.

"சூட்டுமுகம் திருத்தி வேட்டுநறு நீரில்
மயிரும் இறகும் செயிரறக் கழீஇக்
கோல்நெய் பூசித் தூய்மையுள் நிறீஇப்
பாலும் சோறும் வாலிதின் ஊட்டினும்
குப்பை கிளைப்பறுக் கோழி போல்வர்
மக்கள் என்று மதியோர் உரைத்ததைக்
கண்ணிற் கண்டேன் என்று கைந்நெரித்து
ஒண்ணுதல் மாதர் உருகெழு சினத்தள்
தம்மால் வந்த தாங்கரும் வெந்நோய்
தம்மை நோவது அல்லது பிறரை
என்னதும் நோவல் ஏதமுடைத்து" (பெருங்கதை 3-14)

பால் அன்னம் ஊட்டிச் சேவலை ஆவலோடு போற்றி வளர்ப்பினும் அது குப்பை கிளைக்கப் போவது போல் தன் நாயகன் மயலாய் அயலை நாடினன் என அவள் இங்ஙனம் ஊடி யிருக்கிறாள். காதலிகளுடைய உரிமை யுணர்ச்சிகள் உள்ளக் கவற்சிகளாய் வருகின்றன.

தனக்கே ஏக போக வுரிமையாய் இனிதமைந்துள்ளதைச் சீதை இங்கே ஆதரவோடு கருதியிருக்கிறாள். திருச்செவி என்றது அந்தக் காதின் அழகையும் அமைதியையும் கருதியுணர. அரிய மாதவர்களுடைய பொருள் மொழிகளை யெல்லாம் கேட்டுத் திருவேறியுள்ளமையால் திருச் செவி என்றாள். நாளும் அருகிருந்து தன் உரைகளைக் கேட்டு வந்த உரிமையும் தெரிய வந்தது. உருவ அழகு உள்ளம் கவர்ந்துள்ளமையால் உறுப்புக்கள் தோறும் விருப்பம் மீதூர்ந்து வியந்து கூறுகின்றாள்.

எல்லாரும் கேட்கும்படி வெளிப்படையாய்ச் சொல்லக் கூடாத சூளுரை ஆதலால் செவியருகே போய் மெல்லச் சொல்

என்றாள். சொல்லுவாய் என்னாமல் சாற்றுவாய் என்றது உள்ளத்தில் பதியும்படி உரைக்க வேண்டி. சாற்றுதல்—ஏதுக்களை எடுத்துக் காட்டி இடித்துச் சொல்லுதல்.

செவ்வரம் என்றது செம்மையாக உறுதிமொழி கூறிய உண்மையை. சத்திய விரதனாய் யாண்டும் மாறுபடாத நேர்மையாளன் அருளிய வரம் என அதன் நீர்மையை நெஞ்சம் தெளிய நினைவுறுத்தினாள். குறிப்பு மொழிகள் விருப்புடன் வந்தன.

தனக்கு உயிராதாரமாயுள்ள தன் நாயகன் தன்னையே தாரமாக் கொண்டிருக்க வேண்டும் என்று பேராவலோடு இக்குலமகள் பெருகியுள்ளமையை உரைகள் உலகறியச் செய்துள்ளன.

ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்.

தனது அவலக் கவலையால் மீண்டும் இவ்வாறு மறுகியுள்ளாள்.

சிறையிலிருந்து மீளாமல் அங்கேயே இறந்து போக நேர்ந்தாலும் மறுபடியும் பிறந்து வந்து இராமன் திருமேனியைத் தீண்டி மகிழுவேன் என உறுதியாகக் கருதியுள்ளமையால் அந்த உள்ளத்தின் ஆவலும் உழுவலன்பும் தெளிய வந்தன.

இராமனுக்கு மனைவியாயிருப்பதே தனக்குப் பேரின்ப நிலையம் என்று இப்பெண்ணரசி எண்ணியிருப்பது உண்மை உறவுகளை ஓர்ந்துணரச் செய்தது. மலரும் மணமும் போல் இருவரும் ஒருவராய் மருவியுள்ள உரிமைகள் மருமமாய் அறிய நேர்ந்தன.

ஒன்றாய் ஒன்றியிருந்தவர் காரிய நிமித்தமாய் இரண்டாய்ப் பிரிந்துள்ளனர்; கருமம் முடிந்தால் பழையபடி ஒருமையாய் மருவி மகிழ்வர் ஆதலால் அக் கிழமை தோன்ற நின்றது.

வேண்டினாள் தொழுது என்று விளம்புவாய்!

தன் பதியிடம் போய்த் தனது வேண்டுகோளை விரைந்து சொல்லும்படி இவ்வாறு வேண்டியிருக்கிறாள். "வேறு கலியாணம் செய்து கொள்ளலாகாது; இப் பிறவியில் எய்தவில்லை ஆனாலும் மறு பிறவியிலாவது மனைவியாய் வந்து எம் பெருமானுக்கு நான் இனிய பணிவிடை புரிவேன்" என அன்புரிமையோடு அகமுருகி உரைத்துள்ளாள். காதலன்பால் இக் காதலி கொண்டுள்ள ஆவல்கள் பெரிய நோதல்களாய் வேதனைகளை விளைத்துள்ளன.

பிரிவில் மறுகியுள்ளவள் அவ்வுருவைக் காண அவாவிப் பெரிதும் கவல்கின்ருள். பழைய காட்சிகள் எல்லாம் நினைவில் தோன்றி நெஞ்சை வருத்தி நெடும் பரிவுகளாய் நீண்டு நிற்கின்றன.

விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரைசு செய்து என்னே? என் ஊழ்வினை உன்னுவேன்.

மணிமுடி சூடி அரச கோலங்களோடு தன் நாயகன் அரியாசனத்தில் வீற்றிருக்கும் காட்சியைக் கண்டு மகிழும்படியான பாக்கியம் தனக்குக் கிடையாமல் போயதே! என்று உள்ளம் உடைந்து இங்ஙனம் உருகியிருக்கிருள். மீண்டு திருவயோத்திக்குப் போய் இராமன் ஆண்டு ஆட்சிபுரியும் மாட்சிகளையெல்லாம் எதிர் நோக்கி எண்ணியிருந்தவள் இவ்வண்ணம் இரங்கி மொழிந்துள்ளாள். சிங்காசனத்தில் அரச ஆடம்பரங்களோடு தன் காதலனைக் காண விழைந்துள்ள உண்மை இங்கே நாம் காண வந்தது. ஆவல் எல்லாம் காவலன் காட்சியில் மேவி மிளிர்கின்றன.

சக்கரவர்த்தித் திருமகன் ஆதலால் அந்த உன்னத நிலையில் அவனைக் கண்டு களிக்க இவளுடைய உள்ளம் அவாவியுள்ளது. சிறையில் அகப்பட்டு மறுகியிருந்தாலும் தான் ஒரு சக்கரவர்த்தினி என்பதை இங்கே பக்குவமாய்க் காட்டியருளினுள்.

அரச வாழ்வோடு தன் நாயகனைக் காணும்படி ஊழ்வினை உதவி செய்யவில்லையே! என்று விதியினை நொந்திருக்கிருள். "ஊழ்வினை உன்னுவேன்" என்றது நேர்ந்துள்ள தாழ்வினை எண்ணிவந்தது. கவலைஏக்கங்கள் அவலங்களாய்ப் பெருகியுள்ளன.

"அனும! எம்பெருமான் இங்கு வந்து என்னை மீட்டியருளுவார் என்று உறுதியாய் நம்ப முடியவில்லை. பரதநம்பி முதலிய உரிமையாளரை ஆதரித்தருள அயோத்திக்கே அவர் மீண்டுபோய் விடுவார்; நான் ஈண்டு மாண்டுபடவே விதி மூண்டுள்ளது; மதியூகியான நீ மிதிலைக்குப் போய் என் தந்தையரிடம் எனது வந்தனைகளை உரைத்தருள்; எப்படியும் எம்பெருமானைத் திருஅயோத்திக்கு அழைத்துப் போய் முடி சூட்டி வைக்கும்படி சுகிரீவ மன்னனிடம் நான் வேண்டியதாக நீ சொல்ல வேண்டும்; ஈண்டு இனி நீ தாமதித்து நிற்க வேண்டாம்; மீண்டுபோய் ஆண்டகைக்கு ஆவதைச் செய்தருள்" என்று சீதை இவ்வாறு வேண்டி நின்ருள். பரிவுரிமைகள் பரிதாபங்களாய் நின்றன.

மன நிலை சூழ்ந்து இக் குலமகள் மறுகியுள்ளமையை உரைகளில் உணர்ந்து உளம் மிக இரங்குகிறோம். உயிர் வாழ்வு துயர் வீழ்வாய்ச் சுழன்று உழலுகின்றது எவ்வளவு ஆறுதல் கூறியும் தேறுதலின்றித் தியங்கி மயங்குவதைத் தெரிந்து அனுமான் மறுபடியும் உறுதி நிலைகளை உணர்த்தி உள்ளம் தேற்ற நேர்ந்தான்.

## அனுமான் தேற்றியது.

"அம்மா! நீங்கள் உறுதி குன்றி உள்ளம் உடைந்து பேசுகிறீர்கள். சஞ்சலங்களால் நெஞ்சம் தளர்ந்து தவிக்கின்றீர்கள். தன்னுயிரினும் இன்னுயிராக உங்களை எம்பெருமான் கருதியுள்ளார். அந்த வீர மூர்த்தி விரைந்து வந்து சிறைமீட்டிக் காத்தருளுவார். நம்பிக்கையின்றி நீங்கள் வெம்பி வெதும்புவது எனக்கு மிகவும் துன்பமாகின்றது. ஒரு மாதத்துள் வரவில்லையானால் உயிர் போய்விடும் என்று துயர் கூர்ந்து சொல்லுகிறீர்கள். உங்களை இங்கே சாகும்படி தள்ளிவிட்டு ஆண்டவன் மீண்டு அயோத்திக்குப் போய் விடுவான்; நாங்களும் கூட்டமாய்த் திரண்டு அவன்பின் சென்று விடுவோம்; இலங்கை இன்பக் களிப்பில் இலங்கி நிற்கும்; அரக்கர் எல்லாரும் சுகமாய் வாழ்ந்திருப்பர் என்று நீங்கள் சூழ்ந்திருக்கிறீர்கள்! இல்லையா? அம்மா! இவ்வாறு எண்ணி ஐயுறுவது எங்களை இகழ்ந்து வைதபடியாம் தாயே! இப்படிச் சந்தேகமாய்ச் சிந்தை கவலலாகாது. தெளிந்து நில்லுங்கள். உங்களுக்கு இடர் செய்த இராவணனைக் குலத்தோடு தொலைத்து உலகம் எல்லாம் உவந்து கொண்டாடக் கோதண்ட வீரன் யாண்டும் தருமங்களை நிலை நிறுத்தியருளுவான். அந்த வீர வள்ளலுடைய போராடல்களையும் வெற்றி நிலைகளையும் வானவர் எவரும் காண விழைந்து வேணவாவோடு விரைந்து நிற்கின்றனர். நீங்களே யாவும் நேரே காணப் போகிறீர்கள்!" என விளைவு நிலைகளை இங்ஙனம் தெளிவாகக் கூறி மேலும் உறுதி நலங்களை அறுதியிட்டு உரைத்தான்.

ஊழியின் இறுதியின் உரும் எறிந்தெனக்
கேழ்கிளர் சுடுகணை கிழித்த புணபொழி
தாழிருங் குருதியில் தரங்க வேலைகள்
ஏழும் ஒன்ருக நின்று இரைப்பக் காண்டியால். (1)

சூலியம் பெருவயிறு அலைத்துச் சோர்வுறும்
ஆலியங் கண்ணியர் அறுத்து நீத்தன

வாலியும் கடப்பரு வனப்ப வானுயர்
தாவியம் பெருமலை தய்ங்கக் காண்டியால். (2)

விண்ணின் நீளிய நெடுங் கழுதும் வெஞ்சிறை
எண்ணின் நீளிய பெரும் பறவை யீட்டமும்
புண்ணின் நீர்ப் புணரியில் படிந்து பூவையர்
கண்ணின் நீர் ஆற்றினில் குளிப்பக் காண்டியால். (3)

காம்பயில் முரசினம் கறங்கக் கைதொடர்
நரம்பினும் இமிழிசை நவில நாடகம்
அரம்பையர் ஆடிய அரங்கின் ஆண்தொழில்
குரங்குகள் முறைமுறை குனிப்பக் காண்டியால். (4)

புரையுறு புன்தொழில் அரக்கர் புண்பொழி
திரையுறு குருதியாறு ஈர்ப்பச் செல்வன
வரையுறு பிணப்பெரும் பிறக்கம் மண்டின
கரையுறு நெடுங்கடல் தூர்ப்பக் காண்டியால். (5)

வினையுடை அரக்கராம் இருந்தை வெந்துகச்
சனகிஎன்று ஒருதழல் நடுவண் தங்கலால்
அனகன்கை அம்பெனும் அளவில் ஊதையால
கனகநீடு இலங்கை நின்று உருகக் காண்டியால், (6)

தாக்கிகல் இராவணன் தலையில் தாவின
பாக்கியம் அனையநின் பழிப்பில் மேனியை
நோககிய கண்களை நுதிகொள் மூக்கினால்
காக்கைகள் கவர்ந்து கொண்டு உண்ணக் காணடியால்.(7)

செப்புறல் என்பல தெய்வ வாளிகள்
இப்புறத்து அரக்கரை முருக்கி ஏகின
முப்புறத்துலகையும் முடிக்க மூட்டலால்
அப்புறத் தரக்கரும் அவியக் காண்டியால். (8)

ஈண்டு ஒரு திங்களிவ் இடரின் வைகுதல்
வேண்டுவ தன்று நான் விரைவில் வீரனைக்
காண்டலே குறைவுபின் காலம் வேண்டுமோ
ஆண்டகை இனிஒரு பொழுதும் ஆற்றுமோ? (9)

தீர்த்தனும் கவிக்குலத்து இறையும் தேவிநின்
வர்த்தை கேட்டு உவப்பதன் முன்னர் மாக்கடல்
தூர்த்தன இலங்கையைச் சூழுமாக் குரங்கு
ஆர்த்தது கேட்டுவந்து இருத்தி அன்னை நீ (10)

எண்ணரும் பெரும்படை நாளை இந்நகர்
நண்ணிய பொழுதது நடுவண் நங்கை நீ
விண்ணுறக் கருளன்மேல் விளங்கும் விண்டுவின்
கண்ணனை என்னெடு வெரிநிற் காண்டியால். (11)

அங்கதன் தோள்மிசை இளவல் அம்மலை
பொங்குவெங் கதிர்எனப் பொலியப் போர்ப்படை
இங்கு வந்து இறுக்கும்நீ இடரும் ஐயமும்
சங்கையும் நீங்குதி தனிமை நீங்குவாய்! (12)

குராவருங் குழலிஇக் குறித்த நாளினே
விராவரு நெடுஞ்சிறை மீட்கி லானெனின்
பராவரு பழியொடு பாவம் பற்றுதற்கு
இராவணன் அவன்; இவன் இராமன் என்றனன் (13)

(சூளாமணிப் படலம்)

மறுகி மனம் கவன்று நின்ற சீதை உறுதி கொண்டு தேற அனுமான் இவ்வாறு உரையாடியிருக்கிறான். உணர்ச்சி வேகங்கள் உரைகள் எங்கணும் பொங்கி ஒளி வீசியுள்ளன.

"ஊழி முடிவில் இடிகள் விழுதல் போல் இராமபாணங்கள் பாயும்; அரக்கர்கள் திரள் திரளாய் மடிந்து மாய்வர்; இரத்த வெள்ளம் கடல்களாய்ப் பெருகி உடல்கள் நிறைந்து நிற்கும்; அரக்கிகளுடைய தாலிகள் அறுபட்டு வாலியும் கடக்கமுடியாத மலைகளாய் அவை குவிந்து கிடக்கும்; பேய்களும் கழுகுகளும் குருதி வெள்ளத்தில் குளித்துப் பிணங்களைத் தின்று களிக்கும்; அரம்பையர் ஆடிய நடனசாலைகளில் குரங்குகள் கூத்தாடி மகிழும்; அயலே உள்ள அலைகடல் எங்கணும் பிணமலைகள் பெருகி எழும்; இந்த இலங்கை நகர முழுதும் நெருப்பால் எரிந்து நிலை குலைந்து படும்; உங்களை இச்சித்து நோக்கிய இராவணன் கண்களைக் காக்கைகள் கொத்திப் பிடுங்கும்; இராட்சதர்கள் அழிந்து படுகின்ற அவல நிலைகளைக் கண்டு அஞ்சாத காலனும் அஞ்சி அயர்வான்; இலங்கையோடு நில்லாமல் அரக்கர் குலங்கள் எங்குள்ளனவோ அங்கெல்லாம் இராமபாணங்கள் ஓடி யாவரையும்நீறு செய்து அழிக்கும்; ஒரு மாதம் கூட வேண்டியதில்லை; மேலே கூறியன எல்லாம் ஒல்லையில் நிகழும்; யாவும் உங்கள் கண்களால் நேரே காணலாகும். நான் மீண்டுபோய் ஆண்டவனைக் கண்டு கண்டுள்ள நிலைமையைச் சொல்லும் பொழுதே வானரங்கள்

ஆர்த்தெழுகின்ற ஆரவாரங்களைக் கேட்டு நீங்கள் ஆனந்தம் அடைவீர்கள்; அன்னையே! மேலும் பன்னிப் பேசுவானேன்? குறித்த தவணைக்குள் எம்பெருமான் இங்கு உறுதியாய் வந்தருளுவார்; இதனை உண்மையாக நம்புங்கள்" என அனுமான் இங்ஙனம் தெளிவு கூறினன்.

சந்தேகமாய்ச் சஞ்சலமடைந்து நொந்த நெஞ்சுக்கு இந்த உரைகள் இனிய சஞ்சீவிகளாய் இதம் புரிய வந்தன.

ஆலியம் கண்ணியர் அறுத்து நீத்தன
தாலியம் பெருமலை,

என இங்ஙனம் கோலி உரைத்தது அரக்கர்களுடைய அழிவுநிலையைத் தெளிவாக அளவு காண. ஆலி = மழைநீர். அரக்கிகள் வயிற்றில் அடித்து அலறி அழுது அறுத்து எறிந்த தாலிகள் நெடிய மலைகளாய் நிலை ஓங்கி நிற்கும் என்றது நேரவுள்ள கோலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தது.

அரக்கர் குலம் அடியோடு கருவற்றுப்போம் என முடிவை முடிவாக உணர்த்துகின்றான் ஆதலால் சூலிகளையும் சுட்டி உரைத்தான். சூலிகள் = கருப்பவதிகள். இரக்கமுடையவனாயிருந்தும் அரக்கர்மேல் மூண்டுள்ள கோபக்கொதிப்பினால் இப்படி வீறோடு வேகமாய்ப் பேசினான். நல்ல உத்தமியின் உள்ளம் கொதிக்க ஊறு செய்தவன் குலம் நீறாய் மாய்ந்து பாழாய் ஒழியும் என நிலைமையைத் தெளிவுறுத்தினான். ஆடவர் அழிவுகளை அரிவையர் அழுகைகளால் விழி தெரிய வைத்தான்.

"அரக்கியர் நாண் அற்ற போதன்றித் தான் பெற்ற நாணம் பெருமை பெறாது" என முன்னம் சீதை கூறியதைக் கேட்டு நின்றான் ஆதலால் அரக்கிகளுடைய தாலியறுப்புகளை இங்ஙனம் குறித்துக் காட்டினான். பிராட்டியின் உள்ளம் உவந்து தெளிய உரைகள் விளைந்து வந்தன.

சனகி ஆகிய நெருப்பு உள்ளே இருத்தலால் இலங்கை விரைந்து எரிந்து போம் என விளக்கியருளினான். பொன் கொண்டு இழைத்த மணிமாடங்கள் கோடிகோடியாய் நீடியுள்ள அழகிய இராசதானி அடியோடு நாசமாம் எனப் பேசி நின்றான்.

வினையுடை அரக்கராம் இருந்தை வெந்துக
கனகம் நீடு இலங்கை நின்று உருகக் காண்டி!

ஊர் அழிந்து படுவதை இப்படி உருவகப்படுத்தி உரைத்திருக்கிறான். ஒரு ஓட்டில் உமி நிறைத்து அதன் இடையே கரிகளை அடுக்கிப் பொற்கொல்லர் தங்கத்தை உருக்கும் காட்சி இங்கே காண வந்தது. உரையின் உருவகம் கலையின் கருவகமாயது.

ஓடு ஊருள்ள இடம்; அங்குள்ள பொருள்கள் உமிகள்; அரக்கர்கள் கரிகள்; சீதை நெருப்பு; இராமபாணம் காற்று; இராமன் தட்டான்; இலங்கை பொன் உருண்டை. அது உருகி அழிவது விழி எதிரே காண வந்தது.

வினையுடை அரக்கர் என்றது கொடிய தீவினைகளைச் செய்கின்றவர் என அவரது பாவத் தீமைகள் நன்கு தெரிய நேர்ந்தது. இருந்தை=கரி. எவ்வளவு செழித்து வாழ்ந்தாலும் தீவினையாளர் இழிந்து அழிந்து போவர் என்னும் குறிப்பு இதில் நுனித்துணர நின்றது. கருநிற நிருதர் கரி என நேர்ந்தனர்.

அருமையும் பெருமையும் நிறைந்து அதிசய அழகுடன் மருவியுள்ளமையால் கனகம் நீடு என அந்நகரை இனிது கூறினான். கனகம்=பொன். பொன்னகரினும் இனிய நன்னகர் எனப் பொலிந்துள்ளமையால் இன்னவாறு புகழ்ந்து கூற வந்தது.

"மரம் அடங்கலும் கற்பகம்; மனை எலாம் கனகம்" என முதலில் ஊரைப் பார்த்த போது உள்ளம் வியந்தான் ஆதலால் அது பாழாக நேர்ந்துள்ளதை இங்ஙனம் பரிந்து சொல்லினான்.

அரக்கர் குலமும் இலங்கையும் அடியோடு அழிந்து படுகிற நிலை தெளிந்து கொள்ள வந்தது. கரிகள் எரிந்துபடும் அளவு பொன் உருகி வரும்; நிருதர் அழியும் அளவு ஊர் உருகி வழிந்து ஒழியும் என்க.

சனகி என்று ஒரு தழல்.

சீதையின் எதிரே அனுமான் இவ்வாறு கூறியுள்ளான்.

பிராட்டி கற்புத் தீ என்பதை அற்புதமாக் குறிப்பித்தான். ஒரு தழல் என்றது அதன் அதிசய நிலை கருதி. தன்னைத் தொட்டவரை மட்டும் உலகத் தீ சுட்டு எரிக்கும்; தொடாமல் எட்ட நின்று கெட்ட எண்ணம் எண்ணியவனைக் குலத்தோடு இத் தீ எரித்து அழிக்க வல்லது என்னும் குறிப்பு கூர்ந்துணர வந்தது.

தழுவியதை அழிவு செய்வது தழல் என்று ஆயது.

பஞ்ச பூதங்களில் ஒன்ருகிய அந்த இயற்கைத் தீயினும் விசித்திர வேறுபாடுடையது என இந்தக் கற்புத் தீ இங்கே காட்டப்பட்டது. தூய பதிவிரதையின் தூய்மை துலங்கி நின்றது.

உள்ளே நெருப்பு இருந்தாலும் வெளியே நின்று காற்று வீச வில்லையானல் அது விரைந்து பற்ருது ஆதலால் அதற்கு ஏற்றபடியான காற்று இங்கே காண வந்தது.

அனகன் கை அம்பு எனும் அளவில் ஊதை.

இராம பாணங்களின் வேகங்கள் இங்ஙனம் விழி தெரிய நின்றன. ஊதை = காற்று. வாயாலும், துருத்தியாலும் நெருப்பை ஊதித் தங்கத்தை உருக்குவர் ஆதலால் அந்தக் குறிப்பு மொழி குதித்து வந்தது.

இராமனை இங்கே அனகன் என்றது புண்ணிய மூர்த்தி என்பதை எண்ணியுணர. பாவிகளை அழிக்க நேர்ந்துள்ளமையால் இந்த ஒவிய வுருவனை இங்ஙனம் உணர்த்தியருளினன். பரிசுத்தமான தீயை உள்ளே வைத்துத் தீயவர்களை மாய நூறும் மாயா வல்லவன் என்பது தெரிய வந்தது.

கலா வல்லவன் ஆதலால் இவ்வாறு உருவக அணியில் அனுமான் உரைகள் ஆடினன். அரக்கரோடு இலங்கையைக் கொல்ல நேர்ந்துள்ளமையால் பொன்னுருக்கும் கொல்லன் என இராமனை இங்கே நம் முன் நிறுத்தினன்.

தன் ஒக்கும் செல்வக் கமலைப் பிரான்செஞ் சடாடவி மற்று
என் ஒக்கும் என்னின்? எரி ஒக்கும்; கொன்றை எரியிலிட்ட
பொன்ஒக்கும்; வண்டுகரிஒக்கும்; கங்கை அப்பொன்செய்விக்கும்
மின்ஒக்கும்; பொன்செய் கிழக்கொல்லன் ஒக்கும் அவ்வெண் பிறையே
(திருவாரூர் நான்மணி மாலை)

சிவபெருமானுடைய தலைக் கோலத்தை இது குறித்துளது.

செஞ்சடை, தீ; கொன்றை மலர், பொன்; வண்டுகள், கரிகள்; கங்கை, அங்கே பொன் அணி செய்விக்க வந்துள்ள மங்கை; வெண்பிறை, மூதுரு வளைந்த கிழத் தட்டான் என இது சுட்டியிருக்கும் அழகைப் பார்க்க.

பிறைச் சந்திரன் அங்கே கூனிய கிழத்தட்டானயிருந்தான்; இராமச்சந்திரன் இங்கே நேரிய இளந்தட்டானய் நின்ருன்.

கவிகளுடைய காட்சிகள் அதிசய மாட்சிகளை விழி தெரிய விளைத்து அறிவின் சுவைகளாய் யாண்டும் பெருகி வருகின்றன.

இலங்கைமேல் படை எடுத்துவந்து கோதண்டவீரன்செய்ய வுள்ள வீரச் செயல்களையும் கோரக் கொலைகளையும் பலவாறு அனுமான் விரித்துச் சொல்லியது, சீதை உள்ளம் தேறி உறுதி பூணவேயாம். கலங்கிக்கவலுகின்ற நெஞ்சம் திடமாய்த் தெளிந்து கொள்ளும்படி உரைகள் எழுந்து வந்தன.

“நான் மீண்டு போய் கண்டுள்ள உங்கள் நிலைமையை ஆண்டு ஆண்டவனிடம் சொல்ல வேண்டியதே தாமதம்; வானர வெள்ளங்கள் ஆர்த்தெழுந்து கடலைத் தூர்த்து இலங்கையை வளைந்து கொள்ளும்; அங்கதன் மீது இளையபெருமாளும், அடியேன் தோளில் எம்பெருமானும் எழுந்தருளிப் படைகளோடு இங்கு வந்தருளுவர். இதில் யாதும் சந்தேகம் கொள்ளாமல் சிந்தை தெளியுங்கள்” என நன்கு தெளித்தருளினான்.

உள்ளம் தெளிய இவ்வாறு உரையாடி வந்தவன் இறுதியில் அறுதியிட்டு உறுதி கூறியது பெரிதும் கருதியுணர வுரியது.

பாரவரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு
இராவணன் அவன் இவன் இராமன் என்றனன்.

நான் உரைத்தபடி குறித்த நாளில் எம்பெருமான் ஈண்டு வந்து உங்களைச் சிறை மீட்டவில்லையானால் பழியும் பாவமும் அடைதற்கு அவன் ஒரு இராவணனே ஆவன் என்னும் இது எவ்வளவு வேகமுடையது! மதியூகியான அனுமான் இவ்வளவு தொனியில் பேசியிருக்கிறான். இந்த வாசகம் யாவருக்கும் ஒரு திகைப்பையும் வெறுப்பையும் வெளிப்படையாய் விளைத்து நிற்கும்.

இராமன் அங்கே உறுதியாக வந்து சேருவான் என எவ்வளவு சத்தியங்கள் செய்து சொன்னாலும் இந்த ஒரு வாக்கியத்தைப் போல் அவ்வளவு தெளிவையும் தேற்றத்தையும் உண்டாக்கி ஊற்றம் செய்து உறுதி புரிய மாட்டா.

சீதையின் எண்ணத்தில் இராமன் இனிய அமுதமாயுள்ளான்; இராவணன் கொடிய நஞ்சாய் நிற்கின்றான். பெண்ணரசி எதிரே இவ்வண்ணம் நிற்கிற இருவரையும் உருமாற்றிக் காட்டி உண்மையைத் தெளிவாக்கியுள்ள நுண்மை ஓர்ந்து சிந்திக்கத் தக்கது. கூர்ந்த மதி குறியூர்ந்து வருகிறது.

மனோதத்துவங்களை நுணுகி யுணர்ந்து நெஞ்சைத் தொட்டு நேரே பேசுகின்ற இம் மதிமானுடைய நுதி மொழிகளை அதிசய மேதைகளும் விதிமுறைகளை ஓர்ந்து விழி திறந்து வியந்து துதிக்கின்றனர். உணர்வும் உரையும் ஒளி மிகுந்து திகழ்கின்றன.

ஒரு மாசத்துள் நாயகன் வரவில்லையானால் தன் வாழ்வு பெரு நாசமே எனப் பிராட்டி பேசிய வாசியை எதிர் நோக்கிப் பேசியிருக்கிறான்.

திங்கள் ஒன்றினுள் இராமன் இங்கு வந்து உங்களைச் சிறை மீட்டான் எனின் அவன் கொடிய இராவணனே என முடிவு கூறியது விடிவை முடிவாக ஓர்ந்துணர வந்தது.

உங்கள் சிறை மீட்சி குறித்தபடி நிகழவில்லையானால் புண்ணியம் பாவமாம்; பாவம் புண்ணியமாம் எனச் சொல்ல எண்ணினவன் இவ்வண்ணம் இராமனையும் இராவணனையும் வரைந்து காட்டினான். சொல்லின் தொனியில் உள்ளம் தெரிகிறது.

ஆயிரம் மைலுக்கு அப்பால் இருத்தலால் இராமனை அவன் எனச் சேய்மையில் சுட்டியுரைத்தான்; தான் வந்துள்ள இலங்கையிலேயே கிட்ட இருத்தலால் இராவணனை இவன் என அண்மையில் சுட்டினான்.

அவன் இராவணன்; இவன் இராமன்.

என்றது ஒளியையும் இருளையும் விழிதெரிய மாற்றியது போல் வெளியறிய நின்றது. அறிவு நிலை அறிய அரியது.

உண்மையை உறுதியாகத் தெளிவுறுத்த இப்படி விசித்திர சாலமாக உரைத்தருளினான். சொல்லின் செல்வன் ஆதலால் நல்ல நீதிகளை உள்ளம் தெளிய வல்லாண்மையுடன் வாயாடி வருகிறான்.

பிறன் தாரத்தைக் கவர்ந்து வந்தவன் பழிபாவங்களை அடைதல் போல் தன் தாரத்தைக் காவாது கைவிட்டவனும் புகழ் இழந்து பழியுறுவான் என்பது இதில் அறிய வந்தது.

உன் நாயகன் ஒரு மாதத்துள் இங்கு வாரானுயின் அவனை இராவணனாக இகழ்ந்து தள்ளிவிட்டு இவனை இராமனாக உவந்து கொள்ளுக என்று சொன்னது போல் உள்ளதே! எனச் சிலர் இதில் இன்னலுழந்து படுகின்றனர். கருத்தைக் கருதியுணராமல் கவலையுறுவது அவலமாய். உள்ளக்குறிப்பை உய்த்துணர்ந்து உறுதி

நலங்களை எவ்வழியும் செவ்வையா ஓர்ந்து கொள்ள வேண்டும்.

காகத்தின் கதி.

ஆதரவு நாடிப் பரிதாபமாய் நோதலுழந்த சீதை சிந்தை தெளிந்து கொள்ள இந்தவாறு உண்மையை வலியுறுத்தித் திண்மையாக மாருதி ஆறுதலருளினன். தேறுதலடைந்த தேவி மேலும் சில கூறித் தன் நாயகனிடம் சேர்க்கும்படி ஓர் அடையாளமும் கொடுத்தாள். கூடி வாழ்ந்த போது நேர்ந்த நிகழ்ச்சிகளைக் குறித்து விடுவதில் விருப்பம் மிக வுள்ளது. வந்த அன்பனிடம் சிந்தை தெளியும்படி அந்தரங்கங்களைச் சொல்லியருளினள்.

நாகம் ஒன்றிய நல்வரையின் தலை மேனாள்
ஆகம் வந்து எனை அள்ளுகிர்வாளின் அளைந்த
காகம் ஒன்றை முனிந்தயல் கல் எழு புல்லால்
வேக வெம்படை விட்டது மெல்ல விரிப்பாய். (1)

என்னோர் இன்னுயிர் மென்கிளிக்கு யார்பெயர்ஈகேன்
மன்ன! என்றலும் மாசறு கேகயன் மாதென்
அன்னை தன் பெயராகென அன்பினோடன்னாட்
சொன்ன மெய்மொழி சொல்லுதி மெய்ம்மை தொடர்ந்தோய்!

சூடையின்மணி கண்மணி ஒப்பது தொன்னாள்
ஆடையின்கண் இருந்தது பேரடையாளம்
நாடி வந்தெனது இன்னுயிர் நல்கிய நம்பா!
கோடிஎன்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்.

தொழுது வாங்கினன் சுற்றிய தூசினன் முற்றப்
பழுது றுவகை பந்தனை செய்தனன்; வந்தித்து
அழுது மும்மை வலங்கொடு இறைஞ்சினன் அன்போடு
எழுது பாவையும் ஏத்தினள் ஏகினன் இப்பால். (4)

(சூளாமணிப் படலம்)

வந்த தூதுவன் இங்ஙனம் வணங்கி மீண்டிருக்கிறான்.

சித்திர கூட மலையில் இராமன் தங்கியிருக்கும் பொழுது நிகழ்ந்த ஓர் விசித்திர வரலாறு இங்கே வெளி வந்துள்ளது. அந்த மலைச் சாரலில் அழகிய பூஞ்சோலையுள் ஒருநாள் தன் நாயகனோடு சீதை உல்லாசமாய் அமர்ந்திருந்தாள். அவ்வமையம் இந்திரன் மகனான சயந்தன் வான வீதி வழியே விமானம் ஊர்ந்து

சென்றான். கீழே நோக்கினான்; சானகியின் உருவெளழிலை நோக்கிப் பெரிதும் வியந்தான்; விமானத்தைப் போகவிட்டுக் காக வடிவம் கொண்டு அருகே நின்ற மரத்தின் கிளையில் தங்கி மகிழ்ந்து பார்த்து அரம்பையர் எவரினும் அதிசய அழகி என மதி மிக மயங்கினான். பழகிய பறவை போல் இப் பதி விரதையின் தோளில் வந்து நின்று மூக்கை மார்பில் தோய்த்தான்; அயலே பரா முகமாயிருந்த இராமன் பார்த்து அங்கு ஓர் புல்லை எடுத்து ஒல்லையில் எறிந்தான். அவ் வீரன் கைப்பட்ட அது கூரிய பாணமாய்க் கொதித்துப் பாய்ந்தது. காகமாய் நின்ற அவன் உள் அஞ்சி வேகமாய் ஓடினான். அது விடாது தொடர்ந்தது; பிரமன் திருமால் இந்திரன் முதலிய எல்லாரிடமும் ஓடிப் புகலடைந்தும், யாரும் அவனை ஆதரிக்காமையால் மீண்டு விரைந்து வந்து இராமன் அடியில் விழுந்து அபயம் என்று தொழுதான். அக் கருணை வள்ளல் இரங்கி அருளினான். உயிரை உண்ண உருத்து வந்த பகழி அக் காகத்தின் கண்ணை ஊடுருவிப் போயது. அவன் பழைய வண்ணமாய்த் தன் பதியினை அடைந்தான். [தேவ குமாரனாயிருந்தும் காக வடிவம் கொண்டு பாப காரியம் செய்தமையால் காகாசுரன் என உலகம் அவனை இகழ்ந்து நின்றது.] இந்த நிகழ்ச்சி இலக்குவனுக்கும் தெரியாமல் ஏகாந்தத்தில் நிகழ்ந்தது ஆதலால் இதனை ஒரு குறிப்பான அடையாளமாகக் கூறிவிடுத்தாள்.

> சித்திரகூடத்து இருப்பச் சிறு காக்கை முலை தீண்ட
> அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி
> வித்தகனே! இராமாவோ! நின்னபயம் என்றழைப்ப
> அத்திரமே அதன்கண்ணை அறுத்ததும் ஓர் அடையாளம்.
> (திருமொழி)

பெரியாழ்வார் இவ்வாறு பாடியிருக்கிறார்,

> "காதும் ஒரு விழி காகம் உற அருள்
> மாயன் அரிதிரு மருகோனே." (திருப்புகழ்)

அருணகிரிநாதர் இச் சரிதத்தை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

தூர்த்தனுக்கு இடமாய் நின்று இராமத் துரோகம் செய்தமையால் காக்கைக்குலம் முழுவதும் ஒரு கண்ணை இழந்து போயது. ஒரு கருவிழியைக் கொண்டே இருபுறமும் சாய்த்து ஒரு முகமாக் காக்கைகள் பார்த்து வருவதை இன்றும் நாம் பார்த்து

வருகிறோம். இயற்கையில் கலையோடு கலந்து ஒரு இதிகாசத்தைத் தலைமேல் கொண்டுள்ளது.

"காகத்து இருகண்ணிற்கு ஒன்றே மணி கலந்தாங்கு
இருவர் ஆகத்துள் ஓர் உயிர் கண்டனம் யாம்"

(திருக்கோவையார்)

காதலருடைய உயிர் நிலையை விழிதெரிய உணர்த்தக் காகத்தின் கண்ணை மாணிக்க வாசகர் இவ்வாறு உவமையாக உரைத்துள்ளார். உரிய கண்ணும் அரிய உயிரும் அறிய வந்தன.

காகம் முற்றும் ஓர் கண் இலவாக்கிய, வேக வென்றி

எனத் தன் நாயகனுடைய அதிசய வெற்றியைச் சீதை முன்னம் * எண்ணியுருகியுள்ளமை கண்டு எண்ண வுரியது.

தன் நாயகனுக்கு விரோதியானவனைத் தேவர் முதல் யாவரும் வெறுத்து ஒதுக்கியதும், பின்பு அவனை இவன் பொறுத்தருளியதும் அதிசய நீர்மைகள் ஆதலால் இந்நிகழ்ச்சிகளை முடிவில் அனுமானிடம் துதி செய்து கூறினாள்.

ஸ பித்ரா ச பரித்யக்த சுரைச்ச ஸமஹர்ஷிபி:
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத: (1)

ஸதம் நிபதிதம் பூமௌ சரண்ய: சரணாகதம்
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்ய பாலயத் (2)

(வால்மீகி)

"காகாசுரனை அவன் முனிவர்கள் தேவர்கள் தந்தையாகிய இந்திரன் என்னும் யாவராலும் கைவிடப்பட்டான்; மூன்று உலகங்களும் ஓடி அலைந்து முடிவில் இராமனிடமே சரணமாக வந்தடைந்தான். கொல்லத் தகுந்தவன் ஆயினும் பூமியில் விழுந்து கிடந்த அவனை கருணையினால் காகுத்தன் காப்பாற்றியருளினான்" என வால்மீகி முனிவர் இங்ஙனம் கூறியுள்ளார்.

இராமன் வில்லை எடாமல் ஒரு புல்லை எடுத்து வீசினான்; அது அம்பாய்ச் சென்று அதிசய வேலையைச் செய்தது. அதனால் வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்னும் பழமொழியும் வந்தது.

---

* இந் நூல் பக்கம் 2942, வரி 23 பார்க்க.

இந்த அற்புத வேலையை நேரே கண்டவள் ஆதலால் நெஞ்சம் வியந்திருந்தாள்; இப்பொழுது அஞ்சன வண்ணனுக்கு நினையூட்டும்படி அநுமானிடம் இனமா உரைத்தாள்.

## கிளி மொழி.

சீதை அயோத்தியில் இருக்கும் பொழுது அழகிய ஒருகிளியை வளர்த்தாள். மிகவும் பிரியமாய் உரிமையுடன் வளர்த்துவந்த அந்த அருமைக் கிளிக்கு இனிய பெயர் ஒன்று வைக்க நெடுநாள் விரும்பியிருந்தாள். தன் விருப்பத்தை ஒருநாள் தன் கணவனிடம் உரைத்தாள். அதற்கு இராமன் என்ன பதில் சொன்னான்? "என் தாய் கைகேசி பெயரை இட்டருள்" என்று சுட்டியருளினான். அவ்வாறே இட்டு மகிழ்ந்தாள்.

தன்னைப் பெற்ற தாயினும் சிற்றன்னையிடம் . இவ் வெற்றி வீரன் இப்படிப் பற்று வைத்துள்ளது வியப்பை விளைத்து வருகிறது. அதிசய நீர்மைகள் துதிசெய்ய நேர்கின்றன. விதி வழியே மதியும் போகின்றது. தனது அவதாரத்தை இனிது பூர்த்தி செய்ய வந்துள்ளவள் என்பதைச் சிறிய தாயிடம் இக் கோமகன் கொண்டுள்ள பிரியம் காட்டியுள்ளது. உண்மை யுணர்வுகள் நுண்மையாக வேலை செய்கின்றன.

கிளி மயில் மான் முதலிய அழகிய பிராணிகளிடம் சீதை பிரியம் மிகவுடையவள் என்பதை அவளது சீவிய வாழ்வில் நாம் உணர்ந்து வருகிறோம். அந்த அரிய பிரியமே இந்த இனிய காவியம் விளைந்து வருதற்கு மூலகாரணமாய் மூண்டு நின்றது.

## சூளாமணி தந்தது

திருவயோத்தியிலும் வனவாச காலத்திலும் தம் இடையே நிகழ்ந்துள்ள அதி ரகசியங்களைப் பதியிடம் சொல்லும்படி பணித்து முடிவில் தனது ஆடையில் ஒளித்து வைத்திருந்த ஒரு முடிச்சை இப்பத்தினி அவிழ்த்தாள். அவிழ்க்கவே திவ்விய சோதியாய் வெளியே அது ஒளி வீசியது. இளம் சூரியனது உதயம் போல் காழில் ஒளியை எம்மருங்கும் பாய்ச்சி விளங்கிய அம்மணியணியை மாருதி கண்டதும் பேரதிசயம் கொண்டான். தனது செவ்விய கையை நீட்டி அநுமானிடம் அந்தத் திவ்விய அணியைச் சீதை கொடுத்தாள்.

நாடி வந்து எனது இன்னுயிர் நல்கிய நம்பா!
கோடி என்று கொடுத்தனள் மெய்ப்புகழ் கொண்டாள்.

அநாதையாய்ச் சாக நேர்ந்த தன்னை நாடி வந்து உயிர் உதவி புரிந்துள்ளவன் என அனுமானைச் சானகி எண்ணி ஏத்தி வருவது நன்றியறிவின் கனிவாய் இனிமை சுரந்து வருகிறது. ஆவியை உதவியவனிடம் தன் ஆவித் துணைக்கு ஓர் சீவிய மணியை இத் தேவி அருளினாள்.

சூடையின் மணி கண்மணி ஒப்பது என்றது அந்த அணியின் பெயரையும் உயர்வையும் நாம் அறிந்து கொள்ள வந்தது.

சூடை = தலையின் மயிர் முடி. சூடா என்பது வடமொழி வழக்கு. அதில் அணிவது சூடாமணி என நேர்ந்தது. தலையில் சூடுகிற அது சூளாமணி என இங்கு வந்துள்ளது.

இது உயர்ந்த தங்கத்தில் சிறந்த மணிகள் அழுத்திச் செய்தது. சடைப் பில்லை எனவும் இக் காலத்தில் வழங்கப் படுகிறது.

கூந்தல் மென்மழை கொண்முகில் மேல் எழுகோளின்
வேந்தது அன்னது.

மேகத்தினிடையே தோன்றிய சூரியன் போல் கூந்தலில் இந்த அணி ஒளி வீசி நின்றது என இதன் நிலைமை தலைமைகளை இங்ஙனம் விளக்கியிருக்கிறார்.

அருமையான இந்த அணியை உரிமை அடையாளமாகத் தன் பதியினிடம் சேர்க்கும்படி கொடுத்திருக்கிறாள்.

கொடுத்தவள் யார்? மெய்ப்புகழ் கொண்டாள். என்றும் அழியாத கீர்த்தியை யுடையவள் எனச் சீதையை இங்கே உணர்த்தியருளினார். கொடுத்தாள் என்றதற்கு ஏற்பக் கொண்டாள் என்று காட்டியிருக்கும் காட்சி கருதி மகிழத் தக்கது.

தன் கற்பைக் காத்து அற்புத நிலையில் அமர்ந்திருக்கும் பத்தினி ஆதலால் நித்தியமான கீர்த்தி நேருரிமை யாயது.

## விடைகொண்டு மீண்டது.

சீதை உரிமையோடு கொடுத்த சூளாமணியை உவந்து வாங்கி மிகவும் பத்திரமாகச் சேமம் செய்து மூன்று முறை வலமாய் வந்து பிராட்டியைத் தொழுது வணங்கி உழுவலன்புடன்

உள்ளம் உருகி விழிநீர் மல்கி அனுமான் விடை பெற்று எழுந்தான். பிரிவு பரிதாபமாய் நீண்டது.

அழுது மும்மை வலங்கொடு இறைஞ்சிப் போனான்.

என்றதனால் அனுமானுடைய அன்புரிமைகளையும் பண்பாடுகளையும் பத்தி நிலையையும் நாம் அறிந்து உருகுகின்றோம்.

யாண்டும் அஞ்சாத நெஞ்சுரமுடைய வீரன் கண்ணீர் சொரிந்து ஈண்டு அழுதது ஏன்? கொடியவர்களிடையே சீதையைத் தனியே விட்டுப் பிரிய மனமில்லாமல் உருகி அழுதிருக்கிறான்.

உள்ளத்திலுள்ள பரிவும் பத்தியும் கண்ணீர் வெள்ளத்தால் காண வந்தன. விரைந்து சென்று ஆண்டவனைக் கண்டு மீண்டு வந்து உடனே சிறைமீட்டி விட வேண்டும் என்று ஆவலோடு மேவிப் போனான்.

## இடையே செய்த சிந்தனைகள்.

சீதையிடம் விடைபெற்று வடதிசை நோக்கி நடந்தவன் சிறிது தூரம் சென்றதும் நின்றான். பலபல நினைந்தான். ஆண்மையாக ஒரு காரியமும் செய்யாமல் ஆண்டவனிடம் மீண்டு போவது இளிவு என எண்ணினான். பல யோசனைகள் பண்ணினான்.

தேவியை எடுத்து வந்தவனது ஆவியை எடுத்திலன்; இலங்கையைப் பெயர்த்துக் கடலில் எறிந்திலன்; அரக்கர் குலத்தில் இல்லையாவது அழித்துத் தொலைத்திலன்; வீணே மீண்டு போவதில் என்ன மேன்மை? எப்படியேனும் வீரியமாக ஒரு காரியத்தை முடித்துத்தான் போக வேண்டும் என்று நினைந்து நீண்டு முனைந்து மூண்டான். என்ன செய்யலாம் என்று உன்னி ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தான்.

## அசோக வனத்தை அழித்தது.

"அழகிய இந்தப் பூம்பொழிலைச் சிதைத்தால் காவலாளிகள் கடுத்து அடர்வர்; அவரை அழித்து ஒழித்தால் அரக்கர்கள் கொதித்து வருவர்; வந்த வந்த படைகளை யெல்லாம் கொன்று குவித்தால் முடிவில் இராவணனும் வருவான்; அவனையும் போரில் உயிர் குடித்து வீர வெற்றியோடு போய் ஆண்டவனை வணங்க வேண்டும்" என இன்னவாறு எண்ணி அங்கே உள்ள மரங்களைப்

பிடுங்கி எறியத் தொடங்கினன். விசுவ ரூபங்கொண்டு அந்த அழகிய சோலையைப் பலவகையிலும் பாழ்படுத்தினன். சூறைக் காற்றில் அகப்பட்ட செத்தைகளைப்போல் இந்த மாருதி கையில் மரங்கள் எல்லாம் விரைந்து மடிந்து பட்டன. தழையும் பூவும் கனியும் காய்களுமாய் இனிது செழித்திருந்த குளிர்ந்த தருக்கள் யாவும் நிலைகுலைந்தழிந்தன. அழிவு நிலைகளைக் கவி விழி தெரிய விளக்கியுள்ளார்; சில அயலே வருகின்றன.

முடிந்தன பிளந்தன முரிந்தன நெரிந்த
மடிந்தன பொடிந்தன மறிந்தன சரிந்த
இடிந்தன தகர்ந்தன எரிந்தன கரிந்த
ஒடிந்தன ஒசிந்தன உதிர்ந்தன பிதிர்ந்த. (1)

வேரோடு மறிந்த சில; வெந்த சில; விண்ணில்
காரோடு மறிந்த சில; காலினொடு வேலைத்
தூரொடு மறிந்த சில; தும்பியொடு வானோர்
ஊரொடு மறிந்த சில; உக்க சில நெக்க. (2)

சோலை முதல் மற்றவை சுழற்றிய திசைப்போர்
ஆலை நுகரக் குளிர்கமான அடி பற்று
மேனிமிர விட்டன விசும்பின் வழி மீப்போய்
வானவர்கள் நந்தன வனத்தையும் அழித்த, (3)

விஞ்சை யுலகத்திலும் இயக்கர் மலைமேலும்
துஞ்சுதலில் வானவர் துறக்க நகரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கள் மொய்த்தனர் பறித்தார்
நஞ்சமனை யானுடைய சோலையின் நறும்பூ. (4)

எண்ணில் தரு கோடிகள் எறிந்தன செறிந்தே
தண்ணமழை போலிடை தழைந்தது சலத்தால்
அண்ணல் அனுமான் அடல் இராவணனதந்நாள்
விண்ணும் ஒரு சோலையுள தாமென விதித்தான். (5)

அரிய மாட்சிகள் நிறைந்திருந்த இனிய சோலை அழிபட்டுள்ள காட்சிகளை இவை காட்டியுள்ளன. ஒடிந்தன, ஒசிந்தன, உதிர்ந்தன, பிதிர்ந்தன, இடிந்தன, தகர்ந்தன, எரிந்தன, கரிந்தன, மடிந்தன, பொடிந்தன, மறிந்தன, முறிந்தன என இன்னவாறு வந்துள்ளமையால் அந்த அழிவு நிலைகள் என்னவாறு நிகழ்ந்திருக்கும் என்பதை எண்ணி அறிந்து கொள்ளுகிறோம். வேகமாய் அள்ளி எங்கும் வீசி யெறிந்தலால் பல திசைகளிலும் போய்

மரங்கள் உதிர்ந்திருக்கின்றன. திசை யானைகளுடைய துதிக்கை களுக்கும் கொம்புகளுக்குமிடையே சில மரங்கள் போய் மாட்டிக் கொண்டன. தம் பெட்டை யானைகளுக்கு நல்ல இளந் தருக்களை ஊட்டியுதவ வைத்துள்ளன போல் அவை காட்டி நின்றன. கடல் கள் மலைகள் வனங்கள் ஆகாயம் முதலிய எங்கணும் மரங்கள் பொங்கி நின்றன. ஊழிக் காற்றில் எதிர்ப்பட்ட பூளைப் பூக்களைப் போல் யாவும் பறந்து எங்கும் உதிர்ந்தன.

இந்திரனுடைய நந்தன வனத்தினும் எழில் மிகுந்திருந்த அந்தப் பொழில் பல வகையிலும் நிலை குலைந்து அழிவடைந்தன.

விஞ்சையர் ஊரிலும், கந்தருவர் நகரிலும், தேவருலகிலும் உள்ள மங்கையர் பலரும் அசோகவனத்தின் மலர்களை ஆவலோடு பறித்தனர் என்றதனால் அங்கெல்லாம் கனி மரங்களும் பூஞ்செடி களும் போய் விழுந்துள்ளன என்பதை அறிந்து கொள்கிறோம்.

ஊனமான பிறவிகளை அடைந்து இழிந்திருந்தவர் ஞானம் அடைந்தவுடன் பிறவி நீங்கி உயர்கதி பெறுதல் போல் மண்ணு லகத்தில் நின்ற மரங்கள் சில விண்ணுலகத்தை அடைந்தன. சந்தனம் சண்பகம் வேங்கை மகிழம் வகுளம் மரா குரா முதலிய பூ மரங்கள் எல்லாம் பாமரர்கள் போல் பரிதாப நிலைகளில் இழிந்து விழுந்தன.

மலர்களில் மொய்த்திருந்த வண்டினங்கள் யாவும் பலவாறு சிதைந்து மறுகி அலைந்தன. மயில் குயில் அன்னம் கிளி முதலிய பறவைகள் எல்லாம் அலறியெழுந்து திசை திசை பறந்து தியங்கி மயங்கி உயங்கி உலைந்தன.

காலா திசைகளிலும் ஆகாயங்களிலும் வாரி வாரி மரங்களை வீசி வந்தவன் இலங்கை மீதும் பின்பு அள்ளி எறிந்தான். இடி யினங்கள் போல் நெடிய மரங்கள் கடிது வந்து வீழவே நகரம் நிலை குலைந்தது. பல இடங்கள் பாழாயின.

ஆனைத் தானமும், ஆடல் அரங்கமும்,
பானத் தானமும், பாய்பரிப் பந்தியும்,
ஏனைத் தாரணி தேரொடும் இற்றன
கானத்தார் தரு அண்ணல் கடாவவே. (1)

பெரிய மாமரமும் பெருங் குன்றமும்
இரிய வீசலின் இந் நெடும் பொன்மதில்

நெரிய மாடம் நெருப்பெழ நீறெழ
இரியல் போன இலங்கையும் எங்கணும். (2)

இன்னவாறு யாண்டும் சின்ன பின்னங்களாய்ச் சிதைந்து அழிந்துபட இவன் விரைந்து வேலை செய்தான்.

சீதை சிறையிருந்த மரம் ஒன்று தவிர மற்ற மரங்கள் எல்லாம் இருந்த இடம் தடந்தெரியாமல் மறைந்து போயின. எழில் மிகுந்து வளமலிந்து எவ்வழியும் குளிர் தருக்கள் நிறைந்து யாண்டும் செவ்விய இனிய காட்சிகள் பொலிந்து திவ்விய நிலையில்தேசு மிகுந்திருந்த அந்த அசோகவனம் ஒரு நாழிகைக்குள் நாசமாயது. பொழுது விடிந்தது; உதயகாலம் தோன்றியது. இருள் நீங்கி ஒளி ஓங்கிய அந்த உதயம் எல்லா இதயங்களுக்கும் இன்பம் மிகத் தந்தது. விழி திறந்த உலகம் களி மிகுந்து நின்றது.

## சூரிய உதயம்.

அனுமான் இலங்கை புகுந்து இரவு முழுதும் தேடி எங்கும் அலைந்து இறுதியில் அசோகவனத்துள் நுழைந்து சீதையைக் கண்டு நிலைமைகளை ஓர்ந்து பின்பு நேரே வந்து ஆதரவு கூறி ஆற்றித் தேற்றிக் கணையாழியைக் கையில் கொடுத்து மனவுறுதி மடுத்து மதிநலம் உரைத்துச் சூடாமணியை வாங்கிக் கொண்டு தொழுது புறப்பட்டது எல்லாம் ஒருநாள் இரவில் நிகழ்ந்தன என்பதை ஈண்டு நினைவாய் உணர்ந்து கொள்கின்றோம்.

மறுநாள் எழுந்த சூரிய உதயத்தைக் காண வந்துள்ளோம்.

உறுசுடர்ச் சூடைக்காசவ் வுயிரினை உயிர் ஒப்பானுக்கு
அறிகுறி யாக விட்டாள் ஆதலால் வறியள் அந்தோ!
செறிகுழற் சீதைக்கு என்று ஓர் சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகடல் ஈவது என்ன எழுந்தனன் இரவி என்பான். (1)

தாழிரும் பொழில்கள் எல்லாம் துடைத்து ஒருதமியன் நின்றான்
ஏழினெடு ஏழுநாடும் அளந்தவன் எனலுமானான்
ஆழியின் நடுவண் நின்ற அருவரைக்கு அரசும் ஒத்தான்
ஊழியின் இறுதிக் காலத்து உருத்திர மூர்த்தி ஒத்தான். (2)

(பொழிலிறுத்த படலம், 45-46)

சூரியனுடைய உதயக் காட்சியையும், கவியினுடைய இதயக் காட்சியையும் இங்கே கண்டு நின்று கருதி மகிழ்கின்றோம்.

உயிரினும் அருமையாகப் பாதுகாத்து வைத்திருந்த சூடாமணியைத் தன் நாயகனிடம் அடையாளமாகச் சேர்க்கும்படி அனுமான் கையில் சீதை கொடுத்து விட்டாள்; ஐயோ! இப்பொழுது வெறுமையாயிருக்கிறாள் என்று இரங்கி இந்தப் பெண்ணரசி இனிது அணிந்து கொள்ளும்படி சோதிமயமான ஒரு திவ்விய மணியணியைக் கடல் எடுத்து நீட்டியதுபோல் சூரியன் ஒளிவீசி உதயமாயினான் என்னும் இது அளி வீசி ஆதரவு புரியும் ஓர் உவகைக் காட்சியாய் ஈண்டு உணர்வு சுரந்துள்ளது.

கதை நிகழ்ச்சியைத் தழுவி வருதலால் காவிய வருணனைகள் சீவிய ஒளிகளாய்ச் சிறந்து திகழ்கின்றன. கிழக்கே கடல் மீது ஆதவன் உதயம் ஆதலால் அந்தக் காட்சியை நன்கு காட்டினார். சிகாமணி என்றது சிகையில் அணிவது என அதன் வகை தெரிய வந்தது. சீதை வைத்திருந்த சூடாமணி சூரியனைப் போல் வட்டமாய் ஒளி வீசியுள்ளமை விழி தெரிய நின்றது.

எறிகடல் என்றது அலைகளைக் கொழித்து வருகிற அதன் நிலை தெரிய. சிவந்த ஒரு சோதிமணியைத் தன் தலையில் தாங்கி அலைகளாகிய கைகளால் சீதைக்குக் கடல் உதவ நேர்ந்துள்ளது என ஓர்ந்து கொள்கிறோம். இயற்கை நிகழ்ச்சிகள் கவியின் கற்பனையோடு கலந்து வரும்பொழுது அற்புதமான அறிவின் சுவைகள் அங்கே பெருகி வருகின்றன. ஆனந்தம் பருகி வருகின்றோம்

பூமியில் பிறந்து வந்த சீதைக்குக் கடல் இங்கே அணிதர நேர்ந்தது. சித்த சுத்தியுடைய உத்தம ஆத்துமாக்களுக்கு இயற்கைச் சத்திகள் இனிது உதவிபுரியும் என்பது நுணுகியுணர வந்தது.

## அனுமான் நின்ற நிலை.

அசோக வனத்தை அழித்துவிட்டு அரக்கர் வரவை எதிர் நோக்கி அனுமான் அங்கே தனியே நின்றான். அந்த நிலை அதிசய கம்பீரமாய்த் துதி செய்ய நின்றது. உலகங்களையெல்லாம் ஓரடியால் அளந்து நெடிது நீண்டு நின்ற திருமால் போலவும், மந்திர மலை போலவும், உருத்திர மூர்த்தி போலவும் அனுமான் ஆண்டு உறுதியாய் மூண்டு உருத்து நின்றான். உருவம் திண்மை கருமங்களைக் கருதிக் காண மூன்று உவமைகள் முறையே வந்தன.

ஊழியின் இறுதிக் காலத்து உருத்திரமூர்த்தி ஒத்தான்.

எல்லாவற்றையும் அழித்துவிட்டு யுகமுடிவில் தன்னம் தனியனாய் நிற்பன் ஆதலால் உருத்திர மூர்த்தியை அனுமானுக்கு இறுதியில் இங்ஙனம் உவமை குறித்தார்.

விழுமிய ஒரு இனிய உலகம் போல் எழில் மிகுந்திருந்த பொழில் முழுவதையும் தொலைத்து ஒழித்துத் தனியே உக்கிர வீரமாய் உருத்து நிற்றலால் உருத்திர மூர்த்தி என அனுமானை ஈண்டு உரைத்தருளினார். அதிர்ந்து நிகழவுள்ள அழிவு நிலைகள் எல்லாம் இப் பெயரின் குறிப்பால் வெளிதெரிய வந்தன.

## குன்றம் எறிந்தது.

பொழிலை அழித்துத் தொலைத்து விட்டு வழியை நோக்கி நின்றான். அரக்கர்கள் திரண்டு தன்மேல் போருக்கு வருவர் என ஆவலோடு சிறிது நேரம் எதிர்பார்த்து நின்ற அனுமான் யாரும் வாராமையால் அயலே பார்த்தான். பளிங்கு மண்டபத்தோடு விளங்கி நின்ற செய்குன்று ஒன்றைக் கண்டான். அதி விசித்திரமாய்ப் பேரழகோடு படைக்கப் பட்டிருந்த அந்த மலை மண்டபத்தைப் பார்த்ததும் அதனைப் பறித்து எறிய வேண்டும் என்று குறித்தான். உள்ளக் குறிப்பு உக்கிர வீரமாய் உருத்தெழுந்தது.

இராவணன் அசோகவனத்திற்கு வரும்போது உல்லாசமாய்த் தங்கியிருக்கும் பொருட்டுத் திவ்விய மகிமைகளோடு செய்து வைத்திருந்த அரிய பெரிய செய்குன்றை அடியோடு பறித்து இலங்கைமேல் வீசினான். அதனால் பல மாடங்கள் நாசமாயின. பொழிலைக் காத்து வந்த காவலாளிகளும் பருவத் தேவர்களும் அந் நிலையினை அயல் ஒதுங்கிப் பார்த்து நின்றவர் உடல் வேர்த்து உள்ளம் அஞ்சி ஊரை நோக்கி ஓடினர்; இராவணன் அடியிலே விழுந்து தொழுது அழிவு நிலைகளைக் கூறினர். உள்ளம் கலங்கி உடல் நடுங்கி உரை தடுமாறி உரைத்து நின்றது நேர்ந்து கண்ட அவரது நெஞ்சத் திகிலை வெளிப்படுத்தியது

வெள்ளியங்கிரியைப்பண்டு அவ்வெந்தொழில்அரக்கன் வேரோடு
அள்ளினன் எனக்கேட்டான் அத்தொழிற்கு அழிவுதோன்றப்
புள்ளிமாமேரு என்னும் பொன்மலை எடுப்பான் போல
வள்ளுகிர்த்தடக்கை தன்னால் மண்ணினின்றும் வாங்கி அண்ணல்.

விட்டனன் இலங்கை தன்மேல் விண்ணுற விரிந்த மாடம்
பட்டன பொடிகளான பகுத்தன பாங்கு நின்ற

சுட்டன பொறிகள் பின்னைத் துளங்கினர் அரக்கர் தாமும்
கெட்டனர் வீரர் அம்மா! பிழைப்பரோ கேடு சூழ்ந்தார் (2)

நீரிடு துகிலர்; அச்சர்; நெருப்பிடு நெஞ்சர்; நெக்குப்
பீரிடும் உருவர்; தெற்றிப் பிணங்கிடு தாளர்; பேழ்வாய்
ஊரிடு பூசலார உளைத்தனர் ஓடி யுற்றார்
பாரிடு பருவச் சோலை பாரிக்கும் பருவத் தேவர். (3)

அரிபடு சீற்றத்தான்தன் அருகு சென்று அடியில் வீழ்ந்தார்
கரிபடு திசையின் நீண்ட காவலாய்! காவல் ஆற்றேம்
கிரிபடு குவவுத் திண்டோட் குரங்கிடை கிழித்து வீச
எரிபடு துகிலின் நொய்தின் இற்றது கடிகா என்றார். (4)

சொல்லிட எளிய தன்றால் சோலையைக் காலின் கையின்
புல்லொடு துகளுமின்றிப் பொடிபட நூறிப் பொன்னால்
வில்லிடு ஓமம் தன்னை வேரோடு வாங்கி வீசச்
சில்லிடம் ஒழியத் தெய்வ இலங்கையும் சிதைந்தது என்றார். (5)

ஆடகத் தருவின் சோலை பொடிபடுத்து அரக்கர் காக்கும்
தேடரும் ஓமம் வாங்கி இலங்கையும் சிதைத்தது அம்மா!
கோடரம் ஒன்றே நன்றே இராக்கதர் கொற்றம் சொற்றல்
மூடரும் மொழியார் என்ன மன்னனும் முறுவல் செய்தான். (6)
(பொழிலிறுத்த படலம், 53-58)

இந்தப் பாடல்களைப் படித்துப் பார்க்கிறோம்; நிகழ்ந்துள்ள நிலைகளை நெஞ்சக் கண்ணால் நேரே தெரிகிறோம். வேள்வி மண்டபத்தோடு மேவியிருந்த குன்றை அனுமான் வாரி எடுத்தது வெள்ளியங்கிரியை இராவணன் அள்ளி எடுத்ததை எள்ளியது போல் இருந்தது என்றதனால் அந்தச் செயலின் அருமையும் பெருமையும் அறிய வந்தன.

இலங்கைமேல் அதனை விட்டெறிந்தவுடனே மாடங்கள் பல பட்டழிந்து புழுதிப் படலங்கள் எங்கும் பொங்கி எழுந்தன. அரக்கர்கள் பலர் அழிந்து ஒழிந்தனர். எதிர்பாராதபடி வெள்ளிடிபோல் விழுந்துள்ளமையால் விரைந்து துள்ளி மடிந்துள்ளனர்.

கெட்டனர் வீரர் அம்மா! பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்.

கொடிய அரக்கர் திடீர் என்று அழிந்து பட்டதற்கு இங்ஙனம் முடிவு கூறியிருக்கிறார் தீவினையாளர் எவ்வழியும் வெவ்விய துயரங்களை அடைந்து விளிந்தொழிவர் என்பது தெளிந்து கொள்ள வந்தது. பொல்லார் அழிவு புலனாற்று நின்றது.

கேடு சூழ்ந்தார் பிழைப்பரோ? என எதிர் வினவி நிறுத்தி யுள்ளது நினைந்து சிந்திக்கத் தக்கது. தாம் சுகமாய் வாழ விரும்புபவர் பிறர்க்கு யாதும் கேடு சூழலாகாது என்னும் உண்மை ஈண்டு நாடி உணர வந்தது.

மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்,
அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு. (குறள், 204)

என்னும் பொய்யாமொழியை இது பொதிந்து வந்துள்ளது.

கெட்டவர் தரும விரோதிகள் ஆதலால் அவர் அழிந்துவீழ் வதைத் தருமம் உவந்து சூழ்கிறது. தீயவர்களுடைய வாழ்வு தீமைகளை வளர்த்து வருதலால் அவர் சாவது நல்லதாயது.

"When the wicked are multiplied, transgression increaseth: but the righteous shall see their fall." (Bible)

"பாவிகள் வளரின் பாவங்கள் பெருகும்; ஆகவே அவர் அழிவதை நீதிமான்கள் நேரே காணுகின்றனர்" என்னும் இது இங்கே காண வுரியது. தீமை ஒழிய நன்மை வெளியாகிறது.

காவலர் ஓடியது.

அனுமானுடைய அதிசய ஆற்றலைக் கண்டதும் காவலாளிகள் கடுத்திகில் கொண்டு கதிகலங்கிக் கடிது ஓடியிருக்கின்றனர்.

நீர் இடு துகிலர்; நெருப்பிடு நெஞ்சர் எனக் குறித்துக் காட்டியிருத்தலால் அவருடைய அச்சத் திகில்களையும் அவல ஓட்டங்களையும் அறிந்து கொள்ளுகிறோம். துகில் = ஆடை. உடையில் நீர்; உள்ளத்தில் தீ என்றது உவகைக் காட்சியாயுள்ளது. அஞ்சாத நெஞ்சரும் அஞ்சிப் பதறி வேட்டியில் மூத்திரம் பெய்து கொண்டு ஓடினார் என இப்படிக் காட்டியது மாருதியின் அடலாண்மைகளை எப்படியும் எவரும் தெரிந்து கொள்ள வேண்டியே.

பருவத் தேவர் என்றது வசந்தம் முதலிய பருவகாலங்களின் அதி தேவதைகள். அசோக வனத்தை எவ்வழியும் செவ்வி சிதையாமல் எழிலோடு பேணி வர நியமிக்கப் பட்டவர். பொழிலைக் காத்துவரும் காவலாளிகளோடு இத் தேவர்களும் கூட ஓடினர். இராவணனது அடியில் விழுந்து தொழுது அலமரலோடு நின்று சோலையின் அழிவு நிலையைச் சொல்லினர்.

## அரசன் நகைத்தது.

ஒரு குரங்கு வந்து சோலையைப் பல வகையிலும் நிலைகுலைத்துச் சின்னபின்னமாய் அழித்து நின்றது என்று அவர் சொல்லவே இராவணன் சிரித்தான். கேளாத அதிசயமா அவன் கேட்டான் ஆதலால் வாளா நகைத்து மறுத்து மொழிந்தான்.

கோடரம் ஒன்றே நன்றே இராக்கதர் கொற்றம் சொற்றல்.
மூடரு மொழியார் என்ன மன்னனும் முறுவல் செய்தான்,

இராவணனுடைய இறுமாப்பு நிலையை இது விழி தெரிய விளக்கியுள்ளது. தேவர் முதல் யாவரும் தனக்கு அஞ்சி ஏவல் செய்ய எவ்வழியும் தாழ்ச்சியின்றி யாண்டும் தலைமையோடு ஆட்சி புரிந்து வருகின்றான் ஆதலால் கண்டு நிகழ்ந்ததை அவன் யாதும் நம்பவில்லை. தலைமையிலேயே தருக்கி வந்தவன் நிலைமை தெரியாது நின்றான்.

யமனும் எட்டிப் பார்க்க அஞ்சுகின்ற தனது பூங்காவனத்தில் ஒரு குரங்கு வந்து புகுந்து மாங்களை ஒடித்தது என்றது அவனுக்குப் பெரிய வியப்பாயது. ஏதோ பைத்தியம் பிடித்து உளறுகிறார்கள் என்று காவலாளிகளைப் பார்த்து நகைத்தான்.

கோடரம் = குரங்கு. மரக் கிளைகளில் வாழ்வது என்னும் குறிப்பில் வந்தது. அற்பமான குரங்கு அதிசயமான செயலைச் செய்தது என்றது மதி மயக்கமே என்பான் இது மூடரும் மொழியார் என்றான். அந்த மொழி அவன் சிந்தையைத் தெளிவுறுத்தியது.

அவனுடைய பீடும் பெருந்தருக்கும் கதையும் மதியாதபடி நீடியுள்ளன. காவலாளிகள் சொன்னதை யாதும் நம்பாமல் இகழ்ந்து சிரிக்கவே பருவத் தேவர் உரிமையுடன் தொழுது "அரசர் பெரும! நாங்கள் நேரில் கண்டோம்; யாவும் உண்மையே; அது உருவத்தில் குரங்காயிருந்தாலும் ஊழிக் காலத்து உருத்திர மூர்த்தி போல் உக்கிர வீரமாய் ஓங்கியுள்ளது" என்று இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே நெடிய இடி முழக்கம் போல் அரிய பேரொலி ஒன்று நேரே பெருகி எழுந்தது.

"சோலையை அழித்து ஊரில் ஒரு குன்றை எறிந்து ஓட்டி ஊறு செய்து காட்டியும் இன்னும் போருக்கு யாரும் வரவில்லையே!" என்று நேரே எதிர் நோக்கி நின்ற அனுமான் தன் தோளைத்

தட்டி ஆரவாரமாய் ஒரு கர்ச்சனை செய்தான். அந்த வீர முழக்கம் அண்டமும் குலுங்க அகிலமும் நடுங்க ஆர்த்து நின்றது.

மண்டலங் கிழிந்த வாயில் மறிகடல் மோழை மண்ட
எண்திசை சுமந்த மாவும் தேவரும் இரியல் போகத்
தொண்டைவாய் அரக்கிமார்கள் சூல்வயிறு உடைந்து சோர
அண்டமும் பிளந்து விண்ட தாமென அனுமன் ஆர்த்தான். (1)

அருவரை முழையில் முட்டும் அசனியின் இடிப்பும் ஆழி
வெருவரு முழக்கும் ஈசன் வில்லிறும் ஒலியும் என்னக்
குருமணி மகுட கோடி முடித்தலை குலுங்கும் வண்ணம்
இருபது செவியி னூடும நுழைந்ததவ் எழுந்த ஓசை. (2)

புல்லிய முறுவல் தோன்றப் பொருமையும் சிறிது பொங்க
எல்லையில் ஆற்றல் மாக்கள் எண்ணிறந்தாரை ஏவி
வல்லையின் அகலா வண்ணம் வானையும் வழியை மாற்றிக்
கொல்லலீர் குரங்கை நொய்திற் பற்றுதிர் கொணர்திர்என்றான்.

அனுமான் ஆர்த்துள்ள ஆரவாரம் அதிசய நிலையில் ஒலித்துள்ளது. மண்டலம் கிழிந்தது; அண்டமும் பிளந்தது என்றது அந்த அற்புத நிலை தெரிய வந்தது. வீர தேவதை வீறிட்டு முழங்கிய சத்தமாய் வேகித்து எழுந்தமையால் திசைகள் எங்கணும் செவிடு பட நேர்ந்தன. அசையாத கண்டனும் அதிசயித்து அசைந்திருக்கிறான். அசையினும் இசைகுறையாமல் இறுமாந்துள்ளான்.

வழக்கத்துக்கு மாறான அந்த முழக்கத்தைக் கேட்டதும் சிறிது திகைத்துக் குறுமுறுவல் பூத்தான். நிலை கலங்காத அவனது நிலைமை இந்த நிலையிலும் தலைமையோடு தழைத்து நிற்கிறது. அவனுடைய உள்ளச் செருக்கையும் உறுதிப் பாட்டையும் கவி இங்கே காட்டியிருக்கும் நயம் கருதியுணர வுரியது.

புல்லிய முறுவல் தோன்றப் பொருமையும் சிறிது பொங்க.

ஊழியின் இடி முழக்கம் போல் மாருதியின் வீர கர்ச்சனை தன் செவிகளில் வந்து பாய்ந்த பொழுது இராவணன் இப்படிக் குறுமுறுவல் கொண்டது அவனது பெருமிதத்தைக் கண்டு கொள்ள நேர்ந்தது. அருந்திறல் நிலை அதிசயமாயுளது.

"அடே! இப்படியும் ஒரு குரங்கு வந்து இலங்கையில் கூப்பாடு போட நேர்ந்ததே? காலவேற்றுமை சாலவும் நன்று!" என இகழ்ச்சிக் குறிப்போடு புன்னகை செய்திருக்கிறான்

பொறாமையும் சிறிது பொங்க என்றது மானச தத்துவத்தை மருவி வந்துள்ளது. இராவணன் யாரிடமும் பொறாமை கொள்ள வேண்டாதபடி அவ்வளவு உன்னத நிலையில் உயர்ந்திருக்கிறான்.

பொறாமை என்பது அற்பக் குணம். அற்பர்களுடைய உள்ளத்திலேதான் அது புகுந்திருக்கும். புல்லர்களிடம் புல்லியிருத்தலால் புன்மை என அதற்கு ஒரு பெயரும் வந்தது பெரும்பாலும் நான்கு இடங்களில் பொறாமை ஓங்கி யிருக்கும் என ஓர் ஆங்கில அறிஞர் பாங்கோடு கூறியிருக்கிறார்.

"Deformed persons, eunuchs, old men, and bastards, are envious." (Bacon)

"அங்கவீனர், பேடிகள், வயோதிகர், சோரபுத்திரர் ஆகிய இவர் பொறாமையாளராயிருப்பர்" என பேக்கன் என்பவர் இவ்வாறு குறித்திருக்கிறார். இதனால் பொறாமையின் இழி நிலை தெளிவாய் நின்றது. அதனையுடையவர் எவரோ அவர் இவ்வாறான இழி நிலையாளராய்ப் பழியுறுகின்றனர். அது உள்ளம் புகின் உயர்வு பாழாய் அல்லல் அடைகின்றது.

"Envy slayeth the silly one" (Job, 5 . 2)

"பொறாமை புல்லரைக் கொல்லும்" என்றதனால் அதன் புலையும் கொலையும் நிலையும் புலனும். புல்லராய் இழிந்து ஒழியாமல் நல்லராய் உயர்ந்து வருவோரே யாண்டும் நலம் பல பெறுகின்றார். பொறாமை புகின் எவரும் புலையுறுகின்றனர்.

இத்தகைய புன்மை அதி உன்னத நிலையில் இருக்கின்ற இராவணனிடம் இதுவரை அணுகாதிருந்தது. ஆற்றல் திரு அறிவு முதலிய ஏற்றங்களில் அவனுக்கு எதிரா எவரும் இல்லாமையால் பொறாமை புல்லாதிருந்தது. இன்று தனக்கு நேராக ஒரு எதிரி தோன்றினான் என்றவுடனே பொறாமையும் அவனிடம் தோன்றநேர்ந்தது. சிறிது என்றது இங்கே பெரிதும் கருதவுரியது.

மேலான வீர கம்பீரங்களில் வாழ்ந்து வந்தவன் விபரீத முழக்கத்தைக் கேட்டு வியப்படைந்து குறுமுறுவல்புரிந்து அருகு நின்றவர்களை ஏவிப் படைகள் வரப் பணித்தான். தளபதிகள் வந்து தொழுது நின்றனர். தன் ஊரில் வந்து பேரொலி செய்த வானரத்தைக் கையோடு வசமாய் நேரே பற்றிக் கொண்டு வரும்படி வெற்றி வீரர்களுக்கு விரித்துச் சொல்லினான்.

*கொல்லலீர் குரங்கை நொய்தில் பற்றுதிர் கொணர்திர்!*

படைத் தலைவர்களை நோக்கி இராவணன் இப்படி உத்தரவு கொடுத்திருக்கிறான். பெரிய போர் வீரர்கள் ஆதலால் சிறிய குரங்கை எளிதே கொன்று விடுவர் என்று எண்ணியுள்ளான். அவ்வுண்மை உரையில் வெளி வந்தது. கொல்லாமல் மெல்லப் பிடித்து என்னிடம் கொண்டு வாருங்கள் என்றது அதனை உயிரோடு கண்டு கொள்ள வேண்டும் என்ற ஆவல் மண்டியுள்ளமை தெரிய நின்றது.

தேவர் முதல் யாவரும் அஞ்சுகின்ற தனது ஆட்சியில் நெஞ்சம் துணிந்து வந்து நேறிகேடு செய்த பிராணியை அதிசயமாக நேரே காண விருப்பினமையால் கொன்று போடாமல் உயிரோடு கொண்டுவரும்படி கூறினான். எதையும் எளிதாகவும் அற்பமாகவும் எண்ணிப் பழகி வந்துள்ளவன்; அந்தப் பழக்கத்தில் பேசியிருக்கிறான். வார்த்தைகள் வாழ்க்கைகளை வடித்துக் காட்டுகின்றன.

படைகள் எழுந்தன.

சக்கரவர்த்தியின் ஆணையைக் கேட்டவுடன் மிக்க களிப்போடு போர் வீரர்கள் திரண்டனர். போராடுவதில் பேராவலுடையவர் ஆதலால் போர் என்றவுடனே உள்ளம் பூரித்து யாவரும் வீரத்திறலுடன் ஆரவாரமாய் விரைந்து எழுந்தனர்.

சூலம் வாள் முசலம் கூர்வேல் தோமரம் தண்டு பிண்டி
பாலமே முதலாவுள்ள படைக்கலம் பரித்த கையர்
ஆலமே அனைய மெய்யர் அகலிடம் அழிவு செய்யும்
காலமேல் எழுந்த மாரிக் கடலெனக் கடிது செல்வார். (1)

நானிலமதனின் உண்டு போர்என நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர் தெரித்தும் என்னின்
கானினும் பெரியர்; ஓசை கடலினும் பெரியர்; கீர்த்தி
வானினும் பெரியர்; மேனி மலையினும் பெரியர்; மாதோ! (2)

திருகுறுஞ் சினத்துத் தேவர் தானவர் என்னும் தெவ்வர்
இருகுறும்பு எறிந்து நின்ற இசையினர்; தசைஎன்றெண்ணிப்
பொருகுறும்பென்று வென்று புணர்வது பூவுண் வாழ்க்கை
ஒரு குறுங்குரங்கு என்றுஎண்ணிநெடிதுநாண் உழக்கும்நெஞ்சர்

கட்டிய வாளர்; இட்ட கவசத்தர்; கழலர்; திக்கைத்
தட்டிய தோளர்; மேகம் தடவிய கையர்; வானை

எட்டிய முடியர்; தாளால் இடறிய பொருப்பர்; ஈட்டிக்
கொட்டிய பேரி என்ன மழை எனக் குமுறும் சொல்லார். (4)

பொன்னின்று கனலும் தெய்வப் பூணினர் பொருப்புத் தோளர்
மின்னின்ற படையும் கண்ணும் வெயில் விரிக்கின்ற மெய்யர்
என்னென்றார்க்கு என்என் என்றார்; எய்தியது அறிந்திலாதார்
முன்னின்றார் முதுகு இயப் பின்னின்றார் முடுகு கின்றார். (5)

வெய்துறு படையின் மின்னர் வில்லினர் வீசு காலர்
மையுறு விசும்பில் தோன்றும் மேனியர் மடிக்கும் வாயர்
கைபரந்து உலகு பொங்கிக் கடையுகம் முடியும் காலைப்
பெய்யவென்று எழுந்த மாரிக்கு உவமைசால் பெருமை பெற்றார்.
(கிங்கரர் வதைப் படலம்)

படை வீரர்களுடைய திறங்களைக் குறித்து வந்துள்ள இந்தப் பாடல்களை ஊன்றிப் படித்துப் பார்க்கிறோம். அரிய பெரிய வீரக் காட்சிகளை நேரே கண்டு நெஞ்சம் வியந்து கொள்கின்றோம்.

போர்க் காட்சிகள் யாவருக்கும் உவப்பை விளைத்து வருகின்றன. "தெருச் சண்டை கண்ணுக்குக் குளுமை" என்பது இந்நாட்டில் வழங்கி வரும் பழமொழி. போர்த்திறங்களைக் காண்பதில் மக்களுக்குள்ள ஆவலை இது நன்கு விளக்கி நிற்கிறது. அச்சமும் அபாயமும் உடையதாயினும் சண்டையைக் கண்டு களிப்பதில் இயல்பாகவே சிலர்களிடம் ஓர் விருப்பம் மருவியிருப்பது வியப்பாயுள்ளது. கொடிய போராடல்கள் இனிய விளையாடல்களாய் வீரர்களுக்கு இன்பம் சுரந்து வருகிறது.

படை வீரர்கள் திரண்டு போர்வேட்டு எழுந்து வருவதைக் கவி இங்கே அழகாக வரைந்து காட்டியிருக்கிறார். காட்சிகளைக் கண்ணூன்றிக் காணும்தோறும் வீரத்திறல்கள் நம் உள்ளத்தில் மேலோங்கி வருகின்றன. அரிய வீரச் சுவைகள் மொழிகள் தோறும் ஒளிகள் வீசி மிளிர்கின்றன.

நானிலம் அதனின் உண்டு போர் என நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்.

இந்த வாசகம் நமக்கு எவ்வளவு களிப்பைச் செய்கிறது!

அனுமான் மீது போருக்கு விரைந்து வருகிற அரக்க வீரர்களுடைய அடலாண்மை நிலைகளைக் கவி இவ்வாறு விளக்கியிருக்கிறார். விளக்கத்தை அதிசய நோக்கோடு மதிமகிழ்ந்து பார்க்கிறோம்.

## போர்க் களிப்பு.

தமக்கு நெடுநாளாகப் போர் கிடையாமையால் போருக்கு வீங்கி ஏங்கியிருந்தனர்; இன்று போர் என்று சொன்னவுடனே பேராசையோடு பொங்கி எழுந்தனர். எதிரிகளோடு போராடுவதை உல்லாசமான விளையாட்டாக விழைந்து கொண்டு அவர் உவந்து வந்துள்ளனர்.

போர் உண்டு எனின் அச் சொல் தேனினும் களிப்புச் செய்யும் என்றதனால் அவரது வீர வாழ்க்கையின் நீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து கொள்கிறோம்.

செல்வம் பதவி சிற்றின்பம் முதலிய உலகபோகங்கள் எதையும் விரும்பாமல் போராடல் ஒன்றையே பேராவலோடு அவர் கருதி வந்திருக்கும் மருமங்கள் இங்கே காண வந்தன.

உழைத்து வாழ்வதை ஒரு பொருளாக வுட்கொள்ளார;
தழைத்த செல்வமும் தரணியும் வேண்டும் என்று எண்ணார்;
இழைத்த போர் இவண் உண்டென வந்தெவ ரேனும்
அழைத்த போதுளம் களித்து எழுந்து ஆர்த்துமேல் வருவார்.

(வீரபாண்டியம், குலமரபு, 5)

இந் நாட்டிலிருந்த பாஞ்சாலங்குறிச்சி வீரர்களுடைய பான்மைகளை இது குறித்து வந்துள்ளது. அந்த வீரர்களின் சுபாவங்கள் வித்தக விநோதங்களாய் இருக்கின்றன. பகைவரோடு பொருது வெல்வதில் ஓர் உவகையுளது. வெற்றியுறுவது பல துறைகளில் பற்றிவரினும் போரின் பெறுவதே சீரும் சிறப்பும் பெருகி யாரும் வியந்து போற்ற வருகிறது.

போர்க் களிப்போடு பொங்கி எழுந்த படைகள் சிங்க ஏறுகள் போல் கர்ச்சித்து எங்கும் ஆரவாரித்து வந்தன.

சிறிதும் எதிர்பாராது இடர் என்று திரண்டு வந்தமையால் எங்கே போகின்றோம்? எதிரி யார்? என்பது யாதும் தெரியாமல் ஒருவரோடு ஒருவர் வினவி மறுகினர். சொன்னவர் எவர்க்கும் என்ன விதமான பதிலும் யாதும் சரியாகத் தெரியவில்லை.

என் என்றார்க்கு என்? என்? என்றார்; எய்தியது அறிந்திலாதார்.

படை வீரர்கள் இவ்வாறு செறிந்து வந்தனர். என்ன? என்ன? என்று கேட்டவர்க்குச் சரியான பதில் தெளிவாகக் கிடை-

யாமையால் ஒருவரோடு ஒருவர் அதனையே பன்னிப் பன்னிக் கேட்க நேர்ந்தனர். கூட்டத்தின் ஈட்டம் நாட்டம் தெரியாமல் நீட்டமாய் நிமிர்ந்தது.

முன் நின்றார் முதுகு நீயப் பின்நின்றார் முடுகுகின்றார்.

என்றது நெருக்கமும் வேகமும் ஆத்திரமும் ஆவேசமும் அறிய வந்தது. வெள்ளம் புரண்டது போல் சேனைகள் இவ்வாறு திரண்டு நடந்தன. செறிந்து தொடர்ந்தன.

## தானைத் தலைவர் நாணியது.

எவ்வழியும் போர் வீரர்கள் சீறி நிறைந்து பேரிரைச்சலோடு பொங்கி வரவே எதிரி யார்? என்பது இடையே தெரிய வந்தது. தேவர் உலகத்தையும் அசுரர் குலத்தையும் வென்று பரிசுகள் பல கொண்டு வரிசை பெற்று உயர்ந்துள்ள சேனாதிபதிகள் பகையாய் நேர்ந்துள்ளது ஒரு குரங்கு என்று தெரிந்ததும் மிகவும் நாணினர். நெடுங்காலமாகப் போரின்றி வாடியிருந்த தமக்கு முடிவில் ஒரு வானரத்தோடு போரிட நேர்ந்ததே! என்று மானமும் வெறுப்பும் மண்டி நாண மீதூர்ந்து ஈனம் என இனைந்தார்.

ஒருகுறுங்குரங்கு என்றுஎண்ணிநெடிதுநாண் உழக்கும்நெஞ்சர்.

அரக்கர்களுடைய வீரச் செருக்கை இது விளக்கியுள்ளது.

இருந்து இருந்து ஒரு குரங்கின் மீதா சண்டைக்கு வந்தோம் என்று உள்ளம் நாணி அவர் இரங்கி யிருக்கின்றனர். தங்கள் வாழ்நாளிலே யாண்டும் காணாத இளிவை அன்று காண நேர்ந்தது என நாணியிருத்தலால் அவர்களுடைய மான வீரங்களின் மாண்பு தெரிந்தது. எப்பொழுதும் வெற்றிக் களிப்பிலேயே திளைத்து வந்தவர் இப்பொழுது விளிந்து பட நேர்ந்துள்ள நிலை தெரியாமல் இப்படி வீர கம்பீரங்களை நினைந்து நடந்தனர்.

## போர் புரிந்தது.

பொழிலை அடைந்ததும் எவ்வழியும் வளைந்தனர். தம் படைத்திரளைக் கண்டு எதிரி ஓடி விடலாகாதே என்று கருதி ஓர்ந்து அதி துரிதமாய் விருது கூறி உறுதியோடு சூழ்ந்தனர்.

மரங்கள் எல்லாம் ஒழிந்து அழிந்துபட்ட சோலையினிடையே அனுமான் தனியே நின்றான். அவனைக் கண்டதும் அனைவ

நம் ஆர்த்து ஆரவாரம் செய்து அமர் புரிய நேர்ந்தனர்.

வாள்உறை விதிர்க்கின்றாரும், வாயினை மடிக்கின்றாரும்,
தோளுறத் தட்டிக் கல்லைத் துகள்படத் துகைக்கின்றாரும்,
தாள் பெயர்த்து இடம் பெறாது தருக்கினர் நெருக்குவாரும்,
கோள்வளை எயிறு தின்று தீ எனக் கொதிக்கின்றாரும்.

வேல் வாள் முதலிய கூரிய படைக்கலன்களை இவ்வாறு நேரே நீட்டி யாவரும் கொதித்து மூண்டார். நம்முடைய ஆண்டவன் கூறிய ஆணைப்படியே யாதொரு ஊறும் நேராமல் மெல்லப் போய்க் குரங்கைப் பிடித்துக் கொள்ளுங்கள் என்று படைத்தலைவர் சொல்லினர். சொல்லவே எல்லாரும் துள்ளி மூண்டனர்.

திண்ணிய மீதக வலியுடைய பதினறு மல்லர்கள் ஒருங்கே இரண்டு மருங்கே பற்ற வந்தனர். அருகே நெருங்கும் வரையும் யாதும் அசையாமல் அமைதியாய் நின்ற அனுமான் அவர் கிட்ட வரவும் தன் வாலால் விரைந்து அனைவரையும் ஒரே கட்டாகக் கட்டி ஆகாயத்தில் வாரி வீசினன். அவர் போனதிசை தெரியாமல் பொன்றி வீழ்ந்தனர். அவர் மாண்டு மடிந்ததைக் கண்டதும் யாவரும் மூண்டு மூனந்தனர் பலவகையான படைகளையும் ஏவி அடுசமர் ஆடினர்.

## மாருதி சீறியது.

வயிரம் பாய்ந்திருந்த ஒரு அடி மரத்தைத் தண்டமாகக் கையில் கொண்டு அனுமான் சண்டமாருதம் போல் மண்டியடித்தான். இடிகள் வீழ்ந்தது போல் அடிகள் விழவே உடல்கள் சிதைந்தும் குடல்கள் பிதிர்ந்தும் தலைகள் உடைந்தும் படைகள் பல மாண்டன. அலைகடலிடையே மந்தரமலை சுழன்றது போல் படைகளிடையே அனுமான் திரிந்து வரவே எங்கும் கொலைகள் பொங்கி வீழ்ந்தன. பிணமலைகள் குவிந்தன; உதிர வெள்ளம் பெருகி ஓடியது. இவ்வெற்றி வீரன் சுற்றி விரைந்து எற்றி அடித்துக் கையினும் வாலினும் பற்றி எறிந்து பாய்ந்து காய்ந்தபோது அரக்கர்கள் படுநாசமாய்ப் பட்டு மாய்ந்தனர்.

பற்றித் தாளொடு தோள்பறித்து எறிந்தனன் பாரின்
இற்ற வெஞ்சிறை வெற்பினமா மெனக் கிடந்தார்;
கொற்ற வாலிடைக் கொடுந்தொழில் அரக்கரை அடங்கச்
சுற்றி வீசினன் பம்பர மாமெனச் சுழன்றார். (1)

தெறித்த வன்தலை தெறித்தன செறிசுடர்க் கவசம்
தெறித்த பைங்கழல் தெறித்தன சிலம்பொடு பொலந்தார்
தெறித்த பன்மணி தெறித்தன பெரும் பொறித் திறங்கள்
தெறித்த குண்டலம் தெறித்தன கண்மணி சிதறி. (2)

தாள்களால் பலர்; தடக்கைகளால் பலர்; தாக்கும்
தோள்களால் பலர்; சுடர் விழியால் பலர்; தொடரும்
கோள்களால் பலர்; குத்துகளால் பலர்; தத்தம்
வாள்களால் பலர்; மரங்களினால் பலர் மடிந்தார். (3)

ஓடிக் கொன்றனன் சிலவரை உடல்உடல் தோறும்
கூடிக் கொன்றனன் சிலவரைக் கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரைப் பிணந்தொறும் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக் கறங்கெனத் திரிவான். (4)

முட்டினார்பட முட்டினான்; முறைமுறை முடுகிக்
கிட்டினார் படக் கிட்டினான்; கிரியென நெருங்கிக்
கட்டினார்படக் கட்டினான; கைகளின் மெய்யின்
தட்டினார் படத் தட்டினான்; மலையெனத் தகுவான். (5)

கருது காலினும் கையினும் வாலினிற் கட்டிச்
சுருதியே அன்ன மாருதி மரத்தினை துரப்பான்
நிருதர் எந்திரத் திடுகரும்பாம் என நெரிவார்
குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூனில். (6)

தருவெலாம் உடல்; தெற்றியெலாம் உடல்; சதுக்கத்
துருவெலாம் உடல்; உவரியெலாம் உடல்; உள்ளூர்க்
கருவெலாம் உடல்; காயமெலாம் உடல்; அரக்கர்
தெருவெலாம் உடல்; தேயமெலாம் உடல் சிதறி. (7)

எஞ்சல் அங்கணத் தம்பிலம் இராவணன் ஏவ
நஞ்சம் உண்டவராமென அனுமன் மேல் நடந்தார்
துஞ்சினார் அல்லது யாவரும் மறத்தொடுந் தொலைவுற்று
அஞ்சினார் இல்லை அரக்கரில் வீரர் மற்று யாரே? (8)

(கிங்கரர் வதைப் படலம்)

அனுமான் தனியே நின்று படைத்திரள்களோடு போராடி அரக்கர்களை அழித்தொழித்திருக்கும் நிலைகளை இக் கவிப் படங்கள் ஓரளவு காட்டியுள்ளன. சண்டைக் காட்சிகளைக் கண்டு கலங்காமல் கோரமான கொலைகளைக் கூர்ந்து பார்க்கிறோம். தலைகள் இழுந்தும், கால்கள் ஒடிந்தும், தோள்கள் நெரிந்தும், கைகள் முறி

ந்தும், கண்கள் சிதறியும், மூக்குகள் உடைந்தும், பல்லுகள் உதிர்ந்தும் இரத்த வெள்ளத்திடை இராக்கதர்கள் பட்டு மாண்டுள்ள படு சாவுகளை நேரே தெரிகின்றோம். அனுமானுடைய வீர பராக்கிரமத்தையும் வெற்றித் திறலையும் வியந்து அதிசயிக்கின்றோம்.

## படைகள் மடிந்தது.

கடல் போல் பொங்கி வந்த படைகளை ஒருவன் தனியே எதிர்த்து ஊழிக் காற்றைப் போல் சூறையாடி யிருக்கிறான்.

யாண்டும் தோல்வியடையாத கொடிய போர்வீரர்கள் ஈண்டு வந்து மாண்டு மடிந்திருக்கும் நிலை இந்த ஆண்டகையின் அற்புத ஆற்றலை வெளிப் படுத்தி யுள்ளது.

நிருதர் எந்திரத்து இடுகரும்பு ஆம் என நெரிவார்.

என்றதனால் அரக்கர்கள் அழிந்து சிதைந்திருக்கும் பரிதாபங்களை அறிந்து கொள்கிறோம். ஆலையில் இட்ட கரும்புகள்போல் அனுமான் கைப்பட்டு நிருதர்கள் உருவழிந்து ஒழிந்துள்ளனர். உடல்கள் சிதைந்து இரத்தங்கள் ஓடியிருக்கும் நிலைகளை இவ்வுவமை காட்டியுள்ளது.

வந்து அகப்பட்ட யாவரும் யாதொரு செயலுமின்றி அலமந்து அழிந்திருக்கின்றனர். கைகளில் சிக்கினவர் கதி கலங்கி மாண்டனர். அயலே வாரி வீசினவர் வானிலும் மலையிலும் கடலிலும் நகரிலும் விழுந்து உடல்கள் சிதறி ஒழிந்து அழிந்தனர்.

சூறைக் காற்றில் எதிர்ப்பட்ட செத்தைகளைப் போல் அனுமான் எதிரே நேர்ந்த அரக்கர்கள் செத்து வீழ்ந்தனர். போராட வந்தவர் மாறாடாமல் நீறாயுதிர்ந்தனர்.

இவ் வீரனுடைய விசித்திர வேலைகளைத் தேவரும் வியந்து திகைத்து நின்றனர். மாயா வல்லவர்களான அரக்கர்களும் இத் தூயவனது தாக்குதல்களுக்கு எவ்வழியும் தப்ப முடியாமல் எவ்வம் மிக வுழந்து இழிந்து மடிந்தனர்.

பாவங்களை எரித்து ஒழிக்கும் தரும தேவதை போல் இக் கரும வீரன் நிருதர் இனங்களை நிலை குலைத்து அழித்தான்.

சுருதியே அன்ன மாருதி.

என அனுமானை இங்கே குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்

தக்கது. போர்க் களத்தில் படுகொலைகளைச் செய்து வருகிற அனுமானுக்கு இப்படி ஒரு இனிய பெயரை ஈண்டு இட்டிருக்கிறார். சுருதி=வேதம். உறுதி உண்மைகள் தெரிய இது மருவி வந்தது.

வேதம் தரும நீதிகளைப் போதித்து வருவது; சத்தியவாக்கியங்களையுடையது; யாதும் நிலை திரியாத நித்தியமானது. இத்தகைய நீர்மைகள் அனுமானிடம் நிறைந்திருத்தலால் சுருதியே என உருவகித்து உறுதி கூறினார்.

வேத நெறி ஒழுகும் நல்லோர்கள் ஏதமிலராய் இனிய கதியை அடைகின்றனர்; அங்ஙனம் ஒழுகாதவர் தீயராய் இழிந்து நோயுழந்து உழலுகின்றனர்.

சுருதி நெறியே மருவி வருகிற அனுமான் புண்ணிய வீரனாய் எண்ணிய வெற்றியை எய்தினான்; நெறி கடந்த மாக்கள் அவன் எதிரே எரிபடிந்த ஈக்களாய் இழிந்தழிந்தார். அந்த அழிவு நிலையைத் தெளிந்து கொள்ள இந்த விழுமிய நாமம் ஈண்டு விளைந்து வந்தது.

போருக்கு மூண்டு வந்தவர் யாரும் மீண்டு போகவேயில்லை. எல்லாரும் எதிர்பொருது மல்லாடி மாண்டு மடிந்தனர்.

> துஞ்சினார் அல்லது தொலைவுற்று
> அஞ்சினார் இல்லை.

அனுமானோடு அமராட வந்தவர் அடலாண்மையுடன் பொருது மடிந்தாரே அன்றி ஒருவராவது உயிருக்குப் பயந்து புறங்காட்டி ஓடிப் போகவில்லை என்னும் இது எவ்வளவு வீரப்பாட்டை விளக்கி நிற்கிறது!

## வீரரை வியந்தது.

எதிரி கையில் அடிபட்டு யாவரும் சாவதைக் கண்டும் யாதும் அஞ்சாமல் மேலும் மேலும் மூண்டு பாய்ந்து நீண்டு போராடி எல்லாரும் செத்தே இருக்கின்றனர். இது அந்தப் படை வீரர்களுடைய மன உறுதியையும் குல வீரத்தையும் காட்டி நிற்கிறது. அச்சப் பிழைப்பு இங்கே கொச்சையாய் நின்றது

நெஞ்சம் அஞ்சினால் துஞ்சாமல் தப்பி ஓடியிருப்பர்; அஞ்சாமையால் யாவரும் துஞ்சினார் என்க. துஞ்சல் = சாதல்.

சுத்த வீரர்களுடைய உத்தம நிலையை இங்கே உணர்ந்து

மகிழ்கிறோம். வீரத் திறல்கள் வியப்புகளாயின.

அரக்கரில் வீரர் மற்று யாரே?

இராட்சசர்களுடைய வீரத்தைக் குறித்துக் கவி இவ்வாறு வியந்து புகழ்ந்திருக்கிறார். ஒருவனாவது புறங்காட்டி ஓடாமல் எல்லாரும் மறங்காட்டிப் பொருது மாண்டுள்ள மாட்சி அதிசயக் காட்சியாய் ஈண்டு துதி செய்ய வந்தது.

போரில் மூண்டால் வெற்றி பெற்று மீள்வது அல்லது அங்கேயே செத்து மடிவது என்பது சுத்த வீரத்தின் உத்தமநீர்மை.

இந்த அரிய வீர நீர்மையை நம் கவி இங்கே உரிமையோடு பாராட்டியுள்ளார். அருமை கண்டபோது பெருமை கொண்டாடுகிறார். உலகம் உணர்ந்து கொள்ள அதனை உணர்த்தியருளுகிறார்.

வெற்றிகரமான மீட்சி எனப் புறங்காட்டிச் செல்வதினும் ஓர் மறங்காட்டி மேல்நாட்டார் கூறிவரும் இராசதந்திரம் ஈண்டு இராத தந்திரமாயுள்ளமையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம்.

இந்நாட்டு வீரம் எந்நாட்டினும் மேலானது; நேர்மையும் ஆண்மையும் சீர்மையும் நிறைந்தது. தரும நீதிகளோடு யாண்டும் தழுவியுறைவது. எவ்வழியும் செவ்வியுடையது.

போர்க்களம் புகுந்தால் எதிரியை வென்று மீள்வது; அல்லது, பொன்றி மாள்வது என இந்த இரண்டில் ஒன்றே வீரக்குலம் இந்நாட்டில் கண்டு வந்துள்ளது என்பதை இப்பாட்டு நன்கு காட்டியுள்ளது.

படைஎடுத்து அமர்க்கட் சாரும் ஓர்வீரன்
பகைஞரைச் சயங்கொளா விடினும்
விடைஎனப் பொருது ஆங்கு இறத்தலே அன்றி
வெந்கிட வுன்னிடான்; அதுபோல்
கடைஎன விடயம் இகழ்ந்து பேரின்பம்
கருதினோன் பெறுகலா விடினும்
இடையறுது அதை நாடுவதலால் மறந்தும்
எண்ணுமோ மண்ணின் வாழ்க்கையையே.

(வைராக்கிய தீபம், 46)

யுத்த களத்தில் புகுந்தவன் பகைவரை வெல்லான் எனினும் அங்கேயே செத்து விழுவன் அல்லது மீள நினையான்; அதுபோல் உலக போகங்களை இகழ்ந்து துறந்து சென்றவன் பேரின்ப நிலை

யை அடையான் ஆயினும் மீண்டும் மண்ணுசையில் இழிந்து படான் என்னும் இது ஈண்டு உணர்ந்து கொள்ள வுரியது.

ஞான நிலைக்கு வீர நிலை உவமையாய் வந்துள்ளது. துறந்த ஞானிகளும் வீரத்தை வியந்து புகழ்ந்து வருதலால் அதன் சிறந்த மேன்மை தெளிவாய் நின்றது.

அஞ்சாத பெரிய போர்வீரர்கள் நெடிது வளைந்து வேல் வாள் முதலிய கொடிய ஆயுதங்களை வீசி அடுசமர் செய்தமையால் அனுமானுடைய உடல் முழுதும் படுகாயங்களாயின. ஏவிய படைகளையெல்லாம் இடை ஒதுக்கிச் சாரி திரிந்து வாரியடித்துச் சூறையாடினமையால் வந்த படை வீரர்கள் எல்லாரும் மாண்டு மூடிந்தனர். இந்த ஆண்டகை நீண்ட வென்றியில் நிலவி நின்றான்.

அயலே நின்ற காவலாளிகள் விரைந்து ஓடி இராவணன் அடியில் வீழ்ந்து தொழுது முடிந்த முடிவினை வணங்கி மொழிந்தார்.

சலந்தலைக் கொண்டன ராய தன்மையார்
அலந்திலர் செருக்களத்து அஞ்சினார் அலர்
புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணார்
குலங்களின் அவிந்தனர் குரங்கினால் என்றார்

இலங்கை வேந்தனிடம் காவலர் இவ்வாறு கூறியுள்ளனர்.

அரசர் பெரும! இங்கிருந்து போருக்குப் போனவர் யாவரும் அடியோடு நாசமாய்ப் போயினர். ஒரு குரங்கே நின்று அனைவரையும் கொன்று தொலைத்து வென்றி வீறோடு மேலும் வருவதை எதிர்பார்த்து அங்கு நின்றுள்ளது என்று அஞ்சி உரைத்தார்.

இராவணன் வியந்தான். "நேரே கண்டு வந்தீர்களா? அல்லது வேறே யாரேனும் சொல்லக் கேட்டீர்களா?" என்று சந்தேகித்துக் கேட்டான். மன்னன் ஐயுற அவர் மறுத்து மெய் என்றார்.

கண்ணாரக் கண்டோம்; உண்மையையே சொல்லுகின்றோம்; என உறுதியாக வலியுறுத்தி ஆணை செய்து கூறினர்.

புலம்தெரி பொய்க்கரி புகலும் புன்கணார்
குலங்களின் அவிந்தனர்; குரங்கினால்.

பொய்ச் சாட்சி சொல்லும் புல்லியருடைய குலங்கள் அழிந்தது போல் போன படைகள் யாவும் வானரம் ஒன்றினால் நாசம் அடைந்தன என்னும் இது பல யோசனைகள் படிந்து வந்துளது.

புலம்தெரி என்றது நெஞ்சறிந்த பொய்யை. கரி = சாட்சி. புன்கண் = இழிவு. பொய் பேசுவோர் ஈனராய் இழிந்து படுவர் ஆதலால் புன்கணூர் என நின்றார்.

பொய்ச் சாட்சி பிறர்க்குத் தீமையை விளைத்தலால் அத் தீவினை குடிகேடாயது. தன்னை வாயில் வைத்தவனுடைய குல முழுவதையும் நோயில் வைத்து அழிக்க வல்லது என்றதனால் பொய்க்கரியின் பொல்லாத் தீமை புலனாய் நின்றது.

பொய்த்த சான்றவன் குலம்என மீன்குலம் அற. (வருணனை, 25)

பொய்க்கரி கூறிய கொடுஞ்சொல் போன்றவே. (கரன்வதை 124)

பொய்க்கரி கூறினேன் போருக்கு அஞ்சினேன். (பள்ளியடை 102)

பொய்ச் சாட்சி சொல்வது கொடிய பாவம் என்பதைக் காவியம் பல இடங்களிலும் இவ்வாறு காட்டியுள்ளது.

பொய் மிகவும் இழிந்தது; தீமையானது; அதனை யாதும் பேசலாகாது என்னும் நீதி போதனை இங்கே நிலவியுள்ளது.

> Lying lips are abomination to the Lord: but they that deal truly are his delight. (Bible)

"பொய் பேசுகிறவரைக் கடவுள் அருவருத்து வெறுக்கிறார்; மெய்யரை உவந்து கொள்கிறார்" என்னும் இது ஈண்டு உணர்ந்து கொள்ளவுரியது. பொய்யன் தெய்வவிரோதியாய்த் தீமையுறுகிறான்.

"நாங்கள் பொய் கூறவில்லை; மெய்யே பேசுகிறோம்; எங்கள் சொல்லை உண்மையாக நம்புங்கள்; போன படைவீரர்களுள் ஒருவராவது மிஞ்சவில்லை; எல்லாரும் ஒருங்கே செத்துப் பிணமலைகளாய் அங்கே குவிந்து கிடக்கின்றனர்" என இராவணன் உள்ளம் தெளிய இங்ஙனம் உறுதி கூறிப் பொழிலின் காவலர் தொழுது நின்றனர்.

வீரத்தையும் சத்தியத்தையும் நம் கவி இங்கே வித்தக விநயமாய் வெளிப்படுத்தியிருக்கிறார். கதைப் போக்கிலேயே உயர்ந்த தரும நீதிகளை உணர்த்தி வருகிறார்

எவ்வழியும் மக்கள் சிறந்த நீர்மைகளோடு வளர்ந்து வரவேண்டும் என்று உரிமையோடு கருதியுள்ளமையால் அரிய உண்மைகளைப் பிரியமாக மொழிந்தருளுகிறார்.

"He is a beholder of ideas, and an utterer of the necessary and causal." (Poet)

"உயர்ந்த கருத்துக்களை உணர்ந்து உறுதியான நலங்களை உலகம் தெளிய அவர் சொல்லியருள்கிறார்" எனக் கவிஞர்களைக் குறித்து எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார்.

நல்ல பண்புகள் இன்ப நலங்களை அருளி வருதலால் மனித சமூகத்திற்கு இனிமையாகக் கவிகள் அவற்றைப் போதித்து வருகின்றனர். போதனைகள் எல்லாம் புனித சாதனைகளாய் மனித சாதிக்கு மாட்சிமை தருகின்றன.

போரில் வீரம் குன்றி மாறலாகாது; பொய்க்கரி கூறலாகாது என்னும் நெறிமுறைகள் இங்கே உறுதியாகக் கருதி யுணரும்படி மருமமாய் வெளி வந்துள்ளன. சத்திய வீரங்கள் உணர வுரியன.

## பின்பு நிகழ்ந்தது.

போன படைகள் யாவும் மாண்டு மடிந்தன என்னும் இழவுச் சொல்லைக் கேட்டதும் இராவணன் உள்ளம் திகைத்தான். தன் நகரில் என்றும் நிகழாத அதிசய சம்பவங்கள் அன்று நிகழ்ந்துள்ளன என்று அவ் வெற்றி வேந்தன் கன்றியுளைந்து அரியணை அயலே இரு புறமும் பணிவுடனின்ற படை வீரர்களைப் பார்த்தான். அப்படைகளின் தலைவன் அடைவுடன் வந்தான்.

## சம்புமாலி எழுந்தது.

முன்பு போன சேனைகள் யாவும் வானரம் ஒன்றால் அழிந்து போயின என்று மானமுடன் கவன்று சம்புமாலி என்னும்படைத் தலைவனை இராவணன் பார்த்தான். சக்கரவர்த்தி நோக்கம் தன் மேல் விழுந்தவுடனே அவன் விரைந்தெழுந்து உள்ளம் உவந்து இருகைகளையும் தலைமேல்கூப்பி மரியாதையுடன் வணங்கிநின்றான்.

கூம்பின கையன் நின்ற குன்றெனக் குவவுத் திண்டோட்
பாம்பிவர் தறுகட் சம்பு மாலி என்பவனைப் பாரா
வாமபரித் தானையோடு வளைத்ததன் மறனை மாற்றித்
தாம்பினில் பற்றித்தந்தென் மனச்சினம் தணித்தி என்றான் 5550

ஆயவன் வணங்கி வீரம் அளக்கரும் அளக்கர் முன்னர்
நீயிது முடித்தி என்று நேர்ந்தனை நினைவின் எண்ணரி
ஏயினை எனனப்பெற்றால் என்னின் யார் உயர்ந்தார் என்றுப்
போயினன் இலங்கை வேந்தனை போர்ச்சினம் போவது ஒப்பான். 5551

தன்னுடைத் தானையோடும் தசமுகன் தருகென்று ஏய
மன்னுடைச் சேனையோடும் தாதைவந்து ஈந்த வாளின்
மின்னுடைப் பரவையோடும் வேறுளோர் சிறப்பின்விட்ட
பின்னுடை அனிகத்தோடும் பெயர்ந்தனன் பெரும்போர் பெற்றான்
(சம்புமாலி வதை 1-3)

சம்புமாலியின் உருவத் தோற்றமும் உறுதி நிலைகளும் படை வலிகளும் ஆடலாண்மைகளும் இங்கே விழிதெரிய வந்துள்ளன. வீர வாழ்வுகள் வீறு கொண்டுள்ளன.

கடல் போன்ற படை வீரர்கள் பலர் புடை சூழ்ந்திருக்கத் தன்னை நோக்கி இந்த உத்தரவைச் சக்கரவர்த்தி தனக்குத் தந்தருளினனே என்று அவன் சிந்தை களித்துள்ளான்.

அந்தக் குரங்கைப் பிடித்துக் கொண்டு வா! என இராவணன் ஏவிய ஏவலைத் தனக்கு ஒரு பெரிய பாக்கியமாக அவன் கருதி மகிழ்ந்திருத்தலால் அவனுடைய உறுதி நிலையும் இராச பத்தியும் தெரிய வந்தன. அதிபதி முன் தளபதி உளமுவந்துள்ளான்.

இலங்கேசனிடமிருந்து இத்தகைய போர்ப் பணியைப் பெறுவது பெறலரும் பேறாக யாவரும் ஆவலோடு பேணி நிற்பர் ஆதலால் தனக்குக் காணியாகக் கிடைத்ததை எண்ணி எண்ணி அவன் இறுமாந்து சென்றான்.

தனக்குச் சொந்தமான படைகளோடு அரசன் அதுபொழுது அருளிய சேனைகளும் ஒருங்கே திரண்டன. யானை குதிரை முதலிய நால்வகைப் படைகளும் கால் வகுத்து நடந்தன. சேனைத் தலைவனான அவன் ஓர் உயர்ந்த தேரில் ஏறிப் பலவகை ஆடம்பரங்களுடன் எம் மருங்கும் இயங்கள் முழங்க வெம்மடங்கல் போல் விரைந்து சென்றான்.

போயினன் இலங்கை வேந்தன்
போர்ச்சினம் போவது ஒப்பான்.

அனுமானோடு போராட மூண்டு ஆர்த்து வருகிற சம்புமாலியை நாம் பார்த்து மகிழும்படி கவி இன்னனம் வரைந்துக் காட்டியிருக்கிறார். இடம் காலங்களுக்கு ஏற்ப உவமானங்கள் காவியத்தில் ஒளி வீசி வருவது கலையின் சுவையாய் எழில் வீசி மிளிர்கின்றது. இலங்கை வேந்தன் போர்ச் சினம் போந்தது போல் அந்தச் சேனாதிபதி அங்கே பொங்கி வந்தான் என இங்கே புனை

ந்து காட்டியிருக்கும் காட்சி நினைந்து சிந்திக்கத்தக்கது.

இராவணனுடைய உக்கிர வீரமான உத்தண்ட கோபமே ஒரு உருக்கொண்டு எழுந்தது எனச் சப்புமாலியை இவ்வாறு கருக்கொண்டு காட்டியது அவன் ஆற்ற மூண்டு வருகிற அமராடலை எதிர் நோக்கி வந்தது. கூலிப்படை போல் ஒப்புக்குச் சண்டை செய்பவன் அல்லன்; வலிய ஆண்டவனுடைய ஆவியே கோப மூண்டு கொதித்ததென நேரே கடுத்துப் போராட வல்லவன் என்பதை இவ் வுவமை சொல்லாமல் சொல்லியது

## படைகள் திரண்டது.

சிறந்த குதிரைப் படைகளும் வேல் வாள் முதலிய படைக் கலன்களில் கைதேர்ந்த உயர்ந்த போர் வீரர்களும் திரண்டு வர ஆரவாரமாய் இவன் தேர் ஏறி வந்தான்.

காற்றினை மருங்கிற் கட்டிக் கால்வகுத்து உயிரும் கூட்டிக்
கூற்றினை ஏற்றி அன்ன குலப்பரி குழுவக் குன்றின்
தூற்றினின் எழுப்பியாண்டுத் தொகுத்தெனச் சுழல்பைங்கண்ண
வேற்றினப் புலியேறென்ன வியந்தெழு பதாதி ஈட்டம்.

குதிரைகளையும், அவற்றின் மீது ஏறி வருகிற போர் வீரர் களையும், படைத்திரள்களையும் இக் கவிப் படத்தில் கண்டு களிக் கின்றோம். வாயு வேகமாய்ப் பாயவல்ல வாசிகளின் மேல் அரக்க வீரர்கள் மேவி வருவது காற்றின் மீது கூற்று ஏறிக் கொதித்து வந்தது போல் தோற்றி நின்றது. குலப்பரி என்றது பலவகை நிலைகளிலும் தலை சிறந்து கதி வேகங்களில் அதிசய ஆற்றல்கள் அமைந்துள்ளமை கருதி. போர் முறைகளில் பயிற்சி பெற்றுள்ள உயர்ச்சியும் உடன் தெரிய வந்தது

பதாதி=காலாட்படை. பதம் பெயர்த்துத் தரையில் நிரை நிரையாய் நடந்து செல்வது ஆதலால் பதாதி என வந்தது.

படைவீரர்களைப் புலி ஏறுகள் என்றது அவர்களுடைய அடலாண்மைகளையும் மிடல் வீரங்களையும் கருதி. யாண்டும் அஞ் சாமல் பாய்ந்து மூண்டு கொல்ல வல்லவர் என்னும் கொலை நிலை களைப் புலிகள் என்ற சொல்லால் ஒலிகள் செய்துணர்த்தினர்.

காலாள் முதலிய நால்வகைச் சேனைகளும் கருங்கடல்போல் மருங்கு சூழ்ந்து ஒருங்கே கலித்து வர அவன் களித்து வந்தான்.

சம்புமாலியின் படையெழுச்சியைக் கண்டு உம்பருலகமும் கம்பமிக அடைந்தது. உடல் வலியிலும் படைநிலையிலும் அடலாண்மை யுடையவன் ஆதலால் அவன் போருக்கு எழுந்தது யாருக்கும் பெரிய அச்சத்தை விளைத்தது.

மாருதியோடு போராட வருகிற வீரனுடைய ஆரவார நிலைகளைக் கவி பலபடியாகக் காட்டிவருகிறார். உயர்ந்த தேரில் உக்கிர வீரமாய் உருத்து வந்தான் ஆதலால் பொருப்பிடை நெருப்பு என் அவனை உருப்படுத்தி யுணர்த்தினர். பொருப்பு—மலை. இங்கே தேருக்கு நேர் ஆயது. எதிர்த்தவரைச் சுட்டெரிக்கும் சூரன் என அவனது உக்கிர வீர நிலையை யாரும் வியந்து காண நெருப்பு என்றார்.

## அனுமான் ஆர்த்தது.

அடுபடைகளோடு இவ்வாறு அவன் பெருகி வரவே அனுமான் அங்கே தனியே தாமதித்து நின்றான். சிறிது நேரம் ஒருவரும் வராமையால் அருகே விளக்குத் தூண் போல் விளங்கி நின்ற நெடிய ஒரு தோரண கம்பத்தின் மீது தாவியிருந்து எதிரிகளின் வரவை ஆவலோடு எதிர்பார்த்தான். யாரும் வரக்காணாமையால் வீர வாதமாய்க் கர்ச்சனை செய்தான்.

நந்தன வனத்துள் நின்ற நாயகன் தூதன் தானும்
வந்திலர் அரக்கர் என்னும் மனத்தினன் வழியை நோக்கிச்
சந்திரன் முதல வான மீனெலாம் தழுவி நின்ற
இந்திர தனுவில் தோன்றும் தோரணம் இவர்ந்து நின்றான். (1)

செல்லொடு மேகம் சிந்தத் திரைக்கடல் சிலைப்புத் தீரக்
கல்லளைக் கிடந்த நாகம் உயிரொடு விடமும் காலக்
கொல்லியல் அரக்கர் நெஞ்சில் குடிபுக அச்சம் வீரன்
வில்லென இடிக்க விண்ணோர் நடுக்குற வீரன் ஆர்த்தான். (2)

நின்றன திசைக்கண் வேழம் நெடுங்களிச் செருக்கு நீங்கத்
தென்திசை நமனும் உள்ளம் துணுக்கெனச் சிந்தி வானில்
பொன்றலின் மீன்கள் எல்லாம் பூவென உதிரப் பூவும்
குன்றமும் பிளக்க வேலை துளக்குறக் கொட்டினான் தோள். (3)

(சம்புமாலி வதை)

வெற்றி வீரனுடைய வித்தக நிலைகளை வியந்து நோக்குகிறோம். போராட விரைவில் வருக என அரக்கர் எல்லாரையும் அறைகூவி அழைப்பதுபோல் தனது இடது தோளை வலது கை

யால் ஓங்கித் தட்டிக் கர்ச்சித்திருக்கிறான். யோக சித்தி முதலிய அதிசய சத்திகள் பலவும் வாய்ந்தவன் ஆதலால் இவனிடமிருந்து எழுந்த சத்தம் எங்கும் பேரொலியாய்ப் பெருகியுள்ளது. இவனுடைய அற்புத நிலைகள் வியப்பையும் விம்மிதங்களையும் விளைத்து வருகின்றன. [நந்தன வனத்துள் நின்ற நாயகன் தூதன் என்றது அனுமான் அதுபொழுது நின்ற இடத்தின் நிலைதெரிய வந்தது.] இந்திரனுடைய சிருங்கார வனத்தினும் அதிசய அழகுடையதாய் எழில் நிறைந்திருந்த குளிர் பொழில் ஆதலால் அதனை நந்தன வனம் என்றார்.] இனிய போகக் காட்சிகளை எங்கணும் காட்டித் தன்னை அடைந்தவருடைய சோகங்களை நீக்கியருளுவது என்னும் காரணத்தால் அசோக வனம் என வந்தது. அந்த அழகிய வனத்தைப் படுநாசம் செய்து முதலில் மூண்டு வந்த அரக்கர் திரள் முழுவதையும் அழித்து ஒழித்து மேலும் போருக்கு வழிபார்த்திருந்த அனுமான் வெளியூக்கி ஆர்த்தான். அந்த ஆரவாரத்தைக் கேட்டதும் போராட வந்த சேனைத் திரள்களெல்லாம் சிறிது பொறி கலங்கி நின்றன. சேனாதிபதியும் திகைத்தான். உடனே படைகளை அணிவகுத்தான்; நான்கு புறமும் சூழ்ந்து வரும்படி செலுத்தி விடுத்தான். சேனைகள் கலித்து வந்தன. சோலையைச் சுளித்து வளைந்து ஒலித்து மூண்டன.

## பொருது மடிந்தது.

படைகளைக் கண்டதும் தோரண கம்பத்தின் மீதிருந்த அனுமான் கீழே குதித்தான். அரக்கர்கள் கொதித்துச் சூழ்ந்து ஆயுதங்களைக் கடுத்து வீசினர். நெடிய வேல்களாலும், கொடிய வாள்களாலும், கடிய வல்லையங்களாலும், சூலம் தண்டு பாலம் பிண்டி குந்தம் முசலம் முதலிய பலவகைப் படைகளாலும் கடுத்து எறிந்து அடுத்து அடர்ந்து அடலாண்மையுடன் யாவரும் ஆர்த்து அமராடினர்.

நாலு பக்கங்களிலுமிருந்து தன் மீது வந்து பாய்கின்ற கூரிய கொலைக் கருவிகளை எல்லாம் அனுமான் உல்லாச விநோதமாய் ஒல்லையில் ஒதுக்கி அங்கே சிதைந்து கிடந்த பெரிய இருப்புலக்கையைக் கையில் எடுத்துக் கடுத்துப் பாய்ந்து படைகளை மடுத்து மோதினான். கொலைகள் பல விழுந்தன. தலைகள் உருண்டன; உடல்கள் புரண்டன; தாள்கள் ஒடிந்தன; தோள்

கள் முறிந்தன: ஆள்களும் இனந் தெரியாமல் அழிந்து குவிந்தன. தசைக் குவியலும் நிணச்சேறும் இரத்தப் பெருக்கும் அயல் இடம் எங்கும் நிறைந்து பொங்கி விரைந்து விரிந்தன. காலாட் படை கண்ட துண்டங்களாய்க் கழிந்துபடவே குதிரைப் படைகள் கொதித்துப் பாய்ந்தன; அதிவேகமாய் வாவி வருகிற குதிரைகளைக் கால்களை வாரி மேலே வீசி மேலும் மேலும் வருவனவற்றையெல்லாம் மாறி மாறிச் சாரிதிரிந்து சீறி எறிந்து சிங்க ஏறு போல் மாருதி எங்கும் பாய்ந்து பொங்கி அழித்தான்.

கரிகொடு கரிகளைக் களப்படப் புடைத்தான்;
பரிகொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான்;
வரிசிலை வயவரை வயவரின் மடித்தான்;
நிரைமணித் தேர்களைத் தேர்களின் நிரைத்தான். (1)

மூளையும் உதிரமும் முழங்கிருங் குழம்பாய்
மீளிரும் குழைபடக் கரிவிழுந்து அழுந்தத்
தாளொடுந் தலையுகத் தடநெடுங் கிரிபோல்
தோளொடு நிருதரை வாளொடுந் துகைத்தான். (2)

மல்லொடு மலைமலைத் தோளரை வளைவாய்ப்
பல்லொடும் நெடுங்கரப் பகட்டொடும் பருந்தாள்
வில்லொடும் அயிலொடும் விறலொடும் விளிக்கும்
சொல்லொடும் உயிரொடும் நிலத்தொடும் துகைத்தான். (3)

பிரிவரும் ஒருபெருங் கோல்எனப், பெயரா
இருவினை துடைத்தவர் அறிவுஎன, எவர்க்கும்
வருமுலை விலைக்கென மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனம்எனக் கறங்கெனத் திரிந்தான். (4)

அண்ணல்அவ் அரியினுக்கு அடியவர் அவன்சீர்
நண்ணுவர் எனும்பொருள் நவையறத் தெரிப்பான்
மண்ணினும் விசும்பினும் மருங்கினும் வலித்தார்
கண்ணினும் மனத்தினும் தனித்தனிக் கலந்தான். (5)

கறுத்தெழு நிறத்தினர் எயிற்றினர் கயிற்றார்
செறுத்தெரி விழிப்பவர் சிகைக்கழு வலத்தார்
மறுத்தெழு மறலிகள் இவரென வதிந்தார்
ஒறுத்து உருத்திரன் எனத் தனித்தனி உதைத்தான். (6)

மூண்டு பொருத படைகளோடு அனுமான் போராடியிருக்கும் நிலைகளை இக் கவிகள் காட்டி யுள்ளன. போர்க்களத்தில் நிகழ்ந்துள்ள கோரமான கொலைக் காட்சிகளை நேரே காண்கின்

றேம்; நெஞ்சம் வியக்கின்றேம்; எதிரிகளுடைய அழிவு நிலைகளைக் காணுந்தோறும் இந்த வீரனுடைய உக்கிர பராக்கிரமங்கள் மிக்கவியப்பையும் களிப்பையும் விளைத்துவருகின்றன. சேனைவீரர்களும் யானைத்திரள்களும் குதிரைப்படைகளும் தேர்த்தொகைகளும் காட்டுத்தீயில் வீழ்ந்த பறவைக் கூட்டங்களைப் போல் படுநாச மடைந்து நெடிது குவிந்து கிடக்கின்றன.

யானைகளை வாரி எறிந்து யானைகளை அடித்திருக்கிறான். குதிரைகளைக் கொண்டு குதிரைகளைக் கொன்றிருக்கிறான்; தேர்களை வீசித் தேர்களைச் சிதைத்திருக்கிறான். தனக்கு என்று ஒரு ஆயுதமும் இல்லையாதலால் சமர்க்களத்தில் கிடந்த இருப்புத்தண்டத்தைக் கொண்டு சண்டமாருதம்போல் திரிந்துதாக்கி நொறுக்கிக் கண்ட கண்ட படைகளையெல்லாம் கண்டதுண்டங்கள் செய்திருக்கிறான்.

வலம்இடமாகச் சாரிதிரிந்து லகுபாய்ந்து யாண்டும்மூண்டு தோன்றி எல்லாரும் மாண்டுபட அநுமான் நீண்டு நின்றுள்ளமையைச்சில உவமைகளால் கவி சுவையாக விளக்கியிருக்கிறார்.

ஒரு பெருங் கோல்.
இருவினை துடைத்தவர் அறிவு.
மூலை விலையர் மனம்.

மாருதி கறங்கு என எங்கும் சுழன்றுவிரைந்து திரிந்து அரக்கரோடு போராடி அவரைப் படுநாசமாக அழித்திருக்கும் நிலையை இந்த உவமானங்கள் தெளிவாக உணர்த்தியுள்ளன. ஒப்பும் பொருளும் நுட்ப நிலைகளையுடையன வாயினும் விரிந்த காட்சிகளைத் தெரிந்து கொள்ளச் செய்கின்றன.

கோல் எனத் திரிந்தான்.

அறிவு எனத் திரிந்தான்.

மனம் எனத் திரிந்தான்.

கறங்கு எனத் திரிந்தான்.

எனத் தனித்தனி இங்ஙனம் பிரித்து நுனித்து நோக்க நின்றன. அரசன் செங் கோல் ஒன்றேயாயினும் அது எங்கும் தன் ஆணையை எளிதே நிலை நிறுத்தி அதிகார வென்றிகளோடு யாவ

ரும் துதி செய்ய நிற்கும் ஆதலால் அந் நிலையில் உள்ள அனுமா னுக்கு அது இங்கு தலைமையான உவமானமாய் வந்தது.

நல்லோரைக் காத்தருளுவதும் தீயோரை அழித் தொழிப் பதும் கோலின் வேலை ஆதலால் அவ்வேலையில் மூண்டுள்ளமை ஈண்டு விழிதெரிய நின்றது. நீதியும் தருமமும் நிலை பெறவே அங்கே கொலைகள் விழுகின்றன என்று கூர்ந்து ஓர்ந்து கொள்ளு கிறோம். கொடிய பாவிகளைப் பெரிய புண்ணியவான் கடிது விரைந்து நெடிது கொன்றழிக்கின்றான் என்பதைக் கண் எதிரே இங்ஙனம் காட்டி யருளினர்.

தத்துவ ஞானிகளுடைய அறிவு எங்கும் பரந்து எல்லாம் அறிய வல்லது ஆதலால் அங்ஙனமே யாண்டும் மூண்டு எவ்வழி யும் காரிய சித்தி பெற்று வீரியமாய் வருகிற மாருதிக்கு அது நேராக நேர்ந்தது.

அரசன் கோல் ஞானிகள் அறிவு என இங்ஙனம் மேன்மை யான உவமானங்களைக் கூறியதோடு அமையாமல் அயலே மா ருக வேறு ஒன்றும் கூறினர்.

முலை விலைக்கு வழங்கும் தெரிவையர் என்றது வேசியரை. வருமுலை என்றது பணைத்து வளர்ந்து வருகிற அதன் பருவ நிலை தெரிய. மங்கைப் பருவமும் கொங்கை உருவமும் குறிப்போடு காட்டியது அங்கே காளையர் விருப்போடு வீழ்ந்துபடும் வேளை நிலையை விழித்துக் காண.

மதித்தனர் வழங்கும் என்றது அவர் முலையை விலைக்குக் கொடுத்து வரும் வித்தக நிலையை உய்த்துணர. வந்தவன் தந்த தனத்தை முந்த முழுதும் வாங்கிக் கொண்டு தம் தனத்தைப் பாங்காகக் காட்டி யாதும் தேயாமல் பாலித்து வரும் பாடு தெரிய வந்தது.

"முந்தத் தனம்கொடுத்தேன் முட்டாள் தனம்கொண்டேன்
அந்தத் தனமுடையாள் யாதும் குறையாமல்
எந்தத் தனமும் எதிர்வரவே செய்துகொண்டாள்"

என ஒரு பரத்தன் பகர்ந்துள்ளது இங்கே அறிந்து கொள் ளவுரியது. பரத்தையர் மனம் விசித்திர கதியுடையது; அதன் நிலையை யாராலும் அறிந்து கொள்ளமுடியாது. அறிய அரியது உரிய வேகத்திற்கு ஈண்டு உவமையாய் வந்தது.

கண்எதிரே கண்டாலும் இன்னநிலையில் நிற்கிறான், இன்ன கதியில் பாய்கிறான், இன்ன திசையிலிருந்து வருகிறான் என அனுமானை அங்கே யாரும் யாதும் தெரியாமல் மறுகி மயங்கினர் ஆதலால் தெரிவையர் மனம் என அவன் தெரிய நின்றான்.

"நிதிவழி நேயம் நீட்டும் மாதர் மனம் எனப் போயிற்று"

மாய மானுக்கு முன்னம் உவமை கூறியுள்ளதும் ஈண்டு எண்ண வுரியது. அங்கே மாரீசனுக்கு வந்தது; இங்கே மாருதிக்கு நேர்ந்தது. மாய வேலைகளுக்கு இனமா மாய மகளிர் மனம் மருவி நின்றது.

மாற்றரு மணநெறி மகளிர் நெஞ்சமே
போற்பல கவர்களும் பட்டது" (சீவகசிந்தாமணி,1212)

விலைமகளிர் மனம்போல ஒருவழி பல பிரிவுகளாய் ஓடியிருந்தது என இது உணர்த்தியுள்ளது. எவரும் நிலை தெரியாதபடி பல கரவுகளையுடையது என அவர் மனத்தைக் கவிகள் இவ்வாறு கருதிக்காட்டிவருவது உலகமக்கள் உறுதிகண்டு தெளிய.

தேவரும் தெரிவரிய மாயா வல்லவனாய்த் திரிந்து விரைந்து அரக்கர் படைகளை மாருதி மடித்திருக்கிறான். நாலு திசைகளிலும் ஓடி மேலும் கீழும் பாய்ந்து சேனைத் திரள்களைச் சின்னபின்னமாய்ச் சிதைத்து அழித்திருப்பது விசித்திரக் காட்சியாய் வெளிப்பட்டு நின்றது.

மண்ணினும் விசும்பினும் மருங்கினும் வலித்தார்
கண்ணினும் மனத்தினும் தனித்தனிக் கலந்தான்.

திருமால் எங்கும் நிறைந்திருத்தல்போல் அனுமான் அன்று யாண்டும் நிலவி நின்றுள்ளான். கண்ட கண்ட இடங்களில் எல்லாம் இராட்சதர்கள் இவ்வீரன் கையில் அகப்பட்டு மாண்டு மடிந்துள்ள நிலையை ஈண்டு அறிந்து கொள்கின்றோம்.

உருவில் ஒருவன் ஆயினும் பொரு தொழிலில் புரிந்த கதி வேகங்களால் தனித்தனியே எதிர் தோன்றி எற்றி ஏறி வெற்றி வீறுடன் விளித்து அழித்திருக்கிறான்.

## தானைத் தலைவன் நின்றது.

சம்புமாலியோடு வந்த எண்பதினாயிரம் படை வீரர்களும்

ஒரு நாழிகையுள் அழிந்து ஒழிந்தனர். பிணக்குவியல்களும் நிணச் சேறுகளும் இரத்த வெள்ளங்களும் எங்கும் பரந்து கிடத்தலைக் கண்டு சேனைத் தலைவன் சீறிக் கொதித்தான். உற்ற துணைகளை யெல்லாம் இழந்து உள்ளம் கனன்று வில்லும் கையுமாய்த் தேரைக்கடாவி நேரே வந்தான். நாலு குதிரைகள் பூட்டியிருந்த அந்த இரதத்தைப் பாகன் செலுத்திப் பிணங்கள் மீதேறித் ததைத்து வருவதைக் கண்டதும் அனுமான் குறு முறுவலுடன் எதிர் வந்து நின்றான். வில்லை வளைத்து அம்பு பூட்டித்தேர் மேல் நிற்கும் சம்புமாலியை இந் நம்பி நோக்கி அன்புடையனாய் ஆதரவு கூறினான்.

ஏதிஒன்றால் தேரும் அஃதால் எளியோர் உயிர்கோடல்
நீதிஅன்றால் உடன்வந் தாரைக் காக்கு நிலை யில்லாய்!
சாதிஅன்றேல் பிறிது என்செய்தி? அவர்பின் தனி நின்றாய்
போதிஎன்றான் பூத்தமரம் போல் புண்ணால் பொலிகின்றான்.

தன்னோடு போர் செய்ய மூண்டு தேர்மேல் வந்து நேரே நிற்கிற பகைவனைப் பார்த்து அனுமான் இவ்வாறு பேசி யிருக்கிறான். பேச்சில் பெருமிதமும் விநயமும் பெருகி யுள்ளன.

“ஏ சேனைத் தலைவ! கடைசியில் வீணே நீ ஏன்சாகவந்தாய்? உன்னோடு வந்தவரெல்லாரும் செத்துத் தொலைந்தனர்; ஒருவனை யாவது நீ காப்பாற்றிக் கொள்ள வில்லை; உன் உயிரையாவது பாதுகாத்துக்கொள்; இனிமேல் இங்கே நில்லாதே; ஊரைப் பார்த்து ஓடிபோ!” என இப்படி உரைத்தருளினான்.

அருந்திற லாண்மையும் பெருந்தகவும் வீரக் களிப்பும் வெற்றி நிலையும் இவ் வுரையுள் வீறு கொண்டுள்ளன.

பல்லாயிரம் படைவீரர்கள் தன் கண் எதிரே மாண்டு பட்டதை நேரே கண்டிருந்தும் யாதும் கலங்காமல் போராடத் தேரோடு வந்துநிற்கும் சேனைத்தலைவனை நோக்கி இவ் வானரவீரன் மானமும் நாணமும் வர வாயாடி யிருக்கிறான். வீர கம்பீரமும் கருணையும் விநயமும் இங்கே வெளிப்பட்டு நிற்கின்றன.

**சாதி; அன்றேல், என்செய்தி? போதி!**

நேரவுள்ள நிலைமையை எதிரிக்கு இப்படி எடுத்துக்காட்டி யிருக்கிறான். எல்லாரும் முடிந்துபோன பின்னர் முடிவில் என்னோடு சண்டை செய்ய வந்துள்ளாய்! நீ செத்து வீழ்வதைத்

தவிர வேறு இங்கே என்னசெய்யப்போகிருய்? வீணே அழிந்து படாதே; ஒளிந்து ஓடிப்போ! என உணர்த்தி நின்ருன்.

பகைவனிடமும் பரிவு காட்டி இவ்வாறு அறிவு கூறியிருப்பது அரிய ஆண்மையாய்ப் பெரிய மேன்மையை விளக்கி யுள்ளது. இப்படிச் சொன்னவன் யார்? என்பதை நம் கண் எதிரே கவி கொண்டு வந்து காட்டி யிருக்கிருர். அந்தக் காட்சியைக் கண்ஊன்றிக் காண்பவர் எவரும் கரும நிகழ்ச்சிகளை ஓர்ந்து உரிமையுடன் பரிவு கூர்ந்து அருமை வீரத்தை அறிந்து உருகுவர்.

பூத்த மரம்போல் புண்ணுல் பொலிகின்ருன்.
இந்தக் காட்சியைக் கண்ணுல் காண்கின்ருேம்.

படைத் தலைவனுக்கு உயிர்ப் பிச்சை கொடுப்பதாக உரையாடி நிற்கும் அனுமானுடைய உடல் நிலையை இது உணர்த்தி யுள்ளது. அரக்கர்கள் சூழ்ந்து கொண்டு அமராடிய பொழுது வேல் வாள் முதலிய பலவகையான படைக்கலங்களையும் மாரி போல் வாரி வாரி வீசினுர் ஆதலால் அந்தக் கூரிய கொலைக் கருவிகள் மேனி முழுவதும் பாய்ந்து எங்கும் புழைகளாய் உதிரங்கள் ஒழுகிக் கொண்டிருக்கின்றன. சிவந்த மலர்கள் நிறைந்து பூத்து நிவந்து நிற்கும் தருவைப் போல் போர்க் காயங்களோடு பொலிந்து நின்ருன் ஆதலால் பூத்த மரம் என்ருர்.

போர்ப்புண்களுக்குப் பூக்களை உவமைகூறியது அவற்றின் புகழ் மணங்களைக் கருதி யுணர. கீர்த்தியோடு விளைந்து வருவதை வார்த்தைகள் வார்த்துக் காட்டு கின்றன.

* விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து. (குறள், 776)

போரில் புண்படுவதை வீரர்கள் ஒரு பெரும் பேருகக் கருதிக் கொள்வர் என்பதை இதனுல் அறிந்து கொள்கிருேம். இந் நாட்டுமக்களுடைய வீரப்பாடுகளைப் பாட்டுகள் இடையிடையே காட்டி வருகின்றன; கருதி யுணர வேண்டும்.

---

* தன் ஆயுளில் தனக்கு அமைந்த நாள்களை எடுத்து எண்ணிப் போரில் போய்த் தன்மார்பினும் முகத்தினும் புண்படாத நாள்களைப் பயன் அற்ற இழி நாள்களாக வீரன் இகழ்ந்து வைப்பன் என்பதாம். விழுப்புண் என்றது விழுமிய பெருமையுடையது என அதன் வியனிலை தெரிய வந்தது. வீரப்பாடு தீரப்பாடாய் வெளிப்பட்டு நின்றது.

அனுமானது உடல் முழுதும் புண்களாய் உதிரம் ஒழுகி இருந்தது என்றதனல் கொடிய அரக்கர்களோடு அவன்நெடிது போராடியுள்ள நிலைமை தெரிய வந்தது. ஏதோ இந்திரசாலமாய் மந்திரம் புரிந்து எதிரிகளைக் கொன்று குவிக்கவில்லை; தன் உடல் வலியினலேயே உக்கிர வீரமாய்ப் பொருது வென்றிருக்கிருன் என்பதைப் புண்கள் புலப்படுத்தி நின்றன

## தளபதி செத்தது.

உடன் வந்த படைகள் எல்லாம் அழிந்து ஒழிந்தன: நீ ஒருவனே எஞ்சி நிற்கின்ருய்; வீணே செத்துத் தொலையாதே; தேரோடு ஊரை நோக்கி ஓடிப் போ! என்று வீர கம்பீரமாய் அனுமான் சொல்லவே சம்புமாலி வெம்பி வெகுண்டான்; வீரவாதத்தோடு மாறு கூறிச் சீறிப் பொருதான்.

நன்று நன்றுன் கருணை என்ன நெருப்புநக நக்கான்
பொன்று வாரின் ஒருவன் என்ருய் போலும் எனை என்ன
வன்திண் சிலையின் வயிரக் காலால் வடித்திண் சுடர்வாளி
ஒன்று பத்து நூறு நூருயிரமும் உதைப்பித்தான்.

தன்னை வம்பாக அனுமான் கேலி செய்தான் என்று சம்புமாலி கொதித்து வில்லை வளைத்து அம்புகளை ஒல்லையில் தொடுத்து விடுத்தான்.

ஏ குரங்கே! உன் கருணை நன்று! நன்று! என்று அவன் இகழ்ச்சிக் குறிப்போடு சிரித்திருக்கிருன். "அநியாயமாய் மாண்டு படாதே; மீண்டு ஓடிப் போ!" என இந்த ஆண்டகை முன்னம் சொன்னதை நினைந்து இன்னவாறு அவன் பன்னி நகைத்தான்.

வில்லாடலில் வல்லவன் ஆதலால் பல்லாயிரம் பாணங்களை அவன் வாரி வீசினன். சரமாரியாய் வந்து பாய்ந்தவற்றையெல்லாம் இவன் கையிலிருந்த எழுவால் மெய்யில் மேவாதபடி வித்தகமாய் விலக்கி ஒழித்தான். காற்ருல் சிதறியோடும் கல் மழை போலத் தான் ஏவிய பகழிகள் யாவும் இழிந்து சிதையவே அவன் வியந்து திகைத்தான். கையில் தண்டம் இருக்கும் வரையில் மெய்யில் ஒரு பாணமும் பாயாது என்று தெரிந்து சினந்து தேரை விரைந்து கடாவித் தலைக்கும் நெற்றிக்கும் குறி வைத்துக் கொலைக் கணைகளைக் கொதித்து ஏவினன். குறி தப்பாது என்று கூர்ந்து விடுத்த அம்புகளும் தும்புகளாய் உதிர்ந்தன. உதிரவே

மூதிர் கோபமாய்ச் சீறி மூன்று நூறு கணைகளை மாறிமாறி எய் தான். மாருதி கையிலிருந்த தண்டம் துண்டமாய் விழுந்தது. அவன் மகிழ்ந்து விரைந்து கொடிய சுடுசரங்களை அடுதிறலோடு கடிது ஏவினன். முடுகி வந்த கணைகளைக் கையாலும் வாலாலும் விலக்கியும் மார்பிலும் தோளிலும் சில விரைந்து பாய்ந்தன. பாய வே பகைவன் ஏறியிருக்கும் தேர்மேல் நேரே பாய்ந்து புகுந்து அவன் கையில் பிடித்திருந்த வில்லைக் கடுத்துப் பிடுங்கிக் கழுத் தில் மாட்டி இவ் வீரன் வலித்து இழுத்தான். சம்புமாலி தலை அயலே துள்ளி விழுந்தது. சிரம் கீழே வீழு முன்னரே குதிரை களையும் பாகனையும் தேரையும் மிதித்துச் சிதைத்து அயலே லகு பாய்ந்து மீண்டும் அந்த நீண்ட கம்பத்தின் மீது இந்த ஆண்ட கை தாவி வெற்றிக் களிப்புடன் மேவி யிருந்தான்.

சலித்தான் ஐயன் கையால் எய்யும் சரத்தை யுகச்சாடி
ஒலித்தார் அமரர் கண்டார் ஆர்ப்பத் தேரின் உட்புக்குக்
கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக் கழுத்தின் இடையிட்டு
வலித்தான் பகுவாய் மடித்து மலைபோல் தலைமண்ணிடை வீழ.

குதித்துத் தேரும் கோல்கொள் ஆளும் பரியும் குழம்பாக
மிதித்துப்பெயர்த்துநெடுந்தோரணத்தைவீரன்மேற்கொண்டான்
கதித்துப் பழிந்து கழிந்தார் பெருமை கண்டு களத்தஞ்சி
உதித்துப் புலர்ந்த தோல்போல் உருவத் தமரார் ஓடினர். (2)

முதலில் படைகளை அழித்து ஒழித்து முடிவில் படைத் தலை வனைக் கொன்று தொலைத்து வென்றி வீரனாய் அனுமான் நின்றி ருக்கும் நிலையை நேரே கண்டு ஈண்டு நாம் நெஞ்சம் களிக்கின் றோம். கூரிய பாணங்களை எதிரி சீறிப் பொழிந்ததும், இவன் மீறி நேரே தேருள் பாய்ந்து வில்லைக் கடுத்துப் பறித்து அவன் கழுத்தில் மாட்டி இழுத்ததும், அந்த இழுப்பில் தலை துண்டமா ய்க் கீழே விழ முண்டம் தேர்த்தட்டில் கிடந்துள்ளதும் வித்தக மான ஓர் வீரக் காட்சியாய் விளங்கியுள்ளது.

தலை மண்ணிடை வீழ வலித்தான்.

என்றதனால் சிலையைக் கழுத்தில் இட்டு வெட்டியிழுத்தி ருக்கும் வேகமும் சாகசமும் விழி தெரிய வந்தன. எட்ட நின் றால் மேலும் மேலும் அம்புகளை ஏவித் துன்புறுத்துவன் ஆதலால் கிட்ட ஒட்டி இங்ஙனம் வெட்டி வீழ்த்தினன். தானைத் தலைவனை இவ்வாறு கொன்று உருட்டிய பின் அவன் ஏறி வந்த தேரை

உதைத்துச் சிதைத்தான். தேரும் பரியும் ஆளும் குழம்பாக மிதித்துப் பெயர்ந்தான் என்றது அந்த மிதியின் கதியை மதித்துணர வந்தது. கையும் காலும் விரைந்து வேலை செய்திருக்கின்றன.

போராடலில் யாரும் நேராடாமல் இவ் வீரன் நீறு செய்து வருவது நெடிய வியப்பாய் நிலைநிமிர்ந்துள்ளது. வந்த படைகளை யெல்லாம் கொன்று குவித்து விட்டு வென்றி மீதூர்ந்து மேலும் வருவதை எதிர் பார்த்து வழி நோக்கி விழியூன்றி நின்றான்.

## காவலர் சென்றது.

மூண்டு வந்த படைகள் மாண்டு மடிந்ததைக் கண்டதும் காவலர் யாவரும் கலங்கி ஓடினர். இலங்கை வேந்தனைத் தொழுது நிகழ்ந்ததைச் சொல்ல முடியாமல் நிலை குலைந்து நின்றார்.

வந்து நின்றவரது நிலையினை நோக்கிச் சென்ற படைகள் யாவும் செத்தொழிந்தன என்பதை இராவணன் உய்த்துணர்ந்து கொண்டான். ஊகமாய்த் தெரிந்து கொண்டாலும் "நேர்ந்தது என்ன?" என்று வேகமாய் அவன் விரைந்து கேட்டான். போனவர் யாவரும் செத்துப்போயினர் என அவர் ஒத்து உரைத்தார்.

நமர் எல்லாம் உக்கார்;
சம்பு மாலி உலந்தான்;
குரங்கு ஒன்றே.

என இங்ஙனம் அவர் குறித்துக் கூறவே இராவணன் கொதித்துச் சீறினன். அந்த மாயக் குரங்கை நானே போய்ப் பிடித்து வருகிறேன் என்று அவன் கடுத்து எழுந்தான்.

## சேனாபதிகள் தடுத்தது.

தன்னுடைய இராசதானியில் வந்து ஒரு வானரம் அரக்கர் பலரைக் கொன்று அடலாண்மையுடன் வீரத்திறல் புரிந்துள்ளது என்று கேட்கவே மிகவும் ஈனம் நேர்ந்தது என மானத்தால் வெதும்பி இராவணன் போருக்கு மூண்டு பொங்கி எழவே அருகே நின்ற சேனைத் தலைவர்கள் அடி தொழுது தடுத்தார்.

உன்ன உன்ன உதிரக் குமிழி விழியூடு உமிழ்கின்றான்
சொன்ன குரங்கை யானே பிடிப்பன் கடிது தொடர்ந்து.

என இன்னவாறு மன்னர் மன்னவன் உள்ளம் கனன்று உருத்துச் சீறவே ஐந்து தளபதிகள் வந்தனை செய்து வணங்கி மொழிந்தார். தங்களுடைய சக்கரவர்த்தியைத் தடுத்து நிறுத்தி வானரத்தைப் பிடித்துவரும் பணியைத் தமக்குக் கொடுத்தருளும்படி அவர் குறித்து வேண்டினர். அப்பொழுது பேசிய அவருடைய வார்த்தைகளில் இராச பத்தியும் வீரத் திறல்களும் வீறு கொண்டு விரிந்து நின்றன.

சிலந்தி உண்பதோர் குரங்கின்மேல் சேறியேல் திறலோய்!
கலந்த போரிடைக் கட்புலன் கடுங்கனல் கதுவ
உலந்த மால்வரை அருவியாறு ஒழுக்கற்ற ஒக்கப்
புலந்த மாமதம் பூக்குமன்றே திசைப் பூட்கை. (1)

இலங்கு வெஞ்சினந்து அஞ்சிறை எறுழ்வலிக் கலுழன்
உலங்கின்மேல் உருத்தன்ன நீ குரங்கின்மேல் உருக்கின்
அலங்கல் மாலை நின்புயம் நினைந்து அல்லும் நன்பகலும்
குலுங்கும் வன்துயர் நீங்குமால் வெள்ளியங் குன்றம். (2)

உறுவதென் கொலோ வானிழிவு என்பதொன் றுடையார்
பெறுவதியா தொன்றும் காண்கிலர் கேட்கிலர் பெயர்ந்தார்
சிறுமையீது ஒப்பது யாதுநீ குரங்கின்மேல் சேறின்
முறுவல் பூக்குமன்றே நின்ற மூவர்க்கும் முகங்கள். (3)

அன்றியும் உனக்கு ஆளின்மை தோன்றுமால் அரச!
வென்றி யில்லவர் மெல்லியோர் தமைச் செலவிட்டாய்!
நன்றி இன்று ஒன்று காண்டியேல், எமைச் செல நயத்தி
என்று கைதொழுது இறைஞ்சினர்; அரக்கனும் இசைந்தான். (4)

(பஞ்ச சேனாபதிகள் வதை 1-4)

சேனைத் தலைவர் இன்னவாறு பேசியுள்ளனர். மன்னனை வணங்கி மான வீரங்களுடன் அவர் கூறியிருக்கும் உரைகள் வீரிய வுணர்ச்சிகளை வெளிப்படுத்தி வெற்றித் திறல்களை விளக்கி நிற்கின்றன.

"புவனேசுவரா! தாங்கள் ஒரு குரங்கின் மீது இன்று போர் செய்ய மூண்டது அரிய அதிசயமாய் நீண்டது; திக்கு யானைகளைச் செருக்கு அடக்கி, வெள்ளியங் கிரியை அள்ளி எடுத்து, யாவரையும் வென்று, எல்லாவுலகங்களையும் கைக்கொண்டு, தேவரும் அஞ்சி ஏவல் செய்ய, மூவரும் வியந்து புகழ உக்கிர வீர சக்கரவர்த்தியாயிருக்கிற நீங்கள் ஒரு அற்பக் குரங்கைப் பொருளாகக் கருதிப் பொர நினைந்தது எங்களுக்குப் பெரிய மரு

ளாயுள்ளது. வானையும் வளைத்து வெல்ல வல்ல சேனை வெள்ளங்கள் அளவிடலரியனவாயுள்ளன; எங்களைப் போன்ற ஊழியருள் ஒருவனை ஏவினும் அந்தப் புல்லிய குரங்கை ஒல்லையில் பிடித்து எல்லாரும் கண்டு மகிழ இங்கே கொண்டு வந்து விடுவோம்; உத்தரவு கொடுத்தருளுங்கள்'' என இங்ஙனம் வித்தகமாய் அவர் வேண்டி நின்றனர்.

இந்தத் தளபதிகளுடைய மன நிலைகளும் அடல் ஆண்மைகளும் போர்ச் செருக்குகளும் உரைகளில் வெளியாகியுள்ளன. யாரையும் எளிதாகவே எண்ணி வாழ்ந்துள்ள இறுமாப்பு நிலைகள் எதிர் தெரிய வந்தன.

சிலந்தி உண்பது ஓர் குரங்கு என அனுமானை இங்ஙனம் இகழ்ந்து கூறியிருக்கின்றனர். சிலந்தி—ஒரு பூச்சி, கோரைக்கிழங்கு. எளிய வாழ்வினையுடைய இளி பிராணி என்னும் குறிப்பில் வந்தது. பெரிய போர்வீரராகிய நீங்கள் இந்தக் குரங்கோடு அமர் செய்ய எண்ணியது கருடன் கொசுவோடு சண்டை செய்ய மூண்டது போலாம். உலகம் சிரிக்கும்படியான இழிவான காரியம்என்று தம்அரசன்எதிரே விழிதெரிய விளக்கினர்.

மூவர்க்கும் முகங்கள் முறுவல் பூக்கும் அன்றே.

இராவணன் அனுமானோடு சண்டை செய்ய நேர்ந்தால் திரி மூர்த்திகளும் சிரிப்பார்கள் என அவனுக்கு இப்படி எடுத்துக் காட்டியிருக்கின்றனர். சிவன் திருமால் பிரமா என்னும் மூவரோடு இலங்கேசன் ஒரு நிகராய் வாசி கொண்டுள்ளதாக அவர் இங்கே பேசியுள்ளனர்.

தேவர் யாவரினும் சிறந்து மூவரும் புகழ்ந்து கூறும் நிலையில் உயர்ந்து வாழ்கிற தாங்கள் இழிந்த குரங்கோடு எதிர்பொர நேர்வது மிகவும் இழிவாம்; அதுவும் தவிர உங்களுக்குப் படைத்துணை இல்லையோ? என்ற ஐயமும் அயலார்க்குத் தோன்றும் ஆதலால் எவ்வகையினும் நீங்கள் வெளியேறலாகாது; நாங்கள் விரைந்து போய்க் குரங்கைக் கையோடு பிடித்துக் கொண்டு வந்து விடுகிறோம்; விடையருளுங்கள் என்று அவர் வணங்கி வேண்டவே இராவணன் இணங்கி யருளினன்.

## பஞ்ச சேனபதிகள் எழுந்தது.

அஞ்சா நெஞ்சராகிய தானைத் தலைவர் ஐவரும் இராவணனிடம் விடை பெற்று விரைந்து போருக்கு எழுந்தனர். விருபாட்சன், யூபாட்சன், துர்த்தரன், பிரகசன், பாசகன் எனப்பேரும் சீரும் பெற்றுள்ள இந்த ஐந்து சேனதிபதிகளும் போருக்கு ஆயத்தமாய் எழுந்தவுடன் சேனைகள் திரண்டு வந்தன. தமக்கு உரிமையாய் அமைந்திருந்த படைகளோடு வேறு பல படைத் திரள்களும் தொடர்ந்து அடர்ந்தன. படைகளின் அளவுகளையும் படைத் தலைவர்களுடைய நிலைகளையும் கருதிக் காணுந்தோறும் வியப்பும் விம்மிதமும் விளைந்து வருகின்றன.

ஆழித் தேர்த் தொகை ஐம்பதி னாயிரம்; அஃதே
சூழிப் பூட்கைக்குத் தொகை; அவற்றிரட்டியின் தொகைய
ஊழிக் காற்றன புரவி; மற்றவற்றினுக்கு இரட்டி
பாழித் தோள்நெடும் படைக்கலப் பதாதியின் பகுதி. (1)

கைபரந்தெழு சேனையங் கடலிடைக் கலந்தார்
செய்கை தாம்வரும் தேரிடைக் கதிர்எனச் செல்வார்
மெய்கலந்தமா நிகர்வரும் உவமையை வென்றார்
ஐவரும் பெரும் பூதம் ஓரைந்தும் ஒத்தமைந்தார். (2)

முந்தியம் பல கறங்கிட முறை முறை பொறிகள்
சிந்தியம் புறு கொடுஞ்சிலை உருமெனத் தெறிப்பார்
வந்தியம் புறு முனிவர்க்கும் அமரர்க்கும் வலியர்
இந்தியம் பகையாயவை ஐந்தும் ஒத்தியைந்தார். (3)

வாசவன்வயக் குலிசமும் வருணன்தன் கயிறும்
ஏசில் தென்திசைக் கிழவன்றன் எரிமுளை எழுவும்
ஈசன் வன்தனிச் சூலமும் என்றிவை ஒன்றும்
ஊசி போல்வதோர் வடுச்செயா நெடும்புய முடையார். (4)

போருக்கு எழுந்து வருகிற சேனைத் திரள்களையும் சேனைத் தலைவர்களுடைய திறல்களையும் இவை காட்டியுள்ளன. வீரக் காட்சிகள் வியத்தகு நிலைகளில் விரிந்து வருகின்றன. இரத கச துரக பதாதிகள் எனப் பெயர் பெற்றுள்ள படை யினங்கள் அடைவுடன் எழுந்தன. சேனைகள் புடை சூழவே ஐந்து சேனதிபதிகளும் எந்திர வகைகள் நிறைந்த சுந்தரத் தேர்களில் ஏறி

ஞர். போர்க் கோலம் பூண்டு கூரிய ஆயுதங்களோடு அவர் இரதங்களில் எழுந்த பொழுது இந்திரன் முதலிய இமையவர்களும் சிந்தை கலங்கினர். இரண்டு முறை சென்ற படைகளையும் ஒருங்கே கொன்றொழித்தது என்ற கொதிப்பினல் படை வீரர்கள் யாவரும் மாருதியை நீருக்கி விட வேண்டும் என்று சீறித் திரண்டு வீறுடன் நடந்தனர். வெள்ளம் புரண்டு வருவது போல் உள்ளம் கனன்று தானைகள் படர்ந்து வர நடுவே தானைத் தலைவர்கள் அடர்ந்து வந்தனர்.

ஐவரும் பெரும்பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார்.

போர்மேல் மூண்டுவருகிற தலைவர்களுடைய நிலைமைகளைப் பல வகையிலும் உணர்த்தி வருகிருர். அரிய பெரிய ஆற்றலுடையவர் என்பதை எளிது தெரிய இந்த உவமை வந்தது.

பஞ்ச சேனுதிபதிகள் பஞ்ச பூதங்களை ஒத்திருந்தனர்.

என்றது அவரது ஒருமைப்பாடும் அருமைப் பீடும் உரிமையோடு ஓர்ந்துணர. நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் என்னும் ஐந்தும் அதிசய வலிகளையுடையன ஆதலால் இந்த ஐவரும் அந்த ஐந்தையும் ஒத்தவர் என்ருர்.

"மண் திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீ முரணிய நீரும் என்ருங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்
போற்ருர்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்!" (புறம்)

ஒரு சேர மன்னனைக் குறித்து முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியிருக்கிருர்.

ஐந்து பூதங்களின் இயல்புகளும் அவன் பாலுள்ளன என்று உரைத்துள்ளமை ஈண்டு ஓர்ந்து உணர வுரியது.

அனுமானேடு போராட எழுந்த தானைத் தலைவர்கள் அரிய பெரிய வலியினர் என்பதை உவமை காட்டி உணர்த்தியருளினர்.

பஞ்ச பூதங்களை ஒத்த வலியுடையாரும் அஞ்சனை சேய் எதிரே யாதொரு செயலும் இலராய் அழிந்து படுவர் என்பது தெளிந்து கொள்ள வந்தது. செத்து மடிய வருகிற சேனாதிபதிகளை வித்தக விநயமாய் விளக்கியருளியது உய்த்துணர வுரியது.

இந்திரனுடைய வச்சிராயுதம், வருண பாசம், யமதண்டம், ஈசன் கைச் சூலம் ஆகிய இந்தத் தெய்வப் படைகளை ஏவினும் யாதொரு வடுவும் நேராத வலிய நெடிய தோளினர். பல போர் முனைகளிலும் வெற்றி பெற்றுள்ள வீரக் களிப்பினர். அமரர்களும் நடுங்க அமராடி அடலாண்மை புரிந்தவர்.

நிதி நெடுங் கிழவனை நெருக்கி நீணகர்ப்
பதியொடும் பெருந்திருப் பறித்த பண்டை நாள்
விதியொடும் அன்னவன் விழுந்து வெந்நிடப்
பொதியொடும் வாரிய பொலன்கொள் பூணினர். (1)

இந்திரன் இசையிழந்து ஏகுவான் இகல்
தந்திமுன் கடாவினன் முடுகத் தாம் அதன்
மந்தர வாலடி பிடித்து வல்லையேல்
உந்துதி நீ என வலிந்த ஊற்றத்தார். (2)

பால் நிறத்து அந்தணன் பணிய னாகிநின்
கோல் நினைத்திலன் என உலகம் கூறலும்
நீல் நிறத்து இராவணன் முனிவு நீக்குவான்
காலனைக் காலினில் கையில் கட்டினர். (3)

மலைகளை நகும்தட மார்பர்; மால்கடல்
அலைகளை நகும்நெடுந் தோளர்; அந்தகன்
கொலைகளை நகும் நெடுங் கொலையர்; கொல்லனாது
உலைகளை நகும் அனலுமிழும் கண்ணினர். (4)

தானைத் தலைவர்களின் நிலைகளைப் பல வகையிலும் பார்த்து வருகிறோம். குபேரனுடைய நகரைக் கொள்ளையடித்தவர்; அமராவதியுள் புகுந்து அமர் புரிந்தவர். இந்திரன் உடைந்து ஓடுங்கால் அவனது பட்டத்து யானையை வாலைப்பிடித்து அடித்தவர்; இலங்கேசனாகிய தங்கள் சக்கரவர்த்தியின் அதிகார ஆணையை வலியுறுத்தும் பொருட்டுக்காலையும் கையையும் கட்டிக் காலனைக் கொண்டு வந்தவர். நெடிய திறலும் கொடிய செயல்களும்

உடையவர் என அவரது நிலைமைகள் பல வகைகளிலும் தெரிய வந்தன. கொடுங் கொலையாளிகள் என்பதைக் குறித் துணர்த்தினர்.

அந்தகன் கொலைகளை நகும் நெடுங் கொலையர்.

இவரது கொலைத் தொழில்களின் கொடுமைகளை இது உணர்த்தியுளது. காலம் முடிந்தபொழுது பருவம் பார்த்து அருவமாய் வந்து அந்தகன் உயிர்களைக் கவர்ந்து போவான்; கண்டவர் எவரும் உள்ளம் துடித்தயர நேரே புகுந்து கொடுமையாய் இவர் கொன்றுபோவர் ஆதலால் கூற்றுவனிலும் இவர் கொடிய கொலையாளிகள் என நின்றார். இத்தகைய தானைத் தலைவர் சேனைத் திரள்களோடு சீறிவருவதை நோக்கி யாது நேருமோ? என்று தேவரும் மறுகினர். யாவரும் அஞ்சினர்.

## அனுமான் கண்டது.

அடலாண்மைகளோடு படைகள் திரண்டு வருவதைக் கண்டதும் அனுமான் உவகை மீக்கொண்டான். ஆண்டவனுடைய கோதண்டம் செய்ய வேண்டிய வேலையை அடிமையும் முன்னதாகக் கொஞ்சம் செய்து முடித்தான் என்னும் சீர்த்தி கிடைத்தது என இவ்வீரன் நெஞ்சம் களித்தான். போர்வரவை நோக்கி ஆர்வம் மீதூர்ந்தது அதிசயமாயுள்ளது.

இற்றனர் அரக்கர்இப் பகலுளே எனக்
கற்றுணர் மாருதி களிக்கும் சிந்தையான்
முற்றுறச் சுலாவிய முடிவில் தானையைச்
சுற்றுற நோக்கித்தன் தோளை நோக்கினன்.

உற்ற படைகளைக்கண்டதும் அனுமான் உள்ளம் களித்துச் செய்துள்ளதை இதில் நேரே கண்டு நாம் நெஞ்சம் களிக்கின்றேம். கடல்போல் வருகிற சேனைத்திரளைப் பார்த்ததும் உடனே தனது தோளைப் பார்த்திருக்கிறான். இந்த வீரக் காட்சி நமக்கு எவ்வளவு வீரத்தை விளைத் தருளுகின்றது! அஞ்சாத காலனும் அஞ்சி நடுங்கும்படி கடல் பொங்கி வருவதுபோல் படைகள் அடல் கொண்டு வருகின்றன. அதனை ஒரு திரணமாக எண்ணி அஞ்சனைச் சிங்கம் நெஞ்சம் களித்துள்ளான்.

தானையைச் சுற்றுற நோக்கித் தன்தோளை நோக்கினன்.

என்னும் இதனை நாம் நீள நோக்கி நெடிது சிந்திக்கின்றோம். தோளை நோக்கியது என்? வாள் வேல் முதலிய ஆயுதங்கள் யாதும் இல்லாமலே இந்தப்படைகளை யெல்லாம் ஒருநொடியில் இத் தோள் அடியோடு அழித்து விடும் என்னும் முடிவு அப்பார்வையில் தீர்வையாயுள்ளது.

தோளை நோக்கினன் என்னும் இந்த வீரக் காட்சியை உள்ளே உணர்ந்து மகிழுகின்ற அளவு வெளியே தெளிவாக உரைக்க முடியாது. நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கவி இவ்வாறு வியந்துகாண விளக்கி யிருக்கிறார். அரிய பெரிய அருமைக் காட்சியைச் சுருங்கிய ஒரு சொல்லில் அழகாகத் துலக்கி யருளுகிறார். விண்ணோடி நிற்கும் நெடிய மலையைச் சிறிய கண்ணாடியில் காட்டுவதுபோல் நம்கவி காட்டிவருவது உவகையை ஊட்டிவருகிறது.

"Poetry is a mirror which makes beautiful that which is distorted." (Shelly)

"இழிவானதையும் மிகவும் அழகாக்கிக் காட்டி யருளுகிற விழுமிய கண்ணாடி போல் கவி செழுமியுள்ளது" என ஷெல்லி என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் கூறியுள்ளார்.

சரித்திர நிகழ்ச்சிகள் காவியத்தில் சீவிய ஒளிகளை வீசி வருகின்றன. அறிவின் சுவையும் உறுதி நலங்களும் எங்கும் பெருகி மிளிர்கின்றன. உணர்ச்சி வேகங்கள் உயர்ச்சிகளை அருளுகின்றன.

சண்டை செய்ய வருகிற படை யெழுச்சியிலும் அரியபல காட்சிகளைக் கண்டு மகிழ்கின்றோம். முன் அணியாய் மூண்டு வந்த படைகள் பொழிலை அடையவும் நீண்டு வளைந்தன.

## அமர் புரிந்தது.

படுகளத்தில் தனியே நிற்கிற அனுமானைக் கண்டதும் அரக்கர்கள் அதிசயம் கொண்டார். "இந்தப் புல்லிய குரங்கா இவ்வளவு வல்லமை செய்துள்ளது? விண்ணவர் எவரையும் வேரோடு வென்று வெற்றித் திருவுடன் விளங்கி யுள்ள அரக்கர் குலத்தை எதிர்த்து ஒரு குரங்கு போராடநேர்ந்தது பெரிய வியப்பு; இதை விட நமக்கு வேறு அவமானம் யாது?" என இன்னவாறு பலர் பன்னியுளைந்தார், சேனைகள்வந்து நெருங்கியபோதும் அனுமான்

யாதும் அசையாது நின்றான். அந் நிலையினை வியந்து பலரும் நெஞ்சம் திகைத்தார். கண்ணை மூடித் தியானம் பண்ணுவது போல் இந்தக் குரங்கு ஏதோ பாசாங்கு செய்கிறது. கிட்ட நெருங்காமலே எட்ட நின்று வெட்டி எறியுங்கள்; பாணங்களை ஏவுங்கள்; வேல்களை வீசுங்கள்; பாசக் கயிறு கொண்டு பற்றிப் பிடியுங்கள்; எற்றி அடியுங்கள்; தாவி ஓடிப் போகாதபடி மேவி வளைந்து ஆவியைக் கவருங்கள் என இவ்வாறு எவ்வழியும் ஆரவாரம் செய்து ஆர்த்து அமராடினர். கூரிய படைக் கலன்கள் தன் மேல் மழை பொழிவதுபோல் வந்து பாய்ந்தும் மாருதி மாறு ஒன்றும் செய்யாமல் சிறிதுபோது மவுனமா யிருந்தான்.

எறிந்தனர் எய்தனர் எண்ணிறந்தன
பொறிந்தெழு படைக்கலம் அரக்கர் போக்கினர்
செறிந்தன மயிர்ப்புறம் தினவு தீர்வுறச்
சொறிந்தனஎன இருந்து ஐயன் தூங்கினன்.

இந்தத் தூக்கத்தைச் கொஞ்சம் கூர்ந்து பாருங்கள்.

அனுமான் செய்துநின்ற சாகசத்தைக் கண்டு இங்கே நாம் வியந்து சிரிக்கின்றோம். படை வீரர்கள் கூரிய ஆயுதங்களை நாலாபக்கங்களிலும் நின்று வாரி வீசினர். மேலே வந்து பாய்ந்தன; உடம்பில் சிறிது தினவு தீரச் சொறிந்து கொடுத்தது போல் அவை செறிந்து நின்றன. அந்த நிலையில் கொஞ்சம் சுகமாய்க் கண்ணை மூடித் தூங்கினன். சண்டைக்கு மூண்டு வந்துள்ள பகைவரை எவ்வளவு அலட்சியமா எண்ணி யிருக்கிறான் என்பதை இது கண் எதிரே காட்டியுள்ளது.

தினவு தீர்வுற ஐயன் தூங்கினன். என்னும் இது அனுமானது வீரச் செருக்கை விளக்கி வித்தக விநோதமாய் நிற்கிறது. உல்லாச நிலையில் இவ்வாறு இருந்தவன் பின்பு உருத்துச் சீறிப் படைகள் மேல் பாய்ந்து அடலாண்மை புரிந்தான். படு கொலைகளாயின: அரக்கர்களை வாரி வாரி நிலத்தில் அடித்துக் கொன்று சிதைத்தான். உதைத்தும் கடித்தும் மிதித்தும் குதித்தும் பல வகை நிலைகளிலும் அடுபோராற்றிச் சாரிதிரிந்து பாய்ந்து வரவே சேனைகள் மாய்ந்து வீழ்ந்தன.

முன்படைகள் மாண்டு விழவே பின் படைகள் மூண்டு முனிந்தன. நெடிய தண்டம் ஒன்றைக் கையில் கொண்டு எங்

கும் கடிது பாய்ந்து அடித்தமையால் அரக்கர் திரள்கள் உறுப்புக்கள் சிதறி உருவழிந்து விழுந்தன. ஊழிக்காலத்து உருத்திர மூர்த்திபோல் உக்கிர வீரமாய்க் கொதித்து அமராடவே யாண்டும் பிணமலைகள் குவிந்தன. உதிரங்கள் ஓடின; நால்வகைச் சேனைகளும் நாசம் அடைந்தன.

முழுமுதல் கண்ணுதல் முருகன் தாதைகை
மழுவென்ப் பொலிந்து ஒளிர்வயிர வான்தனி
எழுவினில் பொலங்கழல் அரக்கர் ஈண்டிய
குழுவினைக் களப்படக் கொன்று நீக்கினன்.

இவ்வாறு படைகளைக் கொன்று தொலைத்து வென்றி வீரனாய் வீறுடு திரிந்து வரவே இறுதியில் சேனைத் தலைவர்கள் ஐவரும் வளைந்து தேர்மேல் நின்று பாணங்களை வீசினர். வில்லுகளிலிருந்து விடுபட்டு வருகிற அம்புகள் யாவும் சிதறி ஓடத் தண்டு கொண்டு வீசிச் சண்டமாருதம் போல் மாருதி வீர விளையாடல்கள் புரிந்தான். புரிந்து வருங்கால் துர்த்தரன் என்னும் தானைத் தலைவன் கூரிய கணைகளைச் சீறி ஏவினன். ஏவவே அவனைத் தேரோடு வாரி அனுமான் ஆகாயத்தில் வீசினன். அவன் தேரைவிட்டு அயலே தாவிக் குதித்தான். தரையில் வந்து நிலைகொண்டு நிற்குமுன் அவன் தலைமேல் பாய்ந்து மிதித்து எழுவால் ஓங்கி யடித்தான். அவன் உடல் சிதைந்து மாண்டான்.

அவன் மாண்டுபடவே மற்ற நான்கு சேனுதிபதிகளும் நான்கு புறமும் நின்று மூண்டு முனைந்து கூரிய பகழிகளைச் சீறி எய்தார். மழை பெய்தது போல் அவர் எய்த சரங்களை எதிர் விலக்கி முதிர் வேகமாய் மூண்டு பாய்ந்து இரண்டு தேர்களை இரண்டு கைகளில் வாரி எடுத்து வானில் வீசினன். குதிரைகளும் சாரதிகளும் தேர்களோடு கீழேவீழ்ந்து பாழாய் அழிந்துபடு நாசமாயின. வீரர் இருவரும் அயலே துள்ளி நின்று வில்லோடு எதிர்த்தனர். மலைபோல் திரண்டு கிடந்த ஒரு கல்லை எடுத்து எறிந்து ஒல்லையில் நெருங்கி வில்லைப் பறித்து முறித்து பல்லையுடைத்துத் தண்டால் தலைகளில் தாக்கினன். அவர் கொலையுண்டு மாண்டார். மீண்டும் இருவர் மீது பாய்ந்து இந்த ஆண்டகை அடலாண்மையோடு அடு சமராடி உடல்களைச் சிதைத்து உயிர்களை ஒழித்தான். உற்றவர் முற்றும் ஒழிந்து போயினர்.

## அழிந்த நிலை.

சேனைகள் யாவும் அழிந்து முடிவில் சேனாதி பதிகளும் மாண்டு மடிந்ததைக் கண்டதும் காவலர் மீண்டு ஓடினார். இங்கே தளபதிகளாய் வந்த ஐவரும் அமரர் யாவரையும் வென்று பலபோர் முனைகளிலும் வெற்றி மிகப்பெற்ற வீரத் திறலினர். அதிசூரர்களான அவரை அடியோடு வென்று அனுமான் நின்ற நிலையைக் கண்டு வியந்து வானுலகமும் வாழ்த்தி மகிழ்ந்தது. அஞ்சனைச் சிங்கத்தின் அடலாண்மைகள் அதிசய நிலைகளிலுள்ளமையால் யாண்டும் எவரும் துதிசெய்ய வந்தன.

வஞ்சமும் களவும் வெஃகி வழியலா வழிமேல் ஓடி
நஞ்சினும் கொடிய ராகி நவைசெயற் குரிய நீரார்
வெஞ்சின அரக்கர் ஐவர் ஒருவனே வெல்லப் பட்ட
அஞ்செனும் புலன்கள் ஒத்தார்; அவனும் நல்லறிவை ஒத்தான்.

செத்துப்போன சேனாதிபதிகளையும் வெற்றி பெற்று நிற்கிற அனுமானையும் இப்படிக் காட்டியிருக்கிறார். கருத்தும் காட்சியும் உய்த்துணர் வுடையனவாய்த் தத்துவ நிலையில் தோய்ந்து நிற்கின்றன. கவியினுடைய மானச நீர்மையும் மதி நுட்பமும் ஞான மணம் கமழ்ந்து மிளிர்கின்றன. காவியம் சீவிய ஓவியமாய்த் திகழ்ந்து வரப் பாவினங்கள் யாண்டும் படிந்து வருகின்றன.

வந்தியம்புறு முனிவர்க்கும் அமரர்க்கும் வலியார்
இந்தியம் பகையாயவை ஐந்தும்ஒத்து இயைந்தார்.

என முந்தி உரைத்து வைத்ததை நினைந்து கொள்பவர் இங்கு முடித்திருப்பதை வியந்து மகிழ்வர். முனிவர் அமரர் முதலிய எவரையும் அடக்கி யாண்டும் அடங்காமல் திரிந்து வந்தார் ஆதலால் ஐந்து பேரும் ஐந்து இந்திரியங்கள் என நேர்ந்தார். இந்திராதி தேவரும் இந்திரிய வசத்தராய் இழிந்து நிற்கின்றனர்; அந்நிலையும் தெளிந்து கொள்ள வந்தது.

மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம் பொறிகளின் வழியே மனமும் அறிவும் மறுகி உழலுகின்றன; அது போல் அமரரும் முனிவரும் இவ் அரக்கர் வலிக்கு அடங்கி அவல நிலையில் இழிந்து அலமந்து வாழ்ந்து வருகின்றனர். அந்நிலைமையை இவ் வுவமையால் தலைமையாக உணர்ந்து கொள்கிறோம்.

ஐம் பொறிகள்போல் யாண்டும் அல்வழிகளில் ஓடிப் பல் வகையிலும் பொல்லாத வெறிச் செயல்களே புரிந்து வந்தவர் ஈண்டு வந்து ஒரு நல்லவன் எதிரே மூண்டு போராடி மாண்டு போயினர். அந்த மாயப் போக்கை மதிநலம் கனிய அதிவிநயமாகக் கவி இங்கே விளக்கியுள்ளார்.

வஞ்சமும் களவும் வெஃகி வழியலா வழிமேல் ஓடி
நஞ்சினும் கொடியர் ஆகி நவைசெயற்கு உரிய நீரார்

ஈண்டு போருக்கு மூண்டு சேனைத் தலைவராய் வந்துள்ள ஐந்து அரக்கர்களுடைய செயல் இயல்களை இது உணர்த்தியுளது.

நஞ்சினும் கொடியர் என்றதனல் அவரது கொலை பாதகங்களின் நிலை தெரியலாகும். யாண்டும் தீவினைகளையே செய்து வந்த பாவகாரிகள் ஈண்டு வந்து மாண்டிருக்கின்றனர். அவர் செத்தது உலகத்திக்கு நல்லது என்பது தத்துவ நோக்கோடு உய்த்துணர வந்தது.

அரக்கர் ஐவர் புலன்கள் ஒத்தார்;
அவனும் நல் அறிவை ஒத்தான்.

இந்த உவமானங்கள் உணர்வு நலம் சுரந்துள்ளன. உண்மைகள் ஓர்ந்து காண வந்தன. ஐந்து சேனதிபதிகளை ஐம்புலன்கள் என்றது அவரது பொல்லாத நிலைகளை நினைந்து கொள்ள.

நல்ல அறிவு புலன்களை வென்று நிற்கும் ஆதலால் அவை போன்ற பொல்லாத அரக்கரைக் கொன்றுநின்ற அனுமானுக்கு அது ஈண்டு உவமையாய் வந்தது.

இந்திரியங்களை அடக்கி ஜிதேந்திரியன் எனச் சீர்த்தி பெற்றுள்ள அனுமான் இங்கே ஐந்து சேனதிபதிகளையும் கொன்று வெற்றி வீரனாய் விளங்கி நிற்கின்றான். காமம் முதலிய அகப் பகைகளை வென்று முன்னம் ஞான தீரனாய் நின்றவன் இன்று தீமையான புறப்பகைகளையும் வென்று மான வீரனாய் மருவி நிற்கும் நிலையைக் கவி ஈண்டு அழகாகக் காட்டியுள்ளார்.

நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன் என அனுமானைக் குறித்து முன்னம் *சீதை யூகமாக் கருதியதை இங்கே

*இந் நூல் பக்கம் 3052, வரி 11, பார்க்க.

உறுதி செய்துணர்த்தினர்.

புலன்களை வென்றவன் அரக்கர் குலங்களை வெல்ல வந்திருக்கிறான்; அந்த வரவு நிலை உறவுரிமையாய் உணரவந்தது.

"கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே." (திருவாசகம்)

எனக் கடவுளை நோக்கி மாணிக்கவாசகர் இவ்வாறு கூறியிருக்கிறார். புலனை வெல்லவல்லவன் கடவுள் என்றதனால் அதனை வெல்லுவது எவ்வளவு அருமை என்பது எளிது தெளிவாம்.

வென்றுளே புலன்களைந்தார் மெய்யுணர் உள்ளந்தோறும்
சென்றுளே அமுதமூற்றும் திருவருள்"
(பரஞ்சோதி முனிவர்)

புலன்களை வென்றவர்க்கே இறைவனுடைய திருவருள் அமுதம் உரிமையாய் ஊறிவரும் என இது உணர்த்தியுள்ளது.

"புலன்கள் ஐந்து வென்றிலேன்; பொறியிலேன்" எனத் திருமழிசையாழ்வார் இவ்வாறு மறுகியிருக்கிறார். ஈன நிலைகளில் தள்ளி இழிவுசெய்து வருதலால் மேலான ஞானசீலர்கள் புலன்களைக் கொடிய பகைகளாக் கருதிப் போராடி வருகின்றனர்.

"புலன் ஐந்துமேயும் பொறி ஐந்தும் நீங்கி
நலமந்த மில்லது ஓர்நாடு புகுவீர்." (திருவாய்மொழி)

"அடற்கரிபோல் ஐம்புலன்களுக்கு அஞ்சி அழிந்த என்னை
விடற்கரியாய் விட்டிடுதி கண்டாய் விழுத்தொண்டர்க் கல்லால்
தொடற்கரியாய் சுடர்மா மணியே! சுடுதீச் சுழலக்
கடற்கரிதாயெழு நஞ்சமு தாக்கும் கறைக்கண்டனே
(திருவாசகம்)

"ஐவர்என்ற புலவேடர் கொட்டமது
அடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவிநின்று மலை அருகில் நின்றுசரு
காதிதின்று பனி வெயிலினால்
மெய்வருந்து தவம் இல்லை." (தாயுமானவர்)

ஐம் புலன்களை வெல்வது அரிய தவ நிலை; அவற்றை வென்றவரே பிறவி தீர்ந்து பேரின்ப நிலையை அடைவர் என இவை உணர்த்தி யுள்ளன. புலப்பகை மனுவின் குலப் பகையாயுளது.

உலக மக்கள் எவரையும் நிலைகுலைத்துக் கலகம் செய்து வருகிற புலன்களை அனுமான் அதிசயமா அடக்கி யிருத்தலால்

அரிய தவசிகளும் அவனைத் துதிசெய்து வருகின்றனர். நித்திய பிரமச்சாரி என்னும் உத்தம நிலையில் அவன் ஒளி சிறந்து நிற்கிருன். பொறிகளை அடியோடுவென்று நெறிகளில் நெடிது நின்று வருதலால் அரிய பெரிய மகிமைகள் அவனிடம் குடிகொண்டு நிற்கின்றன.

"புலன் ஐந்தும் வென்ருன் தன் வீரமே வீரம்" (ஔவையார்)

சிறந்த வெற்றி வீரத்திற்கு ஔவையார் இவ்வாறு இலக்கணம் விதித்திருக்கிருர். இந்த வெற்றி நிலையில் அனுமான் வீர சோதியாய் விளங்கி நிற்கிருன். முத்தித் திருவும் முன் வந்து நிற்கும்படி சித்தத்தைச் சுத்திசெய்து உத்தம நிலையில் இவன் ஒளி செய்துள்ளமையை வித்தக ஞானிகளும் வியந்து புகழ்ந்துள்ளனர். தத்துவ மேதையின் இசை எத்திசையும் பரவியுளது.

புலன்கள் அரக்கர்க்கும், அறிவு அனுமானுக்கும் ஒப்பாம். பொறி வெறிகளை அடக்கி நெறிகளில் நடத்துவது அறிவு ஆதலால் அவ் வுறுதி யுண்மை தெரிய வந்தது.

நல்ல அறிவு என விதந்து சொல்லியது, அதன் நன்மையும் தன்மையும் உணர்ந்து உண்மை நிலையைத் தெளிந்து கொள்ள.

வெறும் கல்வி அறிவு புலன்களை வெல்லாது; எத்தனை அறிவாளிகள் புலன்களால் அடிபட்டுப் புலையாடி யிழிந்துள்ளனர்! எல்லாம் படித் துள்ளோம் என்று உள்ளம் செருக்கி நிற்கும் வல்லவர்களும் நல்ல ஒரு பருவ மங்கையைக் கண்டால் பல்லை யிளித்து ஒல்லையில் இழிந்து படுகின்றனர்.

இத்தகைய புல்லறிவு புலன்களை வெல்லாது ஆதலால் அதனை வெல்லவல்லதை நல்லறிவு என்ருர். அறிவுக்கு நன்மையாவது, ஞான சீலங்கள் தோய்ந்து பணிவும் பண்பும் வாய்ந்து இனிது அடங்கியுள்ள பெரிய தன்மை.

"Knowledge is proud that he has learn'd so much;
Wisdom is humble that he knows no more." (Cowper)

"அதிகம் படித்திருக்கிரேம் என்று செருக்கிநிற்பது அறிவு; யாதும் தெரியாது என்று அடங்கி யிருப்பது ஞானம்" என கவுப்பர் என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிருர்.